

நக்கீரன் நவீன கவிஞர், கட்டுரையாளர், குழந்தை இலக்கியவாதி, சூழலியலாளர், களப்பணியாளர், பேச்சாளர் எனப் பன்முகத்தன்மை கொண்டவர். தமிழ்ப் பசுமை இலக்கியத்தில் இவருடைய எழுத்து தனித்தன்மை கொண்டது. இந்நூல் மூலம் நாவலாசிரிய ராக உருவெடுத்திருக்கிறார். *தட்டான்கள் பறக்கும் மழைக்காலம்* என்பது இவர் எழுதிய குழந்தைகளுக் கான கதை நூல். *என் பெயர் ஜிப்சி* என்னும் இவருடைய கவிதை நூல் 2012ஆம் ஆண்டுக்கான 'விகடன் விருதை' வென்றது. 2014ஆம் ஆண்டு சென்னைப் புத்தகக் கண்காட்சியில் இவர் எழுதிய *மழைக்காடுகளின் மரணம்* அதிகம் விற்பனையான முதல் பத்து புத்தகங்களுள் ஒன்றாக இடம்பெற்று சாதனை படைத்தது. *திருடப்பட்ட தேசம், கண்ணுக்கு தெரியாமல் களவுபோகும் நீர்* ஆகியவை இவருடைய பிற நூல்கள். இவற்றில் கடைசி நூலானது ஆங்கிலம், கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. மனைவி, மகளுடன் திருவாரூர் மாவட்டம் நன்னிலத்தில் வசிக்கிறார்.

# முன்னுரை

நினைவில் காடுள்ள விலங்கு எளிதில் அடங்குவதில்லை. நினைவிலேயே கால் நூற்றாண்டுக் காலம் வாழ்ந்திருந்த காடொன்று இப்பிரதிக்கு இடம் மாறியிருக்கிறது. எண்பதுகளின் பிற்பகுதியிலிருந்து தொண்ணூறு தொடக்கம் வரையிலான சுமார் நான்காண்டுகளுக்கு மேலான கால கட்டம் அது. ஒரு மழைக்காட்டின் அழிவுக்குச் சாட்சியாக வாழ்ந்த காலம். ஆம். அப்போது ஒரு வெட்டுமர நிறுவனத்தின் சார்பாக ஒரு மழைக்காட்டினைக் கொன்றோம். போர்னியோவில், மலேசியாவுக்கு உட்பட்ட ஒரு பகுதி சபா. தொண்ணூற்று ஒன்பது விழுக்காடு காடாக இருந்த இப்பகுதியில் ஆங்கிலேயர் ஆட்சியில் தொடங்கிய வெட்டுமர வேட்டை இன்றுவரை ஓயவில்லை.

காடு என்பது கனவு நிலமோ, கவர்ச்சிமிக்க சுற்றுலாத் தலமோ அல்ல. இப்போது காடுகள் குறித்துப் பேசுவதும், கானுலா செல்வதும் மேட்டுக்குடிக்கு, மேல்நடுத்தரக் குடிமத்துக்கு ஓர் உயர்வகைப் பொழுதுபோக்கு. வீட்டு வரவேற்பறையில் அமர்ந்து பன்னாட்டு நிறுவனத்தின் உருளைக்கிழங்கு வறுவலைக் கொறித்துக்கொண்டு, 'நேசனல் ஜியாகிராபி' அலைவரிசையைப் பார்த்துக் கொண்டிருப்ப தல்ல காடு பற்றிய அறிதல். தொலைக்காட்சியைப் பார்க்கும்போது இவர்கள் அமர்ந்திருக்கும் இருக்கைகள், அதுவும் இறக்குமதி செய்யப் பட்ட இருக்கைகள், ஒரு மழைக்காட்டின் மரத்தினால் செய்யப் பட்டவை என்கிற அறிவைக் கொண்டிருப்பதுதான் காடு குறித்த அறிதல். மேலும் அந்த உருளைக்கிழங்கைப் பொறிப்பதற்குப் பயன் படுத்திய 'பாமாயில்' எண்ணெய் மழைக்காட்டை அழித்து உருவாக்கப் பட்ட செம்பனைத்தோட்டத்தில் இருந்துதான் கிடைக்கப்பெறுகிறது என்கிற செய்தியையும் உள்ளடக்கியதே அந்த அறிவு.

இப்படியான காடு குறித்த பெரிய புரிதல்கள் எதுவுமில்லாமல் கதைசொல்லி காட்டுக்குள் நுழைகிறான். ஓர் உல்லாசப் பயணியைப் போல நுழையும் அவன்தான் காட்டின் அழிவுக்குப் பின்னே வெளியே வருகையில் காடு மட்டுமல்ல ஒட்டுமொத்த இயற்கைச் சூழல் மீதும் காதல் கொள்பவனாக மாறுகிறான். இலைகளின் பச்சையத்தைச் சுரண்டி டாலர்கள் தங்கள் மேனியில் எப்படிப் பூசிக்கொள்கின்றன

என்பதைப் புரிந்தவனாகிறான். இப்புதினத்தைப் படிக்கத் தொடங்கும் வாசகர் எவரும் அக்கதைசொல்லியோடு இணைந்து காட்டுக்குள் நுழைந்து, வாழ்ந்து வெளிவரும்போது கட்டாயம் அப்படியொரு புரிதலுக்குத்தான் ஆளாவார்கள்.

மழைக்காடு என்பது வெறுமனே மரங்களின் தொகுப்பல்ல. மண் முதல் மரம் வரை, பூச்சி முதல் பறவை வரை, ஓடை முதல் அருவி வரை, தேவாங்கு முதல் தொல்குடி வரை ஒன்றோடு ஒன்றாகப் பிணைந்து வாழும் பல்லுயிர் உலகம். அப்படிப்பட்ட காட்டின் நிலவியலைத் துல்லியமாக விவரித்துச் செல்லும் அதேவேளை காட்டுக்கு உரிமை கொண்டாடாமல் அக்காட்டின் உயிரினங்களுள் ஒன்றாகத் தம்மைக் கருதி வாழும் தொல்குடிகளின் வாழ்வியலையும் அறிதலுக்கு உட்படுத்துகிறது இப்பிரதி. அரிய மரங்களின் அழிப்பு, பல்லுயிரிகளின் ஒழிப்பு மட்டுமல்லாது தொல்குடிகளின் வாழ்வையும் பன்னாட்டு வணிக அரசியல் எப்படியெல்லாம் சீரழிக்கிறது என்பதை ஒலியற்ற குரலில் சொல்லிச் செல்கிறது இப்புதினம்.

அந்த வலியும் வேதனையும் வாசகரைத் தொற்றிக்கொண்டால் போதும். இந்த எழுத்துக்கள் ஒரு விதையை ஊன்றிவிட்டது என்றே பொருள். ஏனென்றால் ஒவ்வொரு விதைக்குள்ளும் ஒரு கானகம் ஒளிந்திருக்கிறது. இப்புதினம் குறித்து இங்கு மேலதிகமாக விரித்துச் சொல்ல விருப்பமில்லை. நீண்ட காலமாக நெஞ்சுக்குள் புதைந்து கிடந்த விதைக்கு நீர் பெய்து முளைக்கச் செய்த சில உள்ளங்களுக்கு நன்றி சொல்லும் நேரம் இது.

இதை ஓர் அல் புனைவாகக் கொண்டுவர வேண்டும் என்பது தோழர் ஆதி வள்ளியப்பனின் விருப்பம். ஆனால் அப்படிக் கொண்டு வருவதைக் காட்டிலும் படைப்பின் உள்நோக்கத்தை இலைமறைக் கனியாக்கவே விருப்பம் கொண்டேன். அப்போதுதான் வாசிப்பின் சிறகுகள் இச்சுவையை தேடிப்பறந்து ருசிக்கும் வாழ்வனுபவம் கிடைக்கும் என நம்பினேன். எனவே நான் புனைவைத் தேர்ந்தெடுத்தேன். எழுதத் தொடங்கிய பிறகு என் முடிவு சரியானது என்பதை உணர்ந்தேன்.

புனைவின் தேர்வுக்கு முதல் ஆதரவு வழங்கியவர்கள் எழுத்தாளர் கோணங்கி, கவிஞர் யவனிகா ஸ்ரீராம்.

இதில் வரும் இயற்கை குறித்த சொல்லாடல்களுக்கான ஆலோசனையை ஒரு நேரடி சந்திப்பில் சா. முகமது அலியிடமிருந்து பெற்றேன். பிறிதொரு சூழலில் ச. தியடோர் பாஸ்கரனும் உதவியிருக்கிறார். அத்துடன் சில கலைச்சொற்களை நானே உருவாக்கி இருக்கிறேன். போர்னியோவில் புழங்கும் சில சொற்களை அப்படியே பயன்படுத்தியிருக்கிறேன். அவற்றில் சிலவற்றை நேரடியாக மொழிபெயர்க்க

முடியாது என்பது மட்டுமல்ல பெயர்த்தால் அபத்தமாகிவிடும் ஆபத்தும் அதில் இருந்தது. மேலும் அக்காட்டின் மணத்தை இப்பிரதி முழுக்க அப்பெயர்கள்தான் மணக்கச் செய்கின்றன.

இந்நூலை படைப்பிலக்கிய நோக்கில் கவிஞர் வெய்யிலும், சூழலியல் நோக்கில் ஏ. சண்முகானந்தமும் மீள்பார்வையிட்டுத் தந்தனர்.

கைப்பிரதியைப் படித்து திருத்துவதில் உதவியாக இருந்தவர் என் மைத்துனி உமா.

இந்நூலை முழுவதும் செம்மைப்படுத்தித் தந்தவர்கள் பேராசிரியர் காசி மாரியப்பன், சிராஜுல் ஹஸன்.

நூலின் இறுதி வடிவத்தை செம்மைப்படுத்தியவர் எம்.எஸ்.

ஒரு சிறந்த நூலை உருவாக்குவதில் அடையாளம் பதிப்புக்குழு எடுத்துக்கொள்ளும் அக்கறை அலாதியானது. நம்பிக்கையான நூல்களைத் தொடர்ந்து தந்து கொண்டிருக்கும் அடையாளம் பதிப்புக்குழு இந்த நூலையும் சிறப்பாக வெளியிடுகின்றனர்.

இதை எழுதத் தொடங்கிய காலம் முதலாக ஒரு குழந்தையின் வளர்ச்சியை விசாரிப்பது போல் தொடர்ந்து அக்கறை செலுத்திவந்த நண்பர்கள்.

அனைவருக்கும் நன்றி.

***

தமிழ்ப் பதிப்புலகில் இலக்கியவாதிகளும் சூழலியலாளர்களும் ஒருசேர இந்நூல் உருவாக்கத்திற்காக அக்கறை செலுத்தியிருப்பது பெருமைப்பட வைக்கிறது. அந்நம்பிக்கையை இந்நூல் வாசகசர்களுக்கு வழங்கும் என நம்புகிறேன். ஏறக்குறைய ஐந்தாண்டு கால உழைப்பை எடுத்துக்கொண்ட இந்தப் புதினம் வாசகர்களிடம் ஏற்படுத்தும் தாக்கத்தை அறிந்துகொள்ள ஆவலாய் இருக்கிறேன்.

நக்கீரன்

நன்னிலம்
*05 - 06 - 2014*

அலைபேசி: *9790440220*
vee.nakkeeran@gmail.com

# போர்னியோ

போர்னியோ, தென்கிழக்காசியாவில் இந்தோனேசியா, பிலிப்பைன்ஸ் ஆகிய நாடுகளால் சூழப்பட்ட பெருந்தீவு. முழுவதும் காடுகளைக் கொண்ட இத்தீவில் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் காடழிப்பு தொடங்கி வைக்கப்பட்டது. ஆங்கிலேயரின் பிரித்தாளும் கொள்கைக்கேற்ப விடுதலைக்குப் பின் இதன் நிலப்பகுதி மலேசியா, இந்தோனேசியா, புருணை என மூன்று நாடுகளின் பகுதிகளாக துண்டாடப்பட்டது. இதன் பின்னரும் இங்குள்ள மழைக்காடுகள் அமேசான் காடுகளைப் போலவே தொடர்ந்து அழிக்கப்பட்டு வருகின்றன.

## பகுதி ஒன்று

மரம் என்றால் அது இலைகள் அல்ல. பூக்கள் அல்ல. காய்கள் அல்ல. கனிகளும் அல்ல. ஏன் அது மரமே அல்ல. மரம் என்றால் அது வெறும் டாலர், டாலர், டாலர் மட்டுமே.

# 1

**நுழைமுகம்**

இந்த நதியின் பெயர் கினபத்தாங்கன்.

இது நதிதான். ஓர் ஆறு மேற்கில் இருந்து கிழக்கு நோக்கிப் பாய்ந்தால் அது நதி. கிழக்கில் இருந்து மேற்கு நோக்கிப் பாய்ந்தால் அது நதம். எனவே கிழக்கு நோக்கிப் பாயும் இந்தக் கினபத்தாங்கன் நதிதான்.

நதியின் போக்கை எதிர்த்து விரைந்து கொண்டிருக்கிறது படகு. பாசி நிற ஆற்றில் கதிரொளி தீற்றும் பொன் நிறம். படகு விரையும் பாதையில் அது கிழிந்து இருபுறமும் வெண்ணிறமாய்ப் புரள்கிறது. புரளும் நீரிலிருந்து துள்ளிப் பாயும் மீன்களை எவ்வளவு நேரம் வேடிக்கை பார்த்துக்கொண்டு வருவது? அதோ படகின் இடப்புறமாக பறந்து வருவது என்ன?

சீனக்கொக்கு.

படகின் போக்கிலேயே வெகு அருகே பறந்து வரும் அதன் கருநிற கால்கள் மடங்கியிருக்க, மஞ்சள் நிற அலகை முன்நீட்டி வருகிறது. பிடரியில் இருந்து பின்னோக்கி நீண்டு சரிந்து தனித்தனியே பிரிந்திருந்த அதன் தலைக்குஞ்சம் தெளிவாகத் தெரிகிறது. அவ்வளவு அண்மைப் பறத்தல். இக்கொக்கும் விரைவாகப் படகைக் கடந்து மறைகிறது.

சலிப்பில் கொட்டாவி வருகிறது. சண்டகானில் இருந்து காலை யிலேயே புறப்பட்டிருந்தோம். நான்கு மணி நேரப் பயணத்தில் புக்கிட் கரம். அங்கிருந்து தொடங்கியதுதான் இப்படகுப் பயணம். இரண்டு மணி நேரத்தில் 'லோக்கன்' ஆற்றின் நுழைமுகத்தை அடைந்துவிடலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். லோக்கன் என்பது வடக்கிலிருந்து தெற்காகப் பாய்ந்து கினபத்தாங்கனில் கலக்கும் துணையாறு. அந்த ஆற்றில் செல்லவேண்டும்.

படகோட்டி வேகத்தைக் குறைக்கிறார். எதிரே ஓர் இழுவைப்படகு வெட்டுமரக்கட்டைகளின் 'ராக்கிட்' ஒன்றை இழுத்துக்கொண்டு வருகிறது. இழுத்து வரும் படகின் அகலத்தைவிட ராக்கிட்டின் அகலம் அதிகம். அதைக் கவனித்து ஓட்டவில்லையெனில் படகுடன் மோதிவிடும்.

திரு. குவானுடன் ஒரு வெட்டுமர முகாமுக்குக் கட்டைகளைப் பார்க்கச் சென்ற நினைவு வருகிறது. அம்முகாமுக்குச் செல்லும் வழியில் சாலை மருங்கில் இருந்த மரத்தைப் பார்த்ததும் குவான் உடனே

வண்டியை நிறுத்தச் சொல்லி இறங்குகிறார். விறுவிறுவென அம்மரத்தை நோக்கி நடக்கிறார். நன்கு பருத்து உயர்ந்த நெடுமரம். அதனடியில் நின்று அதன் உயரத்தை அண்ணாந்து பார்க்கிறார். கண்கள் அதன் பெரும் விரிவை அளக்கின்றன. இரு கைகளையும் அகல விரிக்கிறார். அப்படியே காதலியை அணைப்பதுபோல அம்மரத்தைக் கட்டியணைத்து முத்தமிடுகிறார். மரவணிகராக இருந்தாலும் இம்மனிதருக்குதான் மரங்களின் மேல் என்னவொரு காதல். அருமையான மரம் தெரியுமா எனப் புகழ்கிறார். பின்பு மரத்தை மீண்டுமொருமுறை கண்ணால் அளவிட்டுச் சொல்கிறார்.

எப்படியும் அய்யாயிரம் டாலருக்குப் போகும்.

அப்படியானால் இது டாலர் காதல்தானா?

எம் நிறுவனத்தின் மேலாண் இயக்குநரான குவானைப் பொறுத்த வரை மரம் என்றால் அது இலைகள் அல்ல. பூக்கள் அல்ல. காய்கள் அல்ல. கனிகளும் அல்ல. ஏன் அது மரமே அல்ல. மரம் என்றால் அது வெறும் டாலர், டாலர், டாலர் மட்டுமே.

**தும்பிக்கைக் குரங்குகள்**

லோக்கன் ஆறு வந்துவிட்டது.

திடீரெனப் படகோட்டியின் குரல் ஒலிக்கிறது. இதுவரை மேற்கு நோக்கிச் சென்றுகொண்டிருந்த படகு இப்போது வடக்கு நோக்கித் திரும்பி லோக்கன் ஆற்றின் நுழைமுகத்துக்குள் நுழைகிறது. படகு வேகம் தணிந்து ஊர்ந்து செல்லத் துவங்குகிறது. லோக்கன் ஆறு கினபத்தாங்கனைப் போல அகலமில்லை. ஆனால் அழகு. ஆறு தன் நீரோடு ஆழ்ந்த அமைதியையும் சுமந்தவாறு ஓடிவந்துகொண்டிருக்கிறது. இருபுறமும் கரையே தெரியாத அளவுக்குப் பசிய மரங்கள் ஆற்றின் உட்புறமாய்க் கவிந்து நிழல்களின் போர்வை. பற்பலப் பறவைகளின் சிலம்பல்கள். திரைகளில் கண்டிருந்த அமேசான் கானகம் நினைவில் மீள்கிறது.

ஓராங் பிலாண்டா... ஓராங் பிலாண்டா...

படகிலிருந்து யாரோ கூவுகிறார்கள். ஓராங் பிலாண்டா என்றால் டச்சுக்காரர்.

படகுக்குப் பின்னால் திரும்பிப் பார்க்கிறேன். ஒருவருமில்லை. முன்னாலும் யாருமில்லை. கரைகளிலும் டச்சுக்காரர் எவருமில்லை. பிறகு ஏன் இப்படிக் கத்துகிறார்கள். உயிர்ச் செறிவுமிக்க இந்த லோக்கன் ஆறு அண்மைக் காலமாய் சூழல் சுற்றுலா இடமாகப் பெயர் பெற்று வருகிறது. எனவே இப்பக்கம் அயல் நாட்டவர்களின் வருகை என்பது இயல்பானது. ஆனால் முன்னும் பின்னும் எந்தவொரு படகையும் காணவில்லை.

என்ன, உண்மையான டச்சுக்காரரைத் தேடுகிறீர்களா என்ற படகோட்டியின் கேள்விக்கு ஆமாம் என்று தலையசைக்கிறேன்.

இவர்கள் சொன்ன டச்சுக்காரர்கள் மேலே மரங்களில் கூட்டமாக அமர்ந்திருக்கிறார்கள், பாருங்கள் என்று மரங்களின் உச்சியைச் சுட்டுகிறார். ஆங்கே கூட்டமாக அமர்ந்திருப்பவை... அட! ரசோங் குரங்குகள்! இதுவரை ஒளிப்படங்களில் மட்டுமே கண்டிருந்த இக்குரங்குகளைப் பார்த்ததும் சிரிப்பு வந்துவிடுகிறது. அப்படியொரு தோற்றம். அமர்ந்திருக்கும் நிலையில் அதன் பெரிய தொந்தியும் தொங்கும் மூக்கும் கோமாளியை நினைவூட்டுகின்றன. மூக்கு உண்மையிலேயே வேடிக்கையான மூக்கு. தொய்ந்து தளர்ந்து போன சுரைப் பிஞ்சு வடிவத்தில் தொங்குகிறது. அம்மூக்கின் நுனியோ மூக்குக்குரிய இடத்தையும் தாண்டி கீழிறங்கி வாயை மூடிவிடுவது போல் தொங்குகிறது. சுருக்கமாகச் சொன்னால் குட்டியூண்டு தும்பிக்கை முளைக்கத் தொடங்கியதுபோல. தும்பிக்கை. நல்ல பெயர்தான். இனி இக்குரங்குகளின் செல்லப்பெயர் 'தும்பிக்கைக் குரங்குகள்.'

தும்பிக்கைக் குரங்குகள் இப்பகுதியின் ஓரிடவாழ்விகள். இக்காட்டுப் பகுதியைத் தவிர உலகில் வேறெங்கும் இக்குரங்குகளைக் காண முடியாது. நண்பகல் வேளையில் ஏனோ எல்லாக் குரங்குகளும் கிளைகளின் மேல் அமைதியாக அமர்ந்திருக்கின்றன. அவற்றை ஆவலோடு கவனிப்பதைக் கண்டதும் படகின் வேகத்தை மேலும் தணிக்கிறார் படகோட்டி. எல்லாக் குரங்குகளுக்கும் மூக்கு பெரியதாக இல்லை. சில குரங்குகளின் மூக்குதான் நீளமாகத் தொங்குகிறது. உற்று கவனிக்கையில் நீளமான மூக்குடையவை எல்லாம் ஆண்குரங்குகள் எனப் புரிகிறது.

குரங்குகள் மூன்றடி உயரமாவது இருக்கும். தலையிலிருந்து வால்வரை முதுகுப்பகுதி முழுக்கத் தனியாக ஆடை தைத்து ஒட்டியது போல் அடர்த்தியான பொங்குமயிர்த் தோல். அடர் செம்மஞ்சள் நிறம். ஆனால் முன்பகுதி வெண்ணிறம். கனத்த சாட்டை மாதிரி தொங்கிக் கொண்டிருக்கும் வாலும் அதே வெண்ணிறம். அதோ குட்டிக்குரங்கு. மந்தியின் கைக்குள் குட்டி அடக்கமாக இருக்கிறது. அய்யோ... அந்தக் குட்டிதான் என்னவொரு அழகு! கருப்பு நிறக்குட்டி. கருநீல நிறத்தில் முகம். உடலில் முடிகளே இல்லை. மந்திக்கும் இக்குட்டிக்கும் நிறத்தில் துளியும் தொடர்பில்லை. இதுவா பின்னாளில் டச்சுக்காரராய் மாறிவிடுகிறது? ஆமாம் இதை ஏன் டச்சுக்காரர் என்று அழைத்தார்கள்? இக்குரங்குகளுக்கும் அவர்களுக்கும் என்ன தொடர்பு?

அதுவா? அது ஒரு பழைய கதை எனத் தொடங்குகிறார் படகோட்டி. அந்தக் காலத்தில் இந்தக் கினபத்தாங்கன் வழியாக வணிகத்துக்காக முதன்முதலில் வந்த வெள்ளையர்கள் இந்தப் பிலாண்டாக்கள்தான். இங்குள்ள மக்களோடு ஒப்பிடும்போது அவர்களுடைய மூக்கு நீளம்

தானே? இந்தப் பிலாண்டாக்கள் நிறைய மதுவருந்தும்போது ஏற்கனவே சிவந்திருக்கும் அவர்கள் முகம் மேலும் சிவந்து போகுமாம். குறிப்பாக சிவந்த மூக்கு இன்னும் சிவக்குமாம். அந்த முகத்தைதான் இதன் முகத்தோடு ஒப்பிட்டு விட்டார்கள். அதுதான் இவை 'ஒராங் பிலாண்டா' ஆனதற்குக் காரணம். அவர்கள் போய்ச் சேர்ந்து வெகு காலம் ஆகிவிட்டது. ஆனாலும் பாவம் இக்குரங்குகள் இன்னமும் அவர்களுடைய பெயரைச் சுமந்து திரிகின்றன.

நாம் இறங்க வேண்டிய இடம் நெருங்கிவிட்டது என்ற குரல் கேட்டுத் திரும்புகிறேன். நிலவரைபடத்தைக் கையில் வைத்துக் கொண்டு இடது கரைப்பக்கமாக பார்த்துக்கொண்டிருக்கிறார் ஒமர், எங்கள் குழுவின் தலைவர். இடப்பக்கம் மேற்கிலிருந்து ஓடிவந்த ஓடையொன்று லோக்கன் ஆற்றோடு கலந்துகொண்டிருந்தது. படகு நுழைய முடியாத ஓடை. இங்கேதான் இறங்க வேண்டும். படகு கரையோரமாக அணைத்து நிறுத்தப்படுகிறது. காடு தன் ஆழ்ந்த அமைதியோடு எங்களை வரவேற்கிறது.

### வெள்ளிநிறக் குரங்கு

அந்த ஓடைக்கரையின் ஓரமாக ஒருவர் பின் ஒருவராக நடக்கிறோம். ரேஞ்சர் முன்னால் போய்க்கொண்டிருக்கிறார். ரேஞ்சர் என்றால் கான் துறையின் ரேஞ்சர் அல்ல. தனியார் ரேஞ்சர். எங்கள் நிறுவனத்தின் ஒப்பந்தப் பணியாளர். அவர் கையிலிருந்த பாராங் கத்தியால் பாதைக்கு இடைஞ்சலாக இருக்கும் புதர்ச் செடிகளை வெட்டிக்கழித்துக் கொண்டே முன்னேறுகிறார். எல்லோரிடமும் பாராங் கத்தி இருக்கிறது. முழநீளக் கத்தி. அரிவாளைப்போல் பட்டையாக இருந்தாலும் முனை வளைந்திராமல் கத்தியைப்போன்று நீண்டு நேராக இருக்கும் கத்தி.

ஒமருக்குப் பின்னே சென்றுகொண்டிருக்கிறேன். இக்காட்டுக்குள் கூட முழுக்கைச் சட்டையை முழுக்கால் உடுப்புக்குள் செருகி நிறுவனத்தின் மேலதிகாரி போல மிடுக்கான தோற்றம். அணிந்திருக்கும் மூக்குக் கண்ணாடி ஆளுமையை இன்னும் கூட்டுகிறது. வயது நாற்பதுக்கு மேல். அதில் பாதிக்குமேல் காடுகளிலேயே கழித்தவர். இக்குழுவில் உள்ள ஏழுபேரில் ஒமரையும் ரேஞ்சரையும் தவிர மற்றவர்கள் இன்னமும் அறிமுகம் ஆகவில்லை. காலையில் தானே சந்தித்திருக்கிறோம்.

செலாமத் டத்தாங் லெத்தோங்.

பின்னே வந்துகொண்டிருந்த திமூர்க்காரர் திடீரென வரவேற்பு கூறுகிறார். எந்தக் குரங்குக்கு இந்த வரவேற்பு? அண்ணாந்து பார்க்கிறேன். இந்நிலப் பகுதிக்குள் எங்களை வரவேற்கும் முதல்

உயிரினமாக இக்குரங்குகள். பத்துக் குரங்குகளாவது இருக்கும். உடல் கருப்பு நிறம். ஆனால் அதன் மயிர்கள் வெள்ளி நிறம். அதனால்தானோ என்னவோ கலவையாக நரைத்த நிறத்தில் தெரிகின்றன. எல்லாக் குரங்குகளுக்கும் ஓர் உச்சிக்குடுமி இருப்பது பார்ப்பதற்கு வேடிக்கையாக இருக்கிறது. குட்டிக்கும்கூட உச்சிக்குடுமி. ஆனால் குட்டி முழுக்க செம்மஞ்சள் நிறம். குரங்குகளைப் பார்த்துக்கொண்டே நடக்க ஒரு வேர் தடுக்கிவிடுகிறது. ஓமர் எச்சரிக்கிறார். காட்டுக்குள் கீழே பார்த்து நட.

அடுத்த கால்மணி நேரத்தில் எதிரே ஒரு பெரிய சாலை குறுக்கிடுகிறது. காடு என்று நினைத்துக்கொண்டிருந்த இடத்தில் சாலையா? அதுவும் சுமார் நாற்பது அடிச் சாலை. சரளைக் கற்கள் விரவப்பட்ட இச்சாலை ஒரு வெட்டுமர முகாம் சாலை என்பதைச் சொல்லாமல் சொல்லுகிறது. இரு சுமையுந்துகள் தாராளமாக மாறிச் செல்லமுடியும்.

இது கினபத்தாங்கன் ஆற்றுக்குத்தானே செல்லுகிறது என ரேஞ்சரிடம் வினவுகிறார் ஓமர்.

ஆமாம். இடப்பக்கச் சாலை நேரே கினபத்தாத்தாங்கன் செல்லுகிறது. வலப்பக்கச் சாலை ஒரு செம்பனைத் தோட்டத்தைத் தாண்டி நேராக சண்டகான் செல்கிறது.

உடனே ஓமரிடம் கேட்கிறேன். சண்டகானா? அப்படியானால் நேரே இந்தப்பாதை வழியாகவே இங்கு வந்திருக்கலாமே. எதற்கு புக்கிட் கரம் வந்து படகில் இவ்வளவு சிரமப்பட வேண்டும்?

நீ சொல்வது உண்மைதான். வழியில் உள்ள செம்பனைத் தோட்டத்துக்கு முன்னே ஆற்றின் குறுக்கே தரைப்பாலம் இருக்கிறது. அது தற்போது பழுது அடைந்துள்ளதாம். சீர் செய்துகொண்டிருக்கிறார்கள். இன்றோ நாளையோ முடிந்துவிடுமாம். திரும்பிப் போகும்போது சாலை வழியாகத்தான் போகப்போகிறோம்.

**கூரன் பன்றி**

மாலை, இரவுக்கு அழைப்புவிடத் தொடங்குகிறது. நாங்கள் சாலையில் வடக்கு நோக்கிச் செம்பனைத் தோட்டம் பக்கமாக நடக்கிறோம். ஒரு மணி நேரம் கடந்த பின்பு இடப்பக்கத்தில் பழைய முகாம் சாலையின் தடம் தெரிகிறது. அதன் உள்ளே இருநூறடித் தொலைவில் ஓர் அகன்ற இடம். இது வெட்டப்பட்ட கட்டைகளை முகாம் எல்லைக்குள் சேமித்து வைக்கும் திடலான 'பங்குங்'. அதைப் பார்த்தவுடன் ஓமரும் ரேஞ்சரும் கூடாரம் அமைத்துத் தங்க இதுவே பொருத்தமான இடம் என்கின்றனர். ஆனால் அருகில் ஒரு நீரோடையாவது இருக்க வேண்டும். இரு ஆட்கள் அதைத் தேடிப்போகிறார்கள்.

அத்திடலுக்குச் சற்றுத் தள்ளி சுமார் அம்பதடி உயரம் கொண்ட பரந்த மேடு இருக்கிறது. அதைக்கடந்து சென்றிருந்த ஆட்கள் இருவரும்

திரும்பி வருகிறார்கள். அம்மேட்டிலிருந்து முந்நூறடி தொலைவில் ஓர் ஓடையைக் கண்டதாகக் கூறியதும் அங்கேயே கூடாரம் அமைக்க முடிவாகிறது. சுமைகளை ஓரிடத்தில் இறக்கி வைத்துவிட்டு அத்திடல் முழுக்க வளர்ந்திருந்த செடிகளை இரு ஆட்கள் பாராங் கத்தியால் வெட்டி மழிக்கத் தொடங்கினர். மூன்று பேர் திடலின் விளிம்பில் இருந்த காட்டுப்பகுதிக்குப் போய் சிறு மரங்களாய்ப் பார்த்து வெட்டி நீண்ட கழிகளைக் கொண்டு வருகின்றனர். மழிக்கப்பட்டிருந்த திடல் இப்போது அய்ம்பதடி விட்டத்துக்கு இருக்கிறது. கொண்டு வந்திருந்த கூடாரத் துணியைப் பிரித்து விரித்து நான்கு பக்கமும் முளைக்குச்சி களை அடித்து அதை இழுத்துக் கட்டவும் இருபுறமும் திறப்புள்ள கூடாரமாக மாறிவிட்டிருக்கிறது அது. இப்படியொரு கூடாரத்தில் தங்கப்போவது இதுவே முதல்முறை.

இக்குழுவோடு வந்திருக்க வேண்டிய அவசியமே இல்லை. இது ரேஞ்சர் குழுவினுடைய பணி.. நிறுவனத்துக்குக் காட்டுநிலத்தைக் குத்தகைக்கு வாங்கி மரங்களை வெட்டி விற்பது தொழில். இங்குள்ள காட்டின் ஒருபகுதி குத்தகைக்கு வந்திருக்கிறது. இப்பகுதியில் போது மான அளவுக்கு மரம் இருக்கிறதாவென ஆய்வு செய்ய வந்ததுதான் இந்த ரேஞ்சர் குழு. இக்குழுவோடு உண்மையை உடனிருந்து அறிந்து கொள்ள முகாமின் மேலாளரான ஒமரும் வந்திருக்கிறார். அருகில் வந்த ஓமர், இதெல்லாம் இப்போது வேடிக்கையாகத்தான் இருக்கும். இரவிலிருந்துதான் உனக்குச் சிரமம் தொடங்கும் என்று சொல்லிச் சிரிக்கிறார். ஏன் இப்படிச் சொல்கிறார் என்பது புரிகிறது. இவ்விடத் துக்குக் கிளம்பி வரும்போதே அவர் எச்சரித்திருந்தார்.

இப்போது ஆய்வுதான் செய்யப் போகிறோம். ஆய்வுமுடிந்து முகாம் திறக்கும்போது நீ வந்தால் போதும். எவ்வித வசதியுமின்றி இக்காட்டுக்குள் நுழைவது சிரமம். பேசாமல் இப்போது அலுவலகத்தில் இருந்து மற்ற பணிகளைக் கவனி.

ஆனால் ஓமர் சொன்னதைக் கேட்டால்தானே? இந்தக் கினபத்தாங்கன் காட்டைக்குறித்து நிறைய கேள்விப்பட்டிருந்தேன். ஒருவேளை இப்பகுதியில் போதிய மரங்கள் இல்லாது போய் இங்கு முகாம் அமைக்கும் வாய்ப்பே அமையாவிட்டால் இக்காட்டை இறுதிவரை பார்க்கமுடியாமலே போய்விடும். எனவே அடம் பிடித்துக் கிளம்பி வந்தாயிற்று.

நன்றாக இருட்டி, குளிரும் தொடங்கி விடுகிறது. கொசுக்களின் தொல்லை தாங்கவில்லை. கை காலெல்லாம் உடை மூடியிருந்தும்கூட போதுமானதாக இல்லை. இதற்குள் காட்டுக்குள்ளிருந்து கொண்டு வந்த சுள்ளிகளைக்கொண்டு தீ மூட்ட, கொசுக்களும் குளிரும் கொஞ்சம் விலகுகின்றன. எல்லோரும் கனலுக்கு அருகே அமர்ந்திருந்

போது ஒருவர் மட்டும் தனியே மூன்று கழிகளை எடுத்துக்கொண்டு வருகிறார். இந்தக் கழிகளை வைத்துக்கொண்டு என்ன செய்யப் போகிறார்?

கழிகளைத் தரையில் அருகருகே ஒட்டியவாறு படுக்க வைக்கிறார். ஒரு காட்டுக்கொடியால் அம்மூன்று கழிகளையும் ஒரு முனையில் சேர்த்துக் கட்டி முடித்தவுடன் அம்மூன்று கழிகளையும் ஒன்றாக சேர்த்துத் தூக்கி நிறுத்துகிறார். பிறகு நடுவில் இருந்த கழியை ஒன்றும் செய்யாமல் அப்படியே விட்டுவிட்டு கடைசி இரு கழிகளையும் முடிந்தவரை எதிரெதிர் திசைகளில் நன்கு இழுத்து விரிக்கிறார். அவ்விரு கழிகளையும் ஒருவரைப் பிடித்துக்கொள்ளச் சொல்லிவிட்டு நடுவில் தொங்கிக்கொண்டிருந்த மூன்றாவது கழியை அப்படியே ஒருபுறமாக மேலே தூக்கிக்கொண்டு போய் மறுபுறமாக சிரமப்பட்டு மடக்கி இறக்குகிறார். இப்போது காட்டுக்கொடி உச்சியில் நன்கு இறுகிவிட்டபடியால் அக்கழிகளை முக்காலியைப் போல் ஓரிடத்தில் நிலையாக நிறுத்தி வைக்கமுடிகிறது. அதை எடுத்துக்கொண்டு வந்து நெருப்பு அம்மூன்று கால்களுக்கும் நடுவே வருமாறு நிற்க வைக்கின்றனர். உச்சியில் இணைந்தும் அடியில் விரிந்தும் நிற்கின்ற கூம்புபோல் காட்சியளிக்கிறது அது.

பிறகு ஒருவர் நீர் நிரப்பப்பட்டிருந்த ஓர் அலுமினியக் கேத்தலைக் காட்டுக்கொடியால் கட்டி அக்கழிக்கூம்பின் உச்சியில் தொங்க விடுகிறார். கேத்தல் நெருப்புக்கு நேர்மேலே ஒன்றரையடி உயரத்தில் உறிப் பானையைப் போல தொங்குகிறது. இது கணப்பு மட்டும் அல்ல அடுப்பும்கூட. காட்டுக் கொடி தீ நாக்குகளை தாங்கி நிற்கிறது. நீர் கொதித்ததும் அதில் சீனத் தேயிலையை இட்டு ஒரு கொதிவிட்டு உடனே அதைக் கீழிறக்கி வைக்கின்றனர். எப்போதும் இனிப்போ பாலோ சேர்க்கப்படாத இந்த சீனத்தேநீர் இளம் துவர்ப்போடு குளிருக்கு நல்ல இதம். ஒருவர் சோறு சமைக்கத் தொடங்குகிறார். ஓர் அலுமினியப் பானையை இருபுறமும் கயிறு வருவதுபோல் அதே காட்டுக்கொடியால் கட்டி கேத்தலைப் போலவே தொங்கவிடுகின்றனர். இப்போது சோற்றுப்பானை தூக்கில் தொங்குவதுபோல் இருக்கிறது.

சாடின்தானே இன்றைய சமையல் என ஓமர் கேட்டு முடிக்க வில்லை. அதற்குள் ஒரு குரல் வருகிறது. அடோய்... காட்டுக்குள்ளே வந்தும் கல்லறைக்குள் வைத்த மீனைத்தானா சாப்பிடவேண்டும்?

ஓமர் திரும்பி பார்த்துக் கேட்கிறார். யாரப்பா அது ஆண்ட்ரூஸ் தானே? நினைத்தேன். இங்கு சாடின்தானே இருக்கிறது.

இந்தத் திமூர்க்காரரர் பெயர் ஆண்ட்ரூசா? மனிதருக்கு எப்போதுமே வேடிக்கைப் பேச்சுத்தான். இவர் வாயைத் திறந்தால் போதும். இடமே கலகலப்பாகிவிடுகிறது. ஆண்ட்ரூஸ் சொல்கிறார். உள்ளே

கன்னி பொறுக்கப் போகும்போதே மூன்று இடங்களில் கன்னி வைத்துவிட்டு வந்திருக்கிறேன். அங்கு மான்களின் குளம்படிகளைப் பார்த்தேன். எனக்காக அரைமணி நேரம் பொறுங்கள் போதும். உறுதியாக எதாவது கொண்டு வருகிறேன்.

ஆண்ட்ரூஸ் தன்னோடு இன்னொருவரையும் அழைத்துக்கொண்டு சுட்டுவிளக்குடன் காட்டுக்குள் நுழைகிறார். அந்தத் திமூர்க்காரர் செல்வதையே பார்த்துக்கொண்டிருக்கிறேன். திமூர்க்காரர்களைக் கண்டாலே ஒரு பாசம் வந்துவிடுகிறது. எங்கேயோ இந்தோனேசியாவின் கீழ்க்கோடியில் அதுவும் ஆஸ்திரேலியாவுக்கு அருகில் இருக்கும் இடத்திலிருந்து இங்குப் பிழைக்க வந்திருக்கும் இவர்களின் மீது பாசம் வரக்காரணமே அவர்களின் தோற்றம்தான். தோற்றத்தில் தமிழர் போலவே இருக்கும் அவர்களுக்கு அடையாளம் அந்தச் சுருட்டைமுடி. பார்ப்பதற்குச் சுருட்டைமுடியுள்ள தமிழரைப் போலவே இருக்கிறார்கள். இப்போதெல்லாம் சுருட்டை முடியுடன் ஓர் அசல் தமிழரைக் கண்டாலும்கூட தமிழரா, திமூர்க்காரரா என்று குழப்பம் வந்துவிடுகிறது

தொலைவில் விளக்கு வெளிச்சம் தெரிகிறது. ஓம் வருகிறார் என்கிறார் ரேஞ்சர். ஓம் என்பது திமூர் ஆண்களை அழைக்கும் விளிச்சொல். ஓம் என்றால் திரும்பிப் பார்ப்பர். உடன்சென்ற ஆள் சுட்டுவிளக்கைப் பிடித்துக்கொண்டே முன்னால்வர, பின்னே வந்த ஆண்ட்ரூசின் கைகளில் ஒரு விலங்கு திமிறிக்கொண்டிருக்கிறது. ஒரு சின்னஞ்சிறு மான்குட்டி. மான்குட்டிதானா? என்னதான் குட்டியாக இருந்தாலும் மான்குட்டி இவ்வளவு சிறிதாகவா இருக்கும்? ஏதாவது குறைமாதத்தில் பிறந்த குட்டியா? நீளம் ஒன்றரையடி இருக்கும். உயரமோ நின்றால் சுமார் ஒரு அடிதான் இருக்கும். ஆண்ட்ரூஸ் அதைக் கீழே இறக்கிவிடுகிறார். அதன் கால்களை இரண்டிரண்டாகச் சேர்த்துக் கட்டியிருக்கிறார். இக்கால்கள் ஏன் இப்படிக் குச்சியாக இருக்கின்றன? இக்குச்சிக்கால்களை வைத்துக்கொண்டுதானா இது மொத்த உடலையும் தாங்கி நடக்கிறது? அது மிரண்டு போய் விழிகளை உருட்டிப் பார்க்கிறது. அடிவயிறு வெண்மையாக இருந்தாலும் உடல் செம்பழுப்பு வண்ணம். ஆனால் இந்த மான்குட்டியின் மூக்கு மட்டும் மான்களுக்கு இருப்பது போலில்லாமல் மிகவும் நீண்டிருக்கிறது. அதிலும் மீசை மயிர் வேறு. இது என்ன விலங்கு?

பிளாண்டுக்

கஞ்சில்

இரண்டு பெயரா? முழிப்பதைப் பார்த்துவிட்டு சிரித்த ஓமர் சொல்கிறார். பிளாண்டுக், கஞ்சில் இரண்டுமே இதன் பெயர்தான். இது உள்ளூர் பெயர்கள். ஆங்கிலத்தில் இது மௌஸ் டீர் என்கிறார்.

மௌஸ் டீர் என்றால் சருகு மான். இதுதானா அது? இதற்கு இன்னொரு நல்ல தமிழ்ப் பெயரும் உண்டே? நினைவு வந்துவிட்டது- கூரன் பன்றி.

பசிக்கிறது. சீக்கிரம் சாப்பிடவேண்டும். இதை வெட்ட எடுத்துச் செல்கிறேன் என்று ஆண்ட்ரூஸ் அவ்விலங்கை மீண்டும் கைகளால் அழுத்திப்பிடித்துத் தூக்கியபோது அது திமிறிக்கொண்டு ஒருவித கீச்சொலியை எழுப்புகிறது. அவர் அதை மனாப் வசம் ஒப்படைக்கிறார். மனாப் அதை பிஸ்மி சொல்லி அறுத்து ஹலால் உணவாக்கப் போகிறார் என்பது புரிகிறது. மனாப் அந்த விலங்குடன் நகர்ந்தபோது ஓமர் சொல்கிறார்.

உலகிலேயே மிகச்சிறிய குளம்புள்ள பாலூட்டி இதுதான்.

**குள்ள யானை**

கூரன்பன்றி சற்று நேரத்தில் பாத்திரத்துக்குள்ளே இறைச்சியாக உருமாறி வந்து சேர்கிறது. ஒரு பெரிய நாட்டுக்கோழியைவிட சற்றுக் கூடுதலான இறைச்சி. மனாப் அதன் தோலைப் பத்திரப்படுத்திக் கொள்கிறார். தோல்பொருட்கள் சந்தையில் அதற்கு நல்ல விலை. சமையல் அதே உறிப்பானைச் சமையல். பானையில் எண்ணெய் இட்டு நறுக்கிய வெங்காயம், பூண்டு போட்டு வதக்கி நிறைய நீர்விட்டு மேலே கட்டித் தொங்கவிட்டுக் கொதிக்க வைத்தார்கள். கொதி வந்தவுடன் அலசிய இறைச்சியை உள்ளே போட்டார்கள். அது வெந்தவுடன் உப்பு, அஜினமோட்டோ சேர்த்துக் கொதித்தவுடன் நீருடன் கீழே இறக்கினர். அது ஏறக்குறைய கோழி சூப் போல அமைந்திருக்கிறது. சோற்றில் ஊற்றி எல்லோருக்கும் பரிமாறுகிறார்கள். தேவைப்பட்டவர்கள் கூடுதலாக சோயாச் சாற்றை ஊற்றிக்கொள்ள காரம் தேவைப் பட்டவர்கள் கொஞ்சம் ஊசிமிளகாயை நசுக்கி அதில் சேர்த்துக் கொள்கின்றனர்.

சாப்பிட்டு முடித்துவிட்டு மீண்டும் தீயைச் சுற்றி அமர்கிறோம். தீ நன்றாகக் கனன்று எரிந்து கொண்டிருக்கிறது. ஓமரும் ரேஞ்சரும் வரைபடத்தைப் பார்த்துக் கொண்டிருக்க ஆண்ட்ரூஸ் நெருப்பை மேலும் தூண்டிவிடுகிறார். மூன்றுபேர் தூங்கப் போய்விட்டனர். நாளைய திட்டம் குறித்துப் பேசிக்கொண்டிருந்ததை அமைதியாகக் கேட்டுக்கொண்டிருக்கிறேன். அவர்கள் பேச்சிலிருந்து சென்று சேர வேண்டிய இடம் வெகு தொலைவில் இருப்பது புரிகிறது. அவர்களின் பேச்சையே கவனித்துக் கொண்டிருக்கையில் ஓமர் திரும்பிப் பார்த்துச் சொல்கிறார். நாளை நீ சமைப்பவருடன் இங்கேயே தங்கிக்கொள். அடுத்தநாள் கூடாரத்தைக் காலி செய்துகொண்டு உள்ளே போவோம். அப்போது நீயும் சேர்ந்து வரலாம்.

முடியாது நானும் வருவேன் என்கிறேன். சின்னப்பிள்ளை போல் அடம் பிடிக்காதே. கூடாரத்தை உள்ளே மாற்றிய பிறகு அங்கு வந்துதானே ஆகவேண்டும். நீ ஜம்போங்கன் காட்டை மனதில் வைத்துக்கொண்டு இந்தக் கினபத்தாங்கன் காட்டுக்குள் நுழைந்து விடலாம் என்று நினைக்கிறாய். ஜம்போங்கன் ஒரு காடே இல்லை. அது என்றோ அழித்து முடிக்கப்பட்ட காடு. இங்குக் காட்டின் அடர்த்தி அதிகம் என்கிறார் ஓமர்.

ஜம்போங்கன் ஒரு காடே இல்லை என்பதால்தானே இங்கு வந்தது? இங்கு வந்தும் கூடாரத்திலேயே இருப்பதற்குப் பேசாமல் சண்டகானிலேயே இருந்திருப்பேனே என்று அழுத்திச் சொன்னதும் சற்றுநேரம் அமைதியாக இருந்தவர் ஒற்றை வரியில் முடித்துக்கொள்கிறார். பிறகு உனது விருப்பம்.

திடீரென தன் உதட்டின் குறுக்கே ஒற்றை விரலை வைத்து உஷ்.... என்கிறார் ஆண்ட்ரூஸ். அமைதியாகிறோம். மேற்குப் பகுதியிலிருந்து ஏதோ ஓசை கேட்கிறது. 'மடக் மடக்'கென்று கிளைகள் முறியும் ஓசை. ஆண்ட்ரூஸ் தன் இடக்கையை வலக்கையின் அக்குளின் கீழ் வைத்துக் கொண்டு அவ்வலக்கையை முழுக்கவும் மேலே தூக்கி கைவிரல்களை நெருக்கி வைத்துக்கொண்டு மேலும் கீழுமாக அசைத்துக் காட்டுகிறார். தும்பிக்கை என்பதன் சைகை. தொடர்ந்து மிகவும் மெல்லிய குரலில் 'காஜா' என்கிறார்.

யானைகளா? ஆம் யானைகள்தாம். தொடர்ந்து கிளைகள் முறிபடும் ஓசை கேட்டுக்கொண்டிருக்கிறது. அவ்வோசை எங்கள் பக்கம் நெருங்கி வருவதுபோல் இருக்கவே எல்லோரும் எழுந்து நிற்கிறோம். எச்சரிக்கை உணர்வோடு எதுவும் பேசாமல் உன்னிப்பாகக் கேட்கிறோம். கிழக்கு நோக்கி வந்துகொண்டிருந்த அவ்வோசை இப்போது வடக்கில் கேட்கிறது. யானைகள் வேறு திசையில் திரும்பிவிட்டிருக்கின்றன.

மீண்டும் அமர்கிறோம். யானைகள் திடீரென்று வந்துவிட்டால் எப்படித் தற்காத்துக் கொள்வது? இங்கிருந்து நேரே சாலைக்கு ஓடிவிட வேண்டுமா? அய்யத்தை ஓமரிடம் கேட்கிறேன். அதற்கு அவசியமிருக்காது. நாம் இங்கிருப்பது தெரிந்தாலே அவை இங்கு வராது. ஏனென்றால் இங்குள்ள யானைகள் கொஞ்சம் தனிமை விரும்பிகள். மனிதர்களைக் கண்டால் அவை தாமே ஒதுங்கிக்கொண்டுவிடும்.

இங்கிருப்பது ஆசிய வகை யானைகளா?

இக்கேள்விக்கு ஓமர் உடனே பதில் சொல்லாமல் சற்றுப் பொறுத்துச் சொல்கிறார். அப்படிச் சொல்வதில் சிக்கல் இருக்கிறது. ஒரு காலத்தில் பிரித்தானியர்கள் இங்கு ஆண்டபோது இந்தியாவிலிருந்து தருவிக்கப்பட்ட யானைகளைப் பிலிப்பைன்சின் மிண்டானோ தீவின் சுல்தானுக்கு அன்பளிப்பாய்க் கொடுத்திருக்கிறார்கள். அப்போது

சண்டகான் அவருடைய ஆட்சியின் கீழ்தான் இருந்தது. பிறகு சுலு சுல்தான் அந்த யானைகளைப் போர்னியோவுக்குக் கொண்டுவந்து சேர்த்ததாக நம்பப்பட்டு வந்தது. ஆனால் இப்போது இங்குள்ள யானைகளை அறிவியலாளர்கள் தனி வகையாக அடையாளம் கண்டுள்ளதாகச் சொல்லப்படுகிறது. இந்திய யானையின் ஓர் உள்ளின மாக இதைக் கணித்திருக்கிறார்கள்.

அப்படியென்ன இரண்டுக்கும் உள்ள வேறுபாடு?

அதை நீ நேரில் பார்த்தால்தான் தெரியும். பொதுவாக இந்திய யானையைவிட இந்த யானை உயரம் குறைவு. அதனாலேயே இதை பிக்மி யானைகள் அதாவது குள்ள யானைகள் என்று அழைக்கிறார்கள். இதன் சிறப்பு என்னவென்றால் இதனுடைய முகம்தான். முதிர்ந்த யானைக்குக்கூட இளமையான முகம் இருக்கும். அதனாலேயே இந்த யானைகள் பார்ப்பதற்கு அழகாக இருக்கும். விளக்கிச் சொல்வதைவிட நீ அதை நேரில் பார்க்கவேண்டும். அப்போதுதான் உனக்குப் புரியும்.

இவ்வளவு சிறப்புமிக்க யானையை எப்படியும் பார்த்துவிட வேண்டும். இன்று ஒருநாளுக்குள்ளேயே இவ்வளவு விலங்குகளைப் பார்த்தாகிவிட்டது. இன்னும் எந்தெந்த விலங்குகளைக் காணும் வாய்ப்பு கிடைக்கப் போகிறதோ?

என்ன யோசனை... உறங்கலாமா? ஓமரின் குரல் கொட்டாவியோடு வருகிறது.

**தாகத்தின் இசை**

கிழக்கொளி இன்னும் தோன்றவில்லை. ஓடையில் குளித்து முடித்து ஈரத்தலையைத் துவட்டுகையில் உடல் வெடவெடவென நடுங்குகிறது. குளிர்க்காற்றில் பறவைகளின் குரல்கள் மட்டும் நடுங்காமல் மிதந்து வருகின்றன. நடுங்கும் உடலோடு கூடாரம் திரும்பி சுடச்சுடச் சீனத்தேநீர் பருக, உடல் வெப்பம் திரும்புகிறது. பசியாற மார்ஜரின் தடவிய ரொட்டித்துண்டுகள். முடிந்ததும் காட்டுக்குள் நுழைய ஆயத்தம். கண்ணை உறுத்தாத கரும்பச்சை, மண்நிற ஆடைகள் அணிகிறோம். முழுக்கைச் சட்டையை முழுக்கால் ஆடைக்குள் செருகி காலுறை அணிகிறோம். வழக்கமான காலுறைதான் முதலில். ஆனால் சப்பாத்து அணிவதற்கு முன்பு கட்டாயம் 'அட்டைக் காலுறை' அணியவேண்டும்.

அழுத்தமான காடாத்துணியில் தைக்கப்பட்டிருக்கும் அட்டைக் காலுறையை மாட்டினால் முழங்கால்வரை வரும். தொளதொளவென இருக்கும் இதை மேல்பகுதியில் உள்ள நாடாவால் முடிச்சிட்டு கட்டிக்கொள்ள வேண்டும். பிறகுதான் சப்பாத்து போட்டுக்கொள்ள வேண்டும். பச்சைநிற காட்டுச் சப்பாத்தை எடுக்கிறேன். பொதுவாகக்

காட்டுவேலைக்கு மலிவான பூப்பந்துச் சப்பாத்துக்களை அணிவது வழக்கம். ஆனால் காட்டுக்குள்ளே நுழையும்போது இதுதான் வசதி. எடை அதிகமாக இருந்தாலும் கரடுமுரடான இதன் அடிப்பகுதி மண்ணில் இறுக்கி அழுத்தமாய்ப் பிடித்துக்கொள்ளும். குறிப்பாக ஈரமான சரிவுகளில் எளிதாகச் சறுக்கிவிடாது. சப்பாத்துக்களை அணிந்தவுடன் அடுத்துத் தண்ணீர்க் குடுவை. வியட்நாமிய போர்ப் படங்களில் வரும் காட்டுக்குள் அமெரிக்க இராணுவத்தினர் பயன் படுத்தும் பச்சை வண்ணம் பூசப்பட்ட அலுமினிய நீர்க்குடுவை. மற்றவர்கள் இடுப்பில் கூடுதலாக ஆளுக்கொரு பாராங் கத்தி உறையோடு தொங்கிக்கொண்டிருக்கிறது. இறுதியாகத் தொப்பி.

மேற்கு நோக்கிச் சரிந்த பாதையில் இறங்கி நடக்கிறோம். அது பழைய டிராக்டர் தடம். செடி கொடிகள் அடர்ந்திருந்தாலும் அப்படியொன்றும் அதிகமில்லை. ஒருவர் பின் ஒருவராக வரிசையாக நடக்கிறோம். கடைசியாகச் செல்வது வேடிக்கை பார்க்க வசதி.

ச்சீ - த்யூ....

மிக உரத்த சீழ்க்கை ஒலி. கால்கள் தானாக நிற்கின்றன. இது... இது எங்கேயோ கேட்ட பறவையின் குரல். குரல்வந்த திசைநோக்கி கண்கள் துழாவின. எதுவும் தென்படவில்லை. முன்னால் சென்று கொண்டிருந்த ஒமரும் நின்று திரும்பிப் பார்க்கிறார்.

'ச்சீ - த்யூ...'

இம்முறை அதை இருவரும் ஒரே சமயத்தில் பார்த்துவிடுகிறோம். அது ஓர் அழகிய வெண்ணிறக் குருவி. ஒரு சின்னக் கிளையில் நேராக தலைநிமிர்ந்தபடி அது அமர்ந்திருக்கிறது. உடலைவிட இருமடங்கு நீளமான இரட்டைவால் வெண்ணிறத்தில் தொங்குகிறது. தலைமட்டும் கருநிறம். இது ஊரில் வீட்டுக்கொல்லையில் அடிக்கடி காணும் வேதிவால் குருவி. ஒருவேளை அங்கிருந்துதான் எனைக் காண வந்தாயோ? நீ ஆசியா முழுக்க வலசை வரும் பறவையா? சற்றுநேரத்தில் விருட்டென பறந்துவிட மீண்டும் நடக்கிறோம். சிறிது தொலைவில் யானைச் சாணம் குவியலாகக் கிடக்கிறது. நேற்றிரவு கடந்து சென்ற யானை யின் சாணம். ஒரு கூட்டமே இருந்திருக்க வேண்டும். பாதையில் கால்தாரைகள் தெளிவாகத் தெரிகின்றன.

ஒருமணிநேர நடையில் சரளைக் கற்கள் விரவப்பட்ட சாலை யொன்று குறுக்கிடுகிறது. இங்கேயும் ஒரு முகாம் சாலை. ஆனால் கைவிடப்பட்டிருந்த சாலை. பயன்படுத்தாததால் ஆங்காங்கு சிறு செடிகள் முளைத்திருக்கின்றன. தென்வடலான சாலையில் வலப்பக்க மாகத் திரும்பி, வடக்கு நோக்கி நடந்தோம். சாலை நீண்டுகொண்டே செல்கிறது. இது என்ன? காடு என்று வந்தால் இப்படி எல்லாம் பாதையாக இருக்கிறது. ஓரிடத்தில் சாலை 'எஸ்' வடிவத்தில் வளைந்து

நீள்கிறது. அவ்வளைவின் முனையில் ஒரு மெங்காரிஸ் மரம் மிடுக்காக நின்றுகொண்டிருக்கிறது. சாம்பல்நிறப் பட்டை வெயிலில் பளபளக் கிறது. இது போர்னியோவின் ஆக நெடிய மரம்.

அந்த மெங்காரிஸ் முனையில் இருந்து அரை கிலோமீட்டர் சென்றிருப்போம். ஒரு குன்றின் முகட்டோடு அப்பாதை நின்று விடுகிறது. மேற்கொண்டு என்ன செய்யப் போகிறார்கள்? கீழே தெரிந்த பெரும் பள்ளத்தாக்கு முழுவதும் மரங்களால் நிரம்பியிருக்கிறது. கொஞ்சம்கூட இடைவெளி தெரியவில்லை. எங்கும் மரங்களின் கவிகை. ரேஞ்சரும், ஓமரும் வரைபடத்தைப் பிரித்துக்கொண்டு சிறிது நேரம் கலந்துபேசி பிறகு புறப்பட ஆயத்தமாகின்றனர். இப்பெரும் பள்ளத்தாக்குக்குள் இறங்கிக் கடந்து எதிரே தெரியும் குன்றுத்தொடர் மீது ஏறி அதையும் கடந்து அடுத்த பள்ளத்தாக்குக்குள் செல்ல வேண்டும். இந்தப் பள்ளத்தாக்குக்குள் இறங்கினாலே வழி கண்டு பிடித்துப் போக ஒரு வாரம் ஆகும். இவ்வளவு அடர்த்தியான காட்டுக்குள் எப்படி அவ்வளவு தொலைவு போகப்போகிறோம்? தன் கையில் திசைகாட்டியை வைத்திருந்த ரேஞ்சர் முதலாவதாகச் சரிவில் இறங்கு கிறார். அவரது பாராங் கத்திதான் முதல் 'சிலாசிங்'கைத் தொடங்கி வைக்கிறது. பின்தொடர்ந்த மற்றவர்கள் தங்களது சிலாசிங்கைச் செய்துகொண்டே பாதையை அகட்டிச் செல்கின்றனர்.

சிலாசிங் என்பது காட்டுக்குள் செல்லுகையில் இடைஞ்சல் இன்றி நடக்க இலைதழைகளை வெறுமனே வெட்டிக்கழித்துக்கொண்டு செல்வது என இவ்வளவு நாட்கள் நினைத்திருந்தது எத்தகைய தவறு? வெட்டிக்கழித்தல் இவ்வளவு தொழில்நுட்பம் நிறைந்ததா? செல்லும் வழியில் பாராங் கத்தியால் இடம் வலமாக மாற்றி மாற்றி வெட்டும் போது இருபுறத்திலுமே வெட்டுச்சரிவு உட்பக்கம் வரும்படி வெட்ட வேண்டும். வலப்புறத்தில் இருக்கும் ஒரு தண்டை வெட்டும்போது அத்தண்டின் வெட்டப்பட்ட சரிவு இடப்பக்கமாக, பாதையின் பக்கமாகச் சரிந்திருக்க வேண்டும். இதேபோல் இடப்பக்க வெட்டுச் சரிவு வலப்பக்கம், பாதையின் பக்கமாகச் சரியவேண்டும். இது இந்த இருபக்க வெட்டுக்குள்தான் பாதை இருக்கிறது என்பதை உறுதிப் படுத்தும் அடையாளம்.

திரும்புகையில் இந்த வெட்டுத்தான் பாதையைச் சரியாகக் கண்டறிய உதவும். மேலும் வழியில் குற்றுமரமாக இல்லாமல் புதர்ச் செடிகளாக இருந்தால் அதன் சிறுகிளைகளை உடைத்துவிட வேண்டும். அப்படி உடைக்கும்போது உடைந்த கிளையைத் துண்டிக்காமல் அப்படியே அச்செடியிலேயே விட்டுவைக்க வேண்டும். அப்போது தான் வாடிய இலைகளுடன் அது அடையாளத்தைக் காட்டும். பெரிய மரமாக வந்தால் அதன் தண்டுப்பகுதியின் பட்டையில் ஓரிடத்தில் நன்றாகத் தெரியும்படி அகலமாக வெட்டி உரித்து வைக்கவேண்டும்.

வெளியிலிருந்து காட்டுக்குள் நுழைபவர்களே இத்தனை நுட்பங்களைத் தெரிந்து வைத்திருக்கிறார்கள். இக்காட்டுக்குள் வசிக்கும் தொல்குடி மக்கள் என்னென்ன நுட்பங்களை வைத்திருப்பார்கள்!

பாதை சரிவாய் இறங்கிக்கொண்டிருக்கிறது. கொஞ்சம் அசந்தாலும் சறுக்கிவிடும். மிக எச்சரிக்கையோடு பாதங்களைப் பதித்து நடக்கிறேன். அப்படியும் திடீரென சறுக்கிவிடுகிறது. நல்லவேளை பின்னால் வந்த ஓமர் கையை இறுகப்பிடித்து விழாமல் தடுத்துவிடுகிறார். நிலைத்து நின்றபின் சொல்கிறார். இது போன்ற சரிவுகளில் இறங்கும்போது நீ வழக்கமாக நடப்பதுபோல உடல் எடை முழுவதையும் குதிகாலில் நிறுத்தாதே. சமதரையில் மட்டுமே அந்த நடை உதவும். இங்கு உடல் எடையைக் கட்டைவிரலுக்குக் கொண்டுவா. நடப்பதற்கு எளிதாக இருக்கும்.

அவர் சொன்னபடி செய்தபோது எளிதாக நடக்க முடிகிறது. முந்தைய தடுமாற்றம் இல்லை. நடையில்கூட நுட்பமா? இன்னும் கற்றுக்கொள்ள என்னென்ன இருக்கின்றனவோ? ஆனால் இப்பயணம் நீண்டுகொண்டே போகிறது. இச்சரிவில் இறங்கத் தொடங்கி மூன்று மணி நேரத்துக்குமேல் ஆகிறது. எதிரே தெரிந்த குன்றும் தெரியவில்லை. திரும்பிப் பார்த்தால், இறங்கிவந்த குன்றும் தெரியவில்லை. தெரிவதெல்லாம் மரங்கள் மட்டுமே. அதுவும் அருகிலிருக்கும் மரங்கள் மட்டும். பத்தடிக்கு அப்பாலிருக்கும் மரங்கள்கூடத் தெரியவில்லை. ஒருமரமே நான்கைந்து ஆட்கள் அகலத்துக்கு அடைத்துக்கொண்டு நின்றால் எப்படித் தெரியும்?

எல்லோருடைய நீர்க்குடுவைகளும் காலியாகிவிட்டன. தாகம் நாவை வறட்டுகிறது. நடையிலும் தள்ளாட்டம். ஓர் ஓடை தெரிந்தால் போதும். முன்னே சென்றுகொண்டிருந்த மனாப் கையை உயர்த்தி எங்கள் நடையை நிறுத்துகிறார். எல்லோரும் நடையை நிறுத்தி அமைதியான பிறகு நீரோடையின் ஓசை கேட்கிறது. தாகம் கொண்டவரின் செவிக்கு நீர் ஓடும் ஓசைதான் இன்னிசை. ரேஞ்சர் பாதையை அந்நீரோடையை நோக்கித் திருப்புகிறார். சரிவாக இறங்கும் பாதையில் தாகத்தின் உந்துதலால் ஏறக்குறைய ஓடுகிறோம். ஓசை நெருங்கிக் கொண்டேவந்து இறுதியில் ஓடையாகிறது. கற்பாறைகளுக்கு இடையே கண்ணாடி நீர். இருகைகளையும் குவித்து அள்ளிப் பருக அமிழ்து. அமிழ்து.

சரி பசிக்கிறது. சாப்பிடுவோம் என்கிறார் ரேஞ்சர். அவரவர் கட்டுச்சோற்றைப் பிரித்துக்கொள்கிறோம். டப்பா குழம்புதான். 'இயோஸ்' நிறுவன டப்பாக் கோழிக்கறியைப் பாராங் கத்தியின் முனையைக்கொண்டு கிழித்துத் திறக்கிறேன். குழம்பில் கோழி இறைச்சி ஒரு துண்டும், உருளைக்கிழங்கு ஒரு துண்டும் இருக்கின்றன.

உண்டு முடித்து ஓடையில் கைகளைக் கழுவிக்கொண்டு நிமிர்கிறேன். ஒரு காட்சி கண்களை உறுத்துகிறது.

அமர்ந்திருந்த ஓடைக்கரையில் இப்போது தகர டப்பாக்களும் நெகிழிப்பைகளும் இறைந்து கிடக்கின்றன. இதுவரை மனிதர்களே நுழைந்திராத காட்டுக்குள் இப்போது மனிதர்கள் நுழைந்துவிட்டனர் என்பதன் முதல் அடையாளம்.

**கண்ணாமூச்சி ரே ரே**

வரைபடத்தை ஆண்ட்ரூசிடம் வைத்திருக்கச் சொல்லிவிட்டு தனது சப்பாத்துக்கயிற்றை கட்டிக்கொண்டிருக்கிறார் ஓமர். ரேஞ்சர் தன்னுடைய திசைகாட்டியை எடுத்துக்கொள்கிறார். இப்போது எதிரே இருக்கும் குன்றை ஏறிக்கடந்து மறுபுறம் இறங்கவேண்டும். ஆனால் இந்த இடத்திலிருந்து ஏறுவது சிரமம். சற்று நெடிய சரிவு. ஓடையோரமாகச் சென்று வாகான இடத்தைக் கண்டறியவேண்டும். அரைமணித் தொலைவு நடந்தவுடன் அப்படியோர் இடம் வருகிறது. ரேஞ்சர் அந்த இடத்தை உற்றுக் கவனித்துவிட்டுச் சொல்கிறார். இங்கிருந்து உள் நுழைய இருவழிகள் இருக்கின்றன. எனவே இரண்டிரண்டு பேராக இருவழியாகவும் நுழைந்து பார்க்கலாம். கொஞ்சம் தொலைவுவரை சென்றுவிட்டு மீண்டும் இவ்விடம் திரும்பிவந்து எது இலகுவான வழி என்பதை முடிவுசெய்த பிறகு எல்லோரும் அவ்வழியில் செல்லலாம்.

ரேஞ்சரும் மற்றொருவரும் வலப்பக்கமாய் நுழைய, இடப் பக்கமாய் ஆண்ட்ரூசும் மனாப்பும் நுழைகின்றனர். அவர்கள் திரும்பி வரும்வரை இங்குக் காத்திருக்கவேண்டும். பாசி போர்த்திய பாறையில் அமர்ந்தபோது இதமான குளிர்ச்சி. ஓடையில் ஓடிவரும் நீர் மண்ணின் மீதான தன் காதலை எழுதி எழுதி எங்கோ நெளிந்து மறைந்து கொண்டிருக்கிறது. அதைக் கடைவரியிலிருந்து வாசித்து முன்னேறி வரும் மீன்களிடம் நீரால் செதுக்கப்பட்டிருந்த கூழாங்கற்கள் இன்னும் உரையாடிக்கொண்டே இருக்கின்றன. இக்குன்றைக் கடந்தால் இதே போல் பல ஓடைகள் இருக்கலாம். அங்கு சென்று கூடாரமடிக்கும் போது இதே போன்றதொரு ஓடைக்கரையில் தங்கவேண்டியிருக்கும். அப்படித் தங்குகையில் இந்த உரையாடலை நிதானமாக ஒட்டுக் கேட்கவேண்டும். அகண்ட மொழியின் முதல் ஒலிக்குறிப்பு இந்நீரின் உரையாடலுக்குள் ஒளிந்திருக்க வேண்டும். அந்த ஒலிக்குறிப்பு என்னவாக இருக்கும்?

க்ரோங்க்...

அய்யோ, இது என்ன ஒலிக்குறிப்பு? அதிரச் செய்யும் ஒலி. அச்சத்தில் கண்கள் பிரண்டு உருள்கின்றன.

க்ரோங்க்...

மீண்டும் கேட்கிறது. எழுந்து நின்றுகொள்ள எதிரே அமர்ந்திருந்த ஓமர் சிரிக்கிறார். உட்கார். மீண்டும் கேட்கும் என்கிறார். மீண்டுமா? எங்கேயிருந்து வருகிறது இது? ஓமர் சொன்னபடியே இப்போது மீண்டும் கேட்கிறது. உச்சியில் இருந்து வருகிறது. ஒலி வந்த திசையில் தலையை உயர்த்தியபோது எதுவும் தெரியவில்லை. கவிகையின் அடர்த்தி. ஆனாலும் மீண்டும் கேட்கிறது. இம்முறை பின்பக்க உச்சியிலிருந்து. ஓமரிடம் கேட்கிறேன். என்ன இது?

இருவாசி.

இருவாசிகளா? இது கவிகைவாழ் பறவை. இதை அவசியம் பார்க்க வேண்டும். தலையை உயர்த்திக் கண்களால் எவ்வளவோ துழாவியும் காணமுடியவில்லை. இரு பறவைகளின் குரல்கள் இவை. திடீரென மேலேயொரு வலுத்த ஓசை. வானூர்தி பறப்பதுபோல. உடனே மீண்டுமொரு வானூர்தி. இரண்டும் பறந்துவிட்டன போலிருக்கிறது. இம்முறையும் கண்களுக்குத் தோல்வி. இந்த இருவாசிகள் பெரிய பறவைகள். அப்படியிருந்தும் புலப்படவில்லை. திரும்பிவருமா?

இன்னும் திரும்பி வரக்காணோம். இருவாசிகள் அல்ல. வழியைப் பார்த்துவிட்டு பத்து நிமிடத்தில் வருகிறேன் என்று சொல்லிச் சென்றவர்களைத்தான் இன்னும் காணோம். அரைமணி நேரத்துக்கும் மேலாகிறது. ஓமர் எழுந்துகொள்கிறார். எழுந்தவர் இரு கைகளையும் வாயருகே கொண்டுவந்து உதட்டின் இருபக்கமும் பொருத்தி விரித்துக் கொள்கிறார். பிறகு அடிவயிற்றிலிருந்து ஒலியெழுப்பி 'ஓஓஓ......ஓ' எனக் கத்துகிறார். இது கானகச் சமிக்ஞை மொழி. காட்டுக்குள் இருக்கும் ஒருவர் கட்புலனாகா நிலையில் அவரை அழைக்கும் மொழி. இதில் 'ஓஓஓ' வை நீண்ட நேரம் இழுத்து ஒலித்து இறுதி 'ஓ'வைச் சட்டென்று உச்சக்குரலில் உதிர்க்கவேண்டும்.

ஓமரின் முதல் குரலுக்குப் பதிலேதும் கிடைக்கவில்லை. இரு நிமிடங்கள் பொறுத்து மீண்டும் கூவுகிறார். இம்முறை வலப்பக்கத்தில் இருந்து பதில் குரல் வருகிறது. இடப்பக்கம் சென்ற குழு என்ன ஆனது? ஓமர் இம்முறை திசையை மாற்றிக் கூவுகிறார். இம்முறையும் பழைய இடத்திலிருந்தே பதில் குரல் வருகிறது. இடப்பக்கம் சென்றவர்கள் என்ன ஆனார்கள்? ஒருவேளை இரு குழுக்களும் உள்ளுக்குள் சென்றபோது சந்தித்து ஒன்று சேர்ந்துவிட்டார்களா? வாய்ப்பிருக்கிறது. சரி, முதலில் உள்ளே போய் வலப்பாதையில் சென்ற குழுவைச் சந்திக்கலாம். அவர்கள் அனைவரும் இங்கே வந்துசேர்ந்து அதன்பிறகு திரும்பிச் செல்வதைவிட இதுதான் மேல். நேரமும் மிச்சம். அவர்கள் வெட்டிக்கழித்துச் சென்றிருந்த தடத்தின் வழியே உட்செல்லுகிறோம். பத்துநிமிட நடைக்குப் பிறகு மீண்டும் குரல் கொடுக்கிறார் ஓமர். பதில் வரவில்லை. திரும்பவும் குரல் கொடுக்கிறார். பதில் இல்லை.

நியாயமாக இந்நேரம் அவர்கள் குரல்கேட்டு திரும்பி வந்து கொண்டிருக்கவேண்டும். ஆனால் அப்படி நிகழவில்லை. மேலும் அய்ந்து நிமிட நடைக்குப் பிறகு இன்னொருமுறை குரல் கொடுக்கிறார். இடப்பக்கத்திலிருந்து பதில் குரல் வருகிறது.

அவர்கள் அருகில்தான் இருக்கிறார்கள். நாம் இப்படியே குறுக்கே சென்று இணைந்துகொள்வோம். நீ மட்டும் அவ்வப்போது குரல் கொடுத்துக்கொண்டே வா என்று சொல்லிவிட்டு ஓமர் தன்னிடமிருந்த பாராங்கத்தியால் வெட்டிக்கழித்துக்கொண்டே முன்னேறுகிறார். மூன்றுநிமிட இடைவெளிக்கொருமுறை குரலுக்குப் பதில்குரல் கிடைத்துக்கொண்டிருப்பது நம்பிக்கையைத் தருகிறது. எதிரே பெரிய ரோத்தான் புதர் வழிமறிக்கிறது. முட்கள் மண்டிய இப்பிரம்புப் புதருக்குள் வெட்டிக்கழித்து உட்புக முடியாது. சுற்றிக்கொண்டுதான் செல்ல முடியும். ஓமர் இடப்பக்கமாக வெட்டிக்கழித்துச் செல்கிறார். இந்த ரோத்தான் புதரின் பரப்பு எதிர்பார்த்ததைவிடவும் பெரிதாக இருக்கிறது.

ஓர் அரைவட்டம் கடந்தாகிவிட்டது. இங்குதானே அவர்கள் இருக்க வேண்டும். எங்கே காணோம்? சரி குரல் கொடுப்போம். இதென்ன பதில் குரல் இப்போது மறுபக்கத்தில் இருந்து கேட்கிறது. ஒருவேளை அவர்கள் புதரை வலப்பக்கமாகக் கடந்து அங்கு போய்விட்டார்களா? இப்போது என்ன செய்யலாம்? வா, பேசாமல் வந்த வழியே திரும்பி நாம் அங்கேயே சென்றுவிடுவோம் என்கிறார் ஓமர். திரும்பவும் நடந்து ரோத்தான் புதர் தொடங்கிய இடத்துக்கே வந்து சேர்கிறோம். எவரையும் காணவில்லை. குரல் கொடு என்கிறார் ஓமர். பதில் குரல் இப்போது திரும்பவும் எதிரே பழைய இடத்திலிருந்து ஒலிக்கிறது.

இது கண்ணாமூச்சி ரே ரே.

களைத்துவிடுகிறது. கீழே அமர்ந்து குடுவைநீரைத் தொண்டைக்குள் இறக்கிய பின்புதான் மூச்சு சீராகிறது. அவர்களே வந்து சேரட்டும். பத்துநிமிடம் காத்திருக்கலாம். இதென்ன இது பகல்நேரம் போலவே தெரியவில்லை. இப்படி இருண்டு வருகிறது? மேலே வானம் மப்பாக இருப்பது மரக்குடைகளினூடே தெரிகிறது. இதுவேறு புது சிக்கலா? நிமிடம்தான் பத்து கடந்தது. எவருமே வரவில்லை. எழுந்து கூவுகிறோம். பதில் வருகிறது. ஆனால் முற்றிலும் வேறு திசையிலிருந்து. அதுவும் மங்கிய குரல். அப்படியென்றால் அவர்கள் எங்கோ வெகு தொலைவில் இருக்கிறார்கள். ஓமர் தலையை அசைத்துக்கொள்கிறார். வேறு வழியில்லை. வா, திரும்பவும் அந்த ஓடைக்கே சென்று காத்திருப்போம்.

வந்த வழியே மீண்டும் திரும்பியபோது அது அவ்வளவு இலகுவாக இல்லை. மேலே வானம் நன்றாக இருண்டுவிட்டது. வெட்டிக்கழித்த பாதையை ஓரளவு ஊகித்துத்தான் நடக்க முடிகிறது. எப்படி

இருந்தாலும் வழிதவற வாய்ப்பில்லை. எந்தப் பக்கம் இறங்கினாலும் இந்தச் சரிவு ஓடையை நோக்கித்தான் செல்லவேண்டும். எதிர்பார்த்த படியே ஓடை வருகிறது. ஆனால் இது முற்றிலும் வேறு பகுதி. இது நாங்கள் முன்பு புறப்பட்டிருந்த பகுதி அல்ல. அதற்கு முன்பகுதியா பின்பகுதியா என்றும் தெரியவில்லை. இங்கிருந்து ஓரளவு தெரியும் வானத்தைப் பார்த்ததில் நன்றாக இருண்டிருந்தது. இங்கிருந்தும் ஓரிரு முறை கூவிப்பார்க்கிறோம். எதிர்பார்த்தபடியே முயற்சி வீண். இனி என்ன செய்யவேண்டும்? ஓமர்தான் தீர்மானிக்க வேண்டும்.

ஓமர் மிக முயன்று தன் கைக்கடிகாரத்தைப் பார்த்து, மணி மூன்று என்கிறார். அதாவது பிற்பகல் மூன்று மணி. பிற்பகலா இது? அதிகாலை மூன்று மணி என்றால்தான் நம்பமுடியும். ஓமர் மெல்ல முணுமுணுப்பது போலச் சொல்கிறார். நம் பாதையை நாமே பார்த்துக்கொள்ள வேண்டியதுதான். வந்தவழியே இனி திரும்பமுடியாது. ஏனென்றால் நம்மிடம் திசைகாட்டி இல்லை. இருந்தாலும் இந்த இருட்டில் அதனால் பயனில்லை. காட்டின் இயற்கை வழிகாட்டியான வெயிலும் இல்லை. நம் முன்னிருப்பது இப்போது ஒரே வாய்ப்புதான். இதோ இந்தக் குன்றின் மேல்தான் நாம் இறங்கிவந்த அந்தப் பழைய முகாம்சாலை இருக்கிறது. அதை அடைந்துவிட்டால் போதும்.

முடியுமா? சன்னமான குரலில் கேட்கிறேன்.

நம்புவோம். என் நினைவுத்திறன் மீதும் கடவுளின் மீதும் நம்பிக்கை வைத்து நடப்போம் என்ற ஓமர் ஓடைக்கரையோரமாக நடக்கத் தொடங்குகிறார். தட்டுத்தடுமாறி இருபது நிமிடம் நடந்தபிறகு அந்த ஓடை ஒரு திருப்பத்தில் கொண்டை ஊசியைப் போல் வளைந்து திரும்புகிறது. இந்த இடத்திலிருந்து மேலே ஏற முடிவு செய்கிறார். எப்படியும் இந்தச் சரிவில் ஏறிச்சென்றால் அது சாலையை அடைந்தே தீரவேண்டும். முயற்சி செய்து பார்க்கவேண்டும். வரைபடமும் கையில் இல்லை. அதை ஆண்ட்ருசிடம் கொடுத்துவிட்டது நினைவுக்கு வருகிறது. திசைகாட்டி ரேஞ்சர் வசம். ஆக வரைபடம் ஒரு குழு வசம். திசைகாட்டி இன்னொரு குழு வசம். எதுவுமே இல்லாத நாங்கள் நடுக்காட்டில். நாங்கள் காட்டில் தொலைந்துவிட்டோமோ? முதன் முதலாக மனநடுக்கம் தோன்றுகிறது. ஓமரிடம் கேட்கலாமா? வேண்டாம். ஒருவேளை பதில் எதிர்மறையாக இருந்தால்? மனதை வலுவிழக்க விடக்கூடாது. ஏறுவோம். இந்த ஏற்றத்தில் தொடர்ந்து ஏறுவோம். உறுதியாக இது அந்தச் சாலைக்குக் கொண்டு சேர்த்துவிடும் என்று நம்புவோம். படித்த சுயமுன்னேற்ற நூல்கள் எல்லாம் என்ன சொல்கின்றன? ஒன்றை வலுவாக நம்பினால் அது நடந்துவிடும். நடந்துவிடும். நடந்துவிடும். என்ன நடந்துவிடும்? காட்டின் அடர்த்தியும் இருளும் ஆழ் அமைதியும் இந்த எல்லா நம்பிக்கைகளையும் உறிஞ்சிக் குடித்துக் கொண்டல்லவா இருக்கின்றன?

ஏற்றம் ஓரிடத்தில் தடைபடுகிறது. எதிரே சற்றுச் செங்குத்துப்பாறை. அதைக் கடக்கமுடியாது. சுற்றித்தான் செல்லவேண்டும். இடம் அல்லது வலம். பூவா? தலையா? எந்தப் பக்கமாகப் போகலாம்? ஓமரின் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. தேர்ந்தெடுத்தது தவறாகப் போய் விட்டால்? ஓமரே அதைச் செய்யட்டும். செய்கிறார். இடப்பக்கமாக நடக்கிறார். இந்த இடம் வலம் என்பது எல்லாம் அவ்வப்போது இருக்கும் இடத்தைப் பொறுத்துச் சொல்லிக் கொள்வதுதான். மற்றபடி திசைகளை விழுங்கிய இக்காட்டுக்குள் இடம் என்ன? வலம் என்ன? எல்லாம் மனசுக்குச் சொல்லிக்கொள்ளும் ஆறுதல்.

தொலைவில் இடி முழக்கம் கேட்கிறது. அதைத் தொடர்ந்து எங்கோ மழை பொழியும் ஓசை. ஓமர் இந்த இருட்டிலும் ஒருமுறை தன் கைக்கடிகாரத்தைத் தடவிப்பார்த்து தோற்கிறார். இந்த மழை வேண்டாம். எப்படியாவது முதலில் வெளியே போகவேண்டும். முடியுமா? முடியாது. இதோ மழை நெருங்கி வந்துகொண்டிருக்கிறது. பளீரென வலுத்த மின்னல். அது இருபதடி தொலைவிலிருந்த ஒரு பெரும் பாறையைக் காட்டிக்கொடுக்கிறது. வா அங்கு போகலாம் என்ற ஓமர் அதை நோக்கி நகர்கிறார். திடீரென காதைப் பிளக்கும் இடியின் பேரொலி. வெகு அருகில்தான் வீழ்கிறது. வேறு வழியே இல்லை. இந்தப் பாறை மீதுதான் அமர வேண்டும். இருவர் தாராளமாக அமரும் அளவுக்குப் பெரும்பாறை. தடுமாற்றத்துடன் ஏறி அமரவும் மழை வந்துசேரவும் சரியாக இருக்கிறது. ஓமரைப் பார்க்கிறேன். இருட்டில் முகமே தெரியவில்லை. நொடிகள் தளர்ந்து நடந்துகொண்டிருக்கின்றன. ஓமரிடமிருந்து சொற்கள் மிக மெல்லியக் குரலில் வருகின்றன.

நான் நினைக்கிறேன்... நாம் வழி தவறிவிட்டோம்.

தெளிவு. அதாவது காட்டுக்குள் தொலைந்துவிட்டோம் என்கிறார்.

**கான் யாமம்**

மழை மாது தன் நடனத்தைத் தொடங்குகிறாள். கவிகைப்பரப்பின் மேல் துளி இடம் விடாமல் தன் பாதம் பதித்துக் களிநடம் புரிகிறாள். அவள் மேனித்துளிகள் இலைகளுக்குள் ஊடுருவி நீர்ப்பூக்களாய்ச் சிதறி தெளிக்கின்றன. நடனத்தின் உக்கிரம் கூடக் கூட பூக்கள் கற்களாய் கனக்கின்றன. உச்ச நடனத்தில் மின்னல்களின் தெறிப்பு. இடிகளின் பேரிகைக் கொட்டல். ஆடுகிறாள். ஆடுகிறாள். ஆடிக்கொண்டே இருக்கிறாள். எத்தனை மணித்துளிகளாய் ஆடிக்கொண்டிருக்கிறாள்? அறிய முடியவில்லை.

முழங்கால் முட்டிக்குள் முகம் இன்னும் புதைந்தே கிடக்கிறது. வெகுநேரமாய்க் கவிழ்ந்திருக்கும் தலை வலிக்கிறது என்று சற்றே உயர்த்தினால் முகத்தில் மழைநீரின் கழுவல். கண்களைத் திறக்க

முடியவில்லை. திறந்துதான் என்ன ஆகப்போகிறது? எங்கும் இருட்மயம். ஓமர் அருகில் அமர்ந்திருக்கிறார் என்று மூளைக்குள் பதிந்திருந்த செய்திதான் அவர் இருப்பை உணர்த்திக்கொண்டிருக்கிறது. ஓமர் சொல்லியதைத் தொடக்கத்திலேயே கேட்டிருக்கலாம். மீறி அடம் பிடித்து நுழைந்து இப்படியொரு சிக்கலில் வலிய மாட்டிக்கொண்டோம். காடா பார்க்க வந்தாய் காடு? நேற்றிரவு கூடாரத்தில் கனலருகே அமர்ந்து காய்ந்துகொண்டிருந்தோம். இந்நேரம் இது மாலையா இரவா என்றே தெரியவில்லை. குளிரின் வாட்டம் வேறு. முழங்காலுக்குள் முகம் ஆழப் புதைகிறது. எவ்வளவு ஆழம்? இது புதைதலா இல்லை உறக்கமா? அல்லது நனவு மரத்துப் போய்விட்டதா?

ஏதோ ஒரு நொடியின் சிமிட்டலில் கண்கள் திறக்கின்றன. மழை மாது அரங்கத்தைக் காலி செய்திருந்தாள். தலை நிமிர்கிறது. ஆம் மழை நின்றுவிட்டது. நின்றுவிட்டது. அவ்வளவுதான். வேறு என்ன செய்ய முடியும்? எழுந்து போகமுடியுமா? ஆடை மாற்றமுடியுமா? படுத்து உறங்கத்தான் முடியுமா? மழை நின்றிருந்தாலும் இலைகளின் நீர்த் தெளிப்பு நிற்கவில்லை. விரைத்திருந்த உடலில் பனிபோல் குளிர் பரவுகிறது. எழுந்துவிட்டாயா? ஓமரின் குரல். இருளுக்குள் இவருக்குக் கண் தெரிகிறதா? சுற்றிலும் பார்க்க இருட்டு பழகி ஓமரும் தெரிகிறார். வானில் முகில்கள் விலகியிருக்க வேண்டும். இருள் இலேசாகச் சாம்பல் தடவியிருக்கிறது. அருகிலிருந்த மரங்கள், புதர்கள் தத்தம் நிழலுருவங் களைத் தெரிவிக்கின்றன. உடலும் கைகால்களும் நடுங்கத்தொடங்கின. பற்கள் இறுகிக் கெட்டித்து அடித்துக்கொள்கின்றன. ஓமருக்கு இலை யெல்லாம் தெரிகின்றன போலும்.

கொஞ்சம் நெருங்கி வா. வந்து உன் முதுகை என் முதுகின்மீது வைத்துச் சாய்ந்தவாறு உட்கார்ந்துகொள். கொஞ்ச கொஞ்சமாய்க் குளிர் குறைந்துவிடும் என்கிறார்.

அவர் சொன்னபடியே ஒருவர் முதுகின்மீது ஒருவர் சாய்ந்து எதிர் எதிர்த் திசைகளைப் பார்த்தபடியே அமர்ந்திருக்கிறோம். நேரமாக ஆக சொல்லியபடியே ஒருவர் வெம்மை ஒருவருக்குப் பரவுவதாலோ என்னவோ குளிர் குறைந்துகொண்டே வருகிறது. சட்டையின் முதுகுப்புறம் உலர்ந்தேவிட்டது. உடலின் வெப்பமும் கூடுகிறது. வெளியே குளிர் இருந்தாலும் இப்போதைக்கு இதுவே பெரிய ஆறுதல். உடல் வெப்பம் மீண்டதால் இன்னொரு சிக்கல் பறந்துவந்து சேர்கிறது. கொசுக்கள். கைமணிக்கட்டுகளையும் முகத்தையும் கடிக்கத் தொடங்கின. நனைந்திருந்த தொப்பியால் முகத்தை மூடிக் கைகளைத் தொடைக்குள் புதைத்துக் கொண்டாலும் காதுக்குள் கேட்கும் பாடலை மட்டும் தடுக்க முடியவில்லை. திடீரெனப் பின்பக்கத்தில் ஏதோ சலசலப்பு. ஓமரின் குரல் மிக மெலிதாக வருகிறது. அசையாதே

அசையவில்லை. சலசலப்போடு இலேசான உறுமல் ஒலியும் கேட்கிறது. ஓமர் முணுமுணுக்கிறார். காட்டுப்பன்றி.

உள்ளுக்குள் ஓர் உதறல். இது துணிச்சலான விலங்கு. எதிரே மனிதர்களைக் கண்டாலும் அச்சப்படாது. இப்படி முதுகுக்குப் பின்னே அது நிற்கும்போது அசையாமல் அமர்ந்திருப்பதே நலம். பன்றியின் உறுமல்கள் கேட்கின்றன. கூட்டமாக வந்திருக்கலாம். இம்மழையில் ஏதாவது கனிகள் மரத்திலிருந்து கீழே விழுந்திருக்கலாமெனத் தேடி வந்திருக்கலாம். சேற்றை உழப்பும் ஒலி அரைமணி நேரத்துக்குப் பிறகே ஓய்கிறது.

முதலில் வெகுநேரமாய் முட்டிக்கொண்டிருக்கும் அவசரத்தை நீக்கவேண்டும். ஓமரும் எழுந்துகொள்கிறார். திரும்பி வந்த இருவரும் அருகருகே அமர்கிறோம். ஓமர் தன் கைக்கடிகாரத்தில் நேரம் அறிய முயன்று தோற்கிறார்.

எப்போது விடியும்? கேள்விக்கு விடை தெரியாத இரவு இன்னும் யோசித்துக்கொண்டேயிருக்கிறது. மற்ற நால்வரும் என்ன ஆகியிருப்பார்கள்? கூடாரத்துக்கு வழிகண்டு போயிருப்பார்களா? இல்லை எங்களைப் போலவே இக்காட்டின் ஏதோவொரு மூலையில் மாட்டி இருப்பார்களா? விடிந்தால் எல்லாம் தெரியும். விடிந்து ஞாயிறு உதிக்கும் திசை தெரிந்தால் வழி கண்டுபிடித்துப் போய்விடலாம். ஓமர் மீது நம்பிக்கை இருக்கிறது. ஆனால் அதற்கு முதலில் விடிய வேண்டும். கொசுக்களுக்கு அஞ்சி மீண்டும் முகம் புதைக்கிறேன்.

திரும்ப விழித்தபோது வைகறையின் பாடலைப் பறவைகள் பாடிக்கொண்டிருக்கின்றன. அப்பாடல்கள்தாம் கவிகைப்பரப்பின் இருளைக் கழுவி மெல்ல வெள்ளி நிறத்துக்கு மாற்றுகின்றன. விடியல் - இத்தனையாண்டுகளாக வெறுமனே உச்சரித்துக்கொண்டிருந்த இச்சொல்லுக்கு இதுதான் மெய்ப்பொருளா? ஒவ்வொன்றாய்த் துலங்குகின்றன. கவிகை, மரங்கள், குறுமரங்கள். புதர்கள், இப்பாறை, இதன்மேல் படிந்திருக்கும் பாசி எல்லாம் தெரிகின்றன. பறவைகளின் குதூகலம் மனசுக்கும் தொற்றிக்கொள்கிறது. எழுந்துகொள்ளலாம். கதிரொளி இன்னும் தோன்றவில்லை. ஆனால் வெளிச்சம் போதிய அளவுக்கு இருக்கிறது.

ஓமர் எழுந்துகொள்கிறார். இவ்வெளிச்சம்போதும்; நாம் புறப்படலாம். ஆனால் இனி குன்றின் பக்கமாகத் திரும்ப ஏறவேண்டாம். கிழக்கு நோக்கிச் செல்வோம். நேரே கூடாரத்துக்குப் போய்ச் சேர்ந்துவிடலாம் என்கிறார். வெளிச்சம் வரும் பக்கம்தான் கிழக்கு என்பதைக் கண்டுபிடிக்க எந்தத் திசைகாட்டி தேவை? பாறையிலிருந்து கீழே இறங்கியபோது நிலம் நன்கு ஊறிப்போயிருப்பது தெரிகிறது. பார்த்து நடக்கவேண்டும். சற்றுத் தள்ளியிருந்த ஒரு மரத்தடியில்

இரவில் பன்றிகள் உழப்பிய தடம். அகலமாகத்தான் உழப்பி வைத்திருக்கின்றன. சேற்றின் நடுவே ஓர் இலை விழுந்து கிடக்கிறது. ஆனால் அருகே சென்றதும் சட்டென்று அந்த இலை தாவுகிறது. தாவும் இலையா? இல்லை. இது இலையல்ல. தவளை. பச்சைத்தவளை. ஒமரும் அதைக் கவனித்துவிடுகிறார். நெருங்கிச் சென்று பார்த்தவர் இது வெறும் பச்சைத் தவளையல்ல. பறக்கும் பச்சைத் தவளை என்கிறார். தவளை பறக்குமா எனச் சிரிக்கிறேன்.

நீ கேள்விப்பட்டதில்லையா? இங்கு தவளை மட்டுமல்ல, பாம்பு, பல்லி, ஓணான், அணில் எல்லாமே பறக்கும். என்ன சிரிக்கிறாய்; உண்மையைத்தான் சொல்கிறேன் என்ற ஒமரிடம் சொல்கிறேன், பறக்கும் அணிலைப் பார்த்திருக்கிறேன். ஆனால் தவளை எப்படிப் பறக்கும்?

பறத்தல் என்றால் பறவையைப்போல கிடைமட்டத்தில் பறப்பது என்று நினைத்துக்கொள்ளாதே. ஒரு மரத்திலிருந்து இன்னொரு மரத்துக்குச் சறுக்கிப் பறப்பதைத்தான் பறக்கும் என்கிறோம். இதைச் சரியாகச் சொன்னால் 'சறுக்கிகள்' எனச் சொல்லவேண்டும். பறக்கும் அணிலுக்குச் சறுக்கிப் பறக்க சவ்வு போன்ற தோல் இழைமம் உண்டு. தவளைக்கு அது இல்லை. இதன் நீளமான கால்களைக்கொண்டு சறுக்கிப் பறக்கும்போது அரைவட்டமாகச் சுழன்று பறக்குமென்று படித்திருக்கிறேன். ஆனால் பார்க்கும் வாய்ப்பு கிடைத்ததில்லை. கால்களைக்கொண்டு எப்படிப் பறக்கிறது என்று கேட்டுவிடாதே. அவ்வளவுதான் என் உயிரியல் அறிவு. ஆனால் இது மரத்தவளை. இதை இப்படித் தரையில் பார்ப்பதே அரிது. இனப்பெருக்கக் காலத்தில்தான் கீழேயிறங்கி நீரில் முட்டையிட்டுவிட்டு திரும்ப மேலேறிவிடுமெனப் படித்திருக்கிறேன். ஆனால் இப்போது இனப்பெருக்கக் காலமா என்று தெரியவில்லை.

அத்தவளை மரத்தில் தாவியேறுகிறது. அதற்குத் தன் வழி தெரிகிறது. எங்களுக்குத்தான் இன்னும் தெரியவில்லை. ஒமரின் பாராங்கத்தி உத்வேகமாக வெட்டிக்கழித்துக்கொண்டு வழியைத்தேடி முன்னேறுகிறது. ஆனால் அதில் வேகமில்லை. களைப்பே காரணம். வயிற்றுக்குள் பசியின் கபடி. பேச்சை நிறுத்திக்கொண்டு இப்படி அமைதியாக நடந்தால் அது இன்னமும் மும்முரமாக விளையாடுகிறது. அத்தவளையைப்போல உயரமான இம்மரங்களில் ஏறி சறுக்கிப்பறந்து நேரே கூடாரத்துக்குப் போகமுடிந்தால் எவ்வளவு நலமாக இருக்கும்?

### காட்டுப் புத்தகம்

நம்பிக்கை என்ற சொல்லே கீழ்த்திசையைக் கண்டுதான் உருவாகியிருக்குமோ? கவிகையின் சிறு துளைகளினூடே கீழைக்கதிர் பிசிறாய் மின்னி வரத்துவங்கியதும் உவகை ஊற்றாகப் பொங்குகிறது. சோர்வை

உடல் உதறுகிறது. நடை துரிதமாகிறது. ஒளியை அண்ணாந்து பார்த்துக் கொண்டே சரிவில் வேகமாக இறங்குகையில் சறுக். அம்மா...

நொடி நேரம் உடல் அதிர்கிறது. சத்தம் கேட்டு ஓமர் திரும்புகிறார். பாராங் கத்தியை அப்படியே போட்டுவிட்டு ஓடிவருகிறார். சறுக்கி விழுந்திருப்பதை உணரமுடிகிறது. பிட்டத்தில் நல்ல அடி. இடுப்புவலி தெறிக்கிறது. ஓமர் தன் கையைக் கொடுத்து, மெல்ல எழுந்திரு என்கிறார். உடனே முடியவில்லை. ஒரு கையை மெல்ல ஊன்றி மறுகையை ஓமர் இழுக்க ஒருவாறு எழமுடிகிறது. நிற்கவும் முடிகிறது. விழுந்த அதிர்ச்சி போலும். கால்களை மெல்ல உதறு என்றதும் இரு கால்களையும் உதறுகிறேன். எதுவும் ஆகவில்லை. பின்புறத்தில் ஈரமாய் இருக்கிறது. தட்டிவிட்டபோது ஒட்டியிருந்த இலைமக்குகள் உதிர் கின்றன. தரையில் மண் அறவே தெரியவில்லை. அந்தளவுக்கு மேல்மண் மக்குக் கிடக்கிறது. இது மெத்தையைப்போல தாங்கிக்கொண்டு விட்டதால் அடிபடவில்லை.

தொடையில் ஓர் அட்டை ஒட்டிக்கொண்டிருக்கிறது. மழை பெய்திருப்பதால் எல்லா அட்டைகளும் உதிர்ந்த தழைகளுக்குள்ளிருந்து வெளிவந்திருக்கும். இலைகளில் பரவியிருக்கும். அங்கிருந்து உடலுக்குத் தாவியிருக்கும். மெல்லியதாக அங்குல நீளத்துக்கு இருக்கும் அதன் செம்மஞ்சள்நிற உடலில் நீளவாக்கில் கருநிற கோடுகள் தெளிவாகப் புலப்படுகின்றன. அதன் அகலமான வாய்முனையால் சட்டையை இறுக்கமாகக் கவ்விப் பிடித்திருக்கிறது. தன்னுடலைக் கொக்கிபோல் வளைத்து மற்றொரு ஊசி போன்ற கூர்முனையால் சதைக்குள் நுழைய இடம் தேடிக்கொண்டிருக்கிறது. ஓமர் தீமூட்டியை எடுத்துச் சுட அது கீழேவிழுகிறது.

வெட்டிக்கழித்தல் தொடர்கிறது. மேலே பார்த்துக்கொண்டு வந்ததால்தான் சறுக்கிவிழ நேர்ந்தது. இனியாவது எச்சரிக்கையாக பாதையைப் பார்த்து நடக்கவேண்டும். வழியில் ஓடையொன்று குறுக்கிடுகிறது. மீட்டர் அகலம் இருக்கும்.

இறங்கிக் கடக்கிறோம். மறுகரை ஏற்றத்தில் உடலை முன்வளைத்து ஏறுகையில் வயிறு மடங்க காலி வயிறு வலிக்கிறது. ஓமரும் துவண்டு போயிருக்கிறார். பாராங் கத்தியால் வெட்டும் போது அவ்வெட்டு வலுவாக விழவில்லை. பாவம் எவ்வளவு நேரம்தான் அவரே வெட்டுவார்? வெட்டுவதற்காக கத்தியைக் கேட்கிறேன். ஓமரிடம் இருந்து மூச்சு இரைச்சலாய் வருகிறது. இல்லை. இது வெறுமனே வெட்டிக்கழிக்கும் வேலையல்ல. செல்லும் திசையைத் தவற விடக்கூடாது. பாதையில் எங்கு மேடு வரும், எந்தப் பக்கமாக நடந்தால் இலகுவாக நடக்கலாம், இதையெல்லாம் கணக்கிட்டுச் செல்லவேண்டும். களைப்பாக இருந்தாலும் நானே செய்கிறேன். நீ கீழே விழாமல் வந்தால் போதும். இம்மனிதருக்கு இந்நிலையிலும் சிரிப்பு வருகிறது.

ஓமர் ஓரிடத்தில் நின்று சொல்கிறார். இங்கு கொஞ்சம் கவனித்துப் பார். நம் இடப்பக்கம் உள்ள காட்டுப்பகுதி அதிக இருளாகவும் வலப்பக்கம் உள்ள காட்டுப்பகுதி சற்று வெளிச்சமாகவும் தெரிவதைப் பார். இரண்டுமே கிழக்கிலிருந்து வரும் ஒளியைச் சமமாகத்தானே பெறுகின்றன? அப்புறம் ஏன் இந்த வேறுபாடு? ஏனென்றால் இடப் பக்கம் மரங்கள் அதிகமாக இருக்கின்றன. அங்கு காடு இன்னும் வெட்டப்படவில்லை. வலப்பக்கம் மரங்கள் குறைவாக இருக்கின்றன. அங்கு காடு வெட்டப்பட்டிருக்கிறது. அதனால்தான் வெளிச்சமும் அதிகமாக இருக்கிறது. எனவே இந்தப் பகுதிக்குள் நுழைந்து சென்றால் மரங்களை இழுத்துச்சென்ற ஏதாவதொரு பழைய டிராக்டர் தடத்தைக் கண்டுபிடித்துவிடலாம்.

அருமை. திசைகாட்டி, வரைபடம் எதுவும் இல்லாமல் இவருடைய மூளை என்னமாய் வேலை செய்கிறது?

குடுவையில் நிரப்பியிருந்த ஓடைநீரைக் குடித்துவிட்டு பாதையிலே நடக்கத் தொடங்குகிறோம். அது ஒரு வெட்டுமரப் பகுதிதான். வெட்டப்பட்டிருந்த மரங்களின் அடிக்கட்டைகள் முட்டுவேர்களுடன் பாசிமண்டிக் கிடக்கின்றன. சில மரங்கள் உளுத்துப் போயிருக்கின்றன. வெட்டப்பட்ட பெரிய அடிமரத்தண்டின் நடுவில் பெரிய பள்ளம். முந்தைய இரவில் பெய்திருந்த மழைநீர் அதில் நிரம்பியிருக்கிறது. அதன் விளிம்பில் அமர்ந்திருந்த தவளை எங்களைக் கண்டதும் அந்நீருக்குள் பாய்ந்து குதிக்கிறது.

ஓமரின் பாராங் கத்திக்கு வேலை குறைகிறது. மேலேறும் பாதையின் ஓரிடத்தில் பாசி படர்ந்த பெரிய அடிமரம் குறுக்கிடுகிறது. அம்மரத்தைப் பாராங் கத்தியால் வெட்டி ஒரு துண்டை பெயர்த்தெடுத்த ஓமர் அதை முகர்ந்து பார்த்துவிட்டு 'சிலாங்கன் பத்து' என்றவர் எதிரே பாதையைப் பார்க்கிறார். முகம் மலர்கிறது. எப்படியும் இன்னும் அரைமணி நேரத்துக்குள் நாம் சாலையை அடைந்துவிடலாம் என்கிறார். ஓமர் பார்த்த திசையில் இதுவரை கடந்துவந்த 'கா' எனும் உயர்ந்தோங்கிய மரங்களற்று 'இறும்பு' எனும் இளமரங்களின் காடாக இருக்கின்றது. அதிலும் எல்லாமே 'லாரன்' மரங்கள். இதற்கும் பாதையைக் கண்டு பிடிப்பதற்கும் என்ன தொடர்பு?

இருக்கிறது. காடுகளில் மரங்களை வெட்டியபிறகு அவ்விடத்தில் வேகமாக வளரும் மரங்கள் இந்த லாரன் மரங்கள்தான். அப்படித் தான் இம்மரங்களும் வளர்ந்திருக்கின்றன. சுமார் அய்ந்தாறு ஆண்டு களுக்கு முன்பு அந்த வெட்டுமர முகாம் இங்கு இருந்திருக்க வேண்டும்.

அய்ந்தாறு ஆண்டுகளா? எப்படி அவ்வளவு துல்லியமாகச் சொல் கிறீர்கள்?

இம்மரங்கள் இன்னும் பூக்கும் பருவத்தை அடையவில்லை. ஆறு ஆண்டுகள் கழித்துத்தான் இவை பூக்கத்தொடங்கும் என்ற ஓமர் தன் பாராங் கத்தியை உறைக்குள் செருகிக்கொள்கிறார். இனி இதற்கு அவசியம் இல்லை. அந்தளவுக்குப் பாதையில் இடைவெளி இருக்கிறது. வெயிலொளி நிலம்வரை புகுந்து வந்துகொண்டிருக்கிறது. எல்லா லாரன் மரங்களும் சுமார் இருபதடி அகலத்துக்கும் மேலாகப் பாதையில் பரவியிருக்கின்றன. இது பழைய டிராக்டர் தடம். சற்றுமுன் பார்த்த சிலாங்கன் பத்து மரத்திலிருந்துதான் இது வெளியேறிப்போகிறது. அப்படியானால் இதுவொரு பங்குங் நோக்கிதான் போகவேண்டும். உள்ளுக்குள் உற்சாகம். ஒரு துள்ளல். பங்குங் சாலையோரத்தில்தானே இருக்கும். ஓமரின் கணிப்பு எவ்வளவு சரி? நடையில் துரிதம் கூடுகிறது. பெரும் போராட்டம் முடியப்போகும் மகிழ்ச்சி. மகிழ்ச்சியோடு மகிழ்ச்சியாய் அதற்குள் 'ஓஓஓ...ஓ'

ஒரு நொடி இருவரும் அப்படியே நிற்கிறோம். ஒருவரையொருவர் பார்த்துக்கொள்கிறோம். கண்கள் மின்னிக்கொள்கின்றன. எங்கள் குழுவினரின் குரலாகத்தான் இருக்கவேண்டும். அதிர்ச்சியில் பதில் குரல்கூட கொடுக்கத் தோன்றாமல் நிற்கிறோம். இன்னொரு முறையும் அக்குரல் கேட்கிறது. பசியில் வயிறு ஒட்டிக்கிடக்கிறது. உடல் சோர்ந்திருக்கிறது. குரல் கம்மியிருக்கிறது. ஆனால் இவையெல்லாமே மறந்துபோகிறது. அனிச்சையாகப் பதில் குரல் எழுகிறது. 'ஓஓஓ...ஓ'

இதைக் கேட்டவுடன் அங்கிருந்து மீண்டும் பதில் கூவல். இம்முறை இங்கிருந்து பதில் கூவல். நடை ஏறக்குறைய ஓட்டமாக மாறுகிறது. பத்து நிமிடம். இது யார் எதிரே ஓடிவருவது? ஆண்ட்ரூஸ்? அவரேதான். அவர் முகம் முழுக்க ஒரே பரபரப்பு. வேகமாக ஓடிவந்தவர் முன்னால் சென்றுகொண்டிருந்த ஓமரின் கைகளைப் பிடித்து அழுத்துகிறார். பிறகு என்னருகே வந்தவரின் கைகள் தோளின்மேல் பரவுகின்றன. இறுக்கி அணைத்துக்கொள்கிறார். விழிகளில் பனிப்பு. தொண்டைக்குள் ஏதோ சிக்குகிறது. சொற்களே வரவில்லை. கண்கள் மங்குகின்றன. புரிந்துகொண்டவரின் கை மேலும் ஆதுரத்துடன் இறுக்குகிறது. அணைத்தபடியே நடக்கிறார்.

பங்குங் வருகிறது. அதை ஒட்டிய சாலையில் டொயோட்டா லேண்ட் க்ருசர் நிற்கிறது. இது அலுவலகத்தின் வண்டி. யார் வந்திருப்பது? குணா. அவரே வந்துவிட்டாரா? பார்வை மற்றவர்கள் மீதும் பரவுகிறது. எங்கள் இருவரைத் தவிர எல்லோரும் இங்கு இருக்கின்றனர். அப்படியானால் தொலைந்து போனவர்கள் நாங்கள் மட்டும்தானா? சாலையோரம் வந்ததும் இருவரும் சரிந்து அமர்கிறோம். ஒரே நேரத்தில் மகிழ்வும் துயரும் மாறி மாறிக் கொப்பளிக்கின்றன. முதலில் தேநீரைப் பருகக்கொடுங்கள். குணாவின் குரல் கேட்கிறது.

எதிரே பலகாரங்கள் நிரம்பிய தட்டு தெரிகிறது. அலுமினியக் கேத்தலில் இருந்த சூடான வரத்தேநீர் கோப்பைகளில் நிரப்பப் படுகிறது. முந்திக்கொண்டு கைகள் நீள்கின்றன. உலகிலேயே மிகச் சுவையான பானம் இந்நேரத்தில் பருகிக்கொண்டிருக்கும் இந்த வரத்தேநீர்தான்.

ரொம்ப சிரமப்பட்டு விட்டீர்களோ என்று கேட்கிறார் குணா.

ஓமர் சிரித்துக்கொண்டே சொல்கிறார். எனக்கு இது வாழ்வில் நடந்த மற்றொரு நிகழ்வு. ஆனால் இவர்தான் பாவம். எல்லாமே புது நிகழ்வுகள். இரவு முழுக்கத் தூங்கவில்லை. 'ஜங்கிள் புக்' புத்தகத்தை ஒரு வரி விடாமல் படித்துக்கொண்டிருந்தார். எனவே கதை என்னை விடவும் அவருக்கு நன்றாகத் தெரியும். என்ன, நான் சொல்வது சரிதானே?

எப்படித்தான் எல்லா நேரத்திலும் இம்மனிதருக்கு சிரிப்பு வருகிறதோ! ஓமர் சொன்னபடி இதுவொரு காட்டுப்புத்தக வாசிப்புதான். கிளபத்தாங்கன் காட்டுப் புத்தகம். நிறைய வியப்புகளையும் திகைப்புகளையும் தனக்குள் ஒளித்து வைத்துக்கொண்டிருக்கும் புத்தகம்.

மிக உறுதியாக இந்தக் கிளபத்தாங்கன் வேறு. முன்பு இருந்த ஜம்போங்கன் வேறு.

# 2

**செப்பிலோக்**

இருவாசிப் பறவைகள் கூடுகட்டும் கலையே தனி. கூடு என்பது சுள்ளி, இலை தழைகளைக் கொண்டு கட்டுவது அல்ல. இப்பறவை காடுகளின் கவிகைப்பரப்பில் பொந்துள்ள ஓர் உயர்ந்த மரத்தைத் தேர்ந்தெடுக்கும். அப்பொந்துக்குள் முட்டைகளை இடும் பெண் இருவாசி அதற்குள் அமர்ந்துகொள்ளும். ஆண் இருவாசி அப்பொந்தின் வாயைத் தன்னுடைய எச்சம், சேறு, சிறு சிறு குப்பைகளால் கலந்து செய்த கலவையைக்கொண்டு அடைத்துவிடும். அப்படி அடைக்கும் போது முழுவதுமாக அடைக்காமல் அப்பெண் இருவாசிக்கு உணவூட்டு வதற்காக சிறு திறப்பை அதில் வைத்திருக்கும். ஆண் இருவாசி இரை கொண்டுவந்து பெண் இருவாசிக்கு ஊட்டும். முட்டை பொரிந்து குஞ்சுகள் வெளிவந்து கொஞ்சம் வளர்ந்தவுடன் கூட்டில் இடம் போதாத நிலை ஏற்படும்போது அப்பெண் இருவாசி கூட்டை உடைத்துக்கொண்டு வெளியே வந்துவிடும். பிறகு இரு இருவாசி களுமே சேர்ந்து குஞ்சுகளை உள்ளுக்குள் வைத்து அப்பொந்தைப் பழையது போல ஒரு துளை வைத்து அடைத்துவிடும். இப்போது இரு இருவாசிகளும் சேர்ந்து குஞ்சுகளுக்கு உணவூட்டத் தொடங்கும்.

இப்போது நிலைமை கிட்டதட்ட அந்த இருவாசிக் குஞ்சினைப் போல் ஆகிவிட்டது. இரு பெரிய பறவைகள் அளவுக்கு அதிகமாகப் போற்றிப் பாதுகாக்கத் தொடங்கியிருக்கிறார்கள். ஒன்று அலுவலக மேலாளர் குணா. மற்றொன்று குவான். ஜம்போங்கனில் இருந்து பிடிக்காமல் திரும்பி இனி வேலை பார்க்க விருப்பமில்லை என்று சொல்லி வெளிவந்தாகிவிட்டது. ஆனால் நண்பரின் மூலம் வரிசையாக தூது மேல் தூது. பெற்றோர் இருவாசிகள் ஊட்டும் இரைகளாய் சலுகைகள் தொடர்ந்து வந்துகொண்டேயிருக்கின்றன. மறுப்புகளை ஒவ்வொன்றாய் முன் வைத்தும் இரைகள் தொடர்கின்றன.

இறுதியாக மறுப்பை இருவரிடமும் நேரே பேசி முடித்துவிட்டால் தான் இத்தூது நிற்கும் என்ற நிலை வருகிறது.

சம்பளம் அதிகம் கிடைக்குமென்றோ சலுகைகள் கிடைக்கு மென்றோ இவ்வேலைக்கு வரவில்லை. செப்பிலோக் போன்ற ஓர் அடர்ந்த காட்டில் கொஞ்ச நாளாவது வாழ்ந்து பார்க்கவேண்டும் என்ற

ஆசையில்தான் இவ்வேலைக்கே ஒப்புக்கொண்டேன். ஜம்போங்கன் ஒரு காடே இல்லை. எனவே இவ்வேலையில் விருப்பமில்லை. விட்டு விடுங்கள் என்கிறேன்.

எவ்வளவு எடுத்துப்பேசியும் குணா விடுவதாக இல்லை. இந்த நிலத்தைக் குத்தகைக்குத் தந்தவர் எங்களை ஏமாற்றிவிட்டார். இதை இப்போதுதான் நாங்களே அறிந்தோம். ஆனால் உள்ளேயிருக்கும் பகுதியில் கொஞ்சம் மரங்கள் இருக்கின்றன. இதுவும் உனக்கு நிறைவு தராது. ஆனால் செப்பிலோக் போன்ற ஓர் அடர்ந்த காட்டுக்குள் பணிபுரியும் வாய்ப்பு கூடிய விரைவிலேயே அமையப்போகிறது. கினபத்தாங்கன் என்று ஓர் இடம் பேசிக்கொண்டிருக்கிறோம். அது நீ விரும்பியது போல் ஓர் உண்மையான காடாக இருக்கும்.

குணாவின் இந்த பதில் கொஞ்சம் அசைப்பது போல் தெரிகிறது. அக்காட்டில் விலங்குகள் அதிகம். உனக்கு ஓய்வும் அதிகம். நீ செய்ய வேண்டியது தினமும் காலையில் என்னென்ன பணிகள் செய்யத் திட்டமிட்டிருக்கிறீர்கள் என்று அலுவலகத்துக்குத் தெரியப்படுத்த வேண்டும். பிறகு மாலையில் அதில் என்னென்ன செய்து முடித்தீர்கள்? குறிப்பாக எத்தனை கனஅடிக்கு வெட்டு மரக்கட்டைகள் கிடைத்தன போன்ற தகவல்களைத் தரவேண்டும். இடையிலுள்ள நேரத்தில் நீ விரும்பியபடி காட்டு வாழ்க்கையை வாழ்ந்து பார்த்துக்கொள்ளலாம்.

குணா சரியான இடம் நோக்கி தூண்டிலை வீசியிருந்தார். இரை கண் முன்னே ஆடுகிறது. பதில் முனகலாக வருகிறது. செப்பிலோக் மாதிரியான இடம் என்று சொன்னீர்களே, அது என்ன பெயர்... கினபத்தாங்கன்? அங்கு உறுதியாகப் போவீர்கள்தானே? தொண்ணூறு விழுக்காடு உறுதியாகப் போவோம் என்று குணா உறுதியளித்ததுமே செப்பிலோக் நினைவில் படரத்தொடங்குகிறது.

ஓராங் ஊத்தான் என்ற சொல்லின் பொருளை முதன் முதலில் அறிந்துகொண்டபோது அச்சமாக இருந்தது. காட்டு மனிதர். அவர் எப்படி இருப்பார்? ஆண் எப்படி இருப்பார்? பெண் எப்படி இருப்பார்? இக்காட்டுமனிதரைப் பற்றி உலவிய வாய்மொழிப் புனைவுகளோ அச்சத்தை கூட்டக்கூடியவையாக உலாவின. இருட்டிய பிறகு சொல்லும் பேய்க்கதைகளைப்போல் திகில் கூட்டிச் சொல்லப்பட்டன. யாராவது ஓர் ஆண் காட்டுப்பாதையில் தனியாகச் சென்றால் அவனைப் பெண் ஓராங் ஊத்தானும், அதுவே ஒரு பெண் தனியாகச் சென்றால் அவளை ஆண் ஓராங் ஊத்தானும் இழுத்துச் சென்று வல்லுறவுக்கு உட்படுத்திக் கொண்டுவிடுவர் என்கிற உச்சஅளவுக்கு அப்புனைகதைகள் உலா வந்தன. கடைசியாக இக்காட்டு மனிதர் வாலில்லாக் குரங்கினம் என்பதை அறிந்தபோது ஓர் அப்பாவிக் குரங்கின் மேல் இவ்வளவு கொடூரமான புனைவுகளா எனத் தோன்றியது. அதிலும் இவ்விலங்கு களைக் காட்டில் சென்று பார்த்தால்தான் இவ்வளவு ஆபத்து

செப்பிலோக் மறுவாழ்வு நடுவத்தில் அவை மனிதர்களோடு பழக்கப் பட்டுவிட்டதால் அவ்வளவு ஆபத்து இல்லை என்ற கதைகளும் இருந்தன. இப்படியாகத்தான் செப்பிலோக் மீதான காதல் துவங்கியது. ஆனால் ஒருமுறை அங்கு சென்றுவந்ததும் எப்போதெல்லாம் வாய்ப்பு கிடைக்கிறதோ அப்போதெல்லாம் அங்கு செல்லும் துடிப்பை அது அதிகப்படுத்திக் கொண்டேயிருந்தது. ஒரு கன்னிக்காடு எப்படி யிருக்கும் என்பதை முதன்முதலில் கற்றுக்கொடுத்த காடு அது.

அக்காட்டின் அடர்வும், செறிவும், குளுமையும், நெடிதுயர்ந்த மரங்களும், பறவைகளின் பாடல்களும், விலங்குகளின் கூக்குரல்களும் தனி உலகத்தையே உருவாக்கி சில மணி நேரம் வாழ்ந்துகொள் எனத் தந்தன. அவ்வாழ்வின் ஈரப்பதத்தில் வளர்ந்த பாசிதான் மனசெங்கும் அப்பிப் படர்ந்து காடு, காடு என்று ஏக்கத்துடன் இப்படி அலைய வைத்துக்கொண்டிருக்கிறது.

ஒருமுறை அங்கு சென்றபோது அருந்துவதற்கென வாங்கியிருந்த குளிர்பானங்கள் அடங்கிய பையை நண்பர் வைத்திருந்தார். அதைக் கவனித்த ஓர் ஓராங் ஊத்தான் அதைப் பிடுங்குவதற்கென நேரே புறப்பட்டு வருகிறது. அதன் எண்ணத்தைப் புரிந்துகொண்ட நண்பர் உடனே அப்பையைப் பின்புறம் பதுக்கிக்கொண்டு அதை விரட்டி விடுகிறார். ஆனால் அந்த ஓராங் ஊத்தான் அசரவில்லை. அதைப் பிடுங்க வருவதுபோல் வருவதும் நண்பர் அதை விரட்ட முனைவதும் நடந்துகொண்டேயிருக்கிறது. அது ஓராங் ஊத்தான்களின் திறமை யென்று அப்போது யாருக்கும் தெரியவில்லை. எல்லோருடைய கவனமும் பிடுங்கவரும் ஓராங் ஊத்தானின் மீதேயிருக்க யாரும் அறியாமல் பின்பக்கமாய் வந்த இன்னொரு ஓராங் ஊத்தான் பையைக் கண்ணிமைக்கும் நேரத்தில் வெடுக்கெனப் பிடுங்கிக்கொண்டு ஓடி தொலைவிலிருந்த மரத்திலேறி கிளையொன்றில் அமர்ந்து விடுகிறது. நண்பருக்கு முன்பக்கமாய் நின்றுகொண்டு பையைப் பிடுங்க வருவது போல் போக்குக் காட்டிக்கொண்டிருந்த ஓராங் ஊத்தான் பை பிடுங்கப் பட்டுவிட்டதை அறிந்ததும் பழிப்பு காட்டுவதுபோல் தன் எல்லாப் பற்களையும் வெளிக்காட்டிவிட்டு மரத்தில் தாவி ஏறிவிடுகிறது. உடன் நின்றிருந்த ஓராங் ஊத்தான்களும் சேர்ந்து ஏறிக்கொள்கின்றன.

பையை வைத்திருந்த ஓராங் ஊத்தான் ஒவ்வொரு குளிர்பான டப்பாவாக எடுத்து தன் தோழர்களுக்கு விநியோகித்துவிட்டு தானும் ஒன்றை எடுத்துக்கொள்கிறது. இம்முழு குளிர்பான டப்பாவை வைத்துக்கொண்டு உடைத்துக் குடிக்க தெரியாமல் இவை என்ன செய்யும் பாவம் என்று நாங்கள் பார்த்துக்கொண்டிருக்க, அந்த ஓராங் ஊத்தான்களோ, போங்கடா மானிடப் பதர்களா என்பது போல டப்பாவின்மேல் படிந்து பொருந்தியிருந்த அந்த அலுமினிய வளையத்தை விரலால் நிமிர்த்தி தம் ஆட்காட்டி விரலை நுழைத்து

வெடுக்கென இழுத்துத் திறக்கின்றன. உள்ளேயிருக்கும் பானம் காற்றோடு நுரை பொங்கி வெளிவருகிறது. உடனே அவை அந்த டப்பாக்களைத் தம்மிடமிருந்து சற்று எட்டி தள்ளிப் பிடித்துக்கொள்கின்றன. பொங்கிய நுரை அடங்கியதும் டப்பாக்களைத் தம் வாயருகே கொண்டு வந்த அவையனைத்தும் சுவைத்துக் குடிக்கத்தொடங்கின. மடையர்களாகி நின்றுகொண்டிருந்த எங்களுக்கு மறக்காமல் நன்றி சொல்வதுபோல் பற்களைக் காட்டின. இவ்வளவு அறிவாற்றல் மிக்க இவ்விலங்குகளை இவை இயல்பாய்த் திரியும் காட்டுக்குள் காண முடிந்தால் எப்படியிருக்கும்?

இதற்காகவாவது இந்த வெட்டுமர முகாம் வேலையை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஒத்துக்கொண்டும் விடுகிறேன். ஆனால் சென்று சேர்ந்த ஜம்போங்கனில் கன்னிக்காடும் இல்லை. ஒராங் ஊத்தான்களும் இல்லை.

**வெட்டு மரம்**

ஜம்போங்கன் சென்று சேர்ந்தபோது வெட்டிய மரங்களைக் கணக்கெடுக்கும் பணி காத்திருக்கிறது. எதிர்பார்த்தபடி மரங்களும் அதிகமில்லை. காடு என்பதைவிட அடர்த்தியான தோப்பு என்றுதான் சொல்ல முடியும். ஏமாற்றம் இருந்தாலும் அலையாத்திக்காடுகள், மீன் பிடித்தல் எனப் பொழுதைக் கழிக்கமுடிகிறது. தவிர ஒரு வெட்டுமர முகாமின் அடிப்படை வேலைகள், நுட்பங்கள் ஆகியவற்றைக் கற்றுக்கொள்ள வாய்ப்பு கிடைக்கிறது. வெட்டுமரம் என்றால் ஏதோ காட்டுக்குப் போனோம், மரங்களை வெட்டினோம், வந்து சேர்ந்தோம் என்பதல்ல. பலப்பல அடிப்படை நுணுக்கங்கள் விரவிய தொழில் இது. பல தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்த காட்டில் ஒவ்வொரு தொகுதியிலும் ஒரு குழு இயங்கியது. அக்குழுவில் மரம் வெட்டுபவர், டிராக்டர் ஓட்டுபவர், மரப்பட்டை உரிப்பவர் ஆகியோர் இணைந்திருக்கிறார்கள். எல்லோருடைய வேலைகளையும் அறிந்துகொள்ள வாய்ப்பு கிடைக்கிறது. ஆனால் மர்மமாக இருப்பது இம்மரம் வெட்டுகிற வேலைதான். மரம் வெட்டுபவர், எப்படி மரம் வெட்டுகிறார் என்பதைக் கண்ணால் காணவே முடியவில்லை. எப்போதும் ஓர் உதவியாளரை உடன் கொண்டு இவர் காட்டுக்குள் நுழைந்த பிறகு மரம் வெட்டப்பட்டுச் சாயும் ஓசை மட்டும்தான் கேட்கிறது. இடையில் என்ன நடக்கிறது என்பதே தெரியவில்லை. அந்த இருவரையும் தவிர வேறு யாருமே அங்கு நுழைவதில்லை. முகாம் மேலாளர்கூட அங்கு செல்வதில்லை. பாதுகாப்புதான் காரணம்.

ஒவ்வொரு மரமும் வெட்டி வீழ்த்தப்பட்டவுடன் எழும் அதிர் வோசை தொலைவில் இருந்து கேட்பதற்கே இப்படி இருக்கிறதே. அருகிலிருந்து கேட்டால் எப்படி இருக்கும் என்று தோன்றுவதைத்

தடுக்க முடியவில்லை. ஒரு மரம் வெட்டப்படும் காட்சியை நேரில் காணவேண்டும் என்கிற ஆவல் அதிகரித்துக்கொண்டே வருகிறது. ஆனால் மரபின்படி மரம் வெட்டுபவரையும் அவருடைய உதவி யாளரையும் தவிர யாரையும் அங்கு போகவிட மாட்டார்கள். என்ன செய்யலாம்? மரம் வெட்டுபவரைத் தொடர்ந்து நச்சரிக்க ஒரு வழியாக ஒப்புக்கொள்கிறார். ஆனால் அது எந்த மரம், என்றைக்கு என்று சொல்லும்வரை பொறுத்திருக்க வேண்டும் என்கிறார். அந்நாளும் வருகிறது. அவர் எதற்கு இவ்வளவு தாராளமாக ஒத்துக்கொண்டார் என்பது அங்கு சென்று பார்த்த பிறகுதான் புரிகிறது.

அம்போவென்று தன்னந்தனியே நின்றிருந்த மரத்தை வெட்டத் தான் அவர் அழைத்துச் சென்றிருந்தார். மரத்தைச் சுற்றிலும் தாராளமாக இடம். ஓடிப்பிடித்து விளையாடலாம். இடையே சுள்ளென்று வெயில் வேறு. இதாவது பார்க்கக் கிடைத்ததே, ஆனால் நினைத்ததுபோல் அது ஒன்றும் இலகுவான வேலையாக இல்லை. அய்ந்தடி சுற்றுகொண்ட சிறிய மரம். ஒரு முட்டுவேரிலிருந்து அவர் வெட்டத் தீர்மானிக்கிறார். முதலில் மரத்தை அண்ணாந்து பார்க்கிறார். சுமார் முப்பது மீட்டர் உயரமுள்ள மரம் அது.

அம்மரத்தில் எந்தப் பக்கம் அதிக எடையுள்ள கிளைகள் இருக் கின்றன எனப் பார்க்கிறார். பிறகு காற்று வீசும் திசையைக் கணிக்கிறார். மரத்தைக் காற்று வீசும் திசையிலேயே சரிந்து வீழும்படி வெட்ட வேண்டும்.

இம்மரம் வடபக்கமாக சற்று கனத்த கிளைகளைக் கொண்டிருக் கிறது. எனவே அப்பக்கம் சரியும் வாய்ப்பே அதிகம். ஆனால் இப்போது காற்று கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி வீசுகிறது. இம்மரம் காற்றின் திசைவேகத்தைப் பொறுத்து வடக்கு அல்லது வடமேற்கில் சாயக் கூடுமெனக் கணித்த மரம்வெட்டுபவர் நீங்கள் இருவரும் கிழக்கே இருபதடி தள்ளி நில்லுங்கள் எனச் சொல்லிவிட்டு மரத்தின் வடக்குப் பக்கமாகச் செல்கிறார். சங்கிலிவாளின் கயிற்றை ஓர் இழுஇழுத்து அதை உயிர்ப்பிக்கிறார். அது உறுமத்தொடங்க அதை நெஞ்சுக்கு நேரே தூக்கிப் பிடித்தபடி கிடைமட்டமாக மரத்துக்குள் நுழைக்கிறார். அச்சங்கிலிவாள் அதன் பின்பக்கமாக மரத்தூள்களைத் தொடர்ந்து துப்பத்தொடங்குகிறது. மரத்தூள்கள் வெளியாக அதன் நறுமணம் காற்றில் பரவி மிதக்கிறது.

மரம் ஏறக்குறைய சுற்றிலும் வெட்டப்பட்டு நடுவில் மட்டும் சிறிது ஒட்டிக்கொண்டு நிற்கிறது. இக்கணம் காற்று வீசாத கணம். மரம் அசைவோ, ஓசையோ இல்லாமல் அப்படியே உறைந்ததுபோல் நின்றுகொண்டிருக்கிறது. இந்த நிமிடம் முழுவதும் இதயம் துடிக்கும் ஓசை காதுக்குள் கேட்டுக்கொண்டேயிருக்கிறது. காற்று மெல்ல வீசத்தொடங்குகிறது. அடிமரத்திலிருந்து இலேசான ஓர் ஓசை.

அதைக்கேட்டவுடன் அவர் தன் வாளோடு பின்னோக்கி ஓடிவந்து எங்களுடன் சேர்ந்துகொள்கிறார்.

ச்சட்...ச்சட்...என்ற ஒலியில் தொடங்கிய அம்மரம் வடதிசையில் ச்சட...ச்சடவென சரியத் தொடங்குகிறது. மெதுவாக அது சாயும்போது அடியில் ஒட்டிக்கொண்டிருந்த பகுதி படாரென முறிகிறது. பிறகு சரேலென்று முழுதும் சரிந்து சாய சற்றுத்தள்ளி நின்றுகொண்டிருந்த வேறு இரண்டு இளமரங்கள் மீதும் சாய்ந்து அவற்றையும் சரித்து இழுத்துக்கொண்டு சென்று 'தொம்'மென்ற பெரிய அதிர்வுடன் வீழ்கிறது. அப்போது அதன் அடிமரம் துள்ளி பல அடி உயரத்துக்கு மேலே உயர்ந்தெழுந்து வீழ்கிறது. அப்படி வீழும்போது அதன் கனத்த அடிபாகம் விருட்டென்று இருபதடி மேற்குத் திசையில் நகர்ந்து மண்ணில் வீழ்கிறது.

எப்படிப் பார்த்தாலும் ஆபத்தான தொழில் இது. உள்ளே சென்றவர்கள் மீண்டும் வெளியே வருவது என்பது உறுதியற்ற நிகழ்வு. இத்தொழிலைப் பெரும்பாலும் இந்தோனேசியர்களே செய்கின்றனர். இவர்களில் சிலர்தான் குடிநுழைவுத்துறையின் அனுமதிப் பத்திரம் வைத்திருப்பர். பலருக்கு அது கிடையாது. கள்ளக்குடியேறிகளாக இருப்பர். ஆனால்-நிறுவனங்களுக்கு இதுதான் நல்லசெய்தி. குறைந்த ஊதியத்தில் உழைப்பைப் பெறலாம்.

மரம் வெட்டுபவருக்கு ஒரு கனஅடிக்கு ஐந்து அல்லது ஆறு காசுகள் கூலி. இக்கூலிக்குள்தான் அவர் தன்னுடைய உதவியாளருக்கு இரண்டு காசுகளைச் சம்பளமாகக் கொடுக்கவேண்டும். இருவருடைய உணவுச் செலவும் இதற்குள்தான் அடக்கம். ஆனால் நகரத்தில் உணவகங்களில் திரிந்துகொண்டிருக்கும் வெட்டுமரத்தரகர்கள் கட்டைகளைக் கைமாற்றிவிடப் பெறும் தரகுத்தொகையோ கனஅடிக்கு நூறு காசுகள். இவர்களுக்கே இவ்வளவு என்றால் ஒரு நிறுவனத்தின் ஆதாயம் எவ்வளவு இருக்கும்?

அது டாலர்களின் மர்மம்.

# 3

*வான் வழி*

கானகத்தின் மேலே பறந்துகொண்டிருக்கிறோம்.

உலங்கு வானூர்தியின் காற்றாடி இரைச்சல் காதைத் துளையிட்டுக் கொண்டேயிருக்கிறது. பக்கத்தில் இருப்பவர்களோடு தெளிவாக உரையாட முடியவில்லை. குவான், குணா, ஓமர் புதிய ரேஞ்சர் ஆகியோர் அமர்ந்திருக்கிறோம். காட்டுக்குள் ஒருநாள்கூட வழிநடத்தி அழைத்துச்செல்லத் தெரியாத பழைய ரேஞ்சர் கழற்றி விடப்பட்டு விட்டார். கீழே பார்த்துக்கொண்டு வருகிறோம். இதோ வளைந்து நெளிந்தோடும் கினபத்தாங்கன் தெரிகிறது. சேற்று நாடாவைப் போல லோக்கன் ஆறும் தென்படுகிறது. அண்மையில் பெய்த மழையின் விளைவாக இருக்கலாம். கரைகளில் காடுகளை அழித்து உருவாக்கப் பட்ட தோட்டப்பகுதியிலிருந்து மண் அரிமானங்கள் இந்நிறத்தைத் தந்திருக்கலாம். லோக்கனுக்கு இணையாக முகாம் சாலையும் தெரிகிறது. அதுதான் நாங்கள் கூடாரம் அமைத்திருந்த இடம். ஓமர் சுட்டிக் காட்டுகிறார்.

அங்கிருந்து வடமேற்காகத் திரும்புகிறது உலங்கு வானூர்தி. இரு குன்றுத் தொடர்களுக்கு மேலே பறந்துகொண்டிருக்கிறோம். என்ன ஒரு வனப்பு இக்கவிகை. பசிய ஆடையில் மின்னும் சரிகையாக வெள்ளி நீரோடைகள். இந்த இடம்தான் என ரேஞ்சர் சுட்டிக்காட்டிய இடத்தில் வட்டமிடத் தொடங்குகிறது ஊர்தி. அங்கு இடப்பகுதியை விட வலப்பகுதியில் அடர்த்தியாய் இருக்கிறது கவிகை. அடர்பச்சை யும் இளம்பச்சையும் கூடிக்குழைந்திருக்க ஆங்காங்கே மஞ்சள் நிறமும் இழைந்து, சாம்பல் நிறம் தூவி தூரிகை தீட்டிய காற்றில் அசையும் சீலை ஓவியம். இக்கவிகைப் பரப்பிலிருந்து தனித்து வெளியே தலைநீட்டிப் பார்க்கும் அலுமினியநிற மெங்காரிஸ் மரங்கள். ஊர்தியின் உயரம் தாழ்கிறது. மங்கிய செந்நிறத்து மெங்காரிஸ் கிளைகள் தெரிய அதில் ஆங்காங்கே தொங்கும் பெரும் பழங்களைப்போலத் தேன்கூடுகள். ஊர்தியின் இரைச்சலால் பாதிப்புற்ற இரு பெரும் கரிய பறவைகள் தொலைவில் பறக்கின்றன. இருவாசிகள் என்கிறார் ஓமர். ஆனால் தெளிவாகப் பார்க்க முடியவில்லை.

ரேஞ்சர் மரக்கவிகைகளின் நிறத்தைக்கொண்டே என்னென்ன வகை மரங்கள் இருக்கின்றதெனக் கணக்கிடத் தொடங்குகிறார். இக்கணக்குக்குப் பிறகுதான் ஒப்பந்தம் போடப்படவேண்டும். இன்னொருமுறை காட்டுக்குள் நுழைந்து கணக்கிட கால அவகாசமில்லை. காலம் தாழ்ந்தால் ஒப்பந்தம் வேறொரு நிறுவனத்துக்குக் கைமாறி விடலாம் என்கிற அச்சமே இந்த அவசரப் பயணத்துக்குக் காரணம். ரேஞ்சரின் கையிலிருந்த குறிப்பேட்டில் கண்ணால் காணப்பட்ட மரங்கள் கனமீட்டர்களாக மாறிக்கொண்டிருக்கின்றன. கனமீட்டர்கள் அதிகரிக்க குவான் உதடுகளில் டாலர்களின் புன்னகை.

முடிந்து திரும்பும் வழியில் உடலிலிருந்து ஒரு சதைத்துண்டை அப்படியே வெட்டியெடுத்ததுபோல் செந்நிறத்தில் ஒரு நிலப்பகுதி. ஆனால் அதைச்சுற்றிலும் பசும்கம்பளம். இது செம்பனைத் தோட்டத்துக்காகவோ கொக்கோ தோட்டத்துக்காகவோ அடியோடு சுரண்டப்பட்டிருக்கலாம். நிலத்தின் சதையும் குருதியும் இப்படித்தான் இருக்குமா? ஒருமரம்கூட விடாமல் காலிசெய்து விட்டுவந்த ஜம்போங்கன் காடும் இப்படித்தான் மாறிப்போயிருக்குமா?

**தரை வழி**

லோக்கன் முகாமுக்கு சாலை வழியாகப் போய்க்கொண்டிருக்கிறோம். ஏற்கனவே முகாம் வீடு அங்குக் கட்டப்பட்டுவிட்டது. முப்பத்து ரெண்டாவது மைல் நெருங்கிக்கொண்டிருக்கிறது. இங்கு சாலையில் உள்ள எல்லா ஊர்களுக்கும் மைல் கணக்குதான். இந்த முப்பத்து ரெண்டாவது மைல் என்பது முதன்மையான இடம். இவ்விடம் தவிர்க்க முடியாத ஓர் இடமாக இருப்பதற்குக் காரணம் இங்கிருக்கும் காவல் துறையின் சோதனைச்சாவடி.

வெளிநாட்டுத் தொழிலாளர்கள் பலரின் வயிற்றைக் கலங்க வைக்கும் இடம். இதைத் தாண்டிப் பயணம் செய்பவர்களின் அடையாள அட்டைகள், பயணப்பத்திரங்கள் முதலியவை இங்கு சோதனை செய்யப்படும். ஆனால் பெரும்பாலும் நடைமுறையில் எல்லோரையும் அவ்வாறு சோதிப்பது கிடையாது. வருபவர்களின் முகத்தைப் பார்த்தே இந்தோனேசியர்கள், பிலிப்பைனியர்கள் என அடையாளம் கண்டு விடுவர். தகுந்த பயண ஆவணங்கள் இல்லாதவர்களை அங்கேயே தடுத்து அவரவர் நாட்டுக்கு அனுப்பி விடுவார்கள்.

அரசாங்கம் நினைத்தால் இவர்கள் அனைவரையும் நாளுக்குள் கைது செய்துவிடலாம். ஆனால் அவ்வாறு நடப்பதில்லை. பெரும் பாலான வணிக நிறுவனங்கள், தோட்டங்கள், வெட்டுமர முகாம்கள், தொழிற்சாலைகளுக்கெல்லாம் இவர்களின் மலிவான உழைப்பு தேவைப்படுகிறது. இங்கு செல்வந்தர்களின் செல்வாக்கு அதிகம்.

பெயருக்குச் சிலருக்கு மட்டும் பணிஅனுமதிப்பத்திரம் பெற்றுவிட்டு மீதி அனைவரையும் கள்ளத்தனமாகப் பயன்படுத்திக் கொள்வர்.

முப்பத்துரெண்டாவது மைல் சோதனைச் சாவடிக்கு அரை மைல் முன்னதாக எங்கள் வண்டி நிற்கிறது. வண்டியிலிருந்த இரு இந்தோனேசியத் தொழிலாளிகள் இறங்கிக்கொள்கின்றனர். சாலையின் வலப்புறச் சரிவில் ஓர் ஒற்றையடிப் பாதை இறங்கிச் செல்கிறது. இருவரும் அதில் இறங்கி நடக்கின்றனர். இந்த ஒற்றையடிப்பாதை இங்கிருந்து ஒரு மைல் தள்ளி, காவல் சாவடியைக் கடந்து அரை மைல் தொலைவில் போய் இணையும். அங்கு சென்று காத்திருப்பார்கள். அதுவரை நாம் உணவகத்தில் பசியாறிவிட்டுச் செல்வோம் என்கிறார் குணா.

முப்பத்துரெண்டாவது மைல். மூன்று பெருநகரங்களின் சாலைச் சந்திப்பு நடுவமாக இருப்பதால் இயல்பாகவே. எல்லா உணவகங்களும் நிரம்பி வழிகின்றன. ஒரு நாட்டுக்கார உணவகத்தில் நுழைந்து நாசி கூனின் சொல்லிவிட்டு குவை லாப்பிஸ் இனிப்புப் பலகாரம் ஒன்றை வாங்கிச் சுவைக்கலானோம். நாசி கூனின் வந்துசேர்கிறது. இதமான அதன் மணம் மூக்கைக் கிளறிவிடுகிறது. மஞ்சள்நிற சோற்றின் நடுவே நீளவாக்கில் பாதியாக நறுக்கிய அவித்த முட்டையும், மீன்சம்பலும் நாவை இழுக்கின்றன. சம்பலைச் சோற்றோடு பிசைந்து சாப்பிடு வதற்காக இந்நாவை விற்றுவிடலாம்.

முடித்ததும் தொழிலாளர்களுக்காக மேலும் இரு பொட்டலங்கள் நாசி கூனின் வாங்கிக்கொண்டு கோத்த கினபாலு செல்லும் சாலையில் வண்டி செல்கிறது. குணா சொன்னபடியே தொழிலாளர்கள் அரை மைல் தொலைவில் காத்திருக்கின்றனர். வண்டி சரியாக அரைமணி நேரத்தில் இடப்பக்கச் சாலையொன்றில் நுழைகிறது. அது லின்பர் தோட்டச்சாலை. மரஅறுவை ஆலையொன்றைக் கடந்த வண்டி லுங் மானிஸ் என்கிற இடத்தை அடைந்து அங்கிருந்த கான்துறை அலுவலக வாசலில் நின்றது. அந்த மரியாதை நிமித்தச் சந்திப்புக்காக இரு ஆங்கர் பீர்ப் பெட்டிகள் வண்டியிலிருந்து இறங்கி உள்ளே செல்கின்றன. பிறகு புறப்பட்டு ஒரு செம்பனைத் தோட்டத்தின் முன்பாக ஆற்றின் குறுக்கே கட்டப்பட்டிருந்த தரைப்பாலம் அருகே வந்து சேர்கிறோம். இதுதான் பழுதடைந்திருந்ததாக ஓமர் குறிப்பிட்ட பாலம். இப்பாலத்தைக் கடக்க தனியார் தோட்ட நிர்வாகத்துக்குச் சுங்கவரி செலுத்திமுடிந்த வுடன், மரத்தாலான பாலத்தைக் கடந்து முகாமை அடைந்தபோது அய்ந்து மணிநேரம் ஆகியிருந்தது.

சிறிய ஆனால் அழகான ஒரு வீட்டை அமைத்திருந்தார் ஓமர். முன்பு நாங்கள் கூடாரம் அமைத்திருந்த இடத்துக்கு இன்னும் உள்தள்ளி ஓடைக்கு நெருக்கமாக அமைக்கப்பட்டிருந்தது வீடு. தரையிலிருந்து

அய்ந்தடி உயரத்துக்கு மேலே தரைத்தளம் அமைக்கப்பட்டு உச்சியில் தகரக்கூரை வேயப்பட்டிருக்கிறது. சுற்றிலும் தடுப்புக்கும் அறைகளின் பிரிவுக்கும் ஒட்டுப்பலகை பயன்படுத்தப்பட்டிருக்கிறது. தெற்குப் பார்த்து அமைக்கப்பட்டிருந்த வீட்டின் இடப்பக்கமாகக் குசினியும் அதையொட்டி உணவுமேசையும் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒரே சமயத்தில் எட்டுபேர் அமர்ந்து சாப்பிடுமளவுக்கு எட்டுக்கு நாலு அளவுள்ள மேசை. இவ்வீட்டுக்கு எதிரே சாலையை அடுத்திருந்த மேட்டில் பணிமனையை அமைத்திருக்கிறார். வண்டிகள், புல்டோசர்கள் நிறுத்தும் இடமாகவும் எரிபொருள் இருப்பு வைக்கும் இடமாகவும் இருக்கிறது. சற்றுநேரத்தில் சாலையமைக்கும் பணியிலிருந்த ஓமர் திரும்பிவந்தவுடன் பேசிவிட்டு குணா கிளம்பிச்செல்கிறார்.

**நீர் வழி**

இந்த ஓடையை நினைவிருக்கிறதா?

ஓமர் கேட்கிறார். எப்படி மறக்கமுடியும்? இதன் அருகேதானே தொலைந்துபோனோம்? இந்த ஓடையின் மேல் பாலம் அமைக்கும் பணி நடைபெறப்போகிறது. தற்போது சாலை அமைக்கும் பணி நடக்கிறது. முகாம் வீட்டிலிருந்து தொடங்கும் அந்தப் பழைய டிராக்டர் தடத்தைச் செப்பனிட்டு முடித்தபிறகு அது சென்று இணையும் பழைய முகாம் சாலையில் நகர்ந்து மெங்காரிஸ் முனையையும் கடந்து சாலை முடிந்த குன்றின் உச்சி வரைக்கும் வந்தாகிவிட்டது. அந்த இடத்திலிருந்து கீழேயிறங்கும் பள்ளத்தாக்குக்குள் சாலையமைக்கும் போதுதான் உண்மையான சவாலைச் சந்திக்க வேண்டியிருக்கிறது. இக்காட்டினை அழித்துத் துளைத்து எங்கள் நில எல்லைவரை பாதை அமைக்கவே இன்னும் மூன்று மாதங்கள் ஆகலாம். சாலையோடு வழியில் அமைக்கப்பட வேண்டிய சிறு பாலங்களும், பெரிய பாலமும் இக்கால அளவை எடுத்துக்கொள்ளும். இந்த ஓடையில் வெள்ளம் பெருக வாய்ப்பில்லாததால் தரைப்பாலம் கட்ட முடிவாகி அதற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருக்கிறார் ஓமர்.

என்ன, ஓடையை இன்னும் ரசித்துக்கொண்டிருக்கிறாயா? ரசிப்ப தென்றால் இப்போதே ரசித்துக்கொள். பாலம்கட்டி முடித்தபின்பு இந்த அழகெல்லாம் அடியோடு காணாமல் போய்விடும்.

ஓமர் சொல்வது உண்மை. அப்படித்தான் ஆகும். இவ்வோடைக்கு வரும் வழியிலிருந்த காடு இப்போது வெறும் சாலை. அதுவும் கண்ணென்று வெயில் ஊடுருவும் சாலை. அப்படி இவ்வோடையும் ஆகிவிடலாம். அதற்குமுன் இந்த ஓடையோரமாகக் கொஞ்சம் காலாற நடந்து வந்தால் என்ன? சப்பாத்துக்களைக் கழற்றி வைத்துவிட்டு ஓடைக்குள் கால் நனைக்கிறேன். முழங்கால் அளவுக்கும் கீழே நீர் ஓடிக்கொண்டிருக்கிறது. காலை வைத்தவுடனே பனி நீருக்குள்

நுழைத்த தண் தண் தண்ணீர். துல்லிய கண்ணாடி நீரில் கண்முன்னே இரு வெள்ளிநிற மீன் மீன் மீன்கள். துடு துடு துடுப்பசைத்து ஓடி மறைகின்றன. அம்மீன்களைத் துரத்துவதுபோல ஓடை நடுவிலேயே கால்கள் நீரில் துழாவ நட நட நடக்கிறேன். கூழாங்கற்களோடு பேசிக் கொண்டிருந்த நீர் கால்களின் சலசலப்பில் தன் பேச்சை நிறுத்திக் கொள்கிறது. ஓர் அந்நியனின் நுழைவை மீன்கள் சொல்லிச் சென்றிருக்க வேண்டும். பொல்லா மீன்கள். எங்கே அம்மீன்கள்?

ஒரு வளைவில் திரும்புகிறேன். இது நாங்கள் உணவுண்ட இடம் தானே? ஆமாம், அதே இடம்தான். இக்காலி டப்பாக்களும், ஞெகிழிப் பைகளும் நன்கு அடையாளம் காட்டுகின்றன. இதோ அன்று நாங்கள் அமர்ந்திருந்த கற்பாறை. கரை மீதேறி அதில் அமரப் பாசியின் ஈரம் பின்பக்கத்தை நனைக்கிறது. பார்வை சுற்றிலும் துழாவுகிறது.

எதிரே ஓடையில் நீர்க்கண்ணாடி. கூழாங்கல் சிற்பங்கள். இருவரும் கதைக்கும் சொற்கள். அதை செவிமடுக்கும் மீன்கள். கரையிலோ பாறைகள். அதில் படிந்த பாசிகள். அருகே பசிய செடிகள். அச்செடி களின் இலைமேல் ஊரும் எறும்புகள், கொடிகள், மரங்கள், ஒளிந்து இசைக்கும் சில்வண்டுகள், மரங்களின் கீழே கிடக்கும் பழுத்த இலைகள், சருகுகள், மேல் மண் மக்குகள். அதில் நெளிந்து மறையும் பூரான், ஊரும் சில மரவட்டைகள். ஞெகிழிப் பைகள், காலி டப்பாக்கள். அதற்கடுத்து இதையெல்லாம் இங்கு போட்ட மனிதர்களுள் ஒருவன்.

ஓடை நீர் சிரி சிரி சிரித்துக்கொண்டே ஓடுகிறது.

### குருவிக்கூடு சூப்

பாலம் கட்டும் வேலை முடிந்துவிட்டிருந்தது. அப்பாலத்தைச் சரிபார்த்து ஒப்புதல் வழங்க சுமையுந்து ஒப்பந்தக்காரர் ச்சோங் வந்திருக்கிறார். பாலம் அவருக்கு மனநிறைவாக இருந்தது. எனக்கு அலுவலகத்திலிருந்து அழைப்பு வந்திருக்கிறது. முகாமொன்றுக்குச் சென்று கட்டைகளை ஆய்வு செய்ய வேண்டுமாம். ச்சோங் திரும்புகையில் அவருடனேயே சண்டகான் திரும்பப் பணிக்கப்பட்டிருந்தேன். இங்கு பணி தொடங்கி விட்டால் இப்படி வெளிமுகாமுக்குச் செல்லும் வேலை இருக்காது. ச்சோங்கின் மிட்சுபிசி பாஜிரோ வண்டியில் திரும்பும்போது இருவரும் பேசியே நெருக்கமாகி விடுகிறோம். வீட்டுக்குச் செல்லலாம் என்று அழைப்பு விடுக்கிறார்.

ச்சோங் வீடு சீனர்கள் வசிக்கும் சிபுகா பகுதியில் இருக்கிறது. அங்கு அவருடைய மனைவியும் மகளும் அறிமுகப்படுத்தப்பட்ட பின்னர் சற்றும் தாமதிக்காமல் உணவுமேசையில் அமர்த்தப்படுகிறோம். வட்டமான பளிங்குக் கல்லாலான உணவு மேசையில் உணவுகள் சுடச்சுட வந்து சேருகின்றன.

தவ்ஃபூவும் பாகற்காயும் கலந்து ஒரு பிரட்டல். ஸ்வீட் அன்ட் சோர் கோழி இறைச்சி. தனித்தனிக் கிண்ணத்தில் சூப். சீனத்தேநீர். இரு சின்னக் கிண்ணங்களில் சோறு. அதை எடுத்து உண்பதற்கு 'ச்சாப் ஸ்டிக்'. சோற்றுக் கிண்ணத்தை வாயருகே கொண்டு சென்று குச்சியால் சிறிது சோற்றை வாய்க்குள் தள்ளிவிட்டு அதே குச்சியால் ஒரு தவ்ஃபூ கட்டியை எடுத்துச் சாப்பிடுகிறேன். அப்போது முதலில் அந்த சூப்பைக் குடித்துப்பார் என்கிறார் ச்சோங்.

குடிக்கிறேன். அருமையான சுவை. கிண்ணத்துள் திரும்பவும் பார்க்கிறேன். அதில் வழக்கமான சூப்பில் காணப்படும் எந்தப் பொருளும் இல்லை. பின் எப்படி இவ்வளவு சுவையுடன் இருக்கிறது? உற்றுப் பார்த்ததில் ஏதோ நார் நாராக சில இழைகள் மிதக்கின்றன. என்ன சூப் இது?

என்ன சூப் என்பது கிடக்கட்டும். இதன் விலை எவ்வளவு தெரியுமா? ச்சோங் கேட்கிறார்.

என்ன விலை இருக்கப்போகிறது? சீன உணவகங்களில் உணவோடு இந்த சூப் வகைகளை இலவசமாகத் தருவார்கள். சாப்பாடே இரண்டரை வெள்ளிதான் எனும்போது இது பெரிதாக என்ன விலை இருக்கப்போகிறது? ஆனாலும் சிறப்பான சூப்பாக இருக்கும் போலிருக்கிறது. எனவே விலையைச் சாப்பாட்டைவிடக் கொஞ்சம் அதிகமாகவே சொல்லி வைப்போம். என்ன அய்ந்து வெள்ளி இருக்குமா?

சோங் சிரித்துக்கொள்கிறார். அய்ந்தல்ல, அய்ம்பது வெள்ளி.

வாயருகே கொண்டுபோன சூப் அப்படியே நின்றுவிடுகிறது. அய்ம்பது வெள்ளி என்றால் ஏறக்குறைய இருபது டாலர். ஆயிரம் இந்திய ரூபாய். இந்த சூப்பில் அப்படி என்ன தங்கத்தையா கரைத்து ஊற்றியிருக்கிறார்கள்?

நம்பமுடியவில்லை, இல்லையா? இது சாதாரண உணவகங்களில் கிடைப்பது இல்லை. சபா ஓட்டலில் விசாரித்துப் பார். அங்கு கிடைக்கும் என்று அவர் சொன்னதும், இது சுவையாகத்தான் இருக்கிறது. மறுக்கவில்லை. ஆனால் இந்த விலை விற்குமளவுக்கு இதில் என்ன இருக்கிறது என்றுதான் புரியவில்லை என்கிறேன்.

இதில் மிக விலையுயர்ந்த பொருள் ஒன்று கலந்திருக்கிறது. இதில் நார் நாராய்த் தெரிகிறது பார். அதுதான் அந்தப் பொருள். சராங் புருங்.

சராங்... வந்த சொல் அப்படியே நாவில் நின்றுவிடுகிறது. 'சராங் புருங்' என்றால் குருவிக்கூடு. இவர் என்ன சொல்கிறார்? குருவிக் கூட்டை யாராவது சாப்பிடுவார்களா? அப்படியானால் இதுவரை சுவைத்துச் சாப்பிட்ட இந்த சூப் ஒரு குருவிக்கூட்டைக் கலந்து செய்த சூப்பா? அதுவும் ஒரு கோப்பை சூப் ஆயிரம் ரூபாயா? இது தெரிந்த

பிறகு இனி இதைக் குடிக்கத்தான் முடியுமா? என்ன சொல்கிறீர்கள் சோங்? விளையாடவில்லையே.

என்ன அப்படிக் கேட்டுவிட்டாய்? இது உடம்புக்கு எவ்வளவு நல்லது தெரியுமா?

இந்தச் சீனர்களுக்கு எதுதான் நல்லது இல்லை? ஒரு சீன நாட்டு மருந்துக் கடைக்குச் சென்றால் வரிசையாக கண்ணாடி போத்தல்களில் விதவிதமாய் பாம்புகளைத் தைலத்தில் ஊறவைத்திருப்பார்கள். சீனர்கள் மருந்து கேட்டால் சில மருந்துப்பொருட்களைக் கலந்தபிறகு அப்பாம்பு தைலத்தில் இருந்து ஒரு கரண்டி எடுத்துக் கலந்து ஊற்றிக் கொடுப்பார்கள். இது நாட்டு மருந்தாம். கேட்டால் உடம்புக்கு நல்லது என்பார்கள். இப்போது சோங்கும் அப்படித்தான் அதையொரு சகலரோக நிவாரணியாக வருணித்துக்கொண்டிருக்கிறார். கொஞ்ச நேரம் கழித்து அவருடைய மனைவி பின்பக்கம் நகர்ந்து சென்றதும் கமுக்கமாக தன் ஆட்காட்டி விரலை எடுத்து நீட்டுகிறார். முதலில் தொய்வாக அதைக் காட்டியவர் பின் சட்டென்று அவ்விரலை விரைப்பாக நீட்டிக் காண்பித்து, இனி மச்சம்'லா என்கிறார் கண்களை சிமிட்டியபடி.

அதுதானே பார்த்தேன்!

***லயாங் - லயாங் குருவிகள்***

சுண்ணாம்புக்கல் குகைகளில் வசிக்கும் குருவி இனமே லயாங் - லயாங். இவற்றில் நான்கு பேரினங்கள் இருந்தாலும் இரண்டு வகையே முதன்மை பெறுகின்றன. காரணம் இதன் வணிக மதிப்பு. இந்த இருவகைக் குருவிகளின் கூடுகளே உணவுப்பொருளாகப் பயன்படு கின்றன. முதல் வகை வெண்கூடு லயாங் - லயாங். மற்றொன்று கருங்கூடு லயாங் - லயாங். இக்குருவிகள் கூடுகட்டும் விதம் மற்ற குருவிகளிடமிருந்து முற்றிலும் மாறுபட்டது. இக்கூடு அரைக்கிண்ண வடிவில் காணப்படும். இந்த அரைக்கிண்ண வடிவத்தின் வளைந்த பகுதி வெளிப்புறமாகவும் அதன் மறுபகுதி குகைச் சுவரில் ஒட்டிய படியும் இருக்கும். இதற்குள் பெண் குருவி முட்டையிட்டு அடை காக்கும். ஆனாலும் இக்கூட்டைக் கட்டுவது ஆண் குருவி. அது தன் வாயிலிருந்து சுரக்கும் எச்சில் கோழையைக் கொண்டு இக்கூட்டை கட்டுகிறது. இதன் எச்சில் காற்றில் பட்டவுடனேயே உறுதியான இழையாக மாறிவிடுவதால் ஒரு குருவி இதற்குள் முட்டையிட்டு அமரும் அளவுக்கு வலிமையுடையதாய் இருக்கிறது.

அய்யய்யே. அப்படியானால் ஒரு குருவியின் எச்சிலையா நாம் சூப் என்று குடித்தோம்? லயாங் - லயாங் குருவிகளைப் பற்றிய இப்புத்தகத்தை மேற்கொண்டு படிக்கத்தான் வேண்டுமா? ஒரு குருவி

கூட்டும் கூட்டையா இவ்வளவு விலைகொடுத்து வாங்கிக் குடிக்கிறார்கள்? ஏன் இவ்வளவு விலை கொடுக்கிறார்கள்? சரி, மேலே படிக்கலாம்.

லயாங் - லயாங் குருவிகள் எப்போதுமே தங்கள் கூடுகளைக்கட்ட பிற உயிர்களால் ஆபத்து இல்லாத குகையின் மிக உயர்ந்த பகுதியின் சுவரைத் தேர்ந்தெடுக்கின்றன. இதில் கருங்கூடு லயாங் - லயாங் கூடுகட்டும்போது தன் எச்சிலோடு தன் தூவிகளையும் சேர்த்துக் கூடு கட்டுவதால் இக்கூடு கருமையாகக் காட்சியளிக்கிறது. இதனால் இக்கூட்டுக்குச் சந்தை மதிப்பு குறைவு. ஆனாலும் இத்தூவிகளைக் கூட்டிலிருந்து நீக்கிவிட்டு தூய்மையாக்கிச் சந்தைக்கு அனுப்பும் தொழிலும் தனியே நடைபெற்று வருகிறது. ஆனால் வெண்கூடு லயாங் - லயாங் குருவிகள் இப்படித் தூவிகளைக் கலக்காமல் கூடுகட்டுவதால் அதன் கூடு வெண்மையாகக் காட்சியளிக்கிறது. எனவே இதன் விலை சந்தையில் அதிகம். ஒரு கிலோ நான்காயிரம் அமெரிக்க டாலர்கள். இதே வெண்கூடு லயாங் - லயாங் குருவிகள் கட்டும் வெண்ணிறக்கூடு சமயத்தில் இளம் சிவப்புநிறம் கலந்து காணப்படும். இது மிக உயர்வாக கருதப்படுகிறது. எனவே வெளிச்சந்தையில் இதற்கு விலை அதிகம். சமயத்தில் சுமார் பத்தாயிரம் டாலர் வரை விலை போகிறது.

புத்தகத்தை மூடி வைத்துவிடுகிறேன். இது உலகத்திலேயே விலை மதிப்புமிக்கக் குருவியாக இருக்கும் போலிருக்கிறது. இதை அவசியம் பார்த்தாகவேண்டும். இவையிருக்கும் கொமந்தோங் குகை சண்டகானிலிருந்து நான்குமணி நேரப்பயணம். ஆனால் புக்கிட் கரமிலிருந்து வெறும் ஒருமணிநேரப் பயணம்.

அலுவலகத்துக்குச் சென்றபோது அடுத்தநாள் காலையில் கட்டைகளைப் பார்க்கப் போகவேண்டும் என்றார்கள். அந்த இடம் கொமந்தோங் குகையைத் தாண்டி இருமணிநேர பயணத்தொலைவி லுள்ள இடம் என்று கேள்விப்பட்டதுமே அக்குருவியைப் பார்த்த மகிழ்ச்சி. அத்தோடு அக்கட்டைகளை விற்பவர் ஓமருக்குத் தெரிந்தவர் என்பதால் புக்கிட் கரமில் வந்து காத்திருக்கும் ஓமரையும் அழைத்துக் கொண்டு போகச்சொன்னது அக்குருவியை அதன் கூட்டோடு கையில் கொடுத்தது போல இருக்கிறது. குகையைப் பற்றி இதுவரை தெரிந்த தெல்லாம் அங்கு இரு குகைகள் இருக்கின்றன. ஒன்று குன்றின் அடிவாரத்திலேயே இருக்கிறது. மற்றொன்று குன்றின் மேல் பகுதியில் இருக்கிறது. அடிவாரத்தில் உள்ளது சிமுட் பூத்தி அதாவது வெண்குகை. மேலே உள்ளது சிமுட் ஈத்தாம் அதாவது கருங்குகை. ஏன் கருங்குகை? இதையெல்லாம் ஓமர்தான் தெரிந்து வைத்திருப்பார். ஏன் வெண் குகை? நல்லது. அவர் அவசியம் வரத்தான் வேண்டும்.

**கொமந்தோங் குகைகள்**

'ஆ'வென்று வாயைத் திறந்து விழுங்கக் காத்திருக்கும் பூதம் என்று

சிறுவர் கதைகளில் படித்த வரி நினைவுக்கு வருகிறது. அப்படித்தான் இருக்கிறது இக்குகை வாயில். குன்றின் தரைமட்டத்தில் அமைந்திருக் கிறது கருங்குகை. நுழைவாயிலானது உள்ளிருக்கும் இருளால் பெரும் கருந்துளை போல் காட்சியளிக்கிறது. இதனால்தான் இது கருங் குகையா? இல்லை. இங்குதான் கருங்கூடு லயாங்-லயாங் குருவிகள் கூடுகட்டுகின்றன. மேலேயுள்ள குகையில் வெண்கூடு லயாங்-லயாங் குருவிகள் கூடுகட்டுவதால் அது வெண்குகை என்கிறார் ஓமர். இதற்காகத்தான் ஓமர் வேண்டும்.

அப்பெரும் வாயிலுக்குள் நுழைகையில் காலுக்குக் கீழே ஏதோ நனைவது போல் இருக்கிறது. குனிந்து பார்க்கிறேன். ஒரு சின்னஞ் சிறு நீரோடை கடந்து கொண்டிருந்தது. வெளியிலிருந்து படரும் வெளிச்சத்தில் சிறு நண்டுகளைக் காணமுடிகிறது. அந்நீரோடையைத் தாண்டி உள்நுழைய இருள் கண்களைக் கவ்விக்கொள்கிறது. கண் களைப் பழக்க ஓரிரு நிமிடம் தேவைப்படுகிறது. தொலைவில் இடக்கோடியில் ஏதோ வெளிச்சம் வருகிறது. ஆமாம் அங்குள்ள மேற்கூரையில் தரையிலிருந்து சுமார் அறுபது பாகைக் கோணத்தில் ஒரு பெருந்துளை இருக்கிறது. வெளிச்சம் அதன் வழியாக வடிந்து கொண்டிருக்கிறது. அதை நோக்கி நடக்கிறோம்.

கால்கள் மெத்தையில் நடப்பதுபோல் மெத்தென்று இருக்கிறது. அப்படியென்ன கீழே கொட்டிக்கிடக்கிறது? மர அறுவை ஆலைகளில் கிடக்கும் மரத்தூள்களின் மீது நடக்கும்போது ஏற்படும் அதே உணர்வு. ஆனால் இதில் மூக்கைத் துளைக்கும் காரநெடி. அவ்வெளிச்சம் வரும் துளையின் கீழ்சென்று இது என்னவென்று பார்க்கவேண்டும். அதற்குள் பாதங்களில் ஏதோ ஊர்வதுபோல இருக்கவே கையிலிருந்த சுட்டு விளக்கால் தரையில் அடித்துப் பார்க்கிறேன். அய்யோ! இதென்ன இத்தனை கரப்பான் பூச்சிகள்? பத்து, நூறு, இல்லை ஆயிரம், ஆயிரம்... தரை முழுக்க எங்கு பார்த்தாலும் மொச மொசவெனச் சகிக்கவில்லை. அறுவெருப்பில் ஒரே ஓட்டம். அவ்வெளிச்சம் வரும் துளையின் கீழ்போய்த்தான் ஓட்டம் முடிகிறது. வெளிச்சம் காரணமாகவோ என்னவோ இங்குக் கரப்பான்களே இல்லை. மெத்தை போலிருந்த பொருளையும் என்னவென்று நன்கு பார்க்கமுடிகிறது. அது மரத் தூளின் நிறத்தில் இருக்கிறது. குனிந்து அதைக் கையில் எடுத்துப்பார்க்க முனைகையில் ஓமர் தடுக்கிறார். வேண்டாம். அவையெல்லாம் 'குவானோ' என்கிறார்.

குவானோ?

பறவைகள், வௌவால்களின் எச்சம். ஆனால் பார்த்தால் அப்படித் தெரியாது. நீண்ட காலம் ஆகிவிட்டால் இப்படி உரக்கழிவாக மாறிவிடும்.

இங்கு வெளவால்கள் இருக்கின்றனவா என்று கேட்டதும் சரியாப் போச்சு. நீ கேள்விப்பட்டதே இல்லையா என்ற ஓமர் ஒரு வெண் சுருட்டை எடுத்துப் பற்றவைத்துக் கொள்கிறார். காரநெடியைத் தவிர்ப்பதற்காக இருக்கலாம். இதற்கு இந்தக் காரநெடியே பரவா யில்லை. உலகிலேயே வெளவால்கள் அதிகமாக வசிக்கும் குகை இதுதான் என்பார்கள். சுமார் இருநூறு ஆயிரம் வெளவால்கள். இப்படிப்பட்ட இடத்தைப்போய் இங்கு வெளவால்கள் உண்டா என்று கேட்கிறாய்?

கேள்விப்பட்டதில்லையே. அவ்வளவு வெளவால்களா இருக் கின்றன? அப்படியானால் இது ஏன் லயாங்-லயாங் குருவிகளின் குகையாகப் பெயர் பெற்றிருக்கிறது?

சிரிக்கிறார். இந்தப் பெயர் எல்லாம் நாம் கொடுத்ததுதானே? அவைகளா வைத்துக்கொண்டன? ஆனால் இந்த உலகம் எப்படி வாழவேண்டும் என்பதை இக்குகை மூலமாக இவ்விரண்டு உயிரினங் களும் நமக்கு இன்றும் சொல்லிக் கொடுத்துக்கொண்டிருக்கின்றன. கேட்பதற்குத்தான் நமக்குக் காதுகள் இல்லை.

ஓமர் ஏதோவொரு அரிய செய்தியைப் பகிர்ந்துகொள்ளப் போகிறார் என்பது புரிகிறது.

லயாங்-லயாங் குருவிகள் வசிக்கும் இக்குகையில் வெளவால்களும் வசிக்கின்றன என்பது கேட்பதற்கு வேறுபாடாகத் தோன்றலாம். ஆனால் இயற்கைக்கு எந்த வேறுபாடும் கிடையாது. எல்லாம் விருப்ப ஒப்பந்தம். ஒருவகையில் இயற்கை ஒப்பந்தம். வெளவால்கள் இரவில் இரை தேடக்கூடியவை. லயாங் - லயாங் குருவிகளோ பகலில் இரை தேடக்கூடியவை. இக்குருவிகள் இரைதேட வெளியே செல்லும் பகல் நேரத்தில் வெளவால்கள் தங்கிக்கொள்கின்றன. மாலையில் லயாங் - லயாங் குருவிகள் குகை திரும்பும்போது இரவு வேட்டைக்காக வெளவால்கள் வெளிக்கிளம்ப, குருவிகள் தங்கிக்கொள்கின்றன. ஒரே வாழ்விடத்தை இருவேறு உயிரினங்கள் அதுவும் பாலூட்டியும் பறவையும் சிக்கலற்று சமமாகப் பங்கிட்டுக்கொள்ளும் இந்த அற்புத வாழ்வியலை நாம் எப்போதுதான் கற்றுக்கொள்ளப்போகிறோம்?

உண்மையிலேயே ஓர் அரிய இடத்துக்குதான் வந்திருக்கிறோம். வெளியிலிருந்து பார்ப்பதற்கு இருளாகத் தெரிந்த குகையின் நுழை வாயில் இங்கிருந்து பார்க்க இருளுக்குள் வெளிச்ச வாயிலாகத் தெரிகிறது. இப்போது பார்வை பழகியிருந்ததால் குகையின் முழு விரிவையும் காணமுடிகிறது. இதைக் குகை என்பதைவிட விரிந்து பரந்த மண்டபம் என்பது பொருத்தமாக இருக்கும். நல்ல அகலமான பரப்பு. அதைவிட எவ்வளவு உயரம் இந்தக் குகை? சுமார் அய்ந்து பனை உயரமிருக்கும். இதென்ன எதிரே நூலேணி போல் தொங்கிச்

கொண்டிருக்கிறது. பிரம்பு ஏணி. எங்கேயிருந்து இது தொங்குகிறது? சுட்டுவிளக்கை ஓமர் உயர்த்திக் காட்டுகிறார்.

அந்த ஏணி குகையின் மேலுச்சியிலிருந்து தொங்கிக்கொண்டிருக் கிறது. இதேபோல் இன்னும் சில ஏணிகளும் தொங்கிக்கொண்டிருக் கின்றன. இந்த ஏணிகள் மேலே முடிவுறும் மேற்கூரையில் வளையம் அல்லது கொக்கியோடு இணைக்கப்பட்டிருப்பது தெரிகிறது. அவை இரும்பாக இருக்கலாம். அந்த வளையங்களை அங்கு ஏறிச்சென்று அந்தரத்தில் பொருத்தியது யார்? பாரந்தூக்கிகள் இல்லாத காலத்தில் அவை எப்படி அவ்வளவு உயரத்தில் பொருத்தப்பட்டன? அப்படியே பொருத்துவதாக இருந்தாலும் எப்படிச் சாத்தியமானது? பல கேள்விகள் இந்த ஏணிகள் போல எதிரே ஆடுகின்றன. அதுமட்டுமல்ல, அந்த ஏணி களின் உச்சிகளுக்கு இடையிலும் தொங்கு பாலம் போல் பல பிரம்புப் பாலங்கள் இருக்கின்றன. இவையெல்லாம் குருவிக்கூடுகளை எடுப்ப தற்காக அமைக்கப்பட்டிருக்க வேண்டும். குகைச்சுவரின் ஓரங்களின் மேலேயும் சில பிரம்பு ஏணிகள் சார்த்தி வைக்கப்பட்டிருக்கின்றன. அதில் ஆங்காங்கே இடுப்பு வளையங்கள் போல் சில வளையங்கள் பொருத்தப் பட்டிருக்கின்றன. அவ்வளையங்கள் மேலேறிச் சென்று கூட்டை எடுப்பதற்குப் பாதுகாப்பாகப் பொருத்தப்பட்டிருக்க வேண்டும். எவ்வளவு யோசித்தாலும் இந்தத் திகைப்பு விலகாது போலிருக்கிறது.

எதிரே தொங்கும் இந்த ஏணியில் ஏறிப்பார்த்தால் என்ன? இரண்டு மூன்று படி ஏறி நிற்கையில் ஊஞ்சலைப்போல் அங்குமிங்கும் ஆடினாலும் வலுவாக இருக்கிறது. இதில் எப்படி ஏறிக் கூடுகளை எடுக்கிறார்கள்? அப்படி எடுப்பதைப் பார்க்க முடியுமா?

சரியான பருவத்தில்தான் வந்திருக்கிறோம், அங்கே பாரேன்.

ஓமர் சுட்டிக்காட்டிய இடத்தில் ஒருவர் குகையோரமாக இருந்த பிரம்பு ஏணியில் ஏறத்தொடங்கி உச்சிக்குப் போய்ச் சேர்கிறார். ஏறியவர் தன் தலையில் சுட்டுவிளக்கைக் கட்டியிருக்கவேண்டும். அதிலிருந்துவந்த வெளிச்சத்தில் கூடுகளிருப்பது புலப்படுகிறது. சுட்டுவிளக்கின் ஒளிபட்டவுடன் அங்கிருந்த வௌவால்களெல்லாம் கூட்டமாய் இடம்பெயர்வது தெரிகிறது. மேலேயிருந்தவர் வளையங்கள் பொருத்தப்பட்டிருந்த ஏணியில் பிடிமானமாக நின்றுகொண்டிருக் கிறார். அவர் கையில் நீண்ட தொரட்டிக்குச்சி இருக்கிறது. அதன் உதவியால் குகைச்சுவரில் ஒட்டிக்கொண்டிருந்த கூடுகளை லாகவமாக எடுத்து இடுப்பில் கட்டியிருந்த கூடைக்குள் போட்டுக்கொள்வது தெரிகிறது. இருந்தாலும் சிரமமான வேலைதான். இவ்வளவு உயரத்தில் இருந்து தவறி விழுந்தால் என்னாவது? அடிமட்ட மக்களின் உழைப்பும் உயிரும் எவ்வளவு மலிவாக இருக்கின்றன!

சரி, வெண்குகைக்குப் போவோமா என்கிறார் ஓமர்.

வெண்குகைக்குச் செல்லும் பாதை கரடுமுரடாக இருக்கிறது. சிறு தொலைவு மேலேறிச் சென்றவுடன் கற்கள் விரவிக்கிடக்கும் சிறுஇடம் வருகிறது. களைத்துவிட்டதால் ஓய்வெடுக்க அமர்ந்த ஓமரிடம் கேட்கிறேன். இக்குகையில் கூடுகள் இருப்பதைச் சீனர்கள் எப்படிக் கண்டுபிடித்தார்கள்?

சீனர்கள் கண்டுபிடிக்கவில்லை. இக்குகையைக் கண்டுபிடித்தது ராஜா துவா பத்துலோங். கினபத்தாங்கன் ஆறு தோன்றும் இடத்துக் கருகே கோலா குவாமுட் என்றொரு இடம் இருக்கிறது. அவ்விடத்தில் வசித்துவந்த மக்கள் குழுவின் தலைவர் ராஜா துவா பத்துலோங். இவர் தனியே சென்று வேட்டையாடுவதில் வல்லவர். அப்படியொரு முறை தனியே வேட்டைநாயுடன் புறப்படுகிறார். காட்டுக்குள் வெகு தொலைவு சென்றுவிட்டதால் திரும்புவதற்குள் இருட்டிவிடுகிறது. எனவே ஒருமரத்தின் மேலேறி அங்கே தங்கிவிடுகிறார்.

சிலநொடிகள் ஓமரையே உற்றுப்பார்த்துவிட்டுக் கேட்கிறேன். மறுபடியும் காட்டுக்குள் காணாமல் போன கதையா? ஓமர் அடக்க முடியாத சிரிப்பொன்றைச் சிரிக்கிறார். அப்படி அமைகிறது. என்ன செய்யச் சொல்கிறாய் என்று சொல்லிவிட்டு மீண்டும் கதையைத் தொடங்குகிறார்.

மறுநாள் விடிந்தவுடன் திரும்பிப்போக முயன்றபோது அவருக்கு வழி தெரியவில்லை. காட்டுக்குள் தான் தொலைந்து போய்விட்டதை உணர்கிறார். பகலெல்லாம் வழியில் கிடைத்த கனிகள், கிழங்கு களைப் புசித்துக்கொண்டே வருகிறார். இரவு வருகிறது. அன்றிரவும் மரத்திலேறி படுத்துத் தூங்கிவிடுகிறார். கொஞ்ச நேரத்தில் நாய் குரைக்கும் ஓசை கேட்க எழுந்து பார்த்தபோது எதிரே ஓர் அழகான கொற்றவை நின்றுகொண்டிருக்கிறது. திடீரென கொற்றவையைக் கண்டவுடன் ராஜா பத்துலோங்குக்கு அச்சம். அதை உணர்ந்து கொண்ட கொற்றவை, அஞ்சவேண்டாம். உனக்கு உதவி செய்ய வந்திருக்கிறேன். நீ யார்? எதற்காக இக்காட்டுக்குள் வந்திருக்கிறாய்? விவரம் சொல் என்று கேட்டதும் அவருக்குக் கொஞ்சம் நம்பிக்கை வருகிறது. எல்லா விவரத்தையும் சொல்கிறார்.

அதைக்கேட்ட கொற்றவை சொல்கிறார். நான் உனக்கு உதவுகிறேன். கவலைவேண்டாம். காலை எழுந்தவுடன் இப்படியே நேராகப் போய் வலப்பக்கம் திரும்பினால் பெரியமலை தெரியும். அங்கு சென்றால் பெரிய குகை வரும். அதுதான் இதுவரை நீ பார்த்ததிலேயே பெரிய குகையாக இருக்கும். அதன் பெயர் கொமந்தோங். அங்கு குருவிக் கூடுகள் நிறையக் கிடைக்கும். அதை வேண்டுமளவுக்கு எடுத்துக் கொண்டு அக்குகையை விட்டு வெளியே வா. அப்படி வெளியே வரும்

போது இப்போது நீ அணிந்திருக்கும் சட்டையை அக்குகை வாசலில் மாட்டிவை. பிறகு உன் மனம் அச்சமயம் எந்தப்பக்கம் போகச்சொல் கிறதோ அந்தப் பக்கமாகப் போ. அதன் பிறகு உனக்கு நல்லது நடக்கும்.

இப்போது அவருக்கு இரு அய்யங்கள். முதலாவது ஏன் அக்குருவிக் கூடுகளை எடுத்துக்கொள்ள வேண்டும்? இரண்டாவது ஏன் குகை வாசலில் ஆடையைத் தொங்கவிடவேண்டும்? இரண்டையும் கொற்றவை யிடம் கேட்கிறார்.

நல்லது. முதலாவது கேள்விக்கு விடை. இக்காட்டில் இத்தனை நாள் நீ அலைந்து திரிந்ததற்குக் காட்டின் கொற்றவையான நான் உனக்கு ஏதாவது செய்ய விரும்புகிறேன். அதற்குரிய பலனை அக்குருவிக்கூடு மூலம் உனக்குக் கிடைக்கும்படி செய்வேன். இரண்டாவது நீ மறுபடியும் அக்குகையைத் தேடிவரும்போது உனக்கு அதை அடையாளம் தெரிய வேண்டும் அல்லவா? அதற்காகத்தான் உன் ஆடையை மாட்டச் சொன்னேன்.

ராஜா துவா பத்துலோங் அதிர்ந்துவிடுகிறார். என்ன இன்னொரு முறையா? ஒருமுறை இங்கு தொலைந்துபோனது போதாதாவெனக் கேட்கிறார். அதற்கு கொற்றவை சிரித்துக்கொண்டே, திரும்பவும் இவ்விடத்துக்கு நீயே விரும்பி வருவாய். அதுதான் உன்னையும் உன் சந்ததியையும் காலாகாலத்துக்கு வாழ வைக்கப்போகிறது என்று சொல்லிவிட்டு மறைந்துவிடுகிறது.

ராஜா துவா பத்துலோங் சட்டென்று கண் விழிக்கிறார். நடந்த தெல்லாம் கனவென்று புரிகிறது. வானில் வெள்ளி முளைத்திருக்கிறது. ஆனாலும் அக்கனவு ஒரு நல்ல நிமித்தம் என்று தோன்றுகிறது. அக்கனவுப்படியே செய்து பார்ப்போம் என்று கொற்றவை சொன்ன படியே நேரே நடந்துசென்று வலப்புறம் திரும்பி நடந்தபோது கொமந்தோங் குகை தெரிவதைப் பார்க்கிறார். அவருடைய உள்ளத்தில் ஓர் ஒளி பாய்கிறது.

பாதி கதையில் ஓமரிடம் கேட்கிறேன். நாம் அன்றிரவு காணாமல் போயிருந்தபோது மட்டும் ஏன் எந்தக் கொற்றவையும் நம்மைக் காப்பாற்ற வரவில்லை?

நினைத்தேன். என்ன இன்னும் இக்கேள்வி வரவில்லையே என நினைத்தேன் என்ற ஓமர் ஏன் அன்று உன்னை வெளியே அழைத்து வந்த கொற்றவையாக என்னை நீ நினைத்துக் கொள்ளக்கூடாது?

ஒருமுறை அவரை உற்றுப்பார்த்துவிட்டுச் சொல்கிறேன். இந்தக் கொற்றவையும் அன்று என்னோடு காட்டுக்குள் மாட்டிக்கொண்டி ருந்தது நினைவிருக்கட்டும். மேலும் கொற்றவை இப்படியெல்லாம் களைத்துப்போய் அமராது. எழுந்திருங்கள் மேலே போகவேண்டும் என்றதும் சிரித்துக்கொண்டே எழுகிறார்.

மேலேறும் வழி இப்போது செங்குத்தாக வரத்தொடங்குகிறது. பிடித்து மேலேறி வெண்குகை நோக்கி நடக்கலானோம். இப்போது பாதை அவ்வளவு சிரமம் தரவில்லையாதலால் ஓமர் கதையைத் தொடர்கிறார்.

குகைக்குள் சென்ற ராஜா துவா பத்துலோங்குக்கு ஒரே வியப்பு. அவருடைய வாழ்நாளிலேயே இப்படியொரு மாபெரும் குகையைக் கண்டதேயில்லை. அங்கிருந்த கூடுகளைக் கொஞ்சம் எடுத்துக்கொண்டு கொற்றவை சொன்னபடியே குகைவாசலில் தன் ஆடையைத் தொங்க விடுகிறார். பின்னர் ஒருவழியைத் தேர்ந்தெடுத்து நடக்கிறார். வெகுதொலைவு சென்றதும் ஓர் ஆறு குறுக்கிடுகிறது. அதில் ஒரு முதியவர் சிறு படகை ஓட்டிக்கொண்டு வருவதைக் காண்கிறார். அவரிடம் ஓடிச்சென்று உதவிகேட்க, அம்முதியவர் அவரைப் படகில் ஏற்றிக்கொண்டு ஒரு கம்போங்குக்கு அழைத்துச் செல்லுகிறார். அந்தக் கம்போங்கின் தலைவர் இவரைப் பார்த்தவுடனே முகக்களையை வைத்து இவர்தான் காணாமல் போன ராஜா துவா பத்துலோங் என்பதை அறிந்துகொள்கிறார். அவருக்கு முன்னாலேயே செய்தி வந்திருந்தது. அவர் ராஜா துவா பத்துலோங்கிடம் உணவு உண்டுவிட்டு ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள், இரவு பேசுவோம் என்கிறார்.

அன்றிரவு பத்துலோங் தான் காணாமல்போன முதல்நாளில் தொடங்கி அங்குவந்து சேர்ந்ததுவரை விவரமாக அனைத்தையும் கூறுகிறார். அதையெல்லாம் கேட்ட தலைவர் அந்தக் குருவிக்கூட்டைக் காட்டச் சொல்கிறார். அவர் எடுத்துக்காட்ட அவர் அப்படியே துள்ளி எழுந்துவிடுகிறார். இதுதான் நான் வெகுகாலமாகத் தேடிவரும் பொருள் என்கிறார். ராஜா ஒன்றும் புரியாமல் விழித்து இதை ஏன் நீங்கள் தேடினீர்கள் என்று கேட்கிறார். அதற்கு அவர் இது லயாங்-லயாங் குருவியின் கூடு. இது விலைமதிப்பற்ற ஒன்று. இதற்கீடாக எதை வேண்டுமானாலும் தர சீன வணிகர்களும், சுலுக் வணிகர்களும் ஆயத்தமாக இருக்கிறார்கள். சீனர்கள் இது தொடர்பாக பலமுறை தொடர்புகொண்டு விட்டார்கள். ஆனால் எனக்கு இது கிடைக்குமிடம் தெரியவில்லை. உங்களுக்கு இது கிடைக்குமிடம் தெரியும்தானே? தெரிந்தால் சொல்லுங்கள். கிடைக்கும் பணத்தை ஆளுக்குப் பாதியாகப் பிரித்துக்கொள்வோம் என்கிறார்.

ராஜா பத்துலோங்குக்கு இப்போது கொற்றவை சொன்ன சொற்கள் நினைவுக்குவர மனசுக்குள்ளேயே நன்றி சொல்கிறார். பிறகு இருவருமாக ஆட்களோடு படகில் அந்த இடத்துக்குச் சென்று குருவிக் கூடுகளைச் சேகரித்து சீனர்களுக்கு விற்கும் வணிகத்தைத் தொடங்கிப் பின்னாளில் பெரும் செல்வந்தர்கள் ஆகிறார்கள். இன்னமும் இந்த இரு குடும்பத்தின் சந்ததியினரிடம்தான் இக்குருவிக்கூடு எடுக்கும் குத்தகை உரிமை இருக்கிறது. அடோய்... சிமுட் பூத்தி வந்துவிட்டது!

இருவருக்குமே நன்றாக மூச்சிரைக்கிறது. குகைக்கு எதிரே நின்று இளைப்பாறுகிறோம். ஒப்பீட்டளவில் இக்குகை கருங்குகைக்கு ரொம்ப சின்னதுதான். குகை மேலிருந்து சரிவாக உள்ளிறங்குகிறது. சுட்டுவிளக்கை அடித்தபோது அச்சரிவு மேலும் சரிந்துகொண்டே செல்வது தெரிகிறது. உள்ளே ஏதாவது ஒரு பள்ளத்துக்குள் சரிந்து விழுந்துவிடுவோமோ?

அச்சமாகத்தான் இருக்கிறது. வெளவால்களின் நெடி வேறு. அதற்குள் வெளியிலிருந்து யாரோ அழைக்கிறார்கள். அங்கிருந்து திரும்பிக் குகை வாயிலைப் பார்த்தபோது குகையின் உள்பகுதி முற்றிலும் இருட்டாக இருக்க அவ்வாயில் பகுதி வெளிவெளிச்சத்தில் இருந்ததால் பார்ப்பதற்கு மூடிய உதடுபோல் காட்சியளிக்கிறது. அழைத்தவர் இக்குகை, பழக்கப்பட்டவர்களுக்கே சற்று ஆபத்தான குகை. எனவே உள்ளே செல்ல முயல வேண்டாம் என்கிறார். பழக்கப்பட்டவர் சொல்கிறார். சரியாகத்தான் இருக்கும்.

மாலையாகிவிட்டது. சீக்கிரம் கீழே இறங்குவோம். அங்கு இன்னுமொரு காட்சியைக் காணவேண்டும் என்கிறார் ஓமர்.

எதைக் காணவேண்டும்?

வெளவால்கள் குகையைவிட்டு வெளியேறும் காட்சி.

அதில் என்ன சிறப்பு இருக்கிறது?

அதை நான் சொல்லக்கூடாது. பார்க்கும்போது நீயே புரிந்து கொள்வாய்.

இறங்குவது எளிதாகத்தான் இருக்கிறது. கருங்குகைக்கு வெளியே ஓரிடத்தில் ஓய்வாக அமர்ந்துகொள்கிறோம். இவரிடம் கேட்க வேண்டிய கேள்விகள் இன்னமும் மீதம் இருக்கின்றன. ஏன் இந்தக் குருவிக் கூட்டை இவ்வளவு விலைகொடுத்து வாங்கிச் சாப்பிடுகிறார்கள்? இது ஆண்மையைப் பெருக்கும் என்று சோங் தன் விரலை விரைத்துக் காட்டிச் சொல்கிறார். இதில் அப்படி என்னதான் சத்து இருக்கிறது?

ஓமர் தன் கண்ணாடியைக் கழற்றித் துடைத்துக்கொண்டே, என்ன அப்படிக் கேட்டுவிட்டாய்? இதில் கொஞ்சநஞ்ச சத்துக்கள் இல்லை. கால்சியம், பொட்டாசியம், மெக்னீசியம், இரும்புச் சத்து என்று எக்கச்சக்கமாய் இருக்கிறது என்று சொல்லிவிட்டு அதாவது நாம் தினமும் சாப்பிடுகிற காய்கறியிலுள்ள அனைத்து சத்துக்களும் இதில் இருக்கின்றன என்று நமுட்டுச் சிரிப்புடன் கண்ணாடியைத் திரும்பவும் அணிந்துகொள்கிறார்.

அப்படியானால் இதையேன் இவ்வளவு விலைகொடுத்து வாங்கிச் சாப்பிடவேண்டும்?

காசு இருக்கிறவன் சாப்பிடுகிறான். நாம் வெறும் காய்கறியை வாங்கித் தின்றுவிட்டுப் போவோமே என்று அவர் சொல்லிக்

கொண்டிருக்கும்போதே குருவிகளின் கூச்சல்கள் கேட்கின்றன. லயாங்-லயாங் குருவிகள் குகைக்கு வெளியே விருட்விருட்டென அங்குமிங்கும் பறந்து கொண்டிருக்கின்றன. பறக்கும்போது உழவாரக் குருவிகளைப் போல அவ்வளவு வேகம். ஓமர் தோனைச் சுரண்டு கிறார். திரும்பிப் பார்த்தபோது குகைக்குள்ளிருந்து வெளவால்கள் வெளியேறத் தொடங்கியிருந்தன.

காட்சி. இதுதான் காட்சி. விழிகளை அகலமாய் விரிய வைக்கும் காட்சி. கருங்குகையின் வாயிலில் இருந்து கரும்புகை வெளியேறுவது போல் சுழன்று சுழன்று வெளவால்கள் கூட்டமாய் வானேகும் காட்சி. பார்வை துல்லியமாய்க் குவிகிறது. வரிசைக்கு அய்ந்து, ஆறு வெளவால்கள் இருக்கலாம். அவை ஏறத்தாழ ஒரே வரிசையில் அடுத்தடுத்து பறக்கின்றன. ஒவ்வொரு வரிசையாய் பேரணி நடத்துவது போல் சிறிதும் விலகாது குகையிலிருந்து கிளம்பி வான்நோக்கி மேலேறுகின்றன. அப்படியேறுகையில் சில இடங்களில் நேராகவும் சில இடங்களில் வளைந்து நெளிந்தும் பறந்தாலும் அவ்வரிசை மட்டும் குலையவில்லை. என்னவொரு நேர்த்தி. இதைப் பார்க்கும்போது கருப்பு நிற நாடா காற்றில் அலைந்தாடுவதுபோல், பட்டத்தின் வால்மட்டும் பட்டமின்றி நெளிந்தாடுவதுபோல்... அருமை. அந்தியின் பின்னணியில் இத்தனை இலட்சம் வெளவால்களும் வரிசையாய் கரும்புகையாய் வெளியேறும் இந்த அரியகாட்சியைத் தன் வாழ்நாளில் காணாத கண்களுக்கு எத்தகைய இழப்பு.

வெகு உச்சியில் சென்றிருந்த அவ்வெளவால்கள் இப்போது தன் வரிசையை இயல்பாய்க் கலைத்துக்கொண்டு விலகிச் சிதறி சிறு சிறு புள்ளியாய் வானில் பரவத் தொடங்கியிருந்தன. இவ்வெளவால்கள் ஒவ்வொரு இரவும் தம் உடல் எடையளவுக்கு பூச்சிகளைப் பிடித்து உண்ணுகின்றன. அப்படியெனில் இத்தனை இலட்சம் வெளவால்களும் எத்தனை டன் பூச்சிகளைச் சாப்பிடும்? இதனால் வெளவால்கள் எண்ணிக்கையில் பெருத்துவிடும் என்கிற கவலையும் இல்லை. இந்த வெளவால்களைப் பிடித்து உண்ண அதோ மேலே கழுகுகளும் பறந்துகொண்டிருக்கின்றன. இயற்கையின் உணவுச்சுழற்சியில் எல்லா வற்றுக்கும் ஓர் ஏற்பாடு இருக்கத்தான் செய்கிறது.

மனசில்லாமல் எழுந்துகொள்கிறோம். கட்டைகள் பார்க்கச் சென்று வந்திருந்த நாங்கள் அது குறித்த செய்தியை இனிதான் அலுவலகத்துக்குச் சொல்லவேண்டும். இப்போது எங்களை நோக்கி ஓர் ஆள் நெருங்கி வருகிறார்.

துவான், என்னிடம் நல்ல தரமான குருவிக்கூடு இருக்கிறது. சந்தையைவிட மலிவான விலைக்குத் தருகிறேன். வேண்டுமா?

இவரைப் பார்ப்பதற்கு உள்ளே கூடு எடுக்கும் தொழிலாளியைப்

போல் இருக்கிறார். ஒன்றும் சொல்லாமல் இருக்கவே மீண்டுமொரு முறை சொல்கிறார். வேண்டுமானால் நீங்கள் சரக்கை ஒருமுறை பார்த்துவிட்டுச் சொல்லுங்கள் என்று சொன்னவர் தன் கடைசிச் சொல்லை அழுத்தி ஆங்கிலத்தில் சொல்கிறார்.

ஒரிஜினல்.

குகை வாயிலைத் திரும்பிப்பார்க்கிறேன். லயாங்-லயாங் குருவிகள் அனைத்தும் உள்ளே புகுந்து கொண்டிருக்கின்றன.

அவை தம் கூட்டைத் தேடித்தானே செல்கின்றன?

சுறுக்கென்

காட்டுமனிதர்கள் இன்றைக்கும் காலையிலேயே சுறுசுறுப்பாகி விட்டார்கள். கொஞ்சநாட்களாக இவர்களோடு பொழுது நன்றாக நகர்கிறது. உணவுமேசையில் அமர்ந்திருந்தால் போதும். இவர்களின் நடவடிக்கை ஒவ்வொன்றையும் உற்றுக் கவனித்துக் கொண்டிருக்க முடிகிறது. உணவுக்கூடத்தை ஒட்டி சரிந்திறங்கும் பாதை, ஓடைக் கரையில் சென்றுமுடிகிறது. அவ்வோடையின் இரு கரைகளிலும் கடம்ப மரங்கள் வளர்ந்து நிற்கின்றன. இவர்களுக்கு இக்கடம்ப மரம் மிகவும் பிடித்த மரம். அதன் கனிகளைப் பறித்துண்ணத் தான் வந்திருக்கிறார்கள். இது கடம்ப மரத்தின் கனிப்பருவம். மரங்கள் முழுக்கப் பந்து பந்தாய் மஞ்சள்நிறக் கனிகள் கனிந்திருக்கின்றன. இவர்கள் இக்கனிகளைப் பறித்துண்ணும் அழகே தனி. கீழ்க்கிளையில் தன்னிரு கால்களையும் பரப்பிக்கொண்டு மேல்கிளையைத் தம் கைகளால் பற்றிக்கொள்கிறார்கள். இவர்களின் கால்கள் குட்டையாக இருக்கின்றன. ஆனால் கைகள், கால்களைவிட இருமடங்கு நீளம். இருகைகளையும் அகல விரித்தால் எப்படியும் இருமீட்டர் நீளமாவது இருக்கும். வலுவும் அதிகம். மேல்கிளையைப் பிடித்துக்கொண்டிருந்த கைகளிலொன்றை விடுவித்து அக்கையால் கனிகளைப் பறித்து உண்ணுகிறார்கள்.

ஒரு கிளையின் கனிகளை உண்டு முடித்தவர் அடுத்த கிளைக் கனிகளைப் பார்க்கிறார். அங்கும் போக நினைக்கிறார். முதலில் வலதுகால், வலதுகையைப் பயன்படுத்தி அடுத்த கிளையைப் பற்றிக் கொண்டு பிறகு இடதுகையையும் கொண்டுவந்து புதிய கிளையைப் பிடித்துக்கொள்கிறார். இறுதியாக இடதுகாலும் வந்துசேர முற்றிலும் புதிய கிளைக்கு மாறிவிடுகிறார். கிளைக்குக் கிளை மாறுவதற்குதான் இம்முறை. மரத்துக்கு மரம் தாவ இதைவிட எளிதான முறையும் உண்டு. முதலில் மரத்தின் மேல்கிளைக்கு ஏறிய பிறகு அக்கிளையின் நுனிநோக்கி நகருவார். அப்போது அவருடைய எடைகாரணமாக அக்கிளை பக்கத்து மரம் நோக்கி மெல்ல வளையும். அப்படி அது சரியாக வளையாவிட்டால் அக்கிளையை இரண்டு ஆட்டு ஆட்டி வளைக்கச் செய்கிறார். அப்படி அக்கிளை வளைந்து பக்கத்து மரத்தை நெருங்கியவுடன் ஒரே தாவு.

ஒரு குழுவாகத்தான் இவர்கள் வந்திருக்கிறார்கள். இதில் ஒரு தாயும் குட்டியும் வேறு இருக்கிறர்கள். இதோ மரத்திலிருந்து அத்தாய் உணவைப் பறிக்கிறார். அதைக் குட்டிக்குக் கொடுக்கப்போகிறார் என்று நினைத்துக் கொண்டிருக்கையில் அதைக் குட்டிக்குக் கொடுக்காமல் தானே வாயில் போட்டுக்கொள்கிறார். பாவம் அக்குட்டி. அது தாயின் வாயை ஏக்கத்தோடு பார்த்துக்கொண்டிருக்கிறது. தாயோ அக்குழந்தையை ஒரு பார்வை பார்த்துவிட்டு அலட்டிக்கொள்ளாமல் வாயை நன்றாக மென்றுகொண்டிருக்கிறார். ஏன் இப்படி நடந்து கொள்கிறார்? மென்று தின்று கூழாகிவிட்ட உணவை அத்தாய் இப்போது தன் கையில் எடுக்கிறார். இதை என்ன செய்யப்போகிறார் என்று நினைத்துக் கொண்டிருக்கையில் அதைத் தன் குட்டிக்கு ஊட்டி விடுகிறார். அடடா, நாம்தான் தப்பாகப் புரிந்துகொண்டோமா? அதை ஆம் என்று ஆமோதிப்பதுபோல பக்கத்துக் கிளையை ஒருவர் ஒருகையால் மட்டும் பிடித்துத் தொங்கியபடியே ஊ...ஊ...ஊ...ஊ... என்று அடித்தொண்டையில் கத்துவதுபோல் கத்திக்கொண்டிருக்கிறார். இங்கே பாரப்பா, இந்த ஓராங் ஊத்தான்கூட மெயாகன்னா வரப்போகிறார் என்று எவ்வளவு மகிழ்வாய் கத்துகிறது என்கிறார் ஆண்ட்ரூஸ்.

காலையிலிருந்து ஆண்ட்ரூஸ் மட்டுமல்ல மொத்த முகாமே குதூகலமாக இருக்கிறது. சிரிப்பும் கும்மாளமும் ஓயவில்லை. அவர்களின் கொண்டாட்டத்தை ரசித்துக் கொண்டிருக்கிறேன். முகாமுக்குச் சமையல் பணிக்காக ஒரு பெண் வரப்போகிறார். அதற்காகத்தான் இத்தனை ஆர்ப்பாட்டம். காலை ஏழுமணிக்கெல்லாம் பசியாறிவிட்டுச் சாலையமைக்கும் பணிக்குச் சென்றுவிடும் எவரும் இன்னும் போகவில்லை. இன்று நகரிலிருந்து எரிபொருளும் உணவும் பிற பொருட்களும் வரவிருப்பதால் எல்லாவற்றையும் இறக்கி வைக்க ஆட்கள் தேவைப்படுவார்கள்.

எங்களைப் பொறுத்தவரை சமையல் ஆள் வருவது நல்வாய்ப்பு. நிறுவனப் பணியாளர்களாக இருந்த நால்வரும்தான் இதுவரை ஆள் மாற்றி சமைத்துக்கொண்டிருக்கிறோம். இனி இத்தொல்லையில்லை. முதன்முதலாக இம்முகாமுக்கு ஒரு பெண் வருகிறார். இங்கு எல்லோருமே இதுவரை ஆண் பணியாளர்கள்தாம். அதனால் எல்லோரும் கிட்டதட்ட சரக்குக் கப்பல் பணியாட்கள் போலப் பெண்ணையே காணாது தவித்துப் போயிருக்கின்றனர். பொதுவாகப் பணிமுடிந்து திரும்பியபிறகு மாலையில் குளிக்கும் வழக்கமுடையவர்கள்கூட இன்று காலையிலேயே குளித்துமுடித்து ஆயத்தமாகியிருக்கின்றனர். முதலில் இந்த நாயகனைப் பாருங்கள் என்று கேலி செய்கிறார் ஆண்ட்ரூஸ். அந்நாயகன் மாத்தா. அவனது கோலத்தைப் பார்த்ததும் அனைவரும் சிரித்து விடுகின்றனர்.

மாத்தா 'கொக்கியாள்' பணி செய்யும் இளைஞன். பதினெட்டு வயது. பொதுவாக எல்லோரும் முகாமை விட்டு நகருக்குப் போகும் போதே புத்தாடை அணிவது வழக்கம். ஆனால் இப்போது மாத்தா புத்தாடை அணிந்து, நறுமணத் தைலம் பூசி நின்றுகொண்டிருக்கிறான். இதில் கண்ணுக்குக் குளிர்க்கண்ணாடி வேறு. இனிமேல் எல்லோரும் மாத்தாவிடம் தோற்றுப்போய்விட வேண்டியதுதான். எல்லோரும் போட்டியிலிருந்து விலகி விடுங்கள் என்று ஆண்ட்ரூஸ் சொல்வதை அப்படியே தீவிரமாக எடுத்துக்கொண்ட மாத்தாவும், 'ஆமாம், இனி நான் கொக்கியாள் வேலை பார்க்கப்போவதில்லை. இனி நான்தான் அன்னாவுக்கு உதவியாள்' என்கிறான். அன்னாவா? அது யாரது என்கிறேன்.

அதுதான் யொகன்னாவின் செல்லப்பெயர். அப்படித்தான் நான் இனி கூப்பிடுவேன். மாத்தா இப்படிப் பதில் சொன்னதும் சிரிப்பு குவிகிறது. மாத்தா காலையிலேயே எழுந்து யொகன்னா தங்கப் போகும் அறையைச் சுத்தம் செய்துவைத்தது யாருக்காவது தெரியுமா? ஆண்ட்ரூஸ் இப்படிச் சொன்னதும் மீண்டும் சிரிப்பு. அது சரி. ஆளே இன்னும் வரவில்லை. அதற்குள் இவர்களுக்கு வரப்போகும் பெண்ணின் பெயரையெல்லாம் எப்படித் தெரிந்து வைத்திருக்கிறார்கள் என விசாரிக்கப் பக்கத்து முகாமில் கேட்டுத் தெரிந்துகொண்டதாகச் சொல்கிறார்கள். பக்கத்து முகாமில் இருப்பவர்களுக்கு இங்கு வரப் போகும் பெண்ணின் பெயர் எப்படித் தெரியும்? அங்கு சமையல் பணி செய்யும் பெண்ணின் தோழிதான் இவர் என்கிறார்கள். என்னா விபரமாக இருக்கிறார்கள்? திடீரென்று மாத்தாவின் குரல் அலறுகிறது. அன்னா வந்தாச்சு, அன்னா வந்தாச்சு.

செம்பனைத்தோட்டப் பக்கத்துக் குன்றின் சரிவிலிருந்து வண்டிகள் இறங்கிவரும் ஒலி கேட்கிறது. ஒரு டீசல் வண்டி உட்பட மூன்று வண்டிகள் வந்து சேர்கின்றன. அவ்வண்டிகளோடு சில புதிய பணியாளர்களும் வந்து சேர்கின்றனர். அவர்களை யார் பார்த்தது? ஆவலோடு எதிர்பார்க்கும் யொகன்னா எங்கே? யொகன்னா இறங்குகிறார். எல்லோருடைய பூரித்த முகங்களும் காற்று போத்துக்கொண்டது போல வடிந்து இறங்குகின்றன. உலக அழகி அளவுக்கும் அவரவருக்குப் பிடித்த நடிகைகள் அளவுக்கும் கற்பனை செய்து வைத்திருந்த உருவம் உடைந்து நொறுங்கிவிட்ட துயரம் ஒவ்வொரு முகத்திலும் தெளிவாகவே தெரிகிறது. மண்நிற உடையில் களைத்த முகத்தோடும் பயணக் களைப்போடும் வந்திறங்கும் இப்பெண் இவர்கள் வடித்திருந்த மிகைக் கற்பனை உருவத்துக்குப் பொருத்தமாக இருக்கவில்லை. எல்லோருடைய கனவுக் கன்னிகளும் ஒரே நேரத்தில் இறந்து போனதை நினைத்துச் சிரிப்பு வந்துவிடுகிறது.

எல்லாம் முடிந்து உணவு மேசைக்குச் சென்றமர்கிறோம். அதற்குள் செய்து முடித்திருந்த பீசாங் கோரிங்கையும், தேநீரையும் கொண்டுவந்து வைக்கிறார் யொகன்னா. அந்தப் பொறுப்பும் சுறுசுறுப்பும் உடனே ஓமருக்குப் பிடித்திருக்க வேண்டும். மனம் நிறைவான குறிப்பு முகத்தில் தெரிகிறது. அப்போதுதான் திடீரென அக்குரல் கேட்கிறது. என்ன எல்லோரும் உட்கார்ந்து இருக்கிறீர்கள்? விறுவிறுவென்று வேலைக்குக் கிளம்புங்கள். சம்பளம் வாங்குகிறீர்கள் அல்லவா?

இது யாரப்பா இவ்வளவு பொறுப்பாய்ப் பேசுவது எனத் திரும்பிப் பார்த்தால் மாத்தா. தன் புது மாப்பிள்ளை வேடத்தைக் கலைத்து விட்டுப் பழைய ஆடையை அணிந்துகொண்டு மீண்டும் கொக்கி யாளாக மாறி முகமெல்லாம் வாடி நொந்து போயிருந்த கோலத்தைக் கண்டதும் எல்லோருக்கும் சிரிப்பு கொப்பளித்துவிடுகிறது. வாயில் குடித்துக்கொண்டிருந்த நீர் புரையேறித் துப்பிவிடுகிறேன். பாவம் மாத்தா. இருப்பதிலேயே அதிக துயரம் மாத்தாவுக்குத்தான். பின்னே எதிர்பார்த்த கனவுக்கன்னி தன்னைவிட நாலைந்து வயது மூத்தவராக வந்திறங்கினால் அவனுக்கு எப்படியிருக்கும்?

மாத்தா சொன்னதில் என்ன நகைச்சுவை இருக்கிறது? அதற்கு ஏன் இவர்கள் எல்லோரும் இப்படிச் சிரிக்கிறார்கள் என ஒன்றும் புரியாமல் யொகன்னா விழித்துக்கொண்டே நிற்கிறார். அப்படி யொகன்னா முழித்து நின்ற கோலத்தைப் பார்த்ததும் சிரிப்பு இன்னும் கூடுகிறது. சிரித்தவாறே ஒவ்வொருவராய்க் கலைந்து விலகுகிறார்கள். ஓமர் மெல்லிய குரலில் சொல்கிறார். விரைவில் இந்த யொகன்னா அழகி ஆகிவிடுவாள் பார்.

எப்படிச் சொல்கிறீர்கள் என்று கேட்க அதே மெல்லிய குரலிலேயே பதில் சொல்கிறார். எல்லா முகாமிலும் நடக்கும் கதைதான். இக்காட்டில் இப்பெண்ணை விட்டால் வேறு எந்தப் பெண் இருக்கிறார்? அப்புறம் இந்தப் பெண் அழகியாகாமல் இருக்க முடியுமா?

இது உண்மைதான். எல்லோரும் பணிக்குக் கிளம்பிவிட்டார்கள். இப்போது எங்கள் முகாம் பயன்பாட்டுக்கென புதிய டொயோட்டா ஹைலக்ஸ் வந்திருக்கிறது. அதன் திறந்த பின்பக்கத்தில் எல்லோரும் ஏறி நின்றுகொள்கின்றனர். ஓமரும் நானும் முன்புறம் சென்றமர்ந்து கதவைத் தாளிட்டுக்கொள்கிறோம். வண்டி புறப்படும் நேரம் திடீரென்று மாத்தா, யொகன்னாவைப் பார்த்து கத்தும் குரல் கேட்கிறது. அக்கா, பை... பை...

வண்டியே பெருஞ்சிரிப்போடு நகர்ந்தாலும் இதற்கும் ஏன் சிரிக்கிறார்கள் என யொகன்னா அங்குக் குழம்பிக்கொண்டிருக்கலாம். உள்ளே சென்று சேர்ந்ததுமே மாத்தா அனைத்தையும் மறந்ததுபோல் உடனே கொக்கியாளாக மாறிவிடுகிறான். டிராக்டர் ஓட்டுநரின்

உதவியாள்தான் கொக்கியாள். வெட்டுமரப் பணியில் ஈடுபடும்போது புல்டோசருக்கு 'டிராக்டர்' என்று பெயர். வெட்டப்பட்ட கட்டைகளைக் காட்டுக்குள்ளிருந்து இழுத்து வருவதால்தான் இந்தப் பெயர். இவ்வேலைக்குத் தகுந்தாற்போல் இந்தப் புல்டோசர் சற்று மாற்றி அமைக்கப்பட்டிருக்கும். இதன் முன்பக்கம் உள்ள அந்தப் பெரிய பிளேடு அப்படியேதான் இருக்கும். ஆனால் பின்பக்கத்தில்தான் சிறிய மாற்றம். பின்புறத்தில் பெரிய தானியங்கி உருளை பொருத்தப்பட்டிருக்கும். அதில் நீண்ட வலுவான இரும்பு வடக்கயிறு சுருட்டி வைக்கப்பட்டிருக்கும். அதன் முனையில் பெரிய கொக்கி ஒன்று இணைக்கப்பட்டிருக்கும். அதைக் கொண்டுதான் வெட்டப்பட்ட கட்டைகளை மாட்டி இழுத்து வெளியே கொண்டுவர வேண்டும். அந்தக் கொக்கியை இழுத்து மாட்டும் பணிதான் கொக்கியாளின் பணி.

இன்னமும் சாலை அமைக்கும் பணி நடக்கிறது. இதைக் கவனித்துக் கொண்டிருப்பது சலிப்பூட்டுகிறது. எதேச்சையாய் பார்வை கவிகையை நோக்கி நிமிர்கிறது. என்ன அது? சுமார் பத்து மீட்டர் உயரம் இருந்த சிறுமரம் ஒன்றிலிருந்து காற்றில் நீச்சல் அடிப்பது போல 'எஸ்' வடிவத்தில் பட்டை நாடா நெளிந்து பறந்துகொண்டிருக்கிறது. அந்தரத்தில் பறந்த அது சுமார் முப்பதடி இடைவெளியில் இருந்த அடுத்த மரத்தின் கிளைக்குத் தாவி பின் அதில் சுற்றிக் கொண்ட போதுதான் அடையாளம் தெரிகிறது. பறக்கும் பாம்பு. சறுக்கிகளுள் ஒன்று. என்னவொரு அரிய காட்சி. மேலே கவனிப்பதைப் பார்த்துக் கொண்டே அருகே வந்த ஓமர், உலகிலேயே பெரிய காடு எதுவென்று உனக்குத் தெரியும்தானே எனக்கேட்டவாறே அமர்கிறார்.

தெரியுமே. அமேசான் காடுகள் என்றதும் ரொம்ப சரி என்று சொல்லிவிட்டுத் தொடர்கிறார். ஆனால் அந்த அமேசான் காட்டுக்குக் கூட இல்லாத சில சிறப்புகள் இக்காட்டுக்கு உண்டு. உலகில் உள்ள ஒவ்வொரு காடும் ஏதோவொரு வகையில் சிறப்புடையதாக இருக்கும். அவ்வகையில்தான் இக்காட்டுக்கும் சில சிறப்புகள் இருக்கிறது. இந்த மரங்களை எடுத்துக்கொள்ளேன். உலகிலேயே இவ்வளவு உயரமான மரவகைகள் அமேசான், ஆப்பிரிக்கக் காடுகளில்கூட கிடையாது. இங்குள்ள மரங்கள் பெரும்பாலும் டம்மர் மரங்கள். டம்மர் என்றால் பிசின். பிசின் வகை மரங்கள் அதிகம் இருப்பதால் இந்தச் சறுக்கிவகை உயிரினங்களும் இங்கு வாழ்கின்றன. இவ்வளவு எண்ணிக்கையிலான சறுக்கிகளைப் பிசின் மரங்கள் அதிகமுள்ள இந்தத் தென்கிழக்காசியாவைத் தவிர உலகில் வேறெங்கும் காணமுடியாது. அதிலும் போர்னியோவில் இவற்றின் வகைகள் மிக அதிகம். மற்ற காடுகளில் அத்தி மரவகைகள் அதிகமிருக்கும். அதில் பழங்களும் நிறைய கிடைக்கும். ஆனால் இம்மரங்களில் பழங்கள் அதிகமிருக்காது. எனவே உயிரினங்களுக்கான உணவும் குறைவு. இதனாலேயே பிறகாடுகளுடன்

ஒப்பிடும்போது இங்கு பூச்சியினங்களும் குறைவு என்பார்கள். இப்படி பூச்சியினங்கள் குறைவாக இருப்பதால்தான் நாம் எல்லாம் இங்கே இருக்கிறோம்.

நாம் இங்கிருப்பதற்கும் பூச்சியினங்களுக்கும் என்ன தொடர்பு?

பூச்சியினங்கள் குறைவாக இருப்பதால்தான் இம்மரங்கள் அதிக சேதமின்றி இருக்கின்றன. அதனால்தான் இதற்குச் சந்தையிலும் மதிப்பு அதிகம். ஆகவே இதை வெட்டியனுப்புவதற்காக நாமும் இங்கே இருக்கிறோம். பின்னே இக்காடுகளைக் காப்பதற்காகவா இங்கே வந்திருக்கிறோம் எனச் சொல்லிவிட்டுச் சிரித்தவர் இங்கு பூச்சியினங்கள் குறைவாக இருப்பதாலேயே இங்குள்ள பூச்சியுண்ணிகளுக்கு உணவுப்பற்றாகுறை இருக்கிறது. எனவே அவை உணவுக்காகப் பறந்து தேடியலையவேண்டிய அவசியமும் இருக்கிறது. இவ்வளவு உயரமான ஒருமரத்தில் சிரமப்பட்டு உச்சிக்கு ஏறி உண்டுமுடித்த பிறகு கீழேயிறங்கி மறுமரத்தின் உச்சிக்குத் திரும்பவும் உணவைத் தேடி ஏறுவது எவ்வளவு சிரமம்? ஆனால் இயற்கை கருணைமிக்கது. எனவே இவ்வுயிரிகளுக்கு இவ்வளவு சிரமம் இருக்கக்கூடாது என்பதற்காக இவைகளை இப்படிச் சறுக்கிகளாக மாற்றிவைத்திருக்கிறது. மரத்துக்கு மரம் இறங்கியேற வேண்டிய அவசியமில்லாமல் அப்படியே தாவிப் பறந்து போய்விடலாம்.

சறுக்கிகளில் இதுவரை தவளை, பாம்பு என இருவகையைப் பார்த்துவிட்டேன். பீதிலை எப்போது பார்க்கப்போகிறேன் என்று தெரியவில்லை என்கிறேன்.

அதற்கென்ன? இனிமேல்தான் ஒவ்வொரு மரமாய் வெட்டிச் சாய்க்கப் போகிறோமே. எல்லாவற்றையும் பார்த்துவிடலாம்.

ஓமரின் குரலில் தொனிப்பது கேலியா? இல்லை, துயரமா?

**ஒராங் ஊத்தான்**

மாலையில் ஓமரோடு சேர்ந்து அலுவலகத்திலிருந்து அனுப்பப்பட்டிருந்த நாளிதழ்களையும், சஞ்சிகைகளையும் மேய்ந்துகொண்டிருக்கிறேன். எல்லாத் துறைகளிலும் விரிவான அறிவைக் கொண்டிருக்கும் ஓமர் தேர்ந்த படிப்பாளி. ஆனாலும் இன்றவர் மனம் படிப்பதில் ஒட்டவில்லை. நாளிதழ்களை மடித்து வைத்தவர் நாளைப் பங்கலான் வீட்டு வேலை முடிந்துவிடுமா எனக் கேட்க, முடிந்துவிடும் என்கிறேன்.

ஓமர் இரண்டாவது முகாம் அமைக்கும் வேலையில் ஈடுபட்டிருக்கிறார். எங்களுடைய சாலை இப்போது எங்களுக்குரிய காட்டுப் பகுதியின் எல்லையைத்தொடும் நிலையில் இருக்கிறது. நாளும் அந்த இடம்வரை இங்கிருந்து ஆட்களை அனுப்பிவைத்து, அழைத்துவருவது நேரத்தை விழுங்குவதாக இருக்கிறது. மேலும் எங்களுக்குரிய பகுதியின்

எல்லைகளை வரையறுக்க வேண்டிய பணியில் ஈடுபட்டிருக்கும் ரேஞ்சர் குழுவுக்கும் அங்கிருப்பதுதான் வசதி. எனவேதான் இரண்டாம் முகாம். அதேசமயம் பங்கலானிலும் காவலர் குடியிருப்புக் கட்ட வேண்டியிருந்ததால் ஓமரின் சுமையைப் பகிர்ந்துகொண்டிருக்கிறேன்.

பங்கலான் என்பது மரக்கட்டைகளை முகாமிலிருந்து எடுத்துச் சென்று மொத்தமாக இருப்பு வைத்துக்கொள்ளும் பெருந்திட்டம். ஆற்றங்கரையில் அது அமைந்திருக்கும். அப்போதுதான் கட்டைகளை ஸ்கவ் எனும் தட்டைப் படகிலோ ராக்கிட் மூலமாகவோ அங்கிருந்து ஏற்றுமதிக்கு அனுப்ப வசதி. கிளபத்தாங்கன் ஆற்றங்கரையில்தான் எங்கள் பங்கலான் இருக்கிறது. மறுநாள் பங்கலான் வீட்டின் இறுதிக் கட்ட வேலை. சில்லறை வேலைகள் மட்டும் எஞ்சியிருந்ததால் அவ்வேலையை ஓரிரு மணி நேரத்தில் முடித்துவிட்டு அங்கிருந்து திரும்புகிறோம். வழியில் வீட்டிலேயே இறங்கிக்கொண்டு வண்டியை ஆட்களோடு உள்ளே அனுப்பிவிடுகிறேன். எப்படியும் இன்னும் இரண்டு மணிநேரத்தில் அங்கிருந்து எல்லோரும் உணவுக்கு வந்து விடுவார்கள். அப்போது சேர்ந்து திரும்பிச் சென்றுவிடலாம். கொஞ்சம் எழுத்துப்பணி மீதமிருக்கிறது.

நாவெல்லாம் வறண்டிருந்ததால் குசினிக்குள் நுழைகிறேன். இடப் பக்கம் யொகன்னா நிற்பது தெரிகிறது. வலப்பக்கம் இருந்த கேத்தலில் இருந்து நீரை எடுத்துப் பருகி முடிக்க தாகம் அடங்கி நெஞ்சு குளிர்கிறது. இன்று என்ன சமையல் என்று கேட்டவாறு யொகன்னா பக்கமாகத் திரும்புகிறேன். ஆ..ஆ..ஆ...

விழிகளின் கருவிழி பிதுங்கி எங்கோ உருண்டு விழுந்துவிடுகிறது. கால்களில் வேர் இறங்கி நிலத்துக்குள் எங்கோ ஆழத்துக்குள் பதுங்கிக் கொள்கிறது. டிக் டிக் கூட அடங்கிவிடுகிறது. எதிரே... என் எதிரே நின்றுகொண்டிருப்பது யொகன்னா அல்ல. ஓராங் ஊத்தான்!

நல்ல முதிர் குரங்கு. சம உயரம் இருக்கிறது. ஆனால் பருமனோ இருமடங்கு. அதன் தோள், முதுகு, மார்பென உடல்முழுக்க கரும் செம்பட்டைநிற முடிகள் கூந்தலைப்போல் அடர்ந்து சடையாய்த் தொங்குகின்றன. தாடையிலும் அடர்ந்த குறுந்தாடி. தலையிலிருந்து அடர்ந்து தொங்கிய முடி காதை மறைத்திருக்கிறது. இருவருக்கு மிடையே வெறும் நான்கடி தொலைவுகூட இருக்காது. அது கையை நீட்டி ஆத்திரத்தில் ஓர் அறைவிட இந்தத் தொலைவே போதுமானது. ஆனால் உடனடியாக அப்படி ஒரு நிகழ்வு நடந்துவிடாதபடிக்கு அது வேறொரு செய்கையில் ஈடுபட்டிருக்கிறது. கையில் வெள்ளைச் சர்க்கரை இருக்கும் நெகிழிப் போத்தலை வைத்திருக்கிறது. அதை முழங்கைக்குள் அடக்கி உடலோடு சேர்த்து அணைத்திருக்கிறது. மூடி திறக்கப்பட்டிருக்க மற்றொரு கையால் சர்க்கரையை அள்ளித் தின்றுகொண்டிருந்ததன் அடையாளமாக விரல்களிலும் தாடியிலும்

துகள்கள் ஒட்டியிருக்கின்றன. என் வேலையைக் கெடுத்துவிட்டாயே என்பதுபோல முறைத்தபடி நிற்கிறது. அச்சத்தில் அசைவற்று நிற்கிறேன். அதுவும் அசையவில்லை. இன்னும் முறைத்தபடியே நின்றுகொண்டிருக்கிறது. கையில் வைத்திருந்த சர்க்கரைகூட அப்படியே இருக்கிறது. எவ்வளவு நேரம் இப்படியே நிற்க முடியும்? யாராவது ஒருவர் ஆட்டத்தை முடித்து வைக்கத்தானே வேண்டும்?

'படார்' என்று ஒரு சத்தம்.

இந்த சர்க்கரையைக்கூட ஒழுங்காகத் தின்னவிடமாட்டேன் என்கிறானே என்பதுபோல அப்போத்தலை ஆத்திரத்தில் தரையில் போட்டு உடைத்திருந்தது. இப்போதுதான் நின்றிருந்த டிக் டிக் டிக் மீண்டும் கேட்கிறது. கால்களிலிருந்த வேரும் அறுந்துவிடுகிறது. அங்கிருந்து ஓரே தாவாகத் தாவி அறைக்குள் புகுந்து கதவைச் சாத்திக்கொள்கிறேன். இந்நேரம் போயிருக்குமா? கால்மணி நேரம் வரை எந்த ஒலியும் கேட்கவில்லை. இப்போது கேட்கவே எட்டிப் பார்க்கிறேன். ஓடையிலிருந்து துணிகளைத் துவைத்தெடுத்துக் கொண்டு யொகன்னா திரும்பியிருப்பது தெரிகிறது. யொகன்னாவை அழைத்துச் சொல்லுகிறேன். அந்தக் குசினியில் ஒராங் ஊத்தான் ஒன்று நின்றுகொண்டிருந்தது. அது போய்விட்டதா என்று பாருங்களேன்.

சொல்லியிருக்கக் கூடாதோ? ஒராங் ஊத்தான் என்ற வார்த்தையைக் கேட்டதுமே யொகன்னாவின் பார்வை குசினிப்பக்கம் போனதா என்றுகூடத் தெரியவில்லை. ஓர் அலறல் மட்டும் கேட்கிறது. துணிக் கூடை கீழே விழுகிறது. அடுத்து அவருடைய அறைக்கதவு தாளிட்டுக் கொள்ளும் ஒலிதான் கேட்டது. பிறகென்ன? ஓமரும் பிறரும் சாப்பிட வரும்வரை அவரவர் அறைகளிலேயே ஒளிந்திருந்தோம். வந்தவுடன் அன்று முழுவதும் ஒராங் ஊத்தான் கதைதான் ஓடிக்கொண்டிருக்கிறது. சரியான சிரிப்புக்கதை.

பேய்க்குரங்கு

இரண்டாவது முகாம் அமைக்கப்பட்டு ஆட்கள் குடியேறிவிட்டிருந்தனர். சின்ன முகாம். கொஞ்சநாளில் பிரிக்கப்படவேண்டிய முகாம் என்பதால் சிறியதாக அமைக்கப்பட்டிருக்கிறது. ரேஞ்சர் குழுவினர் முதலில் அங்கு சென்று தங்கியுள்ளனர். நிறுவனத்துக்குப் புது ரேஞ்சர் வந்துள்ளார். விபராத்தோ. நெடிய கனத்த உருவம். இந்த உடலை வைத்துக்கொண்டு எப்படி வெட்டிக்கழிக்கப்போகிறார் என்று நினைத்தால் உடல்தான் அப்படி. வேலையில் புகுந்தவுடன் மனிதர் வெகு சுறுசுறுப்பு.

காட்டில் புல எண்களுடன் எங்களுக்கு வழங்கப்பட்டிருந்த நிலத்தின் எல்லைக்கற்களைக் கண்டுபிடித்தவுடன் அவருடைய பணி

தொடங்கிவிடுகிறது. முதலில் இப்பகுதியின் வெளிப்புற எல்லைக் கோட்டினை அமைக்கவேண்டும். அதை முடித்ததும் கான் துறையினர் நேரில்வந்து ஆய்வுசெய்து எல்லை சரிதானாவென்று உறுதிசெய்த பின்னரே மரம் வெட்ட முறையான அனுமதியை வழங்குவர். அப்படி வெளிப்புற எல்லைகளை வகுக்கும் போது அந்த எல்லைக்கோட்டில் சாயம் பூசவேண்டும். நாங்கள் வெளிப்புற எல்லைக்குப் பளிச்சிடும் மஞ்சள் நிறத்தைத் தேர்வு செய்திருந்தோம். மொத்த நிலப்பகுதியையும் நிர்வாகத்துக்குத் தோதாகப் பல தொகுதிகளாகப் பிரிக்கவேண்டும். அப்படிப் பிரிக்கும் ஒவ்வொரு தொகுதியின் எல்லைக்கோடுகளுக்கும் சிவப்பு வண்ணம் பூசுவது என்று முடிவாகியிருக்கிறது.

மழை வரும் போலிருக்கிறது. அப்படியும் ரேஞ்சர் குழு வெளி எல்லையை அடையாளமிட நுழைகிறது. ஆறுபேர் கொண்ட அக்குழுவில் ஆண்ட்ருசும் இணைந்திருக்கிறார். முதல்நாள் ஓமரும் அவர்களோடு உடன்சென்றதால் ஒட்டிக்கொண்டு உள்ளே நுழைந்தாகிவிட்டது. முன்னே இருவர் வெட்டிக்கழித்தபடி செல்ல விபராத்தோ திசை காட்டியுடன் கட்டளைகளைப் பிறப்பித்துக்கொண்டே பின்னால் செல்கிறார். இருவர் அளவுநாடாவைக்கொண்டு அளந்தபடியும் ஆங்காங்கே குறியீட்டுக்காக வெட்டியபடியும் வருகின்றனர். அப்படி மரங்களின் பட்டையை வெட்டிக் குறியிட்ட இடங்களில் கடைசியில் வந்தவர் மஞ்சள்வண்ணத்தைப் பூசிக்கொண்டே வருகிறார். எல்லைக் கோடானது இருவர் தாராளமாக நடக்குமளவுக்கு அகன்று இருக்கிறது.

நண்பகல் நெருங்கியதும் இருட்டிக்கொண்டு வருகிறது. இனி வீடு திரும்பவேண்டியதுதான். காற்று பலத்தச் சத்தத்துடன் வீசத் தொடங்கு கிறது. நாங்கள் முதலாம் முகாமுக்குக் கிளம்பவேண்டும். சீக்கிரம் போகவேண்டும். எந்நேரமும் மழை வந்துவிடலாம். மழை வந்தபிறகு வண்டியை ஓட்டிச்சென்றால் சாலை சேதமாகிவிடும். புதிய ஓட்டுநரான ரோஸ்லானுக்கு இருபத்து இரண்டு வயது. இளமையின் வேகம் வண்டி யில் தெரிகிறது. வழியிலேயே தூற்றல் தொடங்கிவிட்டிருந்தாலும் மழைக்கு முந்தியே வீட்டை அடைந்துவிடுகிறோம். கடும்காற்றுடன் கூடிய பெருமழை பெய்யத்தொடங்குகிறது.

மழை என்றாலே முகாம் வீட்டில் ஒரு வேலை சுறுசுறுப்பாகத் தொடங்கிவிடும். அது குடிநீர் சேமிப்பு. சமையலுக்கும் குடிப்பதற்கும் மழைநீர்தான். தகர நீர்த்தொட்டியிலும் பீப்பாய்களிலும் சேமிக்கப் படும். எல்லாப் பீப்பாய்களிலும் படிகாரக் கற்கள் போடப்பட்டிருக்கும். தகரக்கூரையில் விழுந்துவரும் நீரிலிருக்கும் தூசுகளையும் அழுக்கு களையும் இப்படிகாரக் கற்கள் அடியில் இழுத்துப் படியவைத்துத் தெளிவான நீராக மாற்றிவிடும். மழைபெய்தவுடன் ஏறக்குறைய எல்லோரும் சுறுசுறுப்பாக வேலையில் இறங்குகிறோம். அழுக்குகள் இருக்கும் என்பதால் முதல் கால்மணி நேர மழையைப் பிடிக்காமல்

அப்படியே ஓடவிட்டு நீர் தெளிவானதும் தகரக்கூரையோடு பொருத்தப் பட்டிருந்த வாரி நீர்த்தொட்டியோடு இணைக்கப்படும். அதில் நீர் நிரம்பியவுடன் வாரியை நகர்த்தி பீப்பாய்களை நோக்கி வைக்கிறோம். எல்லாப் பீப்பாய்களின் வாயிலும் வெள்ளைத்துணி கட்டியிருக்கின்றது. தூசு வடிகட்டி. ஒவ்வொரு பீப்பாயும் நிரம்ப அடுத்தடுத்த பீப்பாய். மழையில் நனைந்துகொண்டு குளிரை அனுபவித்தபடி மழைநீரைச் சேமிப்பது இனிமை. பத்துப் பீப்பாய்களுக்குமேல் சேமித்தாயிற்று. அடுத்த பீப்பாய் பாதி நிறைந்து கொண்டிருக்கும்போது மழை குறைகிறது. இதுபோதும். இருவாரத்துக்குமேல் தாங்கும். அதற்குள் அடுத்த மழை வந்துவிடும். உடைமாற்றித் தலையைத் துவட்டிக் கொள்கிறேன். குளிர்ந்த காற்று உடலை வருட கூதல் கூடுகிறது. இழுத்துப் போர்த்திக்கொண்டு படுக்கிறேன். கூரையோடு சட் சட் என மழைத்துளிகளின் உரையாடல். கன மழையில் நனைந்து கவிழும் இலைபோல் இமைகள் கவிழ்கின்றன.

காலையில் எழுந்துவந்து அக்கடைசிக் குடிநீர்ப் பீப்பாயை எட்டிப் பார்க்கிறேன். முக்கால்வாசிக்கு மேல் நிரம்பியிருக்கிறது. திரும்ப முனைகையில் அதைப் பார்த்துவிடுகிறேன். பீப்பாயின் ஓரத்தில் அதன் விளிம்பைப் பிடித்தபடியே தொங்கிக்கொண்டிருக்கிறது ஒரு விலங்கு. சாண் உயரம்தான் இருக்கும். மங்கிய பழுப்புநிறம். பொதுவான நிலையில் பொசுபொசுவென பொங்குமயிராக இருக்கவேண்டும். இப்போது நனைந்திருப்பதால் ஒட்டிக்கிடக்கிறது. பெரிய கண்களை உருட்டி அது பார்ப்பது கொஞ்சம் அச்சமாகக்கூட இருக்கிறது. முகத்துக்குச் சற்றும் பொருத்தமில்லாத பெரிய உருண்டைக் கண்கள். ஆனாலும் அது பயந்து போயிருப்பது கண்களில் நன்கு தெரிகிறது. என்ன விலங்கு இது? இப்படியொரு விலங்கை இதுவரை நிழற்படத்தில் கூடக் கண்டதில்லை. உருவமும் சிறியது. அடுப்பருகில் இருந்த பிடித்துணியை எடுத்துவந்து அந்தச் சிறிய உருவத்தின்மீது முழுவது மாகப் போர்த்தி இருகைகளாலும் அமுக்கிப்பிடிக்க அதனால் முண்ட முடியவில்லை. தன் அறையைவிட்டு இறங்கி வந்துகொண்டிருந்த யொகன்னாவிடம் ஒரு கயிற்றைக் கொண்டுவரச் சொல்கிறேன். வலிய நூல் கயிற்றை இருவருமாகச் சேர்ந்து அவ்விலங்கின் இடுப்பைச் சுற்றிக் கட்டுகிறோம். நீண்ட அக்கயிற்றின் மறுமுனையை மரத்தூணில் கட்டுகிறோம். துணியை விலக்கி அவ்விலங்கை விடுவித்ததும் அது ஒரே தாவாகத் தாவி அந்தத் தூணைப் பற்றிக்கொள்கிறது. அவ்விலங்கை நன்றாக உற்றுப் பார்ப்பதற்காக நெருங்கிச் சென்றபோது அது அருகிலிருந்த மற்றொரு தூணுக்குத் தாவுகிறது.

என்னவொரு பாய்ச்சல் அது? திகைப்பான பாய்ச்சல். ஒன்றல்ல இரட்டைத் திகைப்பு. இரு தூணுக்கும் இடையே உள்ள இடைவெளி ஐந்தடி இருக்கும். இச்சிறிய உருவமா அவ்வளவு தொலைவு

பாய்கிறது என்பது முதலாம் திகைப்பு. அடுத்த திகைப்போ அது பாய்ச்சலை நிகழ்த்திய முறை. ஒலிம்பிக் நீச்சல் போட்டிகளில் மேலே விசைப் பலகையிலிருந்து நீருக்குள் குதிக்கும் வீரர்கள் உடலை ஒரு முறுக்கு முறுக்கியபடியே பாய்வார்களே அதுபோல ஒரு தாவு. தன் நீண்ட கால்களைக்கொண்டு தாவியபோது உடலை முறுக்கிச் சுழற்றிய படியே தாவியது. அப்படித் தாவுவதற்கு நீள்விரல்கள் உதவ நீண்ட வாலோ உடல் அத்தாணோடு பொருந்திக்கொள்ள உதவுகிறது. இன்னும் நெருங்கிச் சென்றபோது அதற்குமேல் தாவ கயிற்றின் நீளம் போதவில்லை என்பதால் அதனால் நகரமுடியவில்லை. ஆந்தையை ஒத்த தன் கண்களை இறுக மூடிக்கொள்கிறது. வாலோ, குரங்குவாலின் அசல் குறுவடிவம். ஆனால் விரல்கள் பார்ப்பதற்கு தவளையினுடையது போலல்லவா இருக்கின்றன? அப்படி என்ன விலங்கு இது? ஒவ்வொரு வராய் எழுந்து வர வரக் கேட்கிறேன். எவருக்கும் தெரியவில்லை.

ஒரு டிராக்டர் ஓட்டுநர் மட்டும் இது எப்படிக் கிடைத்தது என்று வியப்புடன் கேட்டவர், பொதுவாக இவ்விலங்கு காட்டுக்குள்ளும் இலகுவாகக் காணக்கிடைக்காத விலங்கு. நேற்றைய பலத்த காற்றில் தான் தவறி இங்கு வந்திருக்கவேண்டும். இதன் பெயர் பினாத்தாங் அம்பாட்புலு அம்பாட் என்கிறார்.

நாற்பத்து நான்கு விலங்கு. இப்படி ஒரு பெயரா? வியப்பை அவர் உணர்ந்திருக்க வேண்டும். என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? இவ்விலங்கில் நாற்பத்து நான்கு வகையான விலங்குகளின் உறுப்புகள் இருக்கும். வேண்டுமானால் எண்ணிப்பாருங்கள் என்கிறார்.

எண்ணியும் பார்க்கிறேன். என்னதான் இவ்விலங்கின் உறுப்புகள் ஒன்றுக்கொண்டு மாறுபட்டு இருந்தாலும் ஏழெட்டு வேறுபாடுகளுக்கு மேல் எண்ண முடியவில்லை. இதன் பெயர் ஓமருக்குத் தெரிந்திருக் கலாம். அவர் எங்கே? அவர் ஓடைப்பக்கம் போயிருப்பது தெரிகிறது. பொதுவாகக் காட்டு விலங்குகளைப்பற்றி மரம் வெட்டுபவர்களுக்கு அதிகம் தெரியும். அவர்களில் ஒருவரான கரமிஞ்சன் வருகிறார். பார்த்துவிட்டுச் சொல்கிறார். இது 'கேரா ஹந்து'.

பேய்க்குரங்கா? ஒரு சாண் உயரமேயுள்ள விலங்கு எப்படிப் பேய்க்குரங்காக இருக்க முடியும்? ஒரு ஆள் நாற்பத்து நாலு விலங்கு என்கிறார். இவர் பேய்க்குரங்கு என்கிறார். இது அந்தப் பிளாண்டுச் பெயர் கதைபோல இருக்கிறதே? கரமிஞ்சன் நெருங்கிவந்து மெல்லிய குரலில் இதை இங்கு வைத்திருப்பது நல்லதல்ல துவான். இதை அவிழ்த்து விட்டுவிடுங்கள். இது பேய், பிசாசையெல்லாம் இங்கு அழைத்து வந்துவிடும் என்கிறார்.

இதற்குப் பதில் எதுவும் சொல்லத் தயாராக இல்லை. ஓமர் வரட்டும் ஆனால் அதற்குள் காடோ வருகிறார். காடோ 'டுகன்' பழங்கு

இனத்தைச் சேர்ந்தவர். பழங்குடி இனத்தவர் பெரும்பாலும் இவ் வேலைக்கு வருவதில்லை. இவர் கான்துறை அலுவலர் ஒருவரின் பரிந்துரையின் பேரில் நிறுவன ஊழியராகச் சேர்ந்திருக்கிறார். நல்ல உருட்டுக்கட்டான உருவம். தூங்கியெழுந்து அசைந்தபடியே வந்தவர் அவராகவே இவ்விலங்கைப் பார்த்துவிட்டு ஏதோ சொல்கிறார். 'டொண்டிரி, கிண்டிரி' என்பதுபோல் ஏதோ காதில் விழுகிறது. அம்மொழி புரியவில்லை. என்ன சொன்னீர்கள் காடோ? இதன் பெயரைச் சொன்னேன். டொண்டிரிக்குட். இதுதான் இவ்விலங்கின் டுசுன் பெயர்.

போதும். மறுபடியும் பெயர் விளையாட்டுத் தொடங்கிவிட்டது. மற்ற அனைவரும் காடோ கூறிய அப்பெயரைக் கேலியாக உச்சரிக்கத் தொடங்கியதும் அவர் சற்று சூடாகிவிடுகிறார். விளையாடாதீர்கள். இதுதான் இவ்விலங்கின் உண்மையான பெயர். அதுமட்டுமல்ல. இது கடவுளே இதற்குக் கொடுத்த பெயர். கடவுள் கொடுத்த பெயரா? எப்படி எனக் கேள்விகள் எழுந்ததும் எல்லோரும் வாருங்கள். அந்தக் கதையைச் சொல்கிறேன் என்று அழைப்பு விடுக்கிறார் காடோ. கதைக்கு வறுமையற்ற காடு. காடோ உணவுமேசையில் அமர்ந்து கொண்டு சூடான தேநீரைப் பருகிக்கொண்டே கேள்வியோடு கதையைத் தொடங்குகிறார். டொண்டிரிக்குட் என்ற இந்தச் சொல்லுக்கு 'கலவை' என்று பொருள். ஏன் இந்தச் சொல்லைக் கடவுள் இந்த விலங்குக்குக் கொடுத்தார் தெரியுமா? எல்லோரும் அவர் சொல்வதைக் கேட்க சுற்றி அமர்ந்துகொண்டிருக்கிறார்கள்.

கடவுள் இந்த உலகத்தைப் படைத்து முடித்துவிட்டு இதில் வாழுவ தற்காகச் செடி கொடி மரங்கள், பூச்சிகள், மீன்கள், பறவைகள், விலங்குகள், மனிதர்கள் எல்லாவற்றையும் படைத்து முடிக்கிறார். எல்லாவற்றையும் படைத்து முடித்தபோது கடைசியாக சில விலங்கு களின் உறுப்புகள் மட்டும் எஞ்சிக் கிடப்பதைப் பார்க்கிறார். இதை வீணாக்கி விடக்கூடாதே என்று நினைக்கிறார். என்ன செய்வது என்று ஒருநிமிடம் யோசித்தவர் சரி இதையெல்லாம் பொருத்தி ஒரு புதிய உயிரை உண்டாக்கி விடுவோம் என்று முடிவு செய்கிறார். அப்படி உருவானதுதான் இந்த விலங்கு. நன்றாக உற்றுப் பார்த்தீர்களானால் இதில் ஆந்தையின் கண்கள், வௌவாலின் காதுகள், குரங்கின் வால், தவளையின் கால்கள் எல்லாம் இருக்கும்.

அதனால்தான் நாங்களும் இதை அம்பாட்டபுலு அம்பாட் விலங்கு என்கிறோம் என்கிறது ஒரு குரல். ஒருமுறை அவ்விலங்கைத் திரும்பிப் பார்க்கிறேன். அது நாற்பத்து நாலு மடங்கு வருத்தத்துடன் பார்ப்பது போலத் தோன்றுகிறது. உன் அசல் பெயர்தான் என்ன விலங்கே? இதோ ஓமரே வந்துவிட்டார். அதைப் பார்த்த ஓமர் புருவத்தை உயர்த்துகிறார். இது எப்படி இங்கு வந்தது?

எல்லோரும் குழப்புகிறார்கள் என்கிறேன். இதன் ஆங்கில பெயர் வெஸ்டர்ன் டார்சியர். இது ஓர் இரவாடி. இக்காட்டு விலங்குகளிலேயே இவ்விலங்குக்கு மட்டும் தனிச்சிறப்பு உண்டு. அது என்னவென்று தெரியுமா?

இது பல விலங்குகளின் உறுப்புகளைப் பெற்றிருப்பதுதானே?

இல்லை, நான் சொல்ல வந்தது வேறொன்று. விலங்குகளை வேட்டையாடப் போகையில் முதலில் வெளிச்சத்தை அதன் முகத்தில் பாய்ச்சி வேட்டையாடுவார்கள். அவ்வெளிச்சம் கண்களில்பட்டு பிரதிபலிக்க அதைக்கொண்டுதான் இருட்டில் அதன் இருப்பை உறுதிசெய்வார்கள். ஆனால் அதெல்லாம் இவ்விலங்கிடம் செல்லாது. ஏனெனில் இதன் கண்களில் ஒளியைப் பாய்ச்சினால் இக்கண்கள் அவ்வெளிச்சத்தைப் பிரதிபலிக்காது. அதுதான் இதன் சிறப்பு. சரி, இதை வைத்துக்கொண்டு நீ என்ன செய்யப்போகிறாய்?

ஓமரின் இக்கேள்விக்கு, அரிய விலங்கொன்று கிடைத்திருக்கிறது. விடுவேனா? இதை வளர்க்கப்போகிறேன் என்று சொல்ல அவருடைய மறுப்பு உறுதியுடன் வருகிறது. இது என்ன சாப்பிடும் என்றே உனக்குத் தெரியாது? பின் எப்படி இதை வளர்ப்பாய்? இதை வளர்க்க வேண்டாம். காட்டிலேயே விட்டுவிடலாம். ஏனென்றால் இது ஓர் அரிய பிரைமேட்.

பிரைமேட்?

மனிதனுக்கு முந்தைய மூதாதையர் இனம் என்று சொல்லலாம். குரங்கிலிருந்து பிறந்தவர்கள்தானே மனிதர்கள். டார்வினின் பரிணாம வளர்ச்சிக் கொள்கையின்படி குரங்குகள் ஒவ்வொன்றும் ஒன்றிலிருந்து ஒன்றென வளர்ச்சிகண்டு வந்தவை. அந்த அத்தனை குரங்குகளையும் 'பிரைமேட்'கள் எனச் சொல்லலாம். சரி, பிரைமேட்டுகளுக்கும் இந்தக் கினபத்தாங்கன் பகுதிக்கும் ஒரு தொடர்பு உண்டு. அதுபற்றி ஏதாவது கேள்விப்பட்டிருக்கிறாயா?

பிரைமேட் என்ற சொல்லையே இப்போதுதான் கேள்விப்படுகிறேன். இதெல்லாம் யாருக்குத் தெரியும் என்றதும் இப்போதாவது தெரிந்து கொள் என்கிறார். உலகில் பத்துப் பிரைமேட்கள் ஒன்றாக வசிக்கும் இருகாடுகளில் ஒன்றுதான் இந்தக் கினபத்தாங்கன் காடு. இங்குள்ள பிரைமேட்களை பரிணாம வளர்ச்சியின்படி வரிசைப்படுத்தினால் மூத்த இடத்தில் இருப்பது இவ்விலங்குதான். அதாவது குரங்குகளுக்கே இதுதான் முன்னோடி. ஆதிக்குரங்கு.

இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததா இக்காடு? அப்படியானால் அந்தப் பத்துப் பிரைமேட்டுகளும் இக்காட்டில் இருக்கின்றனவா? இது அருமையான தகவல்தான். இவை அனைத்தையும் இங்கிருந்து

போவதற்குள் எப்படியாவது பார்த்துவிடவேண்டும். முதலில் இந்தப் பத்துப் பிரைமேட் பெயர்களையும் சொல்லுங்கள் என்கிறேன் ஓமரிடம்.

அவர் சொல்லிய பெயர்களில் இதுவரை நான்கு வகைகளைப் பார்த்துவிட்டேன். ஆறு பாக்கி.

இப்பட்டியலில் முதல் இடத்தில் உள்ள மூப்பன் எதிரில் இருக்கும் இப்பேய்க் குரங்கு. ஓமர் சொல்லியபடி இதைவிட்டுவிட மனம் வரவில்லை. இம்மூப்பனை எப்படியாவது வளர்த்துவிடவேண்டும் என்கிற ஆசை அதிகரிக்கிறது. ஆனால் மூப்பன் பாடாய்ப் படுத்தி விடுகிறார். எதை வைத்தாலும் சாப்பிடாமல் அடம் பிடித்தார். முதலில் சோற்றை வைத்துப் பார்த்தோம். திரும்பியே பார்க்கவில்லை. சுவையான பலகாரங்கள் வைத்தும் ஒன்றும் நடக்கவில்லை. பாலை வைக்கிறோம். பார்த்ததும் அச்சத்தோடு விலகியோடுகிறது. காய்கறிகளைக் கொடுத்துப் பார்க்கிறோம். சீந்தப்படாமல் கிடக்கிறது. ஓராங்ஊத்தான் சாப்பிடும் கடம்ப மரக்கனிகளைக்கூட பறித்துவைத்துப் பார்த்தாகிவிட்டது. ஊகூம். இது ஓர் இரவாடியாக இருப்பதால் இரவில் மட்டுமே உணவு உண்ணுமோவென நாங்களாகவே கணித்து ஏறக்குறைய எல்லா உணவு வகைகளையும் அதற்கு வைத்துவிட்டு உறங்கிப்போகிறோம். காலையில் எழுந்து பார்த்தால் அது அந்த தூணைக் கட்டிப்பிடித்தபடி பரிதாபமாக தொங்கிக்கொண்டிருந்ததே தவிர வைத்திருந்த உணவுகள் அப்படியே கிடக்கின்றன.

இது என்னவோ பட்டினி கிடக்கத் தீர்மானித்துவிட்ட காந்தியவாதி போல் தெரிகிறது. இரண்டு நாள் முடிந்து மூன்றாவது நாளும் விடிகிறது. அது சோர்ந்தும் வலுவற்றும் காணப்படுகிறது. மேலும் இயல்புக்கு மாறாகத் திடீரென அங்குமிங்கும் கன்னாபின்னாவென்று தாவத் தொடங்குகிறது. அப்படித் தாவுகையில் தூண்களிலும் பலகையிலும் தன்னை மோதிக்கொள்கிறது. மேலும் அவ்வப்போது தரையிலும் பொத்தென்று விழுந்து அடிபட்டு உடலில் சிராய்ப்புகளை ஏற்படுத்திக் கொள்கிறது. பித்து முற்றிய நிலைபோல இருக்கவே அச்சமாகிறது. இதை வெளியேவிட்டுவிட வேண்டியதுதான். ஆனால் இரவு வானம் இருட்டிக்கொண்டு வருகிறது. பாவம், இம்மழையில் விடவேண்டாம். விடிந்ததும் விட்டுவிடுவோம்.

மறுநாள் எழுந்து பார்க்கையில் அதைத் தூணில் காணவில்லை. தானாக அறுத்துக்கொண்டு போய்விட்டதோ என்று நினைத்துக் கொண்டிருக்கும்போதே காலில் எறும்புகள் கடிக்கின்றன. குனிந்து பார்க்கிறேன். செந்நிற எறும்புகளின் வரிசை. மனம் துணுக்குற அது சென்ற இடத்தைப் பார்த்தபோது பார்வை வெறிக்க அப்படியே நின்றுவிடுகிறேன். ஒரு பலகைக்கு அருகில் தரைமீது அது இறந்து

கிடக்கிறது. இறுதியாக அப்பலகையின் மீதுதான் பலமாக மோதி இறந்திருக்க வேண்டும். என்ன ஊகித்து என்ன? அது இறந்துவிட்டது. இதை இரவே விடுவித்திருக்கலாம். ஆனால் அப்படிச் செய்யாததால் இதன் மரணத்துக்குப் பொறுப்பாகிறேன். ஓமரின் முகத்தைப் பார்க்கவே வெட்கமாக இருக்கிறது.

காட்டுக்குள் பலப் பல மரங்களைக் கட்டித்தழுவி வாழ்ந்த ஓர் உயிரியை ஒற்றைத் தூணில் தொங்கவிட்டுக் கொன்றுவிட்டேன். இதன் சாவை மனம் ஏற்றுக்கொள்ள முடியாமல் தவிக்கிறது. இதுவரை எந்தவொரு கான் விலங்கையும் வளர்ப்பு விலங்காக வளர்த்ததே இல்லை. இதுவே முதலும் முற்றுமாக இருக்கட்டும்.

# 5

*பிலியவ்*

அனைவரும் உறங்கிக்கொண்டிருந்த இரவில் திடுமென ஓர் அலறல் கேட்கிறது. எல்லோருமே அவசரமாக எழுந்துவிடுகிறோம். அலறியது காடோ. அவர் முகம் திகிலில் வெளுத்துப்போய் காணப்படுகிறது. எதையோ கண்டு அச்சமடைந்திருக்கிறார். அவருக்கு முகம் கழுவ நீர் கொடுத்து ஆறுதல் சொல்லி அமரச் செய்கிறோம். அவர் எதற்கு அலறினார் என்று இதுவரை வாயே திறக்கவில்லை. அதற்குள் யொகன்னா தயாரித்திருந்த சூடான தேநீர் வந்துசேர்கிறது. அதைக் காடோவுக்குப் பருகத் தந்துவிட்டு என்ன நடந்தது என்று பதற்றமில்லாமல் சொல் என்கிறார் ஓமர். காடோவின் கண்களில் திகில் கலையவில்லை.

நான் தூங்கிக் கொண்டிருந்தேனா? அப்போது யாரோ என் காலைச் சுரண்டுவது போல் இருந்தது. விழித்து பார்த்தால் ஒரு கிழவர் நின்றுகொண்டிருக்கிறார். இதுவரை அவரைப் பார்த்ததே இல்லை. அவரை நீங்கள் யார் என்று கேட்க வாயெடுக்கிறேன். ஆனால் பேச்சு வரவில்லை. அவர் என் வாயைக் கட்டிப் போட்டுவிட்டார். இப்போது அவர் 'ஈஈஈ...'யென்று இளித்தபடி என்னை 'வாவா'வென்று வீட்டுக்கு வெளியே கூப்பிடுகிறார். உடனே அச்சத்துடன் வேகமாகக் கத்தி விட்டேன். அப்போது மட்டும் எப்படிக் குரல் வந்தது என்றே தெரிய வில்லை. கத்தியதும் அந்தக் கிழவர் சட்டென்று மாயமாகிவிட்டார். அதற்குள் நீங்களும் எழுந்து விட்டீர்கள் என்று காடோ சொல்லி முடித்தவுடன், அவ்வளவுதானே? இது கனவாக இருக்கும். இந்த இடத்துக்கு யார் வரப்போகிறார்கள் என்கிறேன்.

இச்சொற்கள் காடோவுக்குச் சினத்தை ஏற்படுத்திவிட்டது. உறுதி யாகச் சொல்கிறேன். இது கெட்ட ஆவியின் வேலை என்று சொல்லிய படியே வேகமாக எழுந்து போகிறார். மேற்கொண்டு எதையும் பேச வேண்டாமென ஓமர் சாடை காட்டுகிறார். காடோவைப் பழைய இடத்தில் படுக்க வைக்காமல் மாற்று இடத்தில் படுக்க வைக்கலாம் என்று ஓமர் முடிவெடுத்தபோது அதற்கு அவசியமில்லாமல் காடோ வெள்ளை வண்ணத்தை எடுத்துத் தன் படுக்கை வாசலுக்கு அருகிலும் சுவரிலும் சிலுவைக்குறிகளை வரைகிறார். இனி தேவன் துணை இருப்பார் என்று கூறி படுக்கச் சென்றுவிடுகிறார்.

அன்று இரவு துணையிருந்த தேவன் மறுநாள் இரவு விடுப்பில் போய்விட்டார். காடோ அதேபோலவே அலறி எழுந்திருக்கிறார். மீண்டும் அதே கதை. ஆனால் இது அடுத்தநாள் காலையில் வேறொரு சிக்கலாக மாறியது. காலை தேநீர் அருந்தும்போது கரமிஞ்சன் நீ சிலுவை போட்டதற்குப் பதில் பிஸ்மில்லாஹ் போட்டிருந்தால் அந்தக் கிழவர் வந்திருக்கமாட்டார் என்று சொல்ல, காடோ ஆத்திரத்துடன் நீ வேண்டுமானால் என் இடத்தில் படுத்துப் பார் என்கிறார். சவாலை ஏற்றுக்கொண்ட கரமிஞ்சன் அந்த இடத்தில் இருந்த சிலுவைக் குறிகளை அழித்துவிட்டு நிறைய அரபு எழுத்துக்களைச் சுவரைச் சுற்றி வரைந்துவிட்டு உறங்கச்செல்கிறார்.

மதம் மாறினாலும் கதை மாறவில்லை. கரமிஞ்சனும் அதேபோல் அலறியடித்துக்கொண்டு எழுந்துவிடுகிறார். அதே கிழவர். இம்முறை கூடவே கையில் ஒரு தடியும் எடுத்துக் கொண்டு வந்திருக்கிறார். உண்மையிலேயே ஆத்திரம் வந்து ஓமரிடம் கேட்கிறேன். இவர்கள் என்ன கூத்தடிக்கிறார்கள்?

கொஞ்சம் பொறுமையாய் இரு. இது பேய்ச்சிக்கலில் இருந்து மதச்சிக்கலாக மாறியிருக்கிறது. எதையும் பேசி வைக்காதே என எச்சரிக்கிறார் ஓமர்.

அவர் அப்படிச் சொல்லிவிட்டாலும் அந்நிகழ்வுகள் இரண்டுமே வெறும் கனவுகள், கற்பனைகள் என்று உணர்த்திக் காட்டிவிட வேண்டும் என்று மனம் துடிக்கிறது. அது மட்டுமல்ல. இன்னொரு பேச்சும் எழுந்திருக்கிறது. முகாமில் பேய்க்குரங்கு வளர்த்ததனால்தான் இப்படிப் பேய்கள் வருகின்றன என்பதே அப்பேச்சு. ஏற்கனவே அதைக் கொன்றுவிட்ட குற்றவுணர்வில் இருந்து மீளவில்லை. இப்படிப் பழியைப் போட்டது ஆத்திரமாய் வருகிறது. ஆத்திரம் சவாலாய் மாறுகிறது.

அந்த இடத்தில் இன்று நானே தூங்குகிறேன். என்னை எந்தக் கிழவர் வந்து எழுப்புகிறார் என்று பார்ப்போம் என்று சவால் விட்டுவிட்டு அவர்கள் வரைந்து வைத்திருந்த அனைத்து சமயக் குறிகளையும் முற்றிலுமாக அழித்துவிடுகிறேன். ஏதும் நிகழாவிட்டால் அவர்கள் வரைந்து வைத்திருக்கும் சமயக்குறிகள்தாம் காப்பாற்றியது என்று சொல்லிவிடுவார்கள். ஆனாலும் எவருக்கும் உள்ளுக்குள் அச்சம் மறையவில்லை. சிலர் நெருங்கிவந்து சொல்கிறார்கள். நீ வேண்டுமானால் உன் கடவுளைப் பற்றி எழுதிக்கொள். சிரித்துக்கொண்டே பதில் சொல்கிறேன். அவரைத்தான் இன்னும் தேடிக்கொண்டிருக்கிறேன். கிடைத்ததும் வரைந்துகொள்கிறேன்.

மூன்று பேர் படுத்துறங்கக்கூடிய சிறிய தடுப்பு அது. தனியொருவனாகச் சென்று படுக்கிறேன். இடையூறு ஏதும் இல்லாத நல்ல உறக்கம். மறுநாள் காலையில் எழுகிறேன். ஓமர் கிண்டலாக வரவேற்கிறார்.

என்ன உன் காலை யாரும் சுரண்டவில்லையா? பதிலுக்குக் கேலியாகச் சொல்கிறேன். சுரண்டினார்கள். ஆனால் அது கிழவர் இல்லை. ஓர் அழகான இளம்பெண் வந்து சுரண்டினாள்.

ஏதும் நிகழவில்லை என்பதைத் தாங்கிக்கொள்ளவோ, ஏற்றுக் கொள்ளவோ அவர்களால் முடியவில்லை. கிண்டலாகச் சொன்ன பதிலையே அவர்கள் உண்மையாக மாற்றிக்கொள்கிறார்கள். ஓர் இளம்பெண் வந்தாள் என்றால் அது உறுதியாக மோகினிதான். அவள் உன்னைப் பங்கலானுக்கு அழைக்கிறாள் என்று பொருள். உனக்குத் துணிவு இருந்தால் பங்கலானுக்குச் சென்று தங்கிப்பார் என்கின்றனர்.

இது என்ன புது மோகினிக் கதை? பங்கலான் பக்கம் ஒரு மோகினிப் பிசாசு உலாவுகிறதாம். அது யாராவது இளைஞன் கிடைத்தால் அவனோடு உறவுகொண்டு அவனைக் கொன்றுவிடுமாம். அதனால் தான் பங்கலானில் எப்போதும் வயதானவர்களே காவல் இருப்பார் களாம். எதேச்சையாக எங்களுடைய பங்கலான் காவலரும் முதியவர் தான். அவர்களுடைய சவாலை ஏற்றுக்கொள்கிறேன்.

ஓமர் தனியே அழைத்துச் சொல்கிறார். இதையெல்லாம் கடுமையாக எடுத்துக்கொள்ளாதே. இது ஒவ்வொரு முகாமிலும் நடக்கும் கதைதான். இப்படி எதையாவது கிளப்பி விட்டுவிட்டு கடைசியாக நிறுவனத்தின் செலவில் கடவுளுக்குப் பெரிய படையல் போடவேண்டும் என்று சொல்லுவார்கள். எங்கே அதை நீ தடுத்துவிடுவாயோ என்ற அச்சத்தில் இருக்கிறார்கள்.

அதை நேரடியாகக் கேட்டுவிட வேண்டியதுதானே? அதற்கு ஏன் அந்த அப்பாவிப் பேய்க்குரங்கின் மீது பழியைப் போடவேண்டும். இது எதுவரை போகிறது என்று பார்க்கிறேன். அந்த பங்கலானிலும் தங்கித் திரும்பிவிட்டால் அப்புறம் என்ன சொல்கிறார்கள் என்று பார்ப்போம்.

அவ்வாய்ப்பு அடுத்த இரண்டாம் நாளே தேடிவருகிறது. பங்கலான் காவலர் ஒருநாள் விடுப்புக் கேட்டுவர அவ்விடுப்பு நாளில் பங்கலானை காவலராக இருக்க முடிவுசெய்கிறேன். இரவுக்காவலுக்குப் பங்கலானை அடைந்தவுடன் கடைசியாக ஒருமுறை யோசனை செய்துகொள் என்கின்றனர் உடன் வந்தவர்கள்.

அச்சமே வேண்டாம். மோகினி வந்தால் மணம் முடித்துவிட்டுக் காத்திருக்கிறேன். நீங்கள் காலையில் விருந்துக்கு வந்துவிடுங்கள் என்றதும் உங்களுக்கு எல்லாமே விளையாட்டுதான் துவான் என்கிறான் ரோஸ்லான். அவனுக்குப் பரிவு அதிகம். ஒன்றும் ஆகாது ரோஸ்லான். நீ காலையில் சீக்கிரம் வந்துவிடு.

இன்ஷா அல்லாஹ் துவான், நான் உங்களுக்காக துவா செய்வேன்.

அவர்கள் சென்றபின் குடிலைவிட்டு வெளியே வருகிறேன். ஆற்றில் குளித்துவந்த காற்றில் குளுமை. முகிலற்ற விசும்பில் வளர் நிலா ஆட்சி. எங்கும் ஒளிக் கொண்டாட்டம். கினபத்தாங்கனின் நீர் மினுங்கிக் கிடக்கிறது. துல்லிய அமைதியில் நீரின் மெல்லிசை. எவ்வளவு நிம்மதி யான உணர்வை இச்சூழ்நிலை தருகிறது. இதை இரசிக்கத் தெரியாமல் பேய், பிசாசு என்று சாகிறார்களே. கரையோரம் இருந்த பெரும் வெட்டு மரமொன்றில் அமர்கிறேன். இங்கிருந்து கினபத்தாங்கனின் இரு திசையும் தெரிகிறது. நகரும் நீரில் 'ப்ளக் ப்ளக்' என்று வெள்ளிக் கயல்களின் துள்ளல்கள்.

இந்நதிக்குள் முதன் முதலாக நுழைந்த சீன வணிகரான 'அட்மிரல் செங் ஹோ'வை இம்மீன்களின் முன்னோர்களும் இப்படித்தானே வரவேற்றிருப்பார்கள்? இந்நதியின் தன்மையைக்கண்டு அவர் என்ன சொல்லி அழைத்தார்? தாம் ஸ்வீ ஹோ. நன்னீர் நதி. எவ்வளவு பொருத்தமான பெயர். அப்போது மரங்கள் காவு கொள்ளப்படாத காலம். அதனால் பளிங்கின் தெளிவாய் நீர் ஓடியிருக்கலாம். இப்போது வெறும் தண்ணீர் ஆறு. ஆனாலும் இன்னமும் வற்றாமல் ஓடும் உயிராறு. வந்தோரையெல்லாம் இன்னமும் வரவேற்றுக்கொண்டி ருக்கும் ஆறு. அதனால்தான் செங் ஹோ முதல் நாங்கள் வரை இங்கு வரமுடிந்திருக்கிறது. இதோ இப்போதும்கூட யாரோ வருகிறார்கள். யார் அது? ஒரு சின்னஞ்சிறு படகு. ஒற்றை உருவம் அதில் அமர்ந்திருக் கிறது. படகு மேல் திசையிலிருந்து வருகிறது.

அது மரஉருளையைக் குடைந்து செய்யப்பட்டிருந்த படகு. அதில் அந்த உருவம் அமர்ந்து துடுப்பு வலித்துக்கொண்டு வருகிறது. அட்மிரல் செங் ஹோ? நிலவொளியில் ஒரு முதியவரின் உருவம் தெரிகிறது. முகாமுக்குள் வந்த பேய்க்கிழவர்? அவர்கள் இருந்திருக்க வேண்டும் இப்போது. இந்தத் தனிமையில் இந்தக் கிழவரைப் பார்த்திருந்தால் உறுதியாய் மாரடைப்புதான். எழுந்து நின்று கொள்கிறேன். படகோட்டிக்கொண்டு வந்தவர் ஆற்றின் ஓரமாய் இருந்த வெட்டுமரக்கட்டையில் இருந்த கொக்கியில் படகைப் பிணைத்துக்கட்டுகிறார். கட்டிவிட்டு நிமிர்ந்தவர் உற்றுப்பார்க்கிறார். இவ்விடத்தில் ஓர் அந்நியனை எதிர்பார்த்திராத திகைப்பு முகத்தில் தோன்றி மறைகிறது. பிறகு மேலேறி வருகிறார்.

அவரைக் கூர்ந்து கவனிக்கிறேன். வயது உறுதியாக எழுபதுக்கு மேல் இருக்கும். போர்னியோத் தொல்குடிகளுக்கே உரிய குள்ளமான உருவம். இடுப்பில் ஓர் அரையாடை. மேலாடை எதுவும் அணிய வில்லை. அவருடைய வெளிர்நிறத் தோலில் பச்சை குத்தியிருப்பது தெளிவாகத் தெரிகிறது. நெருங்கி வந்தவர் உலகின் மிக அழகிய மொழியான புன்னகையில் முதலில் பேசுகிறார். அதிலும் இவருடைய மொழி மிகவும் வனப்பாக இருக்கிறது.

ஆப்ப கபார்? மலாய் மொழியில் நலம் விசாரிக்கிறேன். உள்ளுக்குள் ஓர் அய்யம். பெரும்பாலான தொல்குடி முதியவர்களுக்கு இம்மொழியில் உரையாட இயலாது. ஆனால் இவர் 'பாய்க்' என்றதும் நிம்மதியாக இருக்கிறது. இவரோடு உரையாட முடியும். அவர் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுக் கேட்கிறார். இங்கு தனியாகவா இருக்கிறீர்கள்?

ஆமாம் என்றவுடனேயே தனியாக இருப்பதற்கு அச்சமாக இல்லையா என மறுகேள்வி வருகிறது. நீங்களும் தனியாகத்தானே இருக்கிறீர்கள். உங்களுக்கு எப்படி இருக்கிறது என்கிறேன்.

அவர் வாய்விட்டு வேகமாகச் சிரித்துவிடுகிறார். இருவரும் அங்கிருந்த கட்டையின் மீது அமர்கிறோம். எந்த முகாம் என்று விசாரிக்கிறார். இங்கு வேற்றுமனிதர் தென்பட்டாலே அது காயு பலாக் நிறுவனம்தான் என்பதைப் புரிந்து வைத்திருக்கிறார். எம் வெட்டுமர நிறுவனத்தின் பெயரைச் சொல்லிய போது அவருக்குத் தெரிந்திருக்கவில்லை. இடத்தைச் சொன்னபோது உடனே புரிந்துகொள்கிறார். இவருக்கு எல்லா இடமும் தெரிந்திருக்கும் போல. செம்பனைத்தோட்டத்துக்குப் போகும் குன்றில் ஏறும்முன் இடப்பக்கம் பாதை பிரியுமே, அங்குதானே என்கிறார்.

எங்கள் முகாமுக்கு வாருங்களேன். அழைப்பு விடுக்கிறேன். மீண்டும் அழகிய மொழியில் பதிலளிக்கிறார். முதலில் இவரை எப்படி விளிப்பது? சில நொடிகள் குழப்பம். பெரியவர்களை மரியாதையாக விளிக்கப் பயன்படும் 'பிலியவ்' என்ற சொல்லாலேயே அழைப்போம். இவர் யார் என்று விசாரிக்க வேண்டும். எப்படித் தொடங்குவது? சரி, இப்படியே தொடங்குவோம். பிலியவ், உங்களுக்கு எந்தக் கம்போங்?

ஒற்றைச் சொல்லில் விடை வருகிறது. 'உலு'.

என்ன பதில் இது? காட்டின் உள்ளே வெகுதொலைவில் அமைந் திருக்கும் இடத்தைக் குறிக்கும் பொதுச்சொல் இது. எந்தவொரு குறிப்பிட்ட இடத்தையும் குறிப்பதல்ல. அடுத்த வினாவில் மடக்குவோம்.

எங்கே வசிக்கிறீர்கள் பிலியவ்?

அமைதியாகப் படகைச் சுட்டிக்காட்டுகிறார். படகில் வசிக்கிறாரா? அப்படியானால் நீங்கள் ஓராங் சுங்கையா பிலியவ்? ஆனால் இம்முறை பதில் ஒலியில் வரவில்லை. அழகிய புன்னகையில் வருகிறது. விட வில்லை. வினாவை மாற்றிக்கேட்கிறேன். உங்கள் குடும்பம் எங்கே இருக்கிறது? அவ்வளவு திறமையா உனக்கு என்பது போல் மீண்டும் அதே மொழி. மேற்கொண்டு என்ன பேசுவது?

திரும்பி கினபத்தாங்கன் ஆற்றைப் பார்க்கிறேன். இந்த ஆற்றோடு கூடப் பேசி பதில் வாங்கிவிடலாம் போலிருக்கிறது. இவரோடு பேசுவதற்குப் பதிலாக இந்த ஆற்றோடாவாவது பேசுவோம் என்று வேண்டுமென்றே ஆற்றிடம் பேசுகிறேன். கினபத்தாங்கனே, கினபத்தாங்கனே, நீயாவது பேசேன்.

புரிந்துகொண்டவர் மெலிதாகச் சிரித்துக்கொண்டே சொல்கிறார். அது பேசுவதை நிறுத்தி வெகுநாளாகிறது. திரும்பிப் பார்க்கிறேன். பேசுவதை நிறுத்திவிட்டதா? எப்போதிருந்து?

இவையெல்லாம் இப்படிக் கிடக்கத் தொடங்கியதிலிருந்து என்று அவருடைய விரல் வெட்டுமரங்களைச் சுட்டிக்காட்டுகிறது. என்ன சொல்ல வருகிறார் என்பது புரிகிறது. குற்றவுணர்வில் வலிக்கிறது. உடனடியாகப் பதில் எதுவும் சொல்ல முடியவில்லை. சற்றுநேரம் கழித்தே சொல்கிறேன். நீங்கள் வெட்டுமர நிறுவனங்களைப் பற்றிச் சொல்கிறீர்கள் என்று தெரிகிறது பிலியவ். ஆனாலும் வெறும் கூலி என்ன செய்ய முடியும்?

சிரித்துக்கொண்டே சொல்கிறார். வெறும் மனிதர்கள் என்று சொல், வேடிக்கைப் பார்ப்பதைத் தவிர வெறும் மனிதர்களால் வேறு என்ன செய்துவிட முடியும்?

இதைச் சொல்லிவிட்டு ஓடும் நீரை வெகுநேரமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார். இதயத்துக்குள் ஏதோ புரள்கிறதோ? விழிகள் வெறிச்சிட்டிருப்பது நிலவொளியின் பளபளப்பில் தெரிகிறது. வெகு நேரம் கழித்துதான் அவருடைய நா அசைகிறது.

என் தந்தை சொல்வார். இந்த உலகத்தில் முதன்முதலில் பேசத் தொடங்கியது ஓடையில் ஓடும் நீர்தான் என்று. அப்போது தாவரங்கள் கிடையாது. பறவைகள் கிடையாது. விலங்குகள் கிடையாது. மனிதர்களும் கிடையாது. மனிதர்களே இல்லை என்கிறபோது அவர்களின் மொழிகள் மட்டும் எங்கே இருந்திருக்கப் போகின்றன? எனவே பேசுவதற்கு ஆளில்லாமல் இருந்த நீர்தான் பேச்சுத்துணைக்கு முதலில் தாவரங்களை முளைக்க வைத்ததாம். அத்தாவரங்கள் தாம் பேசுவதற்காகப் பூக்களைப் படைத்ததாம். பூக்கள் தாம் பேச கனிகளைச் சமைத்தது. கனிகள் தாம் பேச பறவைகளை அழைத்தது. இப்படி வரிசையாக வந்து மனிதர்களில் முடிந்தது. இந்த மனிதர்களுக்கு அப்போதெல்லாம் மற்ற மனிதர்களின் முகம்தான் தெரியும். தன் முகம் எப்படி இருக்கும் என்றே தெரியாது. அம்மனிதர் மீது ஓடைநீர் இரக்கப்பட்டு, இந்தா உன் முகத்தைப் பார்த்துக்கொள் என்று தன்னையே கண்ணாடியாக மாற்றி மனிதருக்கு அவரை அடையாளம் காட்டியது. அது ஒரு ஓடும் கண்ணாடி. பேசும் கண்ணாடி. அக்கண்ணாடியோடு எல்லா உயிர்களும் இன்னமும் உரையாடிக்கொண்டுதான் இருக்கின்றன. உரையாடலை நிறுத்திய முதல் உயிரி, முதல் உயிரி மட்டுமல்ல ஒரே உயிரியும் மனிதர்தான். மனிதர்கள் எப்போது தனக்கென்று ஒரு கண்ணாடியைத் தயாரித்துக்கொண்டு இனி எல்லோரும் இதில் முகம் பார்த்துக்கொள்ளுங்கள் என்று சக மனிதர்களுக்குச் சொன்னார்களோ அப்போதே இந்தக் கண்ணாடியின் மீது கல்லைப் போட்டு உடைக்கத்

செய்துவிட்டார்கள் என்று சொன்ன என் தந்தையின் கூற்று எவ்வளவு மெய் என்று அடிக்கடி நினைத்துக்கொள்வேன்.

புரிவதுபோல இருக்கிறது ஆனால் புரியவில்லை. அவரிடமே சொல்கிறேன். நீங்கள் கடைசியாகச் சொல்வது புரியவில்லை பிலியவ்.

இதைத்தான் நாம் கண்ணாடியை உடைத்துவிட்டோம் என்கிறேன். நாம் இயற்கையுடனான உரையாடலை நிறுத்திவிட்டோம் என்கிறேன்.

குழப்பத்தினைப் பிலியவ் படித்துவிடுகிறார். உன் வயதில் இருந்த போது நானும் இதேபோல் என் தந்தையிடம் கேட்டேன். அப்போது இதே விடையை அவர் எனக்குச் சொன்னார். உன்னைப்போலவே நானும் குழம்பிப் பார்த்தபோது கடைசியாக இப்படிச் சொன்னார். எப்போது மனிதர் தன்னைத்தானே விரும்பத் தொடங்கினாரோ அப்போதே அவருக்கு இயற்கையின் மீதான காதல் போய்விட்டது

ஓர் எளிய தொல்குடி மனிதரிடமிருந்து எவ்வளவு கனமான சொற்கள். இதுகூட இவருக்கு முந்தைய தலைமுறையின் சிந்தனை. பிலியவ் தொடர்ந்து சொல்கிறார். இந்தக் கினபத்தாங்கன் நீரின் அழகை நீ முன்பு பார்த்திருக்க வேண்டும். மேலே பறக்கும் செம்பருந்து ஆற்றுநீரில் தெளிவாகத் தெரியும் மீன்களைப் பார்த்ததும் அப்படியே கொத்திக்கொண்டு போகும். அவ்வளவு துல்லியமான நீர். இப்போது இந்த ஆற்றில் ஒரு பாம்பு வாத்தால்கூட மூழ்கி மீன் பிடிக்கமுடியுமா என்று தெரியவில்லை. எங்கள் கண்ணாடி என்றோ உடைந்து போய் விட்டது. அதனால்தான் அப்படிச் சொன்னேன். தவறாக நினைத்துக் கொள்ளக்கூடாது. தூக்கம் வருகிறது. படுத்துக்கொள்கிறேன் என்று சொல்லிவிட்டு அந்த அகன்ற கட்டையில் அப்படியே சாய்ந்து படுத்துக்கொள்கிறார்.

எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு தன் போக்குக்கு ஓடிக் கொண்டிருக்கிறது கினபத்தாங்கன்.

காலைக் கதிரொளி முகத்தைச் சுரண்டுகிறது. நல்ல உறக்கம். எழுந்து வெளியே வந்து பார்த்தபோது அத்தொல்குடி மனிதரைக் காணவில்லை. அவருடைய சிறுபடகையும் காணவில்லை. நேற்றிரவு அவர் வந்தது, பேசியது எல்லாம் கனவா? ஒருவேளை தோற்ற மயக்கமா? அவர் எப்படி இங்கு வந்தார்? ஏன் வந்தார்? ஒன்றும் புரியவில்லை. ஆனால் தொலைவில் வண்டி வருவது மட்டும் புரிகிறது. ஒரு விளையாட்டு விளையாடிப் பார்க்கலாம். உள்ளே ஓடிச்சென்று படுக்கையில் படுத்துக்கொள்கிறேன். வண்டி வந்து நிற்கிறது. வெளியில் இருந்தே துவான், துவான் என்று அழைக்கிறார்கள். பதில் தரவில்லை. திரும்பத் திரும்பக் கூப்பிட்டும் பதில் இல்லாததால் அவர்கள் கலவரமடைந்து தங்களுக்குள் பேசிக்கொள்கிறார்கள்.

நான் அப்போதே சொன்னேன். துவான்தான் கேட்கவில்லை.

பேய், பிசாசு, கடவுள் இதிலெல்லாம் நம்பிக்கைவேண்டும். நம்பாவிட்டால் இப்படித்தான் ஆகும்.

பாவம் எங்கேயோ பிறந்து வளர்ந்து கடைசியில் இங்குவந்து ஏதோ ஆகிவிட்டதே.

நாமே ஏன் பேசிக்கொள்ள வேண்டும்? ஒருவேளை தூங்கிக் கொண்டிருந்தால்? வாருங்கள், உள்ளே போய்ப் பார்ப்போம் என்று பேசிக்கொண்டாலும் அவர்கள் அப்போதும் உடனடியாக உள்ளேவரத் துணியவில்லை. ஒரு குச்சியால் தட்டியைத் தட்டுகிறார்கள். துவான், துவான் என்று குரலும் கேட்கிறது. இன்னும் கொஞ்சம் விளையாடலாம். பாதி உடம்பைப் படுக்கைக்கு வெளியே தொங்கவிட்டு, தலையும் இருகைகளும் வெளியே தொங்கும்படி படுத்துக்கொள்கிறேன். கண்களை விழி பிதுங்குமாறு வேறு திறந்து வைத்துக்கொள்கிறேன். அறவே பதில் வராமல் போகவே யாரோ மெல்லத் தலையை நீட்டி உள்ளே எட்டிப்பார்ப்பது தெரிகிறது.

அடோய்ய்... டியா மாத்தி... டியா மாத்தி...

எட்டிப் பார்த்தவர் அலறுகிறார். செத்துவிட்டதாக அலறியதைக் கேட்டதும் சிரிப்பு வந்துவிடுகிறது. சிரமத்துடன் அடக்கிக்கொள்கிறேன். இன்னொருவர், உண்மையாகவா என்று கேட்கிறார். நம்பிக்கை இல்லையென்றால் நீயே எட்டிப்பார். அவர் அந்த மோகினி அடித்து இறந்துகிடக்கிறார்

அவர்களும் எட்டிப்பார்த்திருக்க வேண்டும். திடீரென ஒருவர் அழும் குரல் கேட்கிறது. அது ரோஸ்லானின் குரல். பாவம். இதற்கு மேல் விளையாடினால் நன்றாக இருக்காது. இந்தக் கடைசி விளையாட்டோடு நிறுத்திக்கொள்வோம். திடுதிப்பென எழுந்து 'பா...' என்று வேகமாகக் கத்துகிறேன். அச்சத்தில் அவர்கள் அனைவருமே சேர்ந்து அலறிவிடுகிறார்கள். காடோ தன் நெஞ்சைப் பிடித்துக்கொண்டு அப்படியே உட்கார்ந்துவிடுகிறார். அழுதுகொண்டிருந்த ரோஸ்லான் துவான் பிழைத்துக் கொண்டதில் மகிழ்ச்சியடைவதா இல்லை அச்சத்தில் அழுகையைத் தொடர்வதா என்ற திகைப்பில் வாயைப் பிளந்தபடியே நிற்பதைப் பார்த்ததும் சிரிப்பு கட்டுக்கடங்காமல் பொங்கிவிடுகிறது. அச்சிரிப்பு அவர்களுக்குச் சினமூட்டுகிறது. வாய்க்கு வந்தபடி திட்டுகிறார்கள். அந்தளவுக்கு அச்சமடைந்திருந்தார்கள்.

முகாம் வீட்டை அடைந்தபோது ஓமர் விவரம் தெரியாமல் மோகினியை அழைத்துக் கொண்டு வரவில்லையாவெனக் கேட்டதும் மறுபடியும் திட்டு தொடங்குகிறது. அவர்களின் சினம் சற்று ஓய்ந்ததும் முழுக்கதையையும் சொல்கிறேன். முகாமே பெரும் சிரிப்பால் மூழ்கிறது. ஓமரிடம் நேற்றிரவு சந்தித்த அந்த தொல்குடிப் பெரியவரைப் பற்றிச் சொல்லலாமா? இப்போது வேண்டாம். இவர்கள் காதில்

வாங்கினால் அதைப் பேய்க்கதையாக மாற்றிவிடுவார்கள். அவர்களிடம் கேட்கிறேன். இப்போதாவது பேய், பிசாசு, மோகினி ஏதுமில்லை என்று நம்புகிறீர்களா?

அவர்கள் வெகு தெளிவாகக் கூறுகிறார்கள். உனக்கு நெருப்பு ராசி துவாரன். அதனால்தான் பேய் பிசாசெல்லாம் உன்னை அண்டுவதில்லை.

அய்யன்மீர், நீங்கள் எப்படி அடித்தாலும் அழ மாட்டீர்களா?

# 6

**ஈத்தாம் மானிஸ்**

ஈத்தாம் மானிஸ் என்கிற அந்த அரண்மனைப் பணிப்பெண்ணின் நிறம் கருப்புதான். ஆனாலும் பேரழகி. சுல்தானின் அந்தப்புரத்தில் பணி புரிந்துவந்த அவள் எல்லோரிடமும் இனிமையாய்ப் பழகக்கூடியவள். அதனாலேயே அவளைச் சுற்றி எப்போதும் தோழியர் கூட்டம். இவ்வளவு சிறப்பு வாய்ந்த அழகி யாருடைய இதயத்துக்குள்ளாவது விழாமலா போய்விடுவாள்? அப்படித்தான் சுல்தானின் மகன் இதயத் துக்குள் விழுந்தாள். அவன் அப்பணிப்பெண்ணை மணம் முடித்துக் கொண்டு பட்டத்து இளவரசியாக்கும் முடிவுக்கு வந்துவிடுகிறான். சுல்தானின் காதுக்குச் செய்தி போய்ச் சேர்கிறது. இதற்கு மேலும் விட்டுவைத்தால் நிலைமை கைமீறிப் போய்விடும் என்று யோசித்த சுல்தான் தன் வீரர்களை அழைத்து ஈத்தாம் மானிஸைக் கொன்றுவிட உத்தரவிடுகிறார். சுல்தானின் பணிப்பெண் ஒருத்தி மூலம் இது ஈத்தாம் மானிஸுக்குத் தெரியவருகிறது, சுல்தானின் வீரர்களும் அவளைக் கொல்வதற்குத் தேடி வந்துகொண்டிருந்தனர். இதைக்கண்ட அவளுடைய தோழியர் ஈத்தாம் மானிஸை அழைத்துக்கொண்டு அரண்மனையை விட்டு ஓடுகின்றனர். அப்போது அவர்களைப் பார்த்துவிட்ட வீரர் களுள் ஒருவன் ஈத்தாம் மானிஸை நோக்கித் தன் ஈட்டியை எறிகிறான். உடனே ஈத்தாம் மானிஸ் தன் மந்திர ஆற்றலைப் பயன்படுத்தி தன்னோடு தன் தோழியரையும் தேனீக்களாக மாற்றுகிறாள். எல்லாத் தேனீக் களும் தப்பித்துக் காட்டுக்குள் நுழைகின்றன. வீரர்கள் சுல்தானிடம் சென்று ஈத்தாம் மானிஸ் இறந்துவிட்டதாகச் சொல்கின்றனர். அதைக் கேட்ட இளவரசன் மனமுடைந்து போகிறான்.

இப்படியே சில ஆண்டுகள் கடக்கின்றன. இளவரசன் வேதனையில் இருந்து மீளாமல் இருக்கிறான். அவனுடைய மனமாற்றத்துக்காகச் சுல்தான் அவனைக் காட்டுக்கு வேட்டையாடச் செல்லுமாறு கூறுகிறார். அவனுக்கும் அது நல்ல யோசனையாகப் படுகிறது. காட்டுக்கு அவன் வேட்டையாடச் செல்வது இதுதான் முதல்முறை. அங்குதான் மரங் களிலேயே உயர்ந்த மரமான மெங்காரிஸ் மரத்தைப் பார்க்கிறான். அதன் உயரத்தைக் கண்டு வியந்துபோகிறான். அதன் உச்சியில் ஏறி அங்கிருந்து முழு காட்டையும் பார்த்தால் எப்படியிருக்கும் என்று

நினைக்கிறான். அந்நினைப்பே உவகையாய் இருக்கிறது. அண்ணாந்து பார்க்க உச்சியில் பெரிது பெரிதாகக் கரும்பழங்கள் தொங்கிக் கொண்டிருக்கின்றன. அவன் வாழ்நாளில் இப்படியான பழங்களைப் பார்த்தது இல்லை. எப்படியும் அதைப் பறித்துச் சுவைத்துவிட வேண்டுமென்று மரத்தில் ஏறுகிறான். அவை பழமல்ல, தேனீக்களின் கூடு என்பதை அவன் அறியவில்லை. தன் விரலைத் தேன் கூட்டுக்குள் விட்டு எடுத்துச் சுவைக்கிறான். இப்படியொரு சுவையை இதுவரை சுவைத்ததே இல்லை. இதைப் பறித்துவிட வேண்டுமென்று முடிவு செய்து, கீழே நின்றிருந்த தன் வீரர்களிடம் கூடையையும் கூடவே கத்தியையும் வைத்துக் கயிற்றில் கட்டி அனுப்பச் சொல்கிறான். கூடை மேலே போகிறது. அதன் ஒரு முனையைக் கீழே நின்றிருந்த வீரர்கள் பிடித்துக் கொண்டு நிற்கின்றனர். சற்று நேரம் கழித்து அக்கூடையில் எடை நிரம்பிவிட்டதை உணர்ந்த வீரர்கள் கயிற்றை இழுத்துக் கூடையைக் கீழே இறக்குகின்றனர். அக்கூடைக்குள் இளவரசனின் உடல் துண்டு துண்டாக வெட்டப்பட்டுக் கிடக்கிறது. வீரர்கள் அதிர்ச்சி அடைகிறார்கள்.

அப்போது வானிலிருந்து குரல் ஒலிக்கிறது. தேன்கூட்டை வெட்டியெடுக்க உங்கள் இளவரசன் கூர்மையான கத்தியைப் பயன்படுத்திவிட்டார். இது குற்றச்செயல். அக்கத்தி எங்கள் ஈத்தாம் மானிஸைக் கொன்றுவிட்டது. எனவே அது பதிலுக்கு உங்கள் இளவரசனின் உடலைக் காவு வாங்கிவிட்டது என்கிறது அக்குரல். அப்போதுதான் தங்களால் விரட்டியடிக்கப்பட்ட ஈத்தாம் மானிஸ்தான் தேன்கூடாக மாறியிருக்கிறாள் என்கிற விபரம் அந்த வீரர்களுக்குத் தெரிய வருகிறது. உடனே அவர்கள் மண்டியிட்டு மன்னிப்புக் கேட்கிறார்கள். அந்த ஈத்தாம் மானிஸின் காதலன்தான் இந்த இளவரசன் என்றும் அதுதான் ஈத்தாம் மானிஸ் என்று தெரிந்திருந்தால் தங்கள் இளவரசர் அவளைக் கொன்றிருக்கவே மாட்டார் என்றும் இறைஞ்சுகின்றனர். அதைக் கேட்ட அந்தப் பழைய பணிப்பெண்களான தேனீக்களுக்கு உண்மை தெரியவருகிறது. தங்கள் ஈத்தாம் மானிஸ் உயிரோடு இருந்தால் உறுதியாய் இளவரசனின் உயிரைக் காப்பற்றியிருப்பாள் என்று எண்ணுகின்றனர். அவர்கள் ஈத்தாம் மானிஸின் ஆன்மா சாந்தி அடைய விண்ணிலிருந்து கீழே கூடைக்குள் இருந்த இளவரசனின் சடலத்தின் மீது பொன்மாரி பொழிகின்றனர். இளவரசன் உயிர்பெற்று எழுகிறான்.

இக்கதையைச் சொல்லி முடித்த குணா இது மேற்கு மலேசியாவில் புழங்கும் கதை. இந்த ஈத்தாம் மானிஸ் ஓர் இந்தியப்பெண். ஈத்தாம் மானிஸின் சாபத்துக்கு ஆளாகிவிடக் கூடாது என்பதற்காக இன்றளவும் மரமேறி தேன் எடுப்பவர்கள் தேன்கூட்டை அறுப்பதற்குப் பதிலாக அதைப் பிய்த்துத்தான் எடுப்பார்களாம் என்கிறார்.

இந்தக் கதை உண்மைதான் துவான். நீங்கள் தேன்கூடுகள் நிறைந்த மெங்காரிஸ் மரத்துக்குக் கீழே போனீர்கள் என்றால் அம்மரத்துக்குக் கீழே உள்ள செடிகளில் அந்தப் பொன் மழைத்துளிகளை இப்போதும் பார்க்க முடியும் என்கிறான் ரோஸ்லான்.

உண்மையாகவா சொல்கிறாய் ரோஸ்லான்?

உண்மைதான் துவான். வழியில் மெங்காரிஸ் மரம் வரட்டும், நானே உங்களுக்கு அதை நேரில் காட்டுகிறேன் என்ற ரோஸ்லானின் குரலில் அவ்வளவு உறுதி. முகாம் நோக்கி வண்டி விரைந்துகொண்டிருக்கிறது. அந்த மெங்காரிஸ் முனை எப்போது வருமென்று மனசுக்குள் துடித்துக் கொண்டேயிருக்கிறேன். வழியிலிருந்த ஒரு மெங்காரிஸ் மரத்தைப் பார்த்துத்தான் இக்கதை தொடங்கியிருந்தது. பொதுவாக ஏற்கனவே மரங்கள் வெட்டப்பட்ட காடுகளில்கூட மெங்காரிஸ் மரங்கள் வெட்டப்படாமல் நிற்பதைக் காணமுடியும். இம்மரத்தை வெட்டு வதற்குத் தடை விதிக்கப்பட்டிருக்கிறது. மெங்காரிஸ் மரம் உலகில் உள்ள உயரமான மர வகைகளுள் ஒன்று. இயல்பாகவே எண்பது, எண்பத்தைந்து மீட்டர் உயரம்வரை வளரக்கூடியது.

மெங்காரிஸ் முனை வருகிறது. இம்முனையை வண்டியில் கடக்கும் போதெல்லாம் ஆட்கள் அச்சப்படுவதுண்டு. இம்மரத்தில் ஆவிகள் இருக்குமாம். ஈத்தாம் மானிஸ்தான் அந்த ஆவி என்று இப்போது புரிகிறது. வண்டியை விட்டு இறங்குகிறோம். மாலை வெயில் இன்னமும் மறையவில்லை. வழவழப்பான சாம்பல் நிறப்பட்டையோடு மெங்காரிஸின் காட்சி. செடிகளை விலக்கிக்கொண்டு உள்ளே நுழை கிறோம். முன்னே சென்ற ரோஸ்லானின் பார்வை அம்மரத்தின் கீழ் பரவியிருந்த செடிகளின் மீது எதையோ தேடிப் பரவுகிறது. சட்டென்று இதோ பாருங்கள் எனத் துள்ளல் குரல். அருகே சென்றபோது கண்கள் அகல விரிகின்றன.

அங்கிருந்த செடிகளின் இலைகள் மீதெல்லாம் மஞ்சள் நிறப் புள்ளிகள் அள்ளித் தெளித்தாற்போலக் காணப்படுகின்றன. அண்ணாந்து பார்க்கிறேன். ஒரு மெங்காரிஸ் மரத்தின் அடியிலிருந்து அதன் உச்சியைப் பார்ப்பது இதுவே முதன்முறை. கிளைகளில் தொங்கிக் கொண்டிருக்கும் தேன்கூடுகள் தெளிவாகத் தெரிகின்றன. ஒன்றல்ல இரண்டல்ல. குறைந்தது நாற்பது அய்ம்பது கூடுகளாவது இருக்கும். எண்ணிப் பார்த்தபோது ஒரு கிளையில் மட்டும் எட்டுக் கூடுகள் தொங்கிக் கொண்டிருக்கின்றன. மற்ற மரங்களைக் காட்டிலும் இம்மரம் உயரமாக இருப்பதால் பாதுகாப்புக் கருதி இந்தத் தேனீக்கள் விரும்பி கூடுகளைக் கட்டுகின்றன. மிக உயரமான இம்மரத்தில் தேன்கூடுகளைக் கட்டுவது உலகின் மிகப்பெரிய மலைத்தேனீக்கள் என்பது எவ்வளவு பொருத்தம்.

தேன்கூடுகளைக் கவனிப்பதைப் பார்த்ததும் ரோஸ்லானிடமிருந்து ஒரு கேள்வி வருகிறது. அந்தக் கூடுகள் எவ்வளவு உயரம் இருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள் துவான்?

எப்படிப் பார்த்தாலும் இரண்டடி உயரமாவது இருக்கலாம் என்றவுடன் ரோஸ்லான் உதட்டில் சிரிப்பு தவழச் சொல்கிறான். சொன்னால் நம்பமாட்டீர்கள். அது என் உயரம் இருக்கும்.

ரோஸ்லான் சற்றுக் குள்ள உருவம்தான். ஆனாலும் உயரம் அய்ந்தடியைத் தாண்டும். இவ்வளவு உயரத்துக்கா ஒரு தேன்கூடு இருக்கும்? அய்யத்தைப் புரிந்துகொண்டது போல, என்னை நம்புங்கள் துவான். என் தாத்தா தேன் எடுப்பவர். சின்னவயதில் அவரோடு தேனெடுக்கப் போயிருக்கிறேன். அதனால்தான் இவ்வளவு உறுதியாகச் சொல்லுகிறேன் என்கிறான்.

புறப்படுமுன் கடைசியாக ஒருமுறை அப்பொன் மழைத்துளிகளைப் பார்த்துக்கொள்கிறேன். இது என்னவாக இருக்கும்?

ஆனாலும் இந்தப் பொன்மழையின் கமுக்கம் என்ன? எதனால் அந்தப் புள்ளிகள்? இந்த மண்டை அரிப்பு தீர முதலில் முகாம் வரவேண்டும். இக்காட்டின் கலைக்களஞ்சியம் ஒன்று அங்குதானே இருக்கிறது. முகாமை அடைந்தவுடன் ஓமர் சிரித்துக்கொண்டே சொல்கிறார்.

நீங்கள் இன்னும் சற்றுநேரம் அங்கு நின்றிருந்தால் அப்பொன் மழையின் கமுக்கத்தை நீங்களே அறிந்துகொண்டிருப்பீர்கள், அது வேறொன்றுமில்லை. தேனீக்களின் எச்சம். அப்பொன் துளிகளை வைத்துக்கொண்டு நகையெல்லாம் செய்ய முடியாது. கீழே இருக்கும் செடிகளுக்குத் தேவையான உரம் மட்டுமே கிடைக்கும்.

### காயு பலாக் கமுக்கம்

முகாம் வாழ்க்கையில் இரவுதான் களைகட்டும் நேரம். எப்படிப் பார்த்தாலும் மாலை ஆறிலிருந்து ஏழுக்குள் இரவு உணவு முடிந்து விடும். அதன்பின் அந்த உணவுமேசை அரட்டை மேசையாகிவிடும். இரவு பத்து வரை கேலி, கிண்டல், கூத்து, கும்மாளம், கொண்டாட்டம் தான். அன்றாடப் பணிச்சுமை, குடும்பத்தை, ஊரை, நாட்டைப் பிரிந்து வாழும் ஏக்கம், பொருளாதாரம் குறித்த மனநெருக்கடி அனைத்தையும் ஒட்டுமொத்தமாய்த் துறந்து வேறொரு இன்ப உலகில் வாழும் நேரம் இது. இன்று கூடுதலாய் குணா வாங்கி வந்திருந்த ஒரு பீர்ப் பெட்டி அவர்களின் உற்சாகத்தைக் கூட்டியிருக்கிறது.

நான்குபேர் வெளியில் அமர்ந்திருக்கிறோம். நான்கு வெட்டுமரத் துண்டுகள்தாம் எங்கள் இருக்கைகள். நடுவில் இருந்த மேசையும் அதுதான். மேசையில் குணாவுக்கு விருப்பமான கால்ஸ்பெக் பீர்.

அவருடைய விரல்களிடுக்கில் மால்போரோ புகைந்துகொண்டிருக்கிறது. ஓமருக்கு வழக்கமான பென்சன் அண்ட் ஹெட்ஜஸ். லிபராத்தோவின் விரல்களில் டன்ஹில். மூன்று புகைபோக்கிகளுக்கும் நடுவே சிக்கியிருக்கிறேன். ஓமரின் கையில் நிலவரைபடம். எங்களுடைய எல்லை அமைக்கும் பணி நிறைவேறிவிட்டிருந்தது. அடுத்தது தொகுதிகள் அமைக்கும் பணி. வரைபடத்தில் எங்கள் நிலத்தை மொத்தம் பதின்மூன்று தொகுதிகளாகப் பிரித்திருக்கிறார் லிபராத்தோ. மொத்த நிலத்தையும் ஓடையொன்று நடுவில் ஊடறுத்துச் செல்கிறது. முதல் எட்டுத் தொகுதிகள் ஓடைக்கு இப்பக்கமும் மற்ற ஐந்து தொகுதிகள் ஓடைக்கு அப்பக்கமும் வருமாறு அவர் தொகுதிகளை வகுத்திருக்கிறார்.

அந்த ஓடைக்கரையில்தான் எங்கள் முதன்மை முகாம் அமையவிருக்கிறது. ஓமர் வரைபடத்தை விரித்து குணாவுக்கு விளக்கத் தொடங்குகிறார். இப்போது சாலை அமைக்கும் பணி எட்டாம் தொகுதியின் இறுதிவரை ஓடைக்கரையோடு முடிந்திருக்கிறது. இந்த இடத்தில்தான் முகாம் அமைக்கவிருக்கிறோம் என்கிறார். நல்ல திட்டம்தான் என்ற குணா நம் முகாமில் எத்தனை பேர் இருப்பார்கள் என்று கேட்கிறார். நம் திட்டத்தில் எந்தக் கோளாறும் இல்லாமல் நடந்தால் அறுபதுபேர் வரை இருப்போம். இதில் எவராவது குடும்பத்தோடு வந்தால் எண்ணிக்கை கொஞ்சம் கூடலாம். அப்போது இந்த முகாமே குட்டிக் கம்போங் போல் ஆகிவிடும்.

வெட்டுமர முகாம் வாழ்க்கை முற்றிலும் வேறுபட்ட ஒன்று. வேறெங்கும் காணமுடியாத வாழ்க்கை. நடுக்காட்டுக்குள் வாழ்வதற்காகப் புதிதாக உருவாக்கப்படும் குடியிருப்புப் பகுதி வெட்டப்படும் காட்டின் அளவைப் பொறுத்து ஓராண்டிலிருந்து பத்து ஆண்டுவரை நீடிக்கலாம். ஓரிரு ஆண்டுகள் என்றால் அது சிறிய முகாம். அய்ந்து பத்து ஆண்டுகள் என்றால் அது பெரிய முகாம். வீடுகளும் இதற்கேற்றாற் போலத்தான் எளிமையாகவோ, வலுவாகவோ அமைக்கப்படும். இப்படிப் பெரிய முகாம்களாக அமைக்கப்பட்ட வீடுகள் சில இடங்களில் தோட்டமாக உருமாறி நிரந்தரமான சிற்றூர்களாகவும் மாறிவிட்டிருக்கின்றன. ஆனால் இது ஒரு சிறிய முகாம்தான்.

குணாவும் லிபராத்தோவும் தங்கள் குவளைகளில் புதிதாக ஒரு பாட்டில் பீரை ஊற்றிக்கொண்டு தங்களுடைய பீர்க் குவளைகளை ஒருமுறை மோதிக் கொள்கின்றனர். மகிழ்ச்சி, மகிழ்ச்சி. அப்படியே பக்கத்தில் இன்னொரு காடும் நமக்குக் கிடைக்கட்டும். ஓமரோடு சேர்ந்து பொரித்த வேர்க்கடலையைக் கொறித்துக் கொண்டிருந்த போது, நெடுநாள் அய்யம் ஒன்றைத் தீர்த்துக்கொள்ள இதுதான் பொருத்தமான நேரம் என்று தோன்றுகிறது. கேட்டுவிடலாம்.

இந்தக் காட்டையெல்லாம் யாரிடமிருந்து வாங்குகிறீர்கள்? கான் துறையிடமிருந்தா?

இல்லையில்லை. கான் துறை காடெல்லாம் விற்காது. அது மரம் வெட்டிக் கொள்வதற்கான அனுமதியை மட்டும்தான் வழங்கும் என்று குணா பகர்ந்ததும் அப்படியென்றால் வேறு யார்தான் விற்பார்கள் என்று கேட்கிறேன்.

குணா அலுத்துக்கொள்கிறார். உனக்கு முதலில் இருந்தே சொல்ல வேண்டும். அப்போதுதான் புரியும். இரு, சொல்கிறேன் என்ற குணா பீரை ஒருமுறை உறிஞ்சிக்கொண்டு தொடர்கிறார்.

காட்டில் மரம் வெட்டிக்கொள்ளும் உரிமை அரசாங்கத்தால் சிலருக்கு வழங்கப்பட்டிருக்கிறது. இது பிரித்தானியர் காலத்திலிருந்தே நடைமுறையில் இருந்துவரும் வழக்கம். சில நிலங்களின் உரிமை குறிப்பிட்ட பகுதியில் வசிக்கும் சில தொல்குடிச் சமூகத்திற்கும் வழங்கப்பட்டிருக்கிறது. அதேபோல சில தனி ஆட்களுக்கும் வழங்கப் பட்டிருக்கிறது. இந்நிலையில் நாடு விடுதலைபெற்ற பிறகும் இது போன்ற உரிமைகள் சிலருக்கு வழங்கப்படுவது தொடர்ந்திருக்கிறது. ஒரு நபருக்கு இருக்கும் செல்வாக்கைப் பொறுத்து அவருக்கு வழங்கப் படும் நிலத்தின் அளவும் இருந்திருக்கிறது. நாம் ஜம்போங்கனில் ஒருவரிடம் நான்காயிரம் ஏக்கர் நிலம் வாங்கி ஏமாந்தோம் அல்லவா? அந்நிலம் அவருக்கு எப்படிக் கிடைத்தது என்று நினைக்கிறாய்? அவர் விடுதலை பெற்ற அரசாங்கத்தின் முதல் அமைச்சரவையில் அமைச்சராய் இருந்த ஒருவருக்கு மகிழுந்து ஓட்டுநராய் இருந்திருக் கிறார். அந்த அமைச்சருக்கும் அவருக்கும் இருந்த நெருக்கத்தைப் பயன்படுத்தி இந்நிலத்தை அவர் பெற்றிருக்கிறார். இதற்காக அவர் செய்த ஒரே வேலை தன் மதத்தை விட்டு அமைச்சரின் மதத்துக்கு மாறியதுதான்.

அப்படியானால் இந்த நிலம் யாருடையது?

இது புக்கிட் கரமைச் சேர்ந்த நால்வருக்குச் சொந்தமானது. இவர்களுக்கு இதில் உள்ள மரங்களை வெட்டிக்கொள்வதற்கான அனுமதியைக் கான் துறை இப்போதுதான் வழங்கியுள்ளது.

அப்படியானால் அவர்களே இதை வெட்டி விற்காமல் ஏன் நமக்குத் தருகிறார்கள்?

பணம். வெட்டுவதற்கு இவ்வளவு செலவு செய்யவேண்டுமே இப்பணத்தை யார் தருவார்கள்? அதனால்தான் பணம் இருக்கும் பெரிய நிறுவனங்களுக்கு விற்கிறார்கள். உனக்கொரு செய்தி தெரியுமா? உண்மையில் இந்த நால்வரும் நம் நிறுவனத்தின் பங்கு தாரர்கள். ஆனால் இந்த நால்வருக்குமே இது தெரியாது. முதலில் பேசி விற்கும்போது கையில் கிடைக்கும் தொகையே அவர்களுக்குப் பெரிய

தொகை. அதை வைத்துக்கொண்டே அவர்களுக்கு என்ன செலவு செய்வது என்று தெரியாது. எனவே அந்தத் தொகை கிடைத்ததுமே இதை விற்றாகிவிட்டது என்று நினைத்துக்கொள்கிறார்கள்.

குணா நல்ல போதை நிலைக்குச் சென்றிருக்கிறார். அதனால்தான் நிறுவனத்தின் வணிகக் கமுக்கங்கள் வரிசையாக வரத்தொடங்கு கின்றன. வரட்டும். இன்னும் கேட்போம்.

ஆனாலும் இவர்களை நாம் உடனடியாகக் கழற்றிவிட முடியாது. தொடர்ந்து சில ஆவணங்களில் அவர்களுடைய கையெழுத்து நமக்குத் தேவைப்படும். அதற்காக இந்த முகாம் முடியும்வரை ஒரு தொகையை அவர்களுக்கு மாதச் சம்பளமாகக் கொடுக்கிறோம். அதையொரு பெருமையாகக் கருதி அவர்கள் மாதா மாதம் வந்து அதைப் பெற்றுச் செல்வதைப் பார்க்க எனக்கே இரக்கமாகத்தான் இருக்கிறது. ஆனாலும் என்ன செய்ய முடியும்? இதிலும் ஒருமுறை அவசரமாக அவர் களுடைய கையெழுத்து தேவைப்பட்டது. புக்கிட் கரம்பில் உள்ள அவர்களின் வீட்டைத்தேடி போனேன். அப்போது அவர்களுடைய பெருமிதத்தைப் பார்க்க வேண்டுமே. ஒரு நிறுவனமே தங்கள் வீடு தேடிவரும் பெருமிதம். ஆனாலும் இவர்கள் பாவம். இதில் இருவர் கைநாட்டுகள். மற்ற இருவரும் சும்மா பெருமைக்காகக் கோணலாகத் தாங்கள் கிறுக்குவதைக் கையெழுத்து என்று நினைத்துக்கொண்டிருக் கிறார்கள்.

ஆக இரு கைநாட்டுகளையும் இரு கோணல் கையெழுத்துக்களை யும் ஒன்று சேர்த்த அந்நியச் செலாவணி இந்தக் காட்டைக் காலி செய்யப்போகிறது.

**இலைகளின் இசை**

முதன்மை முகாம் அமையும் இடத்தில் பணி தொடங்கிவிட்டிருக்கிறது. மொத்தம் மூன்று டிராக்டர்கள் அவ்விடத்தைச் சமப்படுத்தி நிரவும் வேலையைச் செய்துகொண்டிருக்கின்றன. பெரிய விளையாட்டுத் திடல் அளவுக்கு அந்த இடத்தின் பரப்பளவு இருக்கப் போகிறது. வெகுநேரம் மேற்பார்வையிட்ட பிறகு ஓமர் அங்கிருப்பதால் புதிய சாலையில் காலாற நடக்கத் தொடங்குகிறேன். சாலையை அமைத்த போது வெட்டப்பட்ட வழியிலிருந்த மரங்களெல்லாம் கட்டைகளாக மாற்றப்பட்டு சாலையோரங்களில் வைக்கப்பட்டிருக்கின்றன.

சாலையில் ஒரு கல் தொலைவுக்கு நடந்துவந்தபின் சாலையோரக் கட்டை ஒன்றின்மீது யாரோ ஒருவர் படுத்திருப்பது தெரிகிறது. ஒல்லி யான உருவத்தையும் நீண்ட தலைமுடியையும் பார்த்ததும் உடனேயே அடையாளம் தெரிகிறது. இது ஜோஸ். சாலையை மேடுபள்ளமின்றி நிரவிச் சமப்படுத்தும் வண்டியின் ஓட்டுநர். டிராக்டர்கள் அந்த

வேலை செய்வதால் இன்று அவ்வண்டிக்கு வேலை இல்லை. அதனால் தான் இப்படி ஓர் ஓய்வா?

ஜோஸ் பணியில் சேர்ந்தபோது நேராக இரண்டாவது முகாமுக்குத் தங்க வந்துவிட்டதால் இன்னமும் சரியாகப் பேசிப்பழக வாய்க்க வில்லை. எங்கள் வண்டியில் சாலையைக் கடக்கும்போதெல்லாம் ஒரு வாக்மேனை காதில் மாட்டியபடியே தன் வண்டியை மும்முரமாக இயக்கிக்கொண்டிருக்கும் ஜோஸ் புன்னகையாலேயே தன் வணக்கத் தைத் தெரிவிப்பது வழக்கம். ஏனோ ஜோஸைப் பார்த்தவுடனேயே பிடித்துப்போனது. சமவயது காரணமா? இல்லை, எப்போதுமே புன்னகை தவழும் இனிய முகமா? ஆனால் முகாமிலிருக்கும் எவருமே ஜோஸுடன் சரிவர நெருங்கிப் பழகுவதில்லை. இப்படியொரு இளைஞனை எப்படி இவர்களால் தவிர்க்க முடிகிறது? ஆனால் ஜோஸ் இதைப் பற்றியெல்லாம் பெரிதாக அலட்டிக்கொண்டது போல தெரியவில்லை. எப்போதும் வாக்மேன். இசை. புன்னகை.

கண்களை மூடிப் படுத்திருக்கும் ஜோஸின் காதுகளில் எப்போதும் தொங்கிக்கொண்டிருக்கும் வாக்மேன் வயரைக் காணவில்லை. ஒருவேளை தூக்கம்போலும். தூங்கட்டும். கடந்து நடந்தபோது துவான் எனக் குரல் கேட்கிறது. ஜோஸ்தான். திடீரென எழுந்து கொள்வான் என எதிர்பார்க்கவில்லை. நீ தூங்கிக்கொண்டிருக்கிறாய் என்று நினைத்தேன் என்கிறேன்.

தூங்கவில்லை துவான். சும்மாதான் கண்களை மூடிப் பாடலை கேட்டுக்கொண்டிருந்தேன்.

பாடலா? வாக்மேனே இல்லை?

நான் கேட்டுக்கொண்டிருந்தது காட்டின் பாடல் துவான்.

ஒன்றும் விளங்காமல் பார்க்கிறேன். ஆமாம் துவான். நாள் முழுக்க வண்டியின் இரைச்சலிலேயே இருந்துகொண்டிருக்கிறேன். அதனால் இன்று இப்படித் தனியாகவந்து காட்டின் பாடலைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். கேட்டும் ரொம்பநாள் ஆகிவிட்டது. கேட்க வேண்டும் போல இருந்தது. அதுதான் இப்படித் தனியாக வந்து சாய்ந்துவிட்டேன்.

இதெல்லாம் சரி. அது என்ன காட்டின் பாடல்?

அதுவா? அது வழக்கமாக நான் வாக்மேனில் கேட்கும் பாட்டுப் போல கிடையாது துவான். அந்தப் பாட்டுக்குச் செவியும் மனசும் போதும். கேட்டு விடலாம். ஆனால் இந்தப் பாட்டுக்கு ஆன்மாவும் சேர வேண்டும்.

ஆன்மாவா?

ஆமாம். மனசை ஒரு நூலாக்கி அதில் ஆன்மாவை மணியைப் போலக் கோர்க்க வேண்டும்.

என்ன சொல்ல வருகிறாய் ஜோஸ்?

இதோ இக்காற்று வீசுகிறது பாருங்கள். இக்காற்றுக்கு முன்பு இந்த ராக், டிஸ்கோ, ஜாஸ் எல்லாம் ஒன்றுமே கிடையாது துவான். இதுதான் அடிப்படை சுரம். இந்தச் சுரம் இக்காற்றின் வேகம், இக்காற்று வீசும் திசை இவற்றுக்குத் தகுந்தபடி மாறிக்கொண்டேயிருக்கும். அது மட்டுமல்ல இக்காற்றில் இலைகள் உரசும் ஓசையைக் கொஞ்சம் கேளுங்களேன்.

ஜோஸினுடைய உதடுகள் இணைந்துகொள்ள, இமைகளோ தானாகக் கவிழ்ந்துகொள்கின்றன. உள்ளுக்குள் ஏதோ ஒரு ரசனை ஓடிக் கொண்டிருக்கவேண்டும். முகத்தில் ஒளி படர்வது போலத் தெளிவு. இலைகள் உரசும் ஓசையா? இப்படியெல்லாமா ஓர் ஓசை இருக்கிறது? இந்தத் தொல்குடிகள் எல்லாம் ஒருவகையாய்த்தான் பேசுவார்களோ? ஜோஸையே உற்றுப்பார்த்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறொன்றும் தோணவில்லை. அந்தக் கவிழ்ந்த இமைகள் நிமிர்கின்றன.

பார்த்தீர்களா துவான். மரத்துக்கு மரம் இலைகள் உரசும் ஓசையில் கூட எவ்வளவு வேறுபாடு? சொரசொரப்பான இலைகளுக்கென்று ஓர் ஓசை. வழுவழுப்பான இலைகளுக்கு வேறு ஓசை. அதுவே தடித்த இலைகள் என்றால் தனி ஓசை. இவையெல்லாம் தனித்தனிப் பண்கள் அல்லாமல் வேறு என்ன? இதோடு கூடுதலாகக் கேட்கும் சிள்வண்டுகளின் ஓசை, பறவைகளின் குரல்கள் இவையெல்லாம் தாளங்கள். இவை அனைத்தையும் சேர்த்த முழு இன்னிசை நிகழ்வே காட்டின் பாடல். மற்ற நேரங்களில் நான் வாக்மேனில் கேட்கும் பாடல்கள் எல்லாம் இதற்கு முன் எம்மாத்திரம் சொல்லுங்கள்.

அப்படியென்றால் அந்த இசையை உனக்கு இந்த அளவுக்குப் பிடிக்காதா?

எனக்கு இசை மிகவும் பிடிக்கும் துவான். அதனால்தான் இருக்கும் இடத்துக்குத் தகுந்தபடி ரசித்துக்கொண்டு ஓடுகிறது என் வாழ்க்கை. நீரினுள் துடுப்பு துழாவும் ஒலியைவிட மழைத்துளி வீழும் ஓசை மேன்மையான இசை. அதனால் இப்படித் தனியே வந்து படுத்து இப்பாடலைக் கேட்டுக்கொண்டிருந்தால் என் கம்போங் நினைவு வந்துவிடுகிறது. சற்றுநேரம் அங்கு சென்று வாழ்ந்துகொள்கிறேன். இப்பாடலில் கொஞ்சம் சுதி பிசகினாலும் அதாவது ஓர் அந்நியக் குறுக்கீடு வந்தாலும் தெரிந்துவிடுகிறது. அதுதான் நீங்கள் வரும்போது கண்களை மூடிப்படுத்திருந்த நான் எழுந்துவிட்டேன்.

ஜோஸ் இந்தளவுக்குப் பேசக்கூடிய ஆளா? இந்த உரைகள் எல்லாம் தேர்ந்த இசையறிவு கொண்டது. இயற்கையைக் குறித்து கவிஞரைப் போல விவரிக்கும் திறமை. ஓர் அரைக்கால் சட்டையும்

கைப்பனியனும் அணிந்து தூசு மண்டலம் சூழ ஒரு வண்டியை இயக்கிக் கொண்டிருக்கும் இளைஞருக்குள்ளா இவ்வளவு கற்பனைகள் பொங்குகின்றன? இந்தக் காட்டில் காற்று வீசுகிறது. அது தெரிகிறது. இலைகள் அசைகின்றன. அதுவும் தெரிகிறது. சிள்வண்டு ஒலிப்பதும், பறவைகள் சிலம்புவதும்கூட கேட்கின்றன. ஆனால் இந்த இளைஞன் சொல்லுவது போல் இவையெல்லாம் ஒருமுறைகூட என் கற்பனைக்குள் வந்ததில்லை. தொடக்கத்தில் என்னவோ சொற்கள் வந்ததே? மனசை ஒரு ஒரு... ஆம் மனசை ஒரு நூலாக்கி அதில் ஆன்மாவை மணியைப் போலக் கோக்க வேண்டும். என் மணியும் நூலும் ஒன்று சேரவில்லையா? அல்லது என்னிடம் மணியே இல்லையா?

என்ன துவான் அப்படிப் பார்க்கிறீர்கள்?

ஏன் ஜோஸ் நீ கதையெல்லாம் நிறைய படிப்பாயா?

இல்லை துவான். எதற்குக் கேட்கிறீர்கள்?

பின் எப்படி இவ்வளவு கற்பனையோடு பேசுகிறாய்?

எனக்குத் தெரியாது துவான். நாங்கள் வாழ்வதே இப்படித்தான். அதைத்தான் நான் சொன்னேன்.

சரியான அடி கொடுத்தாய் ஜோஸ். கற்பனை என்பது ஏதோ வாழ்க்கைக்கு அப்பாற்பட்ட ஒன்று என்பதுபோல வாழ்வதல்லவா எமது வாழ்வு. இருந்தாலும் இயற்கையை ரசிப்பவன் என்பதை இப்போது ஜோஸிடம் எப்படியாவது உணர்த்தவேண்டும். அருகிருந்த சிறுசெடியின்மேல் ஒரு சிலம்பன் குருவி வந்தமர்வதைப் பார்க்கிறேன். அது சிலம்புகிறது. ஃபிம்ஃபி...ஃபிம்ஃபி...

இந்தச் சிலம்பனின் குரலே நல்லதொரு இசை என்கிறேன்.

ஜோஸ் இதழ்களில் முதலில் குறுநகை தவழல். நகை நழுவி இதழ் பிரிகிறது. இதுதான் நாம் செய்யும் தவறு. துவான் என்றால் அது உங்கள் உடலும் மனசும் சேர்ந்ததுதானே துவான். மனசு ஒரு துவான், உடம்பு ஒரு துவான் இல்லையே? அல்லது தலை வேறு துவான், கை வேறு துவான், கால் வேறு துவானும் இல்லை. இக்காட்டில் எதையும் தனித்தனியாகப் பிரித்து ரசிக்காமல் முழுமையாக ரசிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும் துவான். தவறாக நினைக்காதீர்கள். இப்படித்தான் என் தாத்தா சொல்லிக் கொடுத்திருக்கிறார்.

ஆக நான் இன்னும் இயற்கையைக் கற்றுக்கொள்ளவேயில்லை என்று சொல்லாமல் சொல்லும் சொற்கள் இவை. உண்மையாகவும் இருக்கலாம். இனியாவது கற்க முயல்வோம். விடைபெற்றுத் திரும்புகையில் ஜோஸ் என் இதயத்தில் ஓர் இருக்கை போட்டு அமர்ந்திருப்பதைத் தெளிவாக உணரமுடிகிறது.

வண்டியில் வீட்டுக்குத் திரும்புகையில் இன்னமும் ஜோஸ்

அங்கேயே படுத்திருப்பதைக் கண்டதும் கையசைக்கிறேன். வண்டி சற்று நகர்ந்ததும் ரோஸ்லானிடமிருந்து எச்சரிக்கை ஒன்று வருகிறது. ஜோஸிடம் அதிகம் பழக்கம் வைத்துக்கொள்ளாதீர்கள் துவான்.

ஏன் அப்படிச் சொல்கிறாய் ரோஸ்லான்? ஜோஸும் உன்னைப் போலவே ரொம்ப நல்ல பையன்.

நீங்கள்தான் துவான் ரொம்ப நல்லவராக இருக்கிறீர்கள். எல்லோரையும் அப்படியே நம்பிவிடுகிறீர்கள். அவன் யார் என்று தெரிந்தால், இப்படிச் சொல்ல மாட்டீர்கள்.

சரி, யார் என்று நீயே சொல்.

அவன் ஒரு முருட், துவான்.

இருக்கட்டும், அதனால் என்ன?

துவான்... என்று ஏறக்குறைய அலறுகிறது ரோஸ்லானின் குரல். உங்களுக்கு முருட் இனம் பற்றி ஒன்றுமே தெரியவில்லை என்று நினைக்கிறேன். அதுதான் இப்படி அலட்சியமாகப் பேசுகிறீர்கள். முதலில் அதைப்பற்றித் தெரிந்துகொண்டு அப்புறம் பேசுங்கள் என்று சொல்லிவிட்டு பொய்யான சினத்தோடு வண்டியை நேரே பார்த்து ஓட்டத் தொடங்கிய ரோஸ்லானுக்கு எப்படிப் புரிய வைப்பது என்று தெரியவில்லை. திரும்பி ஓமரைப் பார்க்கிறேன். அவரும் அமைதியாக அமர்ந்திருக்கிறார்.

அன்றைய இரவு உணவு முடிந்ததும் ரோஸ்லான் சொன்னது குறித்து ஓமரிடம் கேட்கிறேன். அவரோ உன்னிடம் போர்னியோ குறித்துச் சில நூல்கள் கொடுத்தேனே? அதில் தொல்குடிகள் பற்றி இருக்கிறது. அதில் முருட் பற்றியும் இருக்கிறது. அதை முதலில் படித்துப்பார் எனச் சொல்லிவிட்டுப் பழைய சஞ்சிகைகளைப் படிக்கத் தொடங்குகிறார். ஓமர் நல்ல படிப்பாளி. இருவருமே அலுவலகத்திலிருந்து பழைய இதழ்கள் வந்தாலே போதும். அதில் வரும் விளம்பரம் முதல்கொண்டு அச்சிட்டு வெளியிட்டவர் வரை தினமும் படித்து முடித்துவிடுவோம். உள்ளே சென்று அந்தப் புத்தகத்தை எடுத்துவந்து படிக்க அமர்கிறேன்.

முருட்

முருட் குடிகள் தலைவேட்டைக்குப் பெயர் போனவர்கள். ஒரு காலத்தில் எதிரிகளின் தலையை வெட்டிச் சேகரிப்பது முருட் சமூகத்தில் மதிப்புமிக்க ஒன்றாக இருந்திருக்கிறது. ஒரு முருட் குடிமகன் எவ்வளவுக்கெவ்வளவு பிற இனக்குழு மக்களின் தலையைச் சேகரிக்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் பெரும் வீரனாக மதிக்கப்பட்டிருக்கிறான். அப்படிக் கொய்யப்பட்ட தலையோடு வரும் அவனை இந்த இனப்பெண்கள் ஆடல் பாடலோடு வரவேற்று

இருக்கிறார்கள். ஆனால் காலப்போக்கில் இது சுருங்கி ஒரு முருட் இளைஞன் ஒரு முருட் பெண்ணை மணம் கொள்ள வேண்டுமானால் அவளது தந்தைக்கு ஒரு தலையையாவது கொடையாகத் தரவேண்டு மென ஆகியிருக்கிறது. பின்னர் பிரித்தானியர் ஆட்சியில் இப்பழக்கம் கடுமையான தடைகளுக்கு உட்பட்டதால் அடியோடு நின்றும் போய்விடுகிறது.

ரோஸ்லான் அச்சப்பட்டது அவனளவில் நியாயம்தான் என்றாலும் இப்பழக்கம் இன்று இல்லாதபோது ஏன் இப்படி அச்சப்பட வேண்டும்? இனிய புன்னகை புரியும் ஜோஸின் முகம் நினைவுக்கு வருகிறது. ஒரு வாளை எடுத்துக்கொண்டு போய் யார் தலையை யாவது வெட்டிக் கொண்டு ஜோஸால் வரமுடியுமா? சிரிப்பு வந்து விடுகிறது.

நள்ளிரவில் இப்படித் தனியே அமர்ந்து சிரித்தால் மறுபடியும் பேய்க்கிழவர் வந்துவிட்டார் என நினைத்துக்கொள்ளப் போகிறார்கள். ஓமரின் குரல். சிறுநீர் கழிக்க எழுந்து வந்திருக்கலாம். மணியைப் பார்க்கிறேன். ஒன்று. உணவுமேசையில் அமர்ந்து, அங்கு தொங்கிய ஒற்றை விளக்கு வெளிச்சத்தில் படித்துக்கொண்டிருந்தேன். கையி லிருந்த புத்தகம் படித்து முடிக்கப்பட்டிருப்பதைப் பார்த்துவிட்டு எல்லா உணவையும் ஒரேவேளையில் சாப்பிட்டு விட்டாயா என வியக்கிறார்.

சிரிப்பை உதிர்த்துவிட்டு ஓர் அய்யம் என்றதும் இவ்வளவு சாப்பிட்ட பிறகும் பசியா என்கிறார். சிரித்துக்கொண்டே கேட்கிறேன்.

முருட் மக்களிடம் தலைவெட்டும் கலாச்சாரம் இன்னும் இருக் கிறதா என்ன?

ஓமர் இல்லையெனத் தலையாட்டுகிறார். பின் ஏன் ரோஸ்லானிடம் இன்னும் அந்த அச்சம் இருக்கிறது? ரோஸ்லான் மட்டுமல்ல முகாமில் உள்ள மற்றவர்களும் ஜோஸிடத்து நெருங்கிப் பழகாததற்கு இதுதான் காரணம் என்று இப்போதுதான் புரிகிறது. அதனால்தான் கேட்கிறேன்.

எல்லாம் பழைய எச்சம்தான் காரணம். எடிசன் மின்விளக்கைக் கண்டுபிடித்து இருட்டோடு பேய் பிசாசையும் சேர்த்து விரட்டினார். இருப்பினும் மக்கள் இன்னும் அதை நம்புகிறார்களே? ஏன் அமெரிக்கக் காரர்களே பேய் பிசாசுக்கென்று ஒரு விழாவையே இன்னும் கொண்டாடவில்லையா? அதுபோலத்தான் இதுவும். டெனோம், பென்சியான்கன் போன்ற நகரங்களில் இருக்கும் முருட் மக்களைக் கண்டு யாரும் அச்சப்படுவதில்லை. அதேசமயம் உலு பகுதியில் இருக்கும் முருட்களைப் பார்த்து இன்னமும் தேவையற்ற அச்சத்தைக் கொண்டிருக்கிறார்கள். ஜோஸ் உலு பகுதியிலிருந்து வந்தவர். அதுதான் காரணம்.

ஆனால் ஜோஸ் ரொம்ப நல்லவன். அவன் நெருங்கிய நண்பனாக இருப்பான் என்று தோன்றுகிறது. இப்போது அவன் துவான் என்று அழைக்கிறான். நாளை சந்திக்கும்போது அவனிடம் இனி கவான் என்று கூப்பிடச் சொல்லப்போகிறேன்.

சரி கவான். இப்போது நீ போய்த் தூங்கலாம். ஓமர் சிரிக்கிறார்.

# 7

*சக்கரம்... கடவுள்... கால்கள்*

'சலாமத் டத்தாங், துவான் ஹூத்தாம்'

பகலுணவுக்குத் திரும்புகையில் யொகன்னா இப்படி வரவேற்றதும் ஒன்றும் விளங்கவில்லை. வழக்கமான துவான் என்ற சொல்லோடு இன்று எதற்காகக் கூடுதலாகக் கருப்பு என்றொரு சொல்லும் சேர்ந்திருக்கிறது? தவறாக நினைத்துக்கொள்ள வேண்டாம், உங்களைத் தேடிவந்த ஒருவர் உங்களைப் பற்றி இப்படித்தான் விசாரித்தார் எனத் தயங்கியபடியே வருகிறது யொகன்னாவின் குரல். யாரென விசாரிக்கிறேன்.

தெரியவில்லை. அவர் ஒரு முதியவர். வந்தவர் உங்களைப் பற்றிக் கேட்டார். பிறகு இந்த மீன்களைக் கொடுத்துவிட்டுச் சற்றுநேரத்தில் வந்துவிடுவதாகச் சொல்லி காட்டுக்குள் சென்றிருக்கிறார்.

எல்லாமே கெளுத்தி மீன்கள். நான்கு பெரிய ஆற்றுக்கெளுத்திகள். ஒவ்வொன்றும் நான்கைந்து கிலோக்களாவது இருக்கும். யாரிடமும் மீன்களைக் கேட்கவில்லை. யார் கொண்டு வந்திருப்பார்கள்? யொகன்னா விவரிக்கும் அடையாளத்தைப் பார்த்தால் எங்கேயோ பார்த்ததுபோல் இருக்கிறது. யாராக இருக்குமென நினைக்கிறாய் என்ற ஓமரின் கேள்விக்கு அதைத்தான் யோசித்துக்கொண்டிருக்கிறேன் என்கிறேன்.

யொகன்னாவிடம் இருந்து அம்மீன்களை வாங்கி கழுவிக்கொடுப்பதற்காக போட்டி நடக்கிறது. ஓமர் சொல்லியிருந்தது சரிதான். இப்போது பலருடைய கண்களுக்கும் யொகன்னா பேரழகி. யொகன்னா உண்மையிலே அழகிதான். ஒருவகையான தொல்குடி அழகு. அன்று வந்திறங்கியபோது இருந்த பயணக்களைப்பும் அலைச்சலும் தவிர, இவர்களிடமிருந்த மிகை எதிர்பார்ப்பும் ஏமாற்றத்தைத் தந்ததுபோல் இருந்திருக்கலாம். ஆனால் அதெல்லாம் பழைய கதை. இன்று அனுமதி கிடைத்தால் திருமணம் செய்து விடுவார்கள்.

சாப்பிடும்போதும் அது யாராக இருக்கும் என்ற யோசனை ஓடிக்கொண்டேயிருக்கிறது. சட்டென்று ஓர் எரிகல் பொறியின் தீற்றல். அன்றிரவு பங்கலானில் பார்த்த பெரியவராக இருக்குமோ? இருக்கலாம். யொகன்னா சொன்ன அடையாளங்கள் அனைத்தும் பொருந்துகின்றன. ஆனால் அவரிடம் மீன்கள் ஏதும் கேட்கவில்லை. இருப்பினும் அவரை ஒருமுறை முகாமுக்கு வந்துசெல்லுங்கள் என்று அழைத்தேன்.

மனசின் வரிகளைப் படித்துவிட்ட ஓமர் யார் என்று தெரிந்து விட்டதா என்று கேட்கிறார். தெரிந்துவிட்டது எனச்சொல்லி அன்றிரவு நடந்த விவரங்கள் அனைத்தும் சொல்கிறேன்.

நீ சொல்வதைப் பார்த்தால் இம்மனிதர் இன்னமும் பழைய ஆத்மாவோடு வாழும் மனிதராகவே இருக்கிறார். அதுதான் அந்த வலியோடு பேசியிருக்கிறார். இப்போதெல்லாம் கொஞ்சம் பேர்தான் இப்படி வாழ்கிறார்கள். இந்த மழைக்காலம் வந்தவுடன் பாரேன். எத்தனை தொல்குடி மக்கள் இங்குவந்து கட்டை வேண்டுமா எனக் கேட்கிறார்கள் என்று. இவர்களும் நகரத்தில் வாழும் வணிகர்களின் மனநிலைக்கு வந்து வெகுநாட்களாகிவிட்டது.

கட்டை விற்பார்களா?

ஆமாம். மழைக்காலம் வந்தவுடன் ஆறுகளில் வெள்ளம் பெருகும். அப்போது கரைகளில் இருக்கும் மரங்களைத் திருட்டுத்தனமாக வெட்டி நீரில் மிதக்கவிட்டு எடுத்துச்சென்று ஓரிடத்தில் சேர்த்து வைத்துக் கொள்வர். இதை விற்க கான்துறையின் அனுமதிப் பத்திரம் வேண்டும். அவர்களால் அதைப்பெற முடியாது. எனவே நம்மைப் போன்ற நிறுவனங்களை அணுகுவார்கள். நிறுவனங்களும் அதை ஒன்றுக்குப் பாதி விலையில் வாங்கி தன்னுடைய காட்டுப் பகுதியிலிருந்து வெட்டி யெடுத்ததுபோல் கணக்கில் சேர்த்துவிடுவார்கள். பேராசை என்ற ஒன்றைக் கற்றுக்கொண்டு விட்டால் பிறகு நகரத்து மனிதன் என்ன? கானக மனிதன் என்ன? எல்லாமே ஒன்றுதான்.

தொடக்கத்திலிருந்தே இவர்கள் இப்படித்தானே இருந்திருக் கிறார்கள்? இல்லையெனில் குருவிக்கூடு வணிகம் தொடங்கியிருக்குமா?

அப்படிச் சொல்ல முடியாது. சீன வணிகர்கள் இப்பகுதிக்குள் நுழைந்திராவிட்டால் இந்தக் குருவிக்கூடுகள், யானைத் தந்தங்கள், இருவாசிகளின் அலகுக்கொண்டைகள் போன்றவற்றை விற்கலாம் என்பதே இவர்களுக்குத் தெரிந்திராது. மிஞ்சிப்போனால் சில காட்டுயிர் பொருட்களைத் தங்கள் பண்பாட்டு அடையாளங்களுக்குப் பயன் படுத்தி இருக்கலாம், அவ்வளவுதான்.

இதையெல்லாம் மீறித்தான் இந்தப் பெரியவர் போல இன்னும் சிலர் இருக்கிறார்களோ என நினைத்துக்கொண்டிருக்கும்போதே அவர் உள்ளே நுழைகிறார். கைகளில் ஒரு கொத்து மீனாங்கீரைக் கொழுந்து. நீண்ட பச்சைநிறத் தண்டின் நுனி இளம்பழுப்பில் மரவட்டையைப் போல் சுருண்டிருக்கிறது. அதை யொகன்னாவின் கைகளில் கொடுக் கிறார். முகாமுக்கு வரும்போது வெறும் கையோடு வரக்கூடாது என்று நினைக்கிறாரா? வாங்க பிலியவ் என்ற வரவேற்புக்கு அதே அழகிய மொழியில் பதில். அது பகலில் இன்னும் தெளிவாகத் தெரிகிறது. ஓமரை அறிமுகப்படுத்தி வைக்கிறேன். அதற்கும் அதே மொழி. உணவு

உன்னை அழைக்கிறோம். தயங்கியவர் எல்லோரும் வற்புறுத்தியதும் ஒத்துக்கொள்கிறார். ஆனால் மேசையில் அமரவில்லை. தரையில் அமர்ந்துகொள்கிறார். கொஞ்சம் சோறு, முட்டைக்கோசு, கடுகுக்கீரை கலந்த காய்கறி சூப், வெள்ளரிப் பச்சடி, ஆம்லெட் இவற்றை எடுத்துக்கொள்கிறார். டப்பா உணவை அறவே மறுக்கிறார். உண்டு முடித்து வந்து அமர்ந்தவரிடம் ஓமர் மெல்ல விசாரணையைத் தொடங்குகிறார்.

பிலியவுக்கு எந்த கம்போங்? உலு.

சிரித்து விடுகிறேன். என்றைக்கு விசாரித்தாலும் இதே பதிலைத் தான் சொல்வாரோ? ஓமரும் சிரித்துக்கொள்கிறார். பிறகு அடுத்த வினாவைத் தொடுக்கிறார். பிலியவ் என்ன திடோங் இனமா? அன்று அவரிடம் நீங்கள் சுங்கை இனமா என்று கேட்ட கேள்விக்கு பதில் கிடைக்காததால் இனத்தை மாற்றிக் கேட்கிறார். கேட்கட்டும், பெரியவர் என்ன பதில் சொல்லப்போகிறார் என்று பார்ப்போம். பதிலாகக் கிடைத்தது ஓர் அழகிய புன்னகை, அதுதானே பார்த்தேன்? மீண்டும் சிரிக்கிறேன்.

ஓமருக்கு உதவியாக வந்த காடோ அவரிடம் டுசுன் மொழியில் ஏதோ கேட்க அவரும் டுசுன் மொழியிலேயே பதில் சொல்லுகிறார். உடனே அவரிடம் பிலியவ் நீங்கள் டுசுன்தானே? என்கிறேன். மீண்டும் அதே அழகியமொழி. ஓமர் அவரது முகத்தையே வெகுநேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறார். குரலைக் கனைத்துக்கொண்ட ஓமர் சொல்கிறார். நாளை எங்கள் முகாம் வீட்டைக் கட்டத் தொடங்கலாம் என நினைக்கிறோம். பிலியவ் வந்து அனுமதி வாங்கித்தர வேண்டும்.

இக்கேள்விக்கு அவரிடமிருந்து உடனடியாகப் பதில் ஏதும் வர வில்லை. கொஞ்சம் தயங்கியது போல அமர்ந்திருந்தவர் சற்றுப் பொறுத்துக் கேட்கிறார். நானா வரவேண்டும்?

ஆமாம். உங்களைப் போன்ற பெரியவர்கள் இதை செய்துதந்தால் நன்றாக இருக்கும் என்ற ஓமரின் மறுமொழிக்கு மீண்டும் சற்றுநேர அமைதிக்கு பிறகு வாய் திறக்கிறார். எப்போது வரவேண்டும்?

ஓமரின் முகம் மலர்கிறது. நாளைக்கே என்று சொல்லியவர் முகாம் அமையப்போகும் இடத்தை விவரிக்கத் தொடங்குகிறார். இடைமறித்த பிலியவ் கேட்கிறார். இச்சாலை அந்த இடத்தில்தானே சென்று முடிகிறது? எத்தனை மணிக்கு வரவேண்டும் எனச்சொல்லுங்கள். வந்துவிடுகிறேன்.

பொழுது விடிந்ததும் தொடங்க வேண்டியதுதான். இங்கேயே தங்கிக்கொள்ளுங்கள். காலையில் வண்டி போகும்போது சேர்ந்து போய்விடலாம் என சொல்லிக் கொண்டிருக்கும்போதே இல்லை, தங்க இயலாது. ஆனால் கட்டாயம் காலையில் வந்துவிடுகிறேன் என்று

எழுந்துகொள்கிறார். அவர் விடைபெற்றுச் சென்றதும் ஓமர் இவர் எங்கே தங்கியிருக்கிறாரெனத் தெரியுமா எனக் கேட்கிறார்.

அவர் நடமாடும் வீடு வைத்திருக்கிறார். அதன் பெயர் படகு. அந்த வீடு இப்போது எங்கே இருக்கிறது என்பது அவருக்கு மட்டும்தான் தெரியும் என்று பதில் சொல்லிவிட்டு ஆமாம் அவரிடம் என்னவோ அனுமதி, அனுமதி என்று கேட்டீர்களே அவர் என்ன கான் துறை அலுவலரா என்கிறேன்.

கான் துறை அலுவலர் இல்லை. கான் குடிமகன். இது ஒரு நம்பிக்கைச் சடங்கு. அமையப்போகும் வீட்டுக்கும் அதில் வசிக்கப் போகிறவர்களுக்கும் எந்த இடையூறும் வரக்கூடாது என்பதற்காக நடத்தப்படுவது. இதை அவரவர் மதச்சடங்கின்படி நடத்திக் கொள்ளலாம். நானே முறைப்படி ஓதி நடத்திவிட முடியும். ஆனாலும் இக்காட்டுக்கு நானும் அந்நியன்தான். அவரோ இக்காட்டின் மைந்தன்.

அவர் என்ன செய்வார்?

ஓரிடத்தில் வீடுகட்ட வேண்டுமென்றால் எந்த இடத்தில் வீடுகட்ட வேண்டுமோ அந்த இடத்துக்கு அருகிலுள்ள முதிர்ந்த மரத்திடம் அனுமதி கேட்டுத்தான் தொல்குடிகள் வீடுகளைக் கட்டுவார்கள். இதுதான் அனுமதி கேட்டல். இந்த அனுமதி மறுக்கப்படும்போது அங்கு வீடுகளைக் கட்டமாட்டார்கள். இச்சடங்குக்குப் படையல் இடுவார்கள். வெள்ளைக் கோழி, பன்றி, சோறு, பலகாரங்களை வைத்துப் படைப்பது வழக்கம். இங்கு பன்றியைத் தவிர மற்ற அனைத்தும் இருக்கிறது. எப்படியும் நாளை இவர் வருவாரென்று நம்புவோம்.

காடோவிடம் கேட்கிறேன். அவரிடம் பேசிக்கொண்டிருந்தீர்களே காடோ, அவர் டுசுன்தானே?

இல்லை. அவர் டுசுன் மொழி பேசுகிறார். ஆனால் டுசுன் இல்லை. ஒருவேளை முருட் இனமாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. ஏனெனில் அவரது காலில் ஒரு முதலை உருவத்தைப் பச்சை குத்தியிருக்கிறார். முருட் மக்கள்தான் காலில் இப்படிப் பச்சை குத்தி இருப்பார்கள்.

மறுகணமே ஜோஸ் காலில் ஏதும் அப்படிப் பச்சை குத்தியிருக்கவில்லையே என்ற கேள்வி உள்ளுக்குள் வர காடோவிடம் கேட்கிறேன்.

அது முருட் இன மக்களின் வழக்கம் என்பதால் அப்படிச் சொன்னேன். மற்றபடி ஜோஸ் ஏன் பச்சை குத்திக்கொள்ளவில்லை என்பது பற்றி எனக்கென்ன தெரியும்? தவிர இப்போதுள்ள இளைய தலைமுறையினர் பழைய வழக்கத்தைக் கடைப்பிடிப்பது இல்லை என்கிற காடோவின் பதிலிலும் உண்மை இருக்கிறது.

எதிர்பார்த்தபடி பிலியவ் விடிந்து வரவில்லை. படையலுக்கான பொருட்கள் வண்டியில் ஏற்றப்பட்டு ஆட்களும் காத்திருக்கிறார்கள். ஞாயிறும் தோன்றப்போகிறது. இனிமேலும் தாமதிப்பதில் பயனில்லை. ஓமரின் முகத்தில் ஏமாற்றம் அப்பட்டமாகத் தெரிகிறது. வேறு வழியின்றி கிளம்பிவிடுகிறோம். இங்கிருந்து அந்த இடம் இருபது கிலோமீட்டர் தொலைவு. வழியில் இரண்டாம் முகாமில் இருந்த ஆட்களையும் ஏற்றிக்கொள்கிறோம். அந்த இடத்தை அடைந்தபோது எல்லோருமே திகைத்துவிடுகிறோம். எங்களுக்கு முன்பாக அங்கு பிலியவ் காத்திருக்கிறார்.

ஓமர் ஏறக்குறைய அவரை நோக்கி ஓடுகிறார். எப்போது வந்தீர்கள் பிலியவ் என்கிற கேள்விக்குப் புன்னகையோடு காலையில்தான் வந்தேன் என்கிறார். ஓமர் கடிகாரத்தைப் பார்க்கிறார். மணி ஆறரை.

எப்படி இங்கு வந்து சேர்ந்தீர்கள் என்ற அடுத்த கேள்விக்கு நடந்துதான் என்ற பதிலை எவருமே எதிர்பார்க்கவில்லை. நடந்து என்றால்? எவ்வளவு தொலைவு? அதுவும் எத்தனை மணிக்குக் கிளம்பியிருந்தால் இந்த நேரத்துக்குள் இத்தனை கிலோமீட்டர் தொலைவு வந்து சேர்ந்திருப்பார்? இவர் மனிதர்தானா? ஏன் பிலியவ், நான்தான் வண்டியில் போகலாம் என்று சொல்லியிருந்தேனே. அப்புறம் ஏன் நடந்து வந்தீர்கள் என்கிற ஓமரின் வினாவுக்கு வந்த விடை எல்லோருடைய வாயையும் அடைத்துவிடுகிறது.

எனக்கு வண்டியில் போகத் தெரியாது.

என்ன பதில் இது? எனக்கு வண்டி ஓட்டத் தெரியாது என்றுதான் கேள்விப்பட்டிருக்கிறோம். வண்டியில் போகத் தெரியாது என்று ஒரு பதிலா? திகைப்பு நீங்கி எல்லோருமே சிரித்துவிடுகிறோம். ஓமரும் சிரித்துக்கொண்டே, நீங்கள் மிகவும் வேடிக்கையான ஆள் பிலியவ். வண்டியில் போவதற்குக் கூடவா கற்றுக்கொள்ளவேண்டும் என்கிறார். அதற்கும் அவர் புன்னகைத்துக்கொண்டே சொல்கிறார்.

உங்கள் வண்டிக்குச் சக்கரங்கள் கண்டுபிடிப்பதற்கு முன்பே கடவுள் கால்களைக் கண்டுபிடித்துக் கொடுத்துவிட்டார். அப்புறம் எதற்கு இந்த வண்டி? அதுதான் சொன்ன நேரத்துக்கு வந்து சேர்ந்து விட்டேனே. உங்கள் சக்கரங்கள்தாம் தாமதமாக வந்திருக்கின்றன.

சொல்வது நியாயம்தான். நாம் தொடங்கலாமா பிலியவ்? தலையாட்டுகிறார். திடலுக்கும் சாலைக்கும் தென் திசையில் நின்றிருந்த பெரிய கப்புர் மரம்தான் அனுமதி கேட்பதற்காகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தது. படையல் பொருட்களை எடுத்து வைக்கத் தொடங்கு கின்றனர். சடங்கைக் காண விருப்பமற்று விலகிச் செல்கிறேன். புரிந்துகொண்ட ஓமர் ஒன்றும் சொல்லவில்லை. திடலோரமாய் இருந்த ஓடையின்மீது தாழ் பாலம் ஒன்றை அமைத்திருக்கிறார்கள்.

அக்கரையில் ஒன்பதாம் தொகுதியின் ஓரத்தில் அமையவிருக்கும் ஒப்பந்தத் தொழிலாளர் குடியிருப்புக்கான இடத்தை அது இணைக்கிறது. அதற்கப்பால் சாலை இன்னும் அமைக்கப்படவில்லை.

புதர் ஓரத்தில் ஓர் அழகுக்குருவி. சின்னக் குருவி. கீச்சான் குருவி அளவு இருக்கிறது. ஒளிர் நீலம். கருநிற இறக்கையில் வெளிர் கோடு. நீல நிற வால். மிக அழகாகப் பாடுகிறது. ப்போர் வில்ல்ல்...

எவ்வளவு இனிமையான சீழ்க்கை ஒலி. மெல்லிய ஒலிதான். ஆனாலும் இனிய இசை. இசை பாடி என்று சொல்லலாமா? வேண்டாம். காட்டின் இசையைத் தனித்தனியாகப் பிரிக்கக்கூடாது என்று தோழன் ஜோஸ் தடை சொல்வான். ஓமர் அழைக்கும் குரல் கேட்கிறது. அனுமதி கேட்டு முடிந்துவிட்டதா? எல்லோருடைய முகத்தையும் பார்த்தாலே தெரிகிறது. ஜோஸ் பிலியவிடம் பேசிக்கொண்டிருப்பது தெரிகிறது. என்ன மொழியில் பேசுகிறார்கள்? அழைத்த ஓமர் அப்பெரியவருக்கு நூறு வெள்ளி பணம் தரலாமென நினைக்கிறேன். நீயே கொடுத்து விடுகிறாயா எனக்கேட்கிறார்.

நானா? மனிதர் என்ன சொல்வார் என்று தெரியவில்லை. நீங்களே கொடுத்துப் பாருங்கள்.

முதலில் கொஞ்சம் தயங்கிய ஓமர் பிறகு அந்தப் பெரியவரிடம் நெருங்குகிறார். பிலியவ் என அழைத்து நிறுத்திவிட்டு வேறு எதுவும் சொல்லாமல் பணத்தை நீட்டுகிறார். பிலியவ் அதைக் கையில் வாங்கவில்லை. கொஞ்ச நேரம் அதை உற்றுப்பார்க்கிறார். பிறகு கழுத்தை உயர்த்தி அந்த கப்பூர் மரத்தைப் பார்க்கிறார். பிறகு ஒன்றும் சொல்லாமல் கீழே குனிந்து ஓர் இலையை எடுக்கிறார். ஓமரின் கையில் இருந்த பணத்தின்மேல் அந்த இலையை வைத்து ஒருமுறை புன்னகைத்து வேறொன்றும் சொல்லாமல் நடக்கத் தொடங்கிவிடுகிறார்.

ஓமர் கையில் பணத்தோடும் அந்த இலையோடும் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. நடந்து சென்றுகொண்டிருக்கும் பிலியவை வண்டியில் போகிறீர்களா என எவருமே கேட்கத் துணியவில்லை. என்ன பதில் கிடைக்கும் என்று எல்லோருக்கும் தெரிகிறது.

சக்கரம்... கடவுள்... கால்கள்.

**ஜெலுத்தோங் சிற்பம்**

வீடுகட்டும் பணி நடந்துகொண்டிருக்கிறது. வீட்டுச் சட்டகங்களுக்குரிய கழிகளையும் தூண்களையும் தேர்வு செய்வதில் மும்முரமாய் இருக்கிறார் ஓமர். பகல் உணவுவேளை நெருங்குகிறது. உணவை முடித்துவிட்டு மற்றவருக்கான உணவை கொண்டுவரப் பணிக்கிறார் ஓமர். ரோஸ்லானுடன் வண்டியில் புறப்படுகிறேன். முதலாம்

முகாமுக்கு அரை கிலோமீட்டர் முன்பாகவே வழியில் குரங்குக் கூட்டத்தைப் பார்த்துவிடுகிறேன். வண்டியை நிறுத்தச்சொல்கிறேன்.

க்ரா-க்ரா.

எல்லாமே அலறி குரல் எழுப்பிக்கொண்டிருக்கின்றன. பார்த்தவுடன் இவை நீளவால் குரங்குகள் என்று தெரிகிறது. மற்ற குரங்குகளைவிட இதற்கு வால் நீளம். உடலின் அளவுக்கு நீளமான வால். இதற்கு நண்டு விருப்பமான உணவு. இதைப் பார்ப்பது முதல் முறையல்ல. பாங்கவான் செல்லும் வழியில் கூட்டமாகத் திரிகின்றன. ஆனால் நெருக்கத்தில் இப்போதுதான் பார்க்கிறேன். மரக்கிளையில் அமர்ந்திருந்த அவை எங்களையே பார்க்கின்றன. இடையூறாக உணர்ந்திருக்கலாம். ரோஸ்லானிடம் நடந்து வருவதாகச் சொல்லி வண்டியை அனுப்பி வைக்கிறேன். எதிர்பார்த்ததுபோல வண்டி நகர்ந்ததும் அவை மீண்டும் சுறுசுறுப்பாகின்றன.

இருபது குரங்குகளாவது இருக்கும். சில இலைகளைப் பறித்து தின்றுகொண்டிருக்க மற்றவை தங்களுக்குள்ளாகவே ஒன்றுக்கொன்று உறுமிக்கொண்டும் சினத்துடன் முறைத்துக்கொண்டும் இருக்கின்றன. கொஞ்சநேரம் ரசித்துவிட்டுப் போகலாம் என்று முடிவெடுத்து நகரத் தொடங்குகையில் திடீரென எல்லாக் குரங்குகளும் உரத்துக் காட்டின் உட்புறம் பார்த்துக் கூச்சலிடுகின்றன. அந்தத் திசையில் இதே இனக் குரங்குகளின் இன்னொரு கூட்டம். இவை கூச்சலிட்டதைப் பார்த்தும் பதிலுக்கு அவையும் கூச்சலிட பெரும் கூச்சலால் அப்பகுதியே அமளிதுமளியாகிறது. சரியான சண்டைக்காரக் குரங்குகள். என்ன நினைத்தனவோ தெரியவில்லை. இக்குரங்குகள் அக்குரங்குகளின் கூட்டத்தைத் துரத்தத் தொடங்கின. ஆர்வத்தில் கால்களும் வேடிக்கை பார்க்க அவற்றின் பின்னாலேயே காட்டுக்குள் நுழைகின்றன. இக்கூட்டம் துரத்த அக்கூட்டம் கத்திக்கொண்டே உள்நோக்கி விரைகின்றது. கொஞ்ச தொலைவு சென்றதும் திடீரென அவை மேற்கு நோக்கித் திரும்புகின்றன. அவை போகும் திசை விடுதிருக்கும் திசைக்கு எதிர்த்திசை. இனி தொடர்வதில் பயனில்லை. திரும்பிப் போக வேண்டியதுதான். ஆமாம் ஏன் இனி சாலைக்குச் செல்லவேண்டும்? அது சுற்று வழி. இப்படியே நேராகச் சென்றால் வீடு சென்றுவிடலாம். வழியில் ஓர் ஓடையைக் கடக்க வேண்டியிருக்கும். பார்த்துக் கொள்ளலாம்.

சிறிது நடந்ததும் மரங்களினூடே வீடு தெரிகிறது. ஓடைக்குச் செல்லும் பாதையைக் குறி வைத்து நகர்கிறேன். ஓடை வருகிறது. ஓடையின் மறுகரையில் ஒரு வாளியில் துவைத்து முடித்த துணிகள் இருக்கின்றன. ஆனால் கரையில் ஆட்கள் யாரையும் காணோம். மறந்துபோய் விட்டார்களா? காலை எடுத்து ஓடை நீருக்குள் வைத்த பிறகுதான் அக்காட்சியைக் காண்கிறேன்.

ஓர் இலையுதிர் காலத்து மரம்போல் தன் ஆடைகள் அனைத்தையும் உதிர்த்திருந்த யொகன்னாவின் உருவம் நீரில் மல்லாந்து மிதந்து கொண்டிருக்கிறது. அம்மல்லாந்த மேனியின் மீது இலைகளின் நிழலினூடே ஊடுருவி வந்துகொண்டிருக்கும் வட்டக் கதிர் கண்கள் வருடிக்கொண்டிருக்கின்றன. இளம் காற்றின் இதமான தழுவலில் இமைகள் இறுக மூடிக்கிடக்கின்றன. மேனியொரு நீர்த்தாவரச் சிற்பமாய் மிதக்கிறது. இரு ஆம்பல்கள் அவிழ்ந்திருக்கின்றன. மொய்க்கும் இரு செவ்வண்டுகளுக்கும் எழுந்து பறக்கும் சிறகுகளேயில்லை. நீருக்கும்கூட வலிக்காது. அப்படி சிலையின் இரு கைகளும் துடுப்புகளைப் போல் துழாவிக்கொண்டிருக்கின்றன. பாதங்களில் மீனத்தின் வால் அசைவு. நன்னீர் மீன் கன்னி.

நீருக்குள் ஒன்று. நிலத்தில் ஒன்று. என்ன செய்வது என்றறியாது திகைக்கும் இக்கால்கள். அறிவின் விழிப்பில் 'திரும்பு, திரும்பு' என்ற உரைகள். நீருக்குள் அமிழ்ந்திருந்த கால் எழுகிறது. பரப்பு இழுவிசையும் சடத்துவமும் ஒன்று சேர்ந்தியங்கி மேலெழுந்த நீர் ஈர்ப்பு விசையிடம் தோற்றதால் கீழிறங்க நிச்சலனத்தில் உண்டான சலனம் உறைந்திருந்த நீர்த்தாவரச் சிற்பத்தை உயிர்ப்பிக்கிறது. சிற்பம் எழுகிறது. வலதுகை விரல்களை அகல விரித்து நெற்றியிலிருந்து தாடைவரை வழித்துவிட்டு நீரை துடைக்கிறது. முன்னும் நகரவில்லை பின்னும் நகரவில்லை. அப்படியே நின்றுகொண்டிருக்கிறேன். இப்போது இடைவரை மூழ்கியிருக்க நீரில் முளைத்த வெளிர் தாவரம் நின்றுகொண்டிருக்கிறது. தவறாக நினைக்கப்பட்டுவிடுவோமோ என்கிற உள்ளச்சம் சிற்பத்தின் மலர்ந்த புன்னகையில் மறைகிறது. இயல்பாக வருகிறது சிற்பத்தின் குரல். குறுக்காக நடந்து வந்தாயா?

தலையசைத்துவிட்டேன் என்றாலும் இன்னமும் நிலைக்குவர இயலாமல் தவிக்கிறேன். அச்சிலையோ மெல்ல நடந்து எதிர்க் கரையேறி முதுகுகாட்டி நிற்கிறது. கருநிற கற்றைகளில் வழியும் நீர் சிற்றோடையாய் மாறி இரட்டைக் குன்றுகளின் இடைப் பள்ளத் தாக்கில் இறங்கியோடி மறைந்து கொண்டிருக்கிறது. இதுவரை தன் தொழில் மறந்திருந்த இமைகளுக்கு அதை நினைவூட்டுகிறேன். ஒருமுறை இயங்கி முடிந்தபோது திரும்பி நின்றிருக்கிறது சிற்பம்.

பாலும் சந்தனமும் கலந்து குழப்பிய நிறத்திலிருக்கும் ஜெலுத்தோங் மரத்தில் வடித்த சிற்பம் தன்னை மறைத்துக்கொள்ள இன்னும் எம்முயற்சியும் எடுக்கவில்லை. ஒரு துவாலையைக்கூட கையால் தொடவில்லை. வாழ்வின் முதற் காட்சி. முழுக்காட்சி. முழுமுதற் காட்சி. ஏனென்றே தெரியவில்லை. கால்கள் தளர்கின்றன. இதயம் படபடக்கிறது. பார்வை அம்முகத்திலிருந்து தாழ்கிறது. குவிந்துவிட்ட ஆம்பல்களைத் தாண்டி ஓடுகிறேன். உந்திக்கிணற்றின் ஆழத்தில் விழாமல் கடந்தோடிய இடத்தில் எதிர்பார்த்திருந்த புல்வெளியைக்

காணோம். பாலை மணலின் வெண்பட்டு மென்மை. மீண்டும் இமையை இயக்குகிறேன்.

வீசும் பெருங்காற்றில் ஓர் இலைக் காம்பிலிருந்து கழன்று விடா திருக்கத் தவிக்கிறது. காற்றுக்குத்தான் வலு. அது வீழ்கிறது. இதோ தட்டுத் தடுமாறி இறங்கிக்கொண்டிருக்கிறது. நீ தாண்டிப் போகலாம் என புன்முறுவலோடு சொன்ன சிற்பம் இவ்விரல்களின் நடுக்கத்தை விநோதமாகப் பார்க்கிறது. அந்தரத்திலிருந்து மிதந்து இறங்கி வந்த அந்த இலை இப்போது நீர்மேல் வீழ்கிறது. இனி நீரின் போக்கு. அந்த இலையால் இனி தனித்தியங்க இயலாது. கால்கள் நீரில் இறங்கி துகிலணியாச் சிலையைக் கடக்கின்றன. கால்கள் மட்டுமே வீடுநோக்கி நகர்ந்து கொண்டிருக்கின்றன.

மனம் கழற்றிப்போட்ட நனைந்த ஆடையைப் போல் இன்னும் ஓடைக்கரையிலேயே கிடக்கிறது.

# 8

இரண்டாம் முகாம்

எதிரே தெரியும் மரங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அய்ந்து அடுக்குகளைக் கொண்டிருக்கிறது இக்காடு. உயர் அடுக்கு, கவிகை அடுக்கு, இளமர அடுக்கு, புதர் அடுக்கு, தரை அடுக்கு. நெடுநெடுவென வளர்ந்து இடையில் கிளைகள் ஏதும் இல்லாமல் உச்சியில் மட்டும் கிளை பரப்பியிருக்கும் மரக்குடைகள். நீண்டு வளர்ந்து பெருத்திருக்கும் இத்தண்டுகளே வெட்டுமரங்கள் ஆகின்றன. மேலேயிருந்து கழுகுப் பார்வையில் பார்க்கும்போது பசுந்தரை போல் தெரியும் கவிகை தரையிலிருந்து பார்த்தால் காடுகளின் கூரைபோலத் தெரிகிறது.

தரையில் மண்ணே தெரியாத அளவுக்கு மக்குகள். மரங்களின் இலைதழைகள் கொட்டி மெத்தையாக மாறி போர்வையைப் போல் தரையை மூடியிருக்கிறது. ஓர் அங்குல உயர மக்கு உருவாவதற்கு இயற்கை எடுத்துக்கொள்ளும் காலம் ஈராயிரம் ஆண்டுகள் என்கிறார்கள். அப்படியானால் இக்காட்டில் ஓரடி உயரம்வரை மக்கு இருக்கிறதே இவை உருவாக எத்தனை ஆயிரம் இல்லை, இலட்சம் ஆண்டுகள் ஆகியிருக்கும்? இதுவரை இருமுறை இத்தரையில் தவறி விழுந்தும் வலுவாக அடிபடாமல் தப்பித்ததற்கு இந்த மக்குகள்தான் காரணம். இப்படிக் காலம் காலமாய் இயற்கை சேர்த்து வைத்திருக்கும் மக்குகளை டிராக்டர்கள் எவ்வளவு எளிதாய் வழித்து அப்புறப்படுத்திக் கொண்டிருக்கின்றன!

குரு, டிராக்டரைக் கொண்டுவந்து ஓரமாக நிறுத்துகிறார். பணியிடத்திலிருந்து ஆட்கள் திரும்பிவிட்டார்கள். ஜோஸும் திரும்பிவிட்டான். தற்போது ஜோஸுடன்தான் இரண்டாவது முகாமில் தங்கியிருக்கிறேன். வசதிகள் போதாதுதான். இரவில் ஒரேயொரு பெட்ரோமாக்ஸ் விளக்குத்தான் துணை. இருப்பினும் ஜோஸுடன் நெருங்கிப்பழகும் வாய்ப்பு. மாலை தொடங்கி இரவு வரை பேச்சு, பேச்சு, பேச்சு. இருவரின் வாழ்க்கைக் கதைகளும் மாறி மாறி ஓடிக் கொண்டிருக்கும். ஜோஸ் தன் சப்பாத்துக்களை அவிழ்த்துக்கொண்டே கேட்கிறான். என்ன கவான் செய்துகொண்டிருக்கிறாய்? அது என்ன ஏதோ பெயர் சொல்வாயே? கற்பனை. அதுதானே?

காட்டைப் பற்றி நினைத்துக்கொண்டிருந்தேன் ஜோஸ். காடு என்றால் என்னவென்று இப்போதுதான் புரியத்தொடங்கியிருக்கிறது. ஆனால் இது வெறும் ஆனா ஆவன்னாதான். தப்புசெய்கிறோமோ என்று தோன்றத் தொடங்கியிருக்கிறது. இது கிடக்கட்டும். உன்னை ஒன்று கேட்கவேண்டும். தொல்குடியான நீயெப்படி இக்காட்டழிப்புத் தொழிலுக்கு வந்தாய்?

ஜோஸ் உடனே பதில் சொல்லவில்லை. அவிழ்த்த சப்பாத்துகளை வைத்துவிட்டு கேத்தலிலிருந்த நீரையெடுத்துக் குடித்துவிட்டு அருகில் வந்தமர்கிறான்.

மனசு ஒப்பி இத்தொழிலுக்கு வரவில்லை கவான். இது எங்கள் தலைமுறைக்கு நேர்ந்த கட்டாயம். ஏன், சாபம் என்றுகூட சொல்லலாம். எங்களால் எம் தாத்தாக்கள், எம் அப்பாக்கள் வாழ்ந்த வாழ்வை வாழமுடியவில்லை. அப்பாவின் தலைமுறைகூட விளிம்பில் தப்பிப் போய்விட்டது. எங்களால் அப்படி முடியவில்லை. நாங்களொரு புதிய வாழ்வுமுறைக்குத் திடீரெனத் தள்ளப்படுகிறோம். பள்ளி என்றொரு இடத்துக்கு அனுப்பி வைக்கிறார்கள். அங்கு நாங்கள் அதுவரை பேசியேயிராத புதிய மொழியைச் சொல்லிக்கொடுத்து இம்மொழியைத் தான் இனி நீங்கள் படிக்கவேண்டும், இது நம் தேசியமொழி என்கிறார்கள். அதுவரை எங்கள் நிலமெங்கும் நாங்கள் பேசிவந்த எங்கள் மொழி பள்ளியில் முடக்கப்படுகிறது. வீட்டுக்குள் மட்டும் புழங்கத் தொடங்குகிறது. அந்தப் பள்ளியில் எங்கள் வாழ்வுக்கும் காட்டுக்கும் தொடர்பே இல்லாத எதையெதையோ சொல்லிக்கொடுக்கிறார்கள். அது எங்களுக்குப் புரியவுமில்லை. ஒட்டவுமில்லை. பாதிப்பாதி மொழி. பாதிப்பாதி வாழ்க்கை. இரண்டும் கெட்டான் ஆகிவிடுகிறோம். படிப்பைப் பாதியில் கைவிட்டுத் திரும்பியபோது பழைய கம்போங் வாழ்க்கை தெரியவில்லை. வேறு வழியின்றி இதுபோன்ற வாழ்வு கட்டாயமாகிவிடுகிறது. எம் தலைமுறை இப்போது மனசுக்குள் ஓர் ஆளாகவும் உடம்பில் வேறொரு ஆளாகவும் வாழப் பழகிவிட்டிருக்கிறது கவான். ஆனால் வருங்காலத் தலைமுறைக்கு இச்சிக்கல் இருக்காதென நம்புகிறேன். எம் பிள்ளைகள் மொத்தமாக இந்த வாழ்க்கைக்குப் பழகிவிடுவார்கள்.

ஜோஸ் பதிலுக்குள் ஒரு தலைமுறையே மக்கும் முடைநாற்றம் எழுந்து பெருகுகிறது. ஜோஸுக்காகப் போட்டு வைத்திருந்த தேநீர் ஆறிப் போயிருக்கும். அதைச் சூடாக்கித் தரலாம் என எழுகிறேன். ரேஞ்சர் குழு வேலைமுடிந்து வருகிறார்கள். தொகுதி அமைக்கும் வேலை நடந்துகொண்டிருக்கிறது. நாளை மீண்டும் உங்களோடு வரவிருக்கிறேன் என்கிறேன். காடு உனக்காகக் காத்திருக்கிறது எனச் சிரிக்கிறார் ஆண்ட்ரூஸ்.

இன்று வேறுபணி இருந்ததால் காட்டுக்குள் நுழையவில்லை. இல்லையெனில் இன்னொரு விலங்காகக் காட்டுக்குள் திரிந்து கொண்டிருப்பேன். தொகுதிகளின் எல்லைகள் இவர்களின் சிவப்பு வண்ணத்தில் நீள உட்பகுதியில் கால்களின் தனிமை உலாவல் வடபகுதி மஞ்சள் வண்ணத்தைக் கண்டால் அது வெளியெல்லை தென்திசை நோக்கி நடந்துவந்தால் சாலை. உள்ளே எங்கேனும் சிவப்பு கண்டால் அது தொகுதியின் எல்லை. எனவே வழி தவற வாய்ப் பில்லை. இத்தொகுதிகளுக்குள் எந்தெந்த இடத்தில் ஓடைகள், நன்னீர் சதுப்பு நிலங்கள், பள்ளங்கள், மேடுகள், பாறை நீரூற்றுகள், ரோத்தான் புதர்கள், மரத்தொகுப்புகள் எல்லாம் இப்போது அத்துபடி. நாளை விட்ட இடத்திலிருந்து தொடரலாம்.

மறுநாள் நண்பகலில் மஜாவ் மரத்தின் அடியில் சாப்பிட அமர் கிறோம். மொத்தக் குழுவும் களைத்திருக்கிறது. இரண்டொரு நாளில் மழைவரலாம் என்கிறார் விபராத்தோ. சோயாச் சாற்றில் வதக்கியிருந்த பன்றி இறைச்சியும் சோறும்தான் இப்பகல் உணவு. இது நேற்றிரவு கண்ணி வேட்டை வல்லுநர் ஆண்ட்ரூஸ் பிடித்திருந்த பன்றி. பக்கத்தில் நான்கைந்து மரங்கள். அதில் ஒன்றில் பெர்பாஞ்சாட் ஏறியிருக்கிறது. காட்டுக்கொடி. இது தொடை பருமனுக்கு இருக்கும் பெருங்கொடி. தரையிலிருந்து ஒளியை நாடி மரத்தைச் சுற்றிப் படர்ந்து உயரே ஏறி மரக்குடைவரை சென்றுவிடும். பின் அங்கிருந்து ஒளிகுடித்துப் பச்சையம் சமைக்கும். இந்த மஜாவ் மரத்தில் சுற்றி யிருக்கும் இக்காட்டுக்கொடி சற்றுத் தள்ளியிருந்த மரத்தின் கீழிருந்து முளைத்துவந்து இங்கு ஏறியிருக்கிறது. இரண்டுக்கும் இடையே இருபதடி தொலைவாவது இருக்கும். நியாயமாக இது அந்த கப்பாஸ்- கப்பாஸ் மரத்தில்தானே ஏறியிருக்க வேண்டும்? சாப்பிடாமல் யோசிப்பதைப் பார்த்துவிட்ட ஆண்ட்ரூஸ் என்ன யோசனை என்க் கேட்க செய்தியைச் சொல்கிறேன்.

பரவாயில்லை. கூடிய சீக்கிரம் நீ ரேஞ்சர் ஆகிவிடலாம் என்று சிரித்துவிட்டுக் காட்டுக்குள் எல்லாவற்றையும் அணுக்கமாக கவனிக்கத் தொடங்கி விட்டாய். இந்தக் காட்டுக்கொடி பிசின் வகை மரங்களில் மட்டுமே ஏறுகிறது. எனக்குத் தெரிந்து இந்த கப்பாஸ்-கப்பாஸ், காபு டுசுன், செண்டோக்-செண்டோக் இதில் எல்லாம் இக்கொடியைப் பார்த்ததே இல்லை. ஆனால் ஏன் ஏறவில்லை என்றெல்லாம் கேட்காதே அது தெரியாது என்று சிரிக்கிறார் ஆண்ட்ரூஸ்.

வீடுகட்டும் பணி இன்னும் முடியவில்லை. வெளியே வந்தபோது ஓமர் நின்றிருக்கிறார். பார்த்தவுடனே கேட்கிறார். இன்றைக்காவது அங்கு வருவாயா? அவர் அங்கு எனக் குறிப்பிடுவது மூதலாம் முகாமை சற்று நேரம் அமைதியாகச் சாலைக்கு அப்பால் இறங்கிக் கொண்டிருந்

மாலைக்கதிரையே கவனித்துக்கொண்டிருந்துவிட்டுச் சொல்கிறேன். முகாம் தொடங்கும்வரை இங்கேயே இருந்துவிடுகிறேன்.

தலையாட்டிக்கொண்ட ஓமர் உன் விருப்பம். இவ்வளவு நாளும் உன்னோடு இருந்துவிட்டு எனக்குதான் போல் இருக்கிறது. அதனால்தான் கேட்டேன் என்றவர் இப்போது என்னவோ ஓரே சமயத்தில் தந்தையாகவும் தோழனாகவும் புறப்படுகிறார். அன்பின்முன் எப்போதும் தோற்றுக்கொண்டேயிருக்கும் அவருடைய விருப்பத் தோல்வி. அங்கிருந்து இம்முகாமுக்குக் கிளம்பிவருகையில் இது சொன்னது நினைவுக்கு வருகிறது. அங்கு போதிய வசதி கிடையாது. சிரமப்படுவாய். சொன்னால் கேள். ஆனால் கேட்கவில்லை. இவர் பேச்சை மறுத்தது இப்போதும் வலிக்கிறது. ஆனால் அவரிடம் வெளிப் படையாகச் சொல்லமுடியாத காரணம் ஒன்று இருக்கிறது. அது யொகன்னா. தொடக்கத்திலிருந்து பார்த்து வந்த யொகன்னா வேறு. ஓடையில் பார்த்த யொகன்னா வேறு. அன்று ஓடையிலிருந்து வீட்டுக்கு வந்துவிட்டபோதும் உடல் ஏனோ நடுங்கிக்கொண்டேயிருக்கிறது. மார்பிலிருந்து வெப்பம் உடலெங்கும் பரவுகிறது. அவசரமாக உடையை மாற்றிக்கொண்டு படுக்கையில் விழுகிறேன். ரோஸ்லான் பதறி வந்து உடம்பைத் தொட்டுப் பார்த்து, காய்ச்சல் துவான் என்று சொன்ன போது, தூங்கினால் சரியாகப்போய்விடும், ஓமரிடம் சொல்லிவிடு என்று சொல்லிவிட்டுப் போர்வையால் போர்த்திக்கொள்கிறேன்.

உணவும் உண்ணவில்லை. யொகன்னா வந்து அழைக்கும் குரல் கேட்கிறது. கண்களைத் திறக்கவில்லை. உறங்குவதுபோல் நடிப்பு. இரண்டு மூன்று முறை மறுபடியும் வந்து அதே அழைப்பு. இப்போதும் அதே நடிப்பு. நடிப்பே உண்மையாகிறது. உறக்கத்தில் மீளவும் ஓடை. அதில் வீழ்ந்த இலை இப்போது சுழித்தோடும் நீரில் இழுபட்டுக் கொண்டே போகிறது. இழுபடும் இலையின் தவிப்பு. ஒரு கையாவது உதவிக்கு வராதா? வருகிறது. இதோ ஆதாரமாய் நெற்றியை வருடு கிறது. இது பதுமையின் விரல்கள் அல்ல. தாய்மையின் துளிர்கள். இமைகள் பிரிகின்றன. விழி ஆடியில் பிம்பம் பதிகிறது. முகபிம்பம். மிக அருகே தெரியும் யொகன்னாவின் முகபிம்பம்.

இப்போது எப்படி இருக்கிறது? விரலை விட வருடும் குரல். எத்தனை ஆண்டுகள்? இத்தனை ஆண்டுகாலத் தனிமை வாசத்தில் பரிவோடு விரல்கள் வருட எக்குரலும் இப்படி வாஞ்சையோடு கேட்டதில்லை. ஏனென்றே தெரியவில்லை. படுத்திருந்த நிலையிலேயே இருவிழிகளும் நனைகின்றன. யொகன்னாவின் குரல் அதே வாஞ்சை யோடு தொடர்கிறது. என்ன சிக்கல் உனக்கு? நீ எதிர்பாராமல்தானே அங்கு வந்தாய்? அதை நானே புரிந்துகொண்டு இயல்பாய் இருக்கையில் நீயும் இயல்பாய் கடந்து போக வேண்டியதுதானே? ரொம்ப நேரம் யோசித்தவுடன்தான் எனக்கே புரிந்தது. என் அம்மணம் இந்தளவுக்கு

உன்னைப் பாதிக்குமென நான் நினைக்கவேயில்லை. என் கம்போங்கில் இது நடந்திருந்தால் கண்ணில் மற்றொரு காட்சி என்று கடந்திருப்பார்கள். ஆனால் நகரத்து ஆட்களுக்குதான் இவ்வளவு சிக்கலும். இயல்பாகப் போக வேண்டியதுதானே?

விழிகள் மீண்டும் பெருகி வழிகின்றன. இன்னமும் வருடிக் கொண்டிருக்கும் அவ்விரல்களின் உரைகளில் சொற்கள் ஏதுமற்ற இரவலனாகி உறைகிறேன். இந்த அன்பை தாங்க இயலாது.

அருவி

ஜோஸ் முகம் மலர்ந்து சிரித்துக்கொண்டிருக்கிறான். அவனுக்குக் கடிதம் வந்திருக்கிறது. கம்போங்கில் இருந்து தூனாங் அவனுக்கு எழுதிய கடிதம். மணஉறுதி செய்யப்பட்டிருக்கும் காதலியின் கடிதம் என்றால் சும்மாவா? வந்ததிலிருந்து திரும்பத் திரும்பப் படித்துக்கொண்டிருக்கிறான். அவனுடைய அண்ணன் ஒருவர் கினபத்தாங்கன் ஆற்றில் இழுவைப்படகு ஓட்டுகிறார். அவர் கம்போங்குக்குப் போகும் போதெல்லாம் கடிதம் எழுதி அனுப்பிவிடுவான். அவர் திரும்பிவரும் போது பதில் வந்துவிடும். படித்தது போதும் ஜோஸ், எழுத்துத் தேய்ந்து போய்விடப் போகிறது. சிரித்துக்கொண்டே மடிக்கிறான்.

என் தூனாங் இம்முறையும் உன்னை மிகவும் கேட்டதாக எழுதியிருக்கிறார். அத்தோடு நாம் என்றுமே பிரியாமல் இருக்க இக்கடிதத்தில் ஒரு யோசனையை வேறு சொல்லியிருக்கிறார்.

அப்படியா, என்ன யோசனை அது?

நீ ரலாவை மணந்துகொண்டால் நாமெல்லோரும் ஒன்றாக கம்போங்கில் இருக்கலாமாம்.

ரலாவா? யார் அது?

அது என் தூனாங்கின் தங்கை. உன்னைப்பற்றி அவளிடம் நிறைய சொல்லியாகிவிட்டதாம். அவளும் உன்னைச் சந்திக்க ஆவலாக இருக்கிறாளாம்.

அடப்பாவி, இப்படி இன்னும் என்னென்ன நடக்கிறது?

என் தூனாங்கைவிட ரலா அழகு தெரியுமா?

அப்படியானால் என் சலாமை உடனடியாக அனுப்பி வை ஜோஸ்.

இதைக்கேட்டு ஜோஸ் வேகமாக சிரித்தது நினைவுக்கு வருகிறது. உண்மையிலேயே அந்த ரலா அழகாக இருப்பாளா? நான்காம் தொகுதிக்குள் அலைந்து கொண்டிருக்கிறேன். பச்சை வண்ண நத்தை ஓடுகளைத் தேடிக்கொண்டிருக்கிறேன். இடையிடையே ரலா என்கிற அப்பெயர் வந்து போகிறது. வேண்டாம். ஓடுகளைத் தேடு. பக்கத்து மரத்தில் நீளமான குச்சிப்பூச்சி ஒட்டிக்கொண்டிருக்கிறது. சுமார் ஓரடிக்கும் மேலான இக்குச்சிப்பூச்சிகளை அடிக்கடி இங்கு காண

முடிகிறது. சட்டென்று கண்ணுக்குத் தெரியாது. நிறம் அப்படி. இந்தப் பச்சை வண்ண நத்தையும் இப்படித்தான். இலைகளின்மீது அவை ஊர்ந்து செல்லுகையில் அதனைக் காட்டிக்கொடுக்க மறுக்கிறது பச்சையம். தரையின் அடர்பழுப்புநிற மக்கின்மீது அவை ஊர்ந்து செல்லும்போது மட்டும் பளிச்சென்று அதன் பச்சைவண்ண ஓடுகள் கண்ணில்படுகின்றன. உயிரோடு ஊர்ந்துகொண்டிருக்கும் நத்தைகளை ஒன்றும் செய்வதில்லை. கூர்ந்து கவனித்துக்கொண்டே சென்றால் இறந்த நத்தைகளின் ஓடுகள் நிறைய கிடைக்கின்றன. அவற்றைப் பொறுக்கிக்கொண்டே வருகிறேன்.

தொலைவாக வந்துவிட்டேனோ? எதிரே மஞ்சள்நிற எல்லைக் கோடு. இது வெளிஎல்லை. இதைத் தாண்டக்கூடாது. திரும்ப வேண்டியதுதான். அது என்ன ஓசை? நீரின் ஓசையா? நீரின் ஓசையே தான். ஆனால் ஓடும் நீரின் ஓசையல்ல. கொட்டும் நீரின் ஓசை. நீர் எப்படிக் கொட்டும்? ஊகம் சரியென்றால் இது ஓர் அருவி. இந்த இடத்தில் ஓர் அருவியா? சாதாரண ஓடைகளே ஆங்காங்கே உயரத்தில் இருந்து கொட்டுவதுண்டு. அதிகமாக ஒருமீட்டர் உயரம் இருக்கும் குட்டி அருவிகள் இங்கு நிறைய இருக்கின்றன. ஆனால் இந்த ஓசை வலியது. அப்படியானால் இது பெரிய அருவி. போய்ப் பார்க்கலாமா?

மஞ்சள் கோடு தாண்டுவது தொலைந்து போதலுக்குச் சமம். தெரிந்தால் தொலைத்து விடுவார் ஓமர். ஆனாலும் இந்த ஓசை மஞ்சள் கோட்டிலிருந்து வெறும் இருநூறு மீட்டருக்கு அப்பால் கேட்கிறது. ஆனால் அடர்மரங்களால் எதுவும் கண்ணில்படவில்லை. அதனால் என்ன. அருகில்தானே? போய்ப் பார்த்துவிட்டு வந்துவிடலாம். வழியை மனசுக்குள் சிறிய கணக்கெடுக்கலாம். சற்றுத் தொலைவில் வலப்பக்கம் இரு பெரும் குருவிங் மரங்கள் நிற்கின்றன. அதற்கு நேர் எதிரே இடப்பக்கம் ஒற்றை நியாத்தோ மரம். இரண்டுக்கும் நடுவே புகுந்து செல்ல வேண்டும். இதுதான் அடையாளம்.

நடக்கிறேன். நீரின் ஓசை நெருங்கிக்கொண்டே வருகிறது. நியாத்தோ மரமும் வந்துவிடுகிறது. இடப்பக்கம் மரங்களினூடே ஓர் ஆறு தெரிகிறது. பெரிய ஆறு. பாறைகளினூடே சலசலத்து நீர் ஓடிவருவது தெரிகிறது. ஆனால் நீரின் பெரும் ஓசை சற்று வலப்புறமாய்க் கேட்கிறது. திடீரென வேறொரு ஓசையும் கேட்கிறது. மனசை கலவரமாக்கிய ஓசை. இப்படி ஓர் ஓசையா? நீரோசையை மீறிய பேரோசை. யாரோ திடீரென வெடித்த குரலில் தொடர்ச்சியாகச் சிரிக்கும் சிரிப்பு. பேய்ச்சிரிப்பு என்பார்களே அப்படி இருக்கிறது. தொடர் சிரிப்பு. யார் இப்படிச் சிரிக்க முடியும்? இது என்ன ஓசையாக இருக்கும்? எங்கிருந்து இது கேட்கிறது? மேலிருந்துதான் இவ்வோசை வந்தது. மேலே பார்க்கிறேன். கவிகையைத் தவிர எதுவும் தெரியவில்லை. இது ஏதாவது விலங்கின் குரலாக இருக்கலாம். அமைதி. அமைதி. மேற்கொண்டு

தொடரலாமா? வேண்டாம். இங்கு நிற்கக்கூட வேண்டாம். தனியாக இருக்கிறோம். திரும்பிவிடு. விடுகிறேன். விறுவிறுவென்று திரும்பி விடுகிறேன்.

சாலைக்கு வந்து சேர்ந்தபோது ஜோஸ் தன் வண்டியில் அமர்ந்து சாலையைச் சமன்படுத்தும் பணியைச் செய்துகொண்டிருக்கிறான். முகத்தின் பீதியைக் கவனித்திருக்கவேண்டும். வண்டியை நிறுத்தி விட்டு வாக்மேனையும் கழற்றி வைத்துவிட்டு இறங்கி வருகிறான். என்ன ஆச்சு கவான்? பதைபதைப்போடு விவரத்தைச் சொல்லுகிறேன். யோசிக்கிறான். உனக்குப் பேய் பிசாசில் நம்பிக்கை கிடையாது. இருந்தாலும் கேட்கிறேன். நீ அங்கு செல்லும்போது விசில் அடித்துக் கொண்டே சென்றாயா?

இல்லையே ஜோஸ். ஏன் அப்படிக் கேட்கிறாய் என்றதும் இளைஞர்கள் இரவில் விசில் அடிக்கக்கூடாது என்பார்கள். அப்படி அடித்தால் அது பேய் பிசாசுகளை வரவழைத்துவிடும். நீ என்ன கேட்க வருகிறாய் என்று தெரிகிறது. இது பகல்தானே என்பாய். காட்டுக்குள் இரவைப் போல் இருட்டாகத்தானே இருக்கும். அதனால் சொன்னேன் என்று ஜோஸ் முடித்ததும் இல்லை ஜோஸ் வேறு எதாவது நம்பிக்கை வரும்படி சொல். இங்கு சிரிக்கும் விலங்கு ஏதாவது உள்ளதா?

ஜோஸ் சிரிக்கிறான். எனக்குத் தெரிந்து மனிதன் மட்டும்தான். சரி, இன்னொரு முறை அங்கு செல்லாதே. தயங்கியபடியே சொல்கிறேன். இல்லை ஜோஸ், அங்கு ஓர் அருவி இருப்பதுபோல் தெரிகிறது. அவசியம் போய்ப் பார்க்க வேண்டும்.

ஜோஸ் தீர்மானமாகச் சொல்கிறான். அப்படியானால் தனியே போக வேண்டாம். நானும் உடன் வருகிறேன். இதோ பார் வானம் ஒரேயடியாகக் கறுத்துக்கொண்டே வருகிறது. உறுதியாக கனமழை வரும். அப்படியென்றால் நாளை வேலை இருக்காது. நாளை, சேர்ந்து போகலாம். சரிதானே?

மழை பெய்தது. மழை என்றாலே முகாம் அகராதியில் ஓய்வு என்று பொருள். மொத்த வேலையும் நின்றுவிடும். அடுத்தநாள் மழை இல்லாவிட்டால் மரம் வெட்டும் வேலை மட்டுமே நடக்கும். ஆனால் சாலையில் வாகனங்கள் செல்லாது. சாலை பழுதடைந்துவிடும். உறுதியாக கனரக வாகனங்களுக்கு அனுமதி கிடையாது. எல்லோரும் முகாமில் சீட்டு விளையாடத் தொடங்கிவிட்டார்கள். முடிவு செய்தபடியே நாங்கள் இருவரும் புறப்படுகிறோம். ஜோஸ் கையிலொரு பாராங் கத்தியையும் உணவுப்பொட்டலத்தையும் எடுத்துக்கொள்கிறான். இது எதற்கு? உண்மையிலேயே அங்கு ஓர் அருவி இருந்தால் நிம்மதியாகக் குளித்து உண்டுவிட்டு வரலாம் என்று ஜோஸ் சொன்னதும் சரிதான் என்று தோன்றுகிறது.

உள்ளே புகுந்த நாங்கள் நேரே அந்த நியாத்தோ மரத்தின் கீழ் சென்று நிற்கிறோம். பரவாயில்லையே, காட்டுக்குள் செல்ல நன்றாகத் தேறியிருக்கிறாய் என்கிறான் ஜோஸ். இங்குத்தான் அந்தச் சத்தம் கேட்டது ஜோஸ். ஒரு நிமிடம் இருவரும் நன்கு சுற்றுமுற்றும் கவனிக்கிறோம். அந்தச் சத்தம் இன்றும் கேட்க வேண்டும் என்று நியதியா என்ன? முன்னேறி நகர்கிறோம். ஆற்றின் கரைக்கு வந்தவுடன் இருவருமே அசந்து போகிறோம். அப்படியொரு அழகான ஆறு. இடப்பக்கமிருந்து ஓடிவந்த ஆறு ஒரு கொண்டை ஊசியைப் போல், ஆங்கில 'யு' எழுத்து வடிவத்தில் வளைந்து வலப்பக்கம் திரும்பி மீண்டும் அந்த திசையைநோக்கி ஓடிக்கொண்டிருக்கிறது. மிகச்சரியாக அது வளையும் இடத்தில் நிற்கிறோம். இங்கேதான் அந்த அருவியும் விழுந்து கொண்டிருக்கிறது.

எதிர்பார்க்கவே இல்லை அவ்வளவு அழகான அருவி. குறைந்தது நூறடி அகலமாவது இருக்கும். உயரம் சுமார் அய்ந்து மீட்டர் இருக்கலாம். நம் இடத்தில் இப்படியொரு அருவி இருப்பது நமக்குத் தெரியாமல் போய்விட்டதே கவான். தெரிந்திருந்தால் நானும் இங்கேயே வந்து குளித்திருப்பேன். சரி வா அக்கரைக்குப் போகலாம் என்று அழைக்கிறான் ஜோஸ். அக்கரை என்பது வளைந்து செல்லும் ஆற்றின் கரைகளுக்கு நடுவில் ஒரு தீவு போல தனித்திருக்கிறது. ஜோஸ் அந்த அருவியின் மேலாகவே நடக்க தொடங்குகிறான். நடக்கும் இடத்திலிருந்து வலப்புறமாக வெறும் ஓரடி தள்ளி அருவி கொட்டிக் கொண்டிருந்தது. இது மேலேவா நடக்க வேண்டும்? நீச்சல் தெரியாது ஜோஸ்.

அச்சப்படாமல் என் பின்னாலேயே வா. இதைப் போன்ற இடத்தில் ஓரடி ஆழம்தான் இருக்கும். நான் எங்கே கால் வைக்கிறேனோ அங்கேயே கால் வைத்து வா கவான். ஜோஸ் சொன்னதும் துணிச்சலை வரவழைத்துக்கொண்டு சொன்னபடியே நடக்கிறேன். அருவியின் விளிம்பில் இப்படி நடப்பது உண்மையில் சாகசம். கீழே பாறைகளில் வழுக்காமல் நடந்து அக்கரை சேர்கிறோம். அங்கே நிறைய பேர் அமர்வதற்குத் தோதாக பெரிய கற்தளம் ஒன்று இருக்கிறது. சென்றதுமே முதலில் உணவு டப்பாவைத் திறக்கிறான் ஜோஸ். என்ன அதற்குள்ளாகவா சாப்பிடப் போகிறாய் என்ற கேள்விக்கு ஜோஸ் எந்தப் பதிலும் சொல்லவில்லை. சிரிக்கிறான். பிறகு சிறிதுநேரம் கண்களை மூடி ஏதோ தனக்குள் முணுமுணுக்கிறான். கண்களைத் திறக்கிறான். ஒரு பிடி சோற்றை எடுத்து ஒரு திசையில் எட்ட வீசியெறிகிறான். பின் அதேபோல் நான்கு திசைகளை நோக்கி வீசியெறிந்துவிட்டு உணவை மூடி வைத்தவன் குளிக்கலாமா என்கிறான்.

என்ன செய்தான் ஜோஸ்? அவனையே பார்த்துக்கொண்டிருக்கிறேன். புன்னகை நெளிய நீ ஏன் இப்படிப் பார்க்கிறாய் என்று தெரிகிறது.

ஆறு அல்லது அருவிக்குப் பொழுதுபோக்கப் போகும்போது இங்குள்ள காவல் தெய்வங்களுக்கு உணவைத் தூக்கி வீசவேண்டும். அப்போது தான் அவை நம்மை ஒன்றும் செய்யாது. நேற்றுப்போல உன்னை அச்சமூட்டவும் செய்யாது என்று கூறிமுடித்ததுமே அப்படியானால் நேற்று கேட்டகுரலை இதுதான் என்று முடிவே செய்துவிட்டாயா என்கிறேன்.

இல்லை சுவான். இப்படிச் செய்யாவிட்டால் வீட்டுக்குத் திரும்பியவுடன் காய்ச்சல் வந்துவிடும் என்பது நம்பிக்கை. அதனால்தான் செய்தேன் என்றதும் சிரிக்கிறேன். தண்ணீரில் ரொம்ப நேரம் ஆட்டம் போட்டுவிட்டுப் போனால் காய்ச்சல் வராமல் என்ன செய்யுமாம்?

ஜோஸ் தன் இரு கைகளையும் குவிக்கிறான். உன்னைத் திருத்தவே முடியாது. நான் குளிக்க போகிறேன். ஆளை விடு.

இடுப்பில் ஓர் உள்ளாடையோடு அருவியின் மேலிருந்து கீழே பாய்கிறான். நீ என்ன செய்யப் போகிறாய் சுவான்? மேலிருந்து கத்துகிறான். வேடிக்கை மட்டும் பார்க்கிறேன் எனப் பதிலுக்குக் கத்துகிறேன். வேடிக்கையா? நான் என்ன பெண்ணா? வேடிக்கை பார்க்க எனக் கத்திவிட்டு நீந்திக்கொண்டிருக்கிறான். பெண் குளிப்பதை வேடிக்கை பார்த்தால் என்ன ஆகும் என்று இவனுக்கு என்ன தெரியும்? என்ன சொன்னான்? இப்படிச் செய்யாவிட்டால் வீட்டுக்குப் போனால் காய்ச்சல் வருமா? எனக்குப் பேய், பிசாசினால் காய்ச்சல் வராது தோழா. பெண் குளிப்பதைப் பார்த்தாலே வந்துவிடும். அன்று வந்த காய்ச்சல் அவ்வளவு இலகுவில் போகவில்லை. மாலையில் ஓர் திரும்பி வந்தபோது இன்னும் அதிகமாகியிருந்தது. ஒரு கோப்பை வரத்தேநீர் மட்டும் தந்து ஒரு பெனடோல் மாத்திரையைப் போட்டு திரும்பவும் தூங்கச்சொல்கிறார். மறுநாள் காலைதான் எழுகிறேன்.

ஜோஸ் குளித்து முடித்து தலை துவட்டும்போது நீ கண்டுபிடித்த இந்த அருவி விரைவில் இங்குள்ள முகாம்களுக்கு சுற்றுலா இடமாக மாறப்போகிறது சுவான் என்கிறான். அருவியைக் கவனிக்கிறேன். நேற்று அவ்வளவு மழை பெய்தும் இந்த ஆற்று நீர் கொஞ்சம்கூட கலங்காமல் நல்ல தெளிவாக இருக்கிறது. அப்படியென்றால் இந்த ஆற்றின் மேல் பகுதிக் காட்டில் யாரும் இன்னும் கைவைக்கவில்லை. அந்த உவகையிலா இப்படி ஆரவாரமாய்க் கத்திக்கொண்டு குதிக்கிறாய் அருவியே?

**அட்டுர் பேசி**

புதிய முகாம் வீட்டுக்குக் குடிவந்தாகிவிட்டது. பாம்புகள் அணுகாமல் இருக்க வீடுகளைச் சுற்றி தூவப்பட்டிருந்த கந்தகப்பொடியின் மஞ்சள் நிறத்தோடு பளிச்சென இருக்கிறது வீடு. இனி முதலாம் முகாம்

இரண்டாம் முகாம் எல்லாம் கிடையாது. ஒரே முகாம்தான். எல்லாவற்றையும் பிரித்துவிட்டோம். முதலாம் முகாமில் வீடிருந்த இடத்தில் சாலையின் குறுக்கே, குறுக்குக்கழி ஒன்று பொருத்தப்பட்டு நிறுவனத்தின் நுழைவுச்சாவடியாக மாறிவிட்டது. அதற்கு ஒரு காவலரையும் நியமித்தாகிவிட்டது. இனி அனுமதியின்றி வெளியார் குறிப்பாக வெளியிலிருந்து வேட்டைக்கு வருபவர்கள் எவரும் உள்ளே நுழைய முடியாது. மேலே மேட்டில் இருந்த பணிமனை அக்காவலரின் குடியிருப்பாக மாற்றப்பட்டிருக்கிறது.

முகாமில் ஓர் அலுவலக அறை. அதையொட்டி ஒரு கடை. இது போன்ற சிறிய முகாம்களில் மாலை நேரத்தில்தான் அது திறக்கப்படும். ரொக்க வணிகம் இருக்காது. எல்லாம் கணக்குதான். சம்பளம் கொடுக்கப்படும்போது இங்கு வாங்கிய கடன்கள் பிடித்தம் செய்யப்பட்டு மீதிப்பணம் தரப்படும். இத்தனைக்கும் நகரத்தில் விற்கும் விலையைப்போல் இங்கு எல்லாமே இருமடங்கு விலை. குளிர் பானங்கள், பியர், ஸ்டவுட் எல்லா விற்பனையும் உண்டு. இதுவே பெரிய முகாம் என்றால் இக்கடை தனியார் வசமிருக்கும். ஆனால் இக்கடையை எம் நிறுவனமே நடத்துவதாக இருக்கிறது. கடையை அடுத்து நீளமாக இருக்கும் கூடம் நிறுவனப் பணியாளர் தங்கும் பகுதி.

அலுவலகத்துக்கு எதிரே குசினியை ஒட்டிச் சமையல்காரப் பெண்ணின் அறை. அதையொட்டி வரிசையாக நான்கு அறைகள். ஒவ்வொரு அறையும் இரண்டு பேர் படுக்குமளவுக்குக் கட்டப்பட்டிருக்கிறது. இரண்டு எங்களுக்கு. இரண்டு விருந்தினர்களுக்கு. இவ்வீட்டுக்கு எதிரே சாலையைக் கடந்ததும் பணிமனை, அதன் இடப்பக்கம் எரிபொருள் கலன். பீப்பாய்கள் இருப்பு அறை. வலப்பக்கம் பணிமனை ஊழியர் சுமையுந்து ஓட்டுநர் குடியிருப்புகள். இவர்கள் அனைவருமே சீனர்களாக இருந்ததால் இத்தனி குடியிருப்பு.

மற்ற ஒப்பந்தத் தொழிலாளர்கள் அனைவருக்கும் ஓடைக்கு மறுகரையில் குடியிருப்பு. ஒப்பந்தப் பணியாளர் அறைகள் பெரும்பாலும் ஒரு சிறு குடும்பம் தங்கும் அளவுக்கு அமைக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில் அவர்கள் மாதக் கணக்கில் பணிபுரிய நேரிடும் என்பதால் குடும்பத்தை அழைத்துக்கொண்டு சிலர் வந்துவிடுவர். இப்போதே அப்படி மூன்று பேர் தங்கள் குடும்பத்துடன் வந்திருந்தனர். அவர்களுடைய குழந்தைகளின் கூச்சலால் அப்பகுதியே களைகட்டியிருக்கிறது. மொத்தக் கட்டிடத்துக்கும் பகலில் மின்சாரம் கிடையாது. இரவில் மட்டுமே ஜெனரேட்டர் இயக்கப்படும். மாலை ஆறு மணியில் இருந்து இரவு பத்து மணி வரை அது இயங்கும். இரவில் மின்சாரம் நிறுத்தப்பட்டவுடன் மின்கலத்தோடு பொருத்தப்பட்டிருக்கும் ஒரு விளக்கு எரிந்துகொண்டிருக்கும்.

எந்தவொரு வெட்டுமர முகாமுக்குச் சென்றாலும் தென்கிழக்கா
யாவின் பாதிமுகங்களைப் பார்த்துவிட முடியும். இம்மக்களைப் பற்றி
தெரிந்துகொள்ள அந்தந்த நாட்டுக்குத் தனித்தனியாகப் போவதைவிட
இங்குள்ள முகாமுக்கு வந்தால் போதும். மொத்த மக்களையும்
பார்த்துப் பேசி, பழகி, அவர்களின் வாழ்முறையைத் தெரிந்துகொண்டு
விடலாம் என்பார் ஓமர். எங்கள் முகாமில் இந்தோனேசியாவின்
புக்கிஸ்காரர்களில் போனே, என்ரிகன் தவிர தாத்தோர், ஜாவா,
புத்தான் இனமக்கள் இருக்கின்றனர்.

இதேபோலப் பிலிப்பைன்சின் சுலுக், பஜாவ், ககாயன், பிசாயா,
தகோலக் இனத்தவர்கள் இருக்கின்றனர். இத்தோடு உள்ளூர் இனத்தவர்
களான கடசன், இடாஹன், டுசுன், திடோங், முருட் ஆகியோர் தலை
ஒருவர் இருக்கின்றனர். இவர்களைத் தவிர மலாய், சீனர், புருனைக்
காரர்களும் இருக்க இது பல்லின முகாமாய் இருக்கிறது. ஆனாலும்
மற்ற முகாம்கள் அத்தனையும்விட இம்முகாமுக்கு தனிச்சிறப்பு
இருக்கிறது. அது என்னவென்று சொல் என ஒருமுறை கேட்டார் ஓமர்.
தெரியவில்லை என்கிறேன். எனக்குத் தெரிந்து எந்த முகாமிலும்
தமிழரைப் பார்த்ததில்லை. எனவே நீ இந்த முகாமில் இருப்பதுதான்
அந்தச் சிறப்பு என்று சிரிக்கிறார்.

இத்தோடு இன்னொரு சிறப்பும் எங்கள் முகாமுக்கு வந்து சேர்கிறது.
அதுதான் அட்டூர் பேசி.

சுமார் முக்காலடி உயரத்தில் கைப்பிடியெல்லாம் வைத்து ஒரு
கருப்புப்பெட்டி போல் இருக்கிறது. அதன் பக்கவாட்டில் தொலைபேசி
யின் ரிசீவரைப் பொருத்திக்கொள்ளும் வசதி. மேல்பக்கம் ஓர் ஓரமாக
அரையடி உயர ஆன்டெனா. இதை எங்கு வேண்டுமானாலும்
எடுத்துச்சென்று பேசலாம் என்பது விந்தைச் செய்தியாக இருந்தது.

அதை எங்களிடம் ஒப்படைக்கும்போது இதன் விலை பன்னிரண்டா
யிரம் வெள்ளி. பத்திரமாகப் பார்த்துக்கொள்ளுங்கள் என்று சொல்லிய
போது அதைத் தொடுவதற்கே அச்சமாகிவிடுகிறது. அது இப்போது
எங்களுக்குப் பெரிய தலைவலியாக மாறிவிட்டது. எங்கு சென்றாலும்
நிம்மதியாகச் சென்று வந்துகொண்டிருந்த நாங்கள் இதன் வரவால்
நிம்மதியைத் தொலைத்தோம். முடிந்தவரை அதை ஓமரிடம் தள்ளி
விடுவேன். அப்படியே அவரும் இங்கு தள்ளிவிடப் பார்ப்பார்.
கடைசியில் இருவரும் சேர்ந்து ஒரு முடிவுக்கு வருகிறோம். அலுவலக
அறைக்குள்ளேயே இன்னொரு அறை, ஒரு பெட்டக அறையைப்
போலச் செய்து அதற்குள் அதை வைத்துப் பூட்டிவிடுகிறோம்.

**துபையா**

புதிய முகாம் வீட்டுக்கு எல்லோரும் குடியேறியபோது யொகன்னா

[illegible] வரவில்லை. பக்கத்து முகாமில் உள்ள மார்த்தா எனும் யொகன்னாவின் தோழிக்கு உடல்நலம் சீர்கெட்டதால் அந்தப் பெண்ணுடன் நகரத்துக்குச் சென்றிருப்பதாகப் பேசிக்கொள்கிறார்கள். அந்த மார்த்தாதான் யொகன்னாவுக்கு இவ்வேலையை வாங்கிக் கொடுத்தது. பக்கத்துப் பக்கத்து முகாம்களில் பணிபுரிந்ததால் யொகன்னாவும் அடிக்கடி மார்த்தாவைப் பார்க்கப் போவது வழக்கம்.

காலை உணவைச் சரியாகச் சாப்பிடவில்லை. வயிறு சரியில்லை என்கிறேன். உண்மையைச் சொன்னால் சமையல் சுவையாக இல்லை. வயிறு சரியில்லையா? இல்லை, யொகன்னா சமையல் இல்லாமல் இறங்கவில்லையா? சமைத்து முடித்த ஆண்ட்ரூஸ் கேட்கிறார். பதில் சொல்லவில்லை. சில நொடிகள் கண்களை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த ஓமர் சொல்கிறார். அப்படியெல்லாம் ஒன்றுமிருக்காது. யொகன்னா இல்லாவிட்டால் இவருக்கு நிம்மதிதான் இல்லையா? இக்கேள்விக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. ஓமரிடமிருந்து சொற்கள் தொடர்கின்றன. ஏன் அப்படிப் பார்க்கிறாய்? ஏன் இங்கு முன்பே ஓடிவந்துவிட்டாய் என்பது எனக்குத் தெரியும். எல்லாம் யொகன்னா சொல்லிவிட்டாள். ஆனால் நீ ஒரு சொல் சொன்னாயா?

ஓமரின் இக்குற்றச்சாட்டுக்குத் தலைகுனிந்தபடியே சொல்கிறேன். மன்னித்துவிடுங்கள். உங்களிடம் மறைக்கும் எண்ணமெல்லாம் இல்லை. இதை எப்படி உங்களிடம் சொல்வதென்ற தயக்கம்தான் காரணம். ஓமர் பெருமூச்செறிவது கேட்கிறது. பிறகே குரல் வருகிறது. உங்கள் இரண்டு பேரிடமும் தவறில்லை. அப்புறம் ஏன் இப்படியொரு கண்ணாமூச்சி விளையாட்டு?

சிறிது அமைதிக்குப் பிறகு தயங்கியபடி கேட்கிறேன். யொகன்னா என்ன சொன்னார்? ஓமர் சிரித்துவிட்டுச் சொல்கிறார். நீ அநியாயத்துக்கு நல்லவனாக இருப்பதாகச் சொல்லிச் சிரித்தாள். வியப்புடன் கேட்கிறேன். சிரித்தாரா?

ஆமாம் சிரித்தார். ஒரு பெண்ணை அம்மணமாகப் பார்த்ததுக்கெல்லாம் யாருக்காவது காய்ச்சல் வருமா என்று சொல்லிச் சிரித்தாள். இதைச் சொல்லிய ஓமரும் சிரிக்கிறார். பிறகு அமைதியாக கொஞ்ச நேரம் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு சொல்கிறார்.

இம்முகாமில் எனக்கு நல்ல பிள்ளைகளாக வந்து சேர்ந்திருக்கிறார்கள். நீங்கள் இருவருமே ஒருவரையொருவர் புரிந்துகொள்ள வேண்டும். யொகன்னா தொராஜா மலைக்குடிப் பெண். மிகவும் மதிக்கத்தக்க ஒரு தொல்குடியைச் சேர்ந்த பெண். என்னதான் அவள் கிறித்தவளாக இருந்தாலும் இன்னமும் அவள் மலைக்குடிப் பெண்தான். அவளுடைய நாட்டைவிட்டு முதன்முதலாக இங்கு வந்திருக்கிறாள். அவளுக்கு என்ன குடும்பச் சிக்கலோ? நமக்குத்

தெரியாது. அப்படி வரும்போது அவள் அந்த மலைக்குடியின மனதை யும் இங்கு சேர்த்தெடுத்துக்கொண்டு வந்திருக்கிறாள். அதனால்தான் அந்நிகழ்வைக் காமம் இல்லாமல் அவளால் எடுத்துக்கொள்ள முடிந்திருக்கிறது. அவ்விடத்தில் உன்னைத்தவிர வேறு யாராவது இருந்து அவளிடம் வேறுபோல நடக்க முயன்றிருந்தால் அப்பெண்ணுக்கு இந்த உலகம் எப்படிப்பட்ட உலகம் என்பது புரிந்திருக்கும். பாவம். அவளொரு நல்ல பெண். அப்படியேதும் நடக்கவே கூடாது. அவளிடமும் இனி இப்படியெல்லாம் குளிக்க வேண்டாம் என்று சொல்லியிருக்கிறேன். உன் மனசிலும் கள்ளம் இல்லையெனில் ஏன் இப்படி இயல்பைத் தொலைத்துவிட்டு அலைகிறாய்?

ஓமர் சொல்வது முற்றிலும் சரியே. மனதுக்குள் சொற்கள் ஓடுகின்றன. வாய்விட்டே சொல்கிறேன். நன்றி, இனி இயல்பாக இருக்கிறேன். மகிழ்ச்சி என்று அவர் ஒற்றைச் சொல்லில் முடித்துக்கொண்டபோது நீங்கள் சொன்னதில் ஓர் அய்யம் இருக்கிறது. யொகன்னாவை எல்லோரும் தாத்தோர் இனப் பெண் என்கிறார்கள். நீங்கள் ஏதோ வேறு பெயர் சொல்கிறீர்களே என்கிறேன்.

இரண்டும் ஒன்றுதான். எப்போதும் இனப்பெருமை அடித்துக் கொள்ளும் இந்த புக்கிஸ்காரர்களைக் கேட்டுப்பார். சுலாவெசியில் தொராஜா இனம்தான் அந்த மலைக்குடி மண்ணின் அசல் இனம் என்பதை ஒத்துக்கொள்வார்கள். அவர்களுடைய கலாச்சாரமும் பண்பாடும் தனித்த பெருமை கொண்டது. இதை நான் சொல்வதை விட யொகன்னாவிடமே கேட்டுப்பார். நீ மம்மியைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாய்தானே?

பண்டைய எகிப்தியர் மம்மிதானே?

அதேதான். அது அக்காலத்து வழக்கம். இப்போது நடைமுறையில் இல்லை என்றுதானே நினைத்துக்கொண்டிருக்கிறாய்? இக்காலத் திலும் அது நடைமுறையில் இருக்கிறது. ஆனால் எகிப்தில் இல்லை. இந்த தொராஜா இன மக்களிடம் இருக்கிறது. இவர்கள் இன்னும் இறந்தவர்களின் உடலைப் பதப்படுத்திக் காத்துவரும் பழக்கத்தினைக் கொண்டிருக்கிறார்கள்.

இச்செய்தியைக் கேட்டு வாய் பிளக்கிறேன். உண்மையாகவா? மெல்லிய நகையோடு அவர் சொல்கிறார். யொகன்னா வந்தால் அவளிடமே கேட்டுப் பாரேன்.

கேட்க வேண்டும். மிக அவசியமாகக் கேட்க வேண்டும்.

பகல் உணவு முடிந்ததும் திரும்பவும் ரேஞ்சர் குழுவுடன் காட்டுக்குள் நுழைகிறேன். மிக மெல்லிய சீழ்க்கை ஒலி கேட்கிறது. திரும்பிப் பார்க்கிறேன். ஆண்ட்ரூஸ் அருகில் வருமாறு சைகையால் அழைக்கிறார். அருகிலிருந்த மரத்தில் ஏறியிருந்த காட்டுக்கொடியைச்

காட்டுகிறார். அதில் ஒரு தேவாங்கு அமர்ந்திருக்கிறது. பந்துபோல தன்னை உருட்டிச் சுருட்டிக்கொண்டு கொடியின் பின்பக்கமாய் மரத்துக்கு நெருக்கமாகக் கொடியை இறுக்கிப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறது. கண்கள் தூங்குவதுபோல மூடியிருக்கிறது. இது சரியான சோம்பேறி என்ற ஆண்ட்ரூஸ் ஒரு குச்சியை எடுத்துக் கொண்டு இப்போது பாரேன் என்று சொல்லிவிட்டு அந்தக் கொடியில் ஒரு தட்டு தட்டுகிறார். அந்த அதிர்வில் கண் விழித்தாலும் அது வொன்றும் அச்சம் கொண்டதுபோலத் தெரியவில்லை. ஒருமுறை தன் பெரிய கண்களால் உருட்டிப் பார்த்துவிட்டுப் பிறகு தலையைக் கவிழ்த்துக்கொள்கிறது. நாங்கள் அதன் பார்வையில் படாதவாறு ஒதுங்கி நிற்கிறோம். வெளிர்பழுப்பு முடி உடல்முழுக்க அடர்ந்திருந் திருக்கிறது. ஆந்தையைப் போல் வட்டமுகம். நடுமுதுகில் நீளமான கருங்கோடு.

சோம்பேறி என்று மீண்டும் திட்டிய ஆண்ட்ரூஸ் திரும்பவும் குச்சியால் கொடியைத் தட்டுகிறார். இம்முறை சற்றுப் பலமாகத் தட்டிவிட்டார். அலுத்துக்கொண்டது போல் இலேசாக உள்நோக்கி நகர்ந்துகொள்கிறது. இதுவே வேறு விலங்காக இருந்தால் தட்டிய வேகத்துக்குத் தாவி மறைந்திருக்கும். ஆண்ட்ரூஸ் கேட்கிறார். வசமாக உட்கார்ந்திருக்கிறது. இதைப் பிடித்துத்தரவா?

வேண்டாம். ஏற்கனவே பேய்க்குரங்குடன் பட்டபாடு போதும். இது என்ன தின்னும் என்றும் தெரியாது.

இது என்ன தின்னுமென எனக்கும் தெரியாது. ஆனால் இது இப்படியே தூங்கிக்கொண்டிருந்தால் மலைப்பாம்பு இதைத் தின்று விட்டுப் போய்விடும் என்று சொல்லிவிட்டு குழுவோடு இணைந்து கொள்ளப் போய்விடுகிறார் ஆண்ட்ரூஸ். சற்றுநேரம் அது உறங்கு வதைப் பார்த்துவிட்டு நகர்கிறேன். போனதும் ஓமரிடம் இதைச் சொல்லவேண்டும்.

பிரைமேட் பட்டியலிலுள்ள ஒரு விலங்கை இன்று பார்த்தேன். எண்ணிக்கை மொத்தம் ஆறாகி விட்டது என்கிறேன்.

இந்தப் பத்து பிரைமேட்களுக்கும் முந்தைய ஓர் இனம் ஒன்று இக்காட்டில் இருப்பது தெரியுமா? விழிப்பதைப் பார்த்துவிட்டு ஓமரே தொடருகிறார். இந்த பிரைமேட் என்றால் என்ன? மனிதருக்கு முன்னோடிகளான குரங்குகள் இனம். அதுபோல இந்தக் குரங்கு களுக்கும் முன்னோடியான ஓர் இனம் பரிணாம வளர்ச்சியில் இருக்க வேண்டும்தானே? அதைப் புரோசிமியன் என்பார்கள். அதாவது ஆதிக்குரங்குகள். அதில் இரண்டுதான் இன்று நீ பார்த்த இந்தத் தேவாங்கும் அன்று வளர்த்த டார்சியரும். ஆனால் இவற்றுக்கும் முன்னோடி இனம் ஒன்று உலகிலேயே இந்த ஒரு காட்டில்தான்

உள்ளது. அதன் பெயர் துபையா.

அணிலா என்கிறேன் வியப்புடன். ஓமர் உடனே மறுக்கிறார். அணில் இல்லை. அணிலுக்குத் துட்பாய் என்று பெயர். இது துபையா. ஆனால் இது பார்ப்பதற்கு அணில் போல இருக்கும். ஆனால் அணில் இல்லை.

பறக்கும் அணிலா?

அதுவும் இல்லை. அது துட்பாய் தெர்பாங். விவரமாய்ச் சொல்ல வேண்டும் என்றால் கொஞ்சம் உயிரியலுக்குள் நுழைய வேண்டும். சலிப்பூட்டலாம். பரவாயில்லையா என்று கேட்டுவிட்டு ஓமர் தொடர்கிறார்.

நாமெல்லாம் பாலூட்டிகள் இனம். பாலூட்டிகள் தாவர உணவும் உண்ணும். ஊன் உணவும் உண்ணும். ஆனால் இந்தப் பாலூட்டிகள் தொடக்க காலத்தில் பூச்சிகளைத் தின்றிருக்கின்றன. அப்படிப் பூச்சிகளைத் தின்ற பாலூட்டிகள்தான் காலத்தால் முந்தையவை. வௌவால்களைப் போல. இப்படிப் பூச்சி தின்னும் இப்பாலூட்டிகளிலும்கூட துபையாதான் மூத்தது என்கிறார்கள். இது தொன்மையான சிற்றினம். தொன்மையானது என்றால் டினோசர் காலத்துத் தொன்மை. அதுமட்டுமல்ல இன்றுவரை உயிர்த்திருக்கும் ஒரே தொன்மைக்காலப் பூச்சி தின்னும் பாலூட்டி இந்தத் துபையாதான்

டினோசர் காலத்திலிருந்து வாழ்ந்து வரும் பாலூட்டியா? அப்படியானால் அரிய இனம்தான். ஆனாலும் ஒரு கேள்வி. பார்ப்பதற்கு அணில் போல இருக்கும் ஒன்று எப்படிக் குரங்குகளுக்கு முன்னோடி விலங்காக இருக்க முடியும்?

நீ கேட்பது சரிதான். இதைப் பார்க்கும்போது அப்படித் தெரியாவிட்டாலும் குரங்குகளுக்கும் இதற்கும் பல உயிரியல் பண்புகளில் ஒற்றுமைகள் இருக்கிறதாம். இதனால்தான் இதைக் குரங்குகளின் முன்னோடியாகச் சில அறிவியலாளர்கள் கருதுகிறார்கள். அதே சமயம் இதை மறுப்பவர்களும் இருக்கிறார்கள். அவர்கள் இதை மூங்கணத்தன் வகையோடு சேர்க்கிறார்கள். எது எப்படியோ குரங்குகளுக்கு முன்னோடி விலங்கு என ஒன்றிருந்தால் அது இந்த துபையா மாதிரிதான் இருந்திருக்க முடியும் என்பதைப் பெரும்பாலோர் ஒப்புக்கொள்கிறார்கள்.

அப்படியானால் இதை இப்படிச் சொல்லலாமா என்று சொல்லுங்கள். மனிதக் குரங்கு நம் அப்பா, குரங்கு நம் தாத்தா, அப்படியானால் இந்தத் துபையா நம் முப்பாட்டன். சரிதானா?

ரொம்ப சரி என்று சிரிக்கிறார் ஓமர். பிறகு, இந்த துபையாவுக்கும் அணிலுக்கும் என்ன வேறுபாடு? அதைப் பார்த்தால் எப்படி அடையாளம் கண்டுபிடிப்பதென்று தெரியுமா என்று கேட்கிறார்.

அது எப்படித் தெரியும் அதையும் நீங்கள்தான் சொல்லவேண்டும்.

அது எளிது. துபையாவுக்கு அணிலைப்போல மரம் ஏறத்தெரியாது. இது தரை, சிறுசெடிகள் மீதுதான் திரியும். தவிர அணில் உணவை இருகைகளிலும் தூக்கிப்பிடித்துக்கொண்டு கொறிக்கும். ஆனால் இந்தத் துபையாவுக்குக் கொறிக்கும் பற்கள் கிடையாது. அதனால் இது தன் வாயை அகலத் திறந்து நம்மைப்போலவே மென்று சாப்பிடும்.

ஓமர் சொல்லுவதை வைத்துப்பார்த்தால் இதுவொரு முதன்மை யான உயிரினம். எப்படியாவது இந்த முப்பாட்டனையும் தேடிப் பார்த்துவிட வேண்டும்.

9

இருவாசிகளின் அலறல்

குவான் முதன்முதலாக முகாமுக்கு வந்திருக்கிறார். அவரோடு கான்துறை அலுவலரும் வந்திருக்கிறார். சும்மா வரவில்லை. முறைப்படி காட்டில் மரம் வெட்டுவதற்கான அனுமதிப் பத்திரத்தோடு வந்திருக்கிறார்கள். நேற்றிரவே வந்துவிட்ட இவர்கள் இன்று காலையில் முதல் மரம் வெட்டப்படுவதைச் சடங்காகப் பார்த்துவிட்டுக் கிளம்பவிருக்கின்றனர். விடிந்ததும் குளிப்பதற்காக ஓடைக்கு வருகிறார் குவான். முன்பே குளித்திருந்தாலும் துணைக்கு உடன் செல்லுகிறேன். குளிப்பதற்காக அங்கே நால்வர் காத்திருக்கின்றனர். யொகன்னா பாத்திரம் ஒன்றைத் தேய்த்துக்கொண்டிருப்பதால் அவர்கள் காத்திருக்கிறார்கள். அப்பாத்திரத்தைத் தேய்த்து முடித்த யொகன்னா கரையேறி நடக்கத் தொடங்கியதும் குவான் தான் அணிந்திருந்த இரவு உடையைக் குளிப்பதற்காகக் களைகிறார். ஆனால் எதிர்பாராதவாறு உள்ளாடையையும் அறவே நீக்கி அப்படியே அம்மணமாக ஓடைக்குள் இறங்குகிறார். இப்படி செய்வாரென எதிர்பார்க்கவில்லை.

நான்கு ஆடவர்களும் விக்கித்துப்போய் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்கின்றனர். பிறகு நமுட்டுச் சிரிப்புடன் வீடுநோக்கித் திரும்புகிறார்கள். நல்வாய்ப்பாளர்கள். ஏக்கத்துடன் அவர்களைப் பார்க்கிறேன். வீடுநோக்கிப் போய்க்கொண்டிருந்த யொகன்னா இந்த நால்வரும் வேகமாக வருவதைக் கண்டு என்ன காரணமாகத் திரும்பி வருகிறார்களெனத் திரும்பிப் பார்க்கக் குவானின் கோலம் தெரிந்துவிடுகிறது. என்னை நோக்கிக் கேலியாய் ஒரு சிரிப்பு உதடுகளில் நெளிகிறது. இப்போது என்ன செய்யப்போகிறாய்? என்ன செய்ய முடியும்? ஏன்தான் இந்த அம்மணம் என்னை இப்படி விடாமல் துரத்துகிறதோ தெரியவில்லை.

அந்நால்வரும் போவதைப் பார்த்துவிட்ட குவான், ஏன் அவர்கள் குளிக்காமல் கிளம்பிவிட்டார்கள் எனக்கேட்கிறார். உண்மையைச் சொல்ல முடிகிறதா? ஒன்றுமில்லை. நீங்கள் குளித்த பிறகு குளிக்கலாம் என்று போகிறார்கள் என்கிறேன். அதனாலென்ன அவர்களையும் குளிக்கச் சொல்லியிருக்கலாமே என்கிறார் குவான். அவர்கள் ஏன் குளிக்கிறார்கள்? அவர்கள் தப்பித்தல்லவா போகிறார்கள். நல்லவேளை

குளித்து திரும்பும்போது துண்டைக் கட்டிக்கொண்டு மானத்தைக் காப்பாற்றிவிடுகிறார். உடைமாற்றுவதற்காக அவர் அறைக்குள் நுழைந்தது பெருத்த நிம்மதியாக இருக்கிறது. மனிதர் அதையும் இங்கேயே செய்யாமல் விட்டாரே. பெருமூச்சுடன் அமர்கிறேன். கழுத்தில் மென்மையான தொடுகை. திரும்பிப் பார்க்கிறேன். யோகன்னா. கண்களில் கேலி மின்னச் சொற்கள் வருகின்றன. ஒன்றுமில்லை, காய்ச்சல் அடிக்கிறதா என்று பார்த்தேன்.

உனக்கு இருக்கும் கொழுப்பு யாருக்கும் இருக்காது அன்னா.

அனிச்சையாய் அன்னா என்று செல்லமாய் எப்படி அழைத்தேன்? அன்னாவின் கண்களும் வியப்பில் பளீரிடுகின்றன. அந்த ஓடை நிகழ்வுக்குப் பிறகு இந்த ஓடை நிகழ்வில்தான் இப்படி நேருக்குநேராகச் சந்தித்துக்கொள்கிறோம். இனி டூ கிடையாது. சேத்திதான் என்பது போல அன்னா நட்புடன் கையை நீட்டுகிறாள். இருகைகளும் இணைகின்றன. இணைந்த கைகளுக்குள் புதிதாய் தோழமைச்செடி துளிர்விட்டு முளைத்திருக்கிறது.

குவான் வெளியே வருகிறார். பசியாறியதும் புறப்பட வேண்டியது தான். இப்போது கிளம்பினால் சரியாக இருக்கும். ஏனெனில் மண்டுர் ஏற்கனவே சென்றுவிட்டிருந்தார். மேஸ்திரியான இவர்தான் மரம் வெட்டும் ஒப்பந்தத்தையும் எடுத்திருக்கிறார். இவருடைய ஒப்பந்தத்தின் கீழ்தான் எல்லா மரம் வெட்டும் தொழிலாளர்களும் பணிபுரிவர். இவருக்கு இதேபோல் இரண்டு மூன்று இடங்களில் ஒப்பந்தங்கள் இருப்பதால் ஓரிடத்தில் தங்கியிருக்க மாட்டார். முதல் மரத்தைச் சடங்குகள் செய்து வெட்ட வேண்டியிருப்பதால் வந்திருக்கிறார். தனக்கு உதவியாக ஜெய்னல் என்னும் மரம் வெட்டுபவரையும் உடனழைத்துச் சென்றிருக்கிறார். இருவரும் வைகறையிலேயே எழுந்து குளித்து சங்கிலிவாளைத் துடைத்துச் சுத்தம்செய்து பெட்ரோலிட்டு நிரப்பிக் கையில் கூடுதலாக ஒரு கலன் எடுத்துக்கொண்டு பசியாறி விட்டுப் பொடிநடையாக முதல் தொகுதி நோக்கி நடந்துவிட்டார்கள்.

நாங்கள் பசியாறி முடித்து வண்டியிலேறி முதலாம் தொகுதிக்குச் சென்று சேர்கையில் அவர்கள் இருவரும் எங்களுக்காகச் சாலையில் காத்திருக்கிறார்கள். நாங்கள் சென்றதும் காட்டுக்குள் நுழைய ஆயத்தமாகிறார்கள். சாலையின் வடபக்கமுள்ள சரிவில் இருவரும் இறங்கிச் செல்லுகிறார்கள். நல்ல ஆழமான பள்ளத்தாக்கு. மண்டுர் கையில் நாட்டுச்சேவலும், படையல் பொருட்களும் இருக்கின்றன. அச்சேவலைப் பலிகொடுக்க மாட்டார்கள். கொற்றவையை வேண்டி உள்ளே உயிரோடு விட்டுவிடுவார்கள். இருவருமே முஸ்லிம்கள். ஆனாலும் காட்டைப் பொறுத்தவரை எல்லோருக்கும் ஒரே நம்பிக்கை.

சாலையிலிருந்து பார்க்கையில் பள்ளத்தாக்கின் கவிகை மட்டம்

எங்கள் பார்வை மட்டத்துக்குக் கீழே இருக்கிறது. ஆக மரம் வெட்டப் படுவதைப் பார்க்கத் தோதான இடம். ஆனால் அவர்கள் எந்த மரத்தை வெட்டப்போகிறார்கள் என்று தெரியவில்லை. நேற்றே இங்குவந்து வெட்டவேண்டிய மரத்தைத் தெரிவு செய்துவிட்டார்கள். அரைமணி நேரம் காத்திருந்த பிறகு சங்கிலிவாளின் உறுமல் கேட்கிறது. அவ்வாளின் ஒலி கானகத்தின் ஆழ் அமைதிக்குள் ஊடுருவி இறங்குகிறது.

க்ரோங்க்

பெரும் ஓசை எழுகிறது. ஏதோவொரு மரக்குடையிலிருந்து இரு இருவாசிகள் அலறிப் புறப்பட்டு எங்களை நோக்கி வந்துகொண்டிருக் கின்றன. முதன்முதலில் காட்டுக்குள் நுழைந்த அன்று கேட்ட இருவாசி யின் குரல். அன்று இதைப் பார்க்க முடியவில்லை. நன்றாகப் புலப் படும்படி ஒன்றுக்கு இரண்டாக நேரே பறந்து வந்து தலைக்கு நேர் மேலே கடக்கின்றன. பறக்கும் வேகத்தில் அதன் இறக்கைகள் விமானம் பறப்பது போல் ஒலிக்கிறது. இது என்ன பறவை என விசாரிக்கிறான் குவான். இதை 'எங்காங் படாக்' என்று சொல்வோம், காண்டாமிருக இருவாசி என்று பொருள் எனக் குவானுக்கு விளக்கிக்கொண்டிருக் கிறார் கான்துறை அலுவலர்.

அது ஏன் காண்டா மிருகம் என்று பெயர்?

இப்பறவையின் அலகின் மீது இன்னொரு அலகை ஒட்டி வைத்தது போல அலகுக்கொண்டை இருக்கிறதல்லவா? அது அலகின் முனையிருக்கும் திசைக்கு எதிர்த்திசை நோக்கிச் சுருண்டு பார்ப்பதற்கு காண்டாமிருக ஒற்றைக்கொம்பைப் போல இருக்கும். அதனால்தான் இப்பெயர்.

எங்களைக் கடந்து சென்ற இருவாசிகள் மீண்டும் திரும்பி வருகின்றன. வெண்மையும் செம்மஞ்சளும் கலந்த அவற்றின் அலகுக் கொண்டைகள் தெளிவாகத் தெரிகின்றன. உடல் கரியநிறம். வான்கோழியின் அளவு. பின்னால் இரட்டையாக நீண்டிருக்கும் வெண்ணிற வால். அவ்வாலின் குறுக்கே கருநிறப்பட்டை. கடந்து பறந்த இரண்டும் பழையபடி அம்மரத்துக்குப் போகவில்லை. மரம் வெட்டப்படும் இடத்துக்கப்பால் சென்று அப்பகுதியைச் சுற்றிப் பறந்துகொண்டிருக்கின்றன. அவை அலறும் குரல்கள் சங்கிலிவாளின் ஒலியையும் மீறி கேட்கின்றன. அதில் பதற்றமும் பரிதவிப்பும். என்ன காரணமாக இருக்கும்?

அந்த இருவாசிகளின் கூடு அங்கே இருக்கிறது என்று நினைக்கிறேன். திரும்பிப் பார்க்கிறேன். ஓமரின் குரல் மெலிதாக வருகிறது. அவர் பார்வை அங்கே வெறித்தபடி இருக்கிறது. இருவாசிகள் கூடுகட்டும் முறை நினைவுக்கு வருகிறது. இரு பறவைகளுமே வெளியே இருக்கின்றன என்றால் அக்கூட்டுக்குள் உறுதியாய்க் குஞ்சுகள் இருக்கவேண்டும். குஞ்சு பொரிந்து கூட்டுக்குள் இருக்கும்போதுதானே பெற்றோர் இருவாசிகள் இரைதேடி இப்படி வெளியே சுற்றும்?

சங்கிலி வாளின் ஒலி நிற்கிறது. ஆனால் இருவாசிகளின் அலறல் நிற்கவில்லை. அமைதியான சூழலில் அவற்றின் அலறல் இன்னும் தெளிவாகக் கேட்கிறது. போர்னியோ காட்டையும் இந்த இருவாசிகளின் குரலையும் பிரிக்க முடியாது. அந்தளவுக்கு இரண்டும் ஒன்றிப் போனவை என கான்துறை அலுவலர் குவானுக்கு விளக்கம் சொல்லிக் கொண்டிருக்கிறார்.

இதோ அதைத்தான் பிரிக்கப் போகிறோமே?

ஒரு நிமிடமாகி விட்டது சங்கிலி வாளின் ஒலி நின்று. அப்படி என்றால் வெட்டப்பட்ட மரம் விழப்போகிறது. அவ்விடத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறோம். ஓரிரு நொடிகள் கழிந்து ஓசை கேட்கிறது.

ச்சட்.... ச்சட்.... என மெதுவாக தொடங்கிய ஓசை வேகமெடுக்கிறது ச்சட்.... ச்சட்.... ச்சட்.... ச்சட்.... ச்சட்.... கவிகைப் பரப்புக்குள் வெளிர் பச்சைநிற இலைகளைக்கொண்டிருந்த ஒரு மரக்குடை சாய்வது நன்றாகப் புலப்படுகிறது. அம்மரத்தை அடையாளம் கண்டுகொண்ட கான்துறை அலுவலர் 'மெர்பாவ்' என்று முணுமுணுக்கிறார். அம்மரம் அருகிருந்த மரத்தின் மீது சாய அது மற்றொரு மரத்தின் மீது சாய, அவை இரண்டும் சேர்ந்து பிறிதொன்றைத் தள்ளிக்கொண்டு சாய இப்படியாக அத்திசையில் பல மரங்களைச் சாய்த்துக்கொண்டே வெட்டப்பட்ட பெருமரம் வீழ்ந்து அதிர்கிறது. அந்த அதிர்வில் அக்கவிகை நிலப்பரப்பு ஒரு கணம் குலுங்கி அடங்கியது. அந்த அதிர்வால் திகிலடைந்த அந்த இருவாசிகள் இரண்டும் பெரும் கேவல் கேவி எங்கோ பறந்து மறைகின்றன.

ஓமர் கண்ணாடியை வழக்கம் போல் கழற்றித் துடைத்து மாட்டிக் கொண்டு, குவானைப் பார்த்துக்கொண்டே சொல்கிறார். நம் நடவடிக்கைத் தொடங்கிவிட்டது. குரலில் விரக்தி. முகமும் உறைந்திருக்கிறது. புன்னகையும் வலிய எழுப்பியது. குவான் மற்றவர்களுடன் கைகுலுக்கி வாழ்த்துகளைப் பரிமாறிக்கொள்கிறார். அது ஏவுகணை வெற்றிகரமாகச் செலுத்தப்பட்டவுடன் தொலைக்காட்சியில் காட்டும் காட்சியை நினைவுறுத்துகிறது.

ஏவுகணை வெற்றிகரமாகச் செலுத்தப்பட்டவுடன் நாட்டுத்தலைவர்களும் அறிவியலாளர்களும் தங்கள் சாதனையை மெச்சிக்கொண்டு ஒருவரோடு ஒருவர் கைகளைக் குலுக்கிக்கொண்டும் கட்டித் தழுவிக் கொண்டும் மகிழ்ச்சியை வெளிப்படுத்திக்கொள்வர். ஆனால் ஓர் ஏவுகணை விண்ணில் செலுத்தப்பட்டு ஒருமாதம் வரை அதைச் சுற்றியுள்ள சுமார் அய்ம்பது சதுர கிலோமீட்டர் பரப்பளவில் எந்த ஒரு பூச்சியையும், புழுவையும், பறவைகளையும், விலங்குகளையும் உயிருடன் காணமுடியாது. எவ்வளவு வேதனையான உண்மை?

எதிர்க்காற்று வீசுகிறது. அக்காற்றில் மிதந்து வரும் பச்சையத்தின் குருதி நாற்றம் மூக்கைத் துளைக்கிறது. தோலில் முள் கீறியது போல அம்மரம் வீழ்ந்த தடம் கவிகைப் பரப்பில் ஒரு கோடு கிழித்தாற்போல் காட்சியளிக்கிறது. அம்மரம் வீழ்ந்த அதிர்வில் எங்கெங்கோ இருந்த பறவைகள் அனைத்தும் சிறகடித்து அவசரமாக வேறெங்கோ விரைகின்றன. ஏதேதோ விலங்குகள் காட்டுக்குள்ளே எங்கெங்கெல்லாமோ இருந்து அச்சமும் எச்சரிக்கையும் கலந்த குரல்களைப் பல தொனிகளில் எழுப்பிக்கொண்டிருக்கின்றன. ஒரு நிமிடம் காடே கதறுவது போல் இருக்கிறது.

அந்த இருவாசிகள் எங்கு போயின?

அதன் குஞ்சுகளுக்கு என்னவாகி இருக்கும்?

இக்கதறல்கள் என்ன சொல்கின்றன?

நம் எதிர்காலம் குறித்து எச்சரிக்கிறதா?

இன்று நான்.

நாளை நீ.

மனம் கனக்கத் தொடங்குகிறது. தவறான ஒரு தொழிலுக்கு வந்துவிட்டோமோ?

# 10

பட்டியல்

இப்போதெல்லாம் காலையில் காட்டுக்குள் புதிய குரல் கேட்கத் தொடங்கியிருக்கிறது. அது வெகுதொலைவில் இருந்து வருகிறது. பெண் போர்னியன் கிப்பனின் குரல் என்கிறார் ஓமர். இது கவிகைவாழ் வாலில்லாக் குரங்கு. இது ஏன் இப்படி நாளும் காலையில் கத்துகிறது? இது ஒன்றைத்தான் இயற்கையான ஓசையாகக் கேட்கமுடிகிறது. கதிரொளி தோன்றும்போதே சங்கிலிவாளின் ஒலியும் தொடங்கி விடும். இத்தோடு டிராக்டரின் இரைச்சலும் சேர்ந்து அதற்கப்புறம் எல்லாமே காதுக்குள் துளையிடும் ஒலிகள்தாம். இரண்டும் மாலை வரை ஓயாது. தொழிற்சாலைக்குள் வாழ்வது போல இருக்கிறது.

முதல் தொகுதியில் அந்த இருவாசிப் பறவைகள் அலறிப் பறந்தபிறகு மனசே சரியில்லை. அடுத்தநாள் மாலை அங்கு நுழைந்திருந்தேன். வெட்டப்பட்ட மர உச்சியில் இருவாசிகளின் கூடு இருந்து அக்குஞ்சு களைக் காப்பாற்றிவிட முடியாதா என்கிற நப்பாசை. அதற்குள் டிராக்டர்கள் பாதை அமைத்திருந்ததால் எளிதாக அந்த இடத்தை அடையமுடிகிறது. ஆனால் கண்டுபிடிக்கும் அளவுக்கு எதுவும் ஒழுங்கில் இல்லை. கொத்திக்குதறிக் கிடக்கிறது காடு. துண்டிக்கப்பட்ட கிளை களை டிராக்டர் ஓரமாக ஒதுக்கித் தள்ளிவிட்டுக் கட்டைகளை இழுத்து வந்திருந்ததில் அனைத்தும் சீரற்றுக் கிடக்கின்றன. இதில் எங்கே கூட்டினைக் காண?

டிராக்டர் வேறொரு தடத்தில் கட்டையை இழுத்துக்கொண்டிருக்கும் ஒலி கேட்கிறது. கட்டை. நேற்றுவரை மரம். இன்று கட்டை. வெளியேறி வருகிறேன். திடலில் டிராக்டர்கள் கொண்டுவந்து சேர்த்திருந்த கட்டை களைக் காடோ தலைமையில் ஒரு குழு அளந்துகொண்டிருக்கிறது. ஒருவர் ஒரு கட்டையின் குறுக்கு வெட்டுப்பக்கத்தில் விரிசலுற்றிருப் பதால் அதில் 'எஸ்' கொக்கியை அடித்துக்கொண்டிருக்கிறார். ஒருபக்கம் கட்டைகளின் ஓரம் நறுக்கும் வாளின் ஒலி. மற்றொரு பக்கம் துக்கான் குப்பாஸ் எனும் பட்டை உரிப்பவர் கட்டைகளின் மரப்பட்டையை நீள் கடப்பாரையால் உரித்துக்கொண்டிருக்கிறார். இப்படி பட்டை யுரித்து முடித்ததும் அளக்கும் பணி தொடங்கும்.

கட்டைகளின் இரு முனைச் சுற்றளவையும் அளந்து சராசரியைக் கண்டுபிடிக்கவேண்டும். பிறகு கட்டையின் நீளத்தை மீட்டரில் அளக்க வேண்டும். சுற்றையும் நீளத்தையும் வைத்துச் சூத்திரத்தைப் பயன்படுத்தி அக்கட்டையின் கன அடி கணக்கிடப்படும். இப்பட்டியல் முழுமையாகக் கைக்கு வந்தவுடன் அந்த அளவு, கட்டையின் பெயர், கனஅடிக் கணக்கு எல்லாம் சரியாக இருக்கிறதா என ஆய்வுசெய்து பட்டியலை இறுதிசெய்து அலுவலகத்துக்கு அனுப்பி வைப்பதே பணி.

சுற்றளவை அளக்கும்போது விளிம்பிலிருந்து ஓர் அங்குலம் உள்தள்ளி அளப்பதற்குப் பதில் இரண்டங்குலம் உள்தள்ளி அளந்தால் நிறைய கன அடிகள் குறைந்து கணிசமான வேறுபாட்டைக் கொண்டு வந்துவிடும். எனவே இரண்டு பட்டியல்கள் உருவாக்கப்படும். அசல் பட்டியலை உருவாக்குவது எங்கள் பணி. போலிப் பட்டியல் நகர அலுவலகத்தில் உருவாக்கப்படும். இப்போலிப் பட்டியலை வைத்து அனைத்து வணிக விளையாட்டுகளும் நடக்கும். நிறுவனம், ஒப்பந்தக் காரர்கள், கான் துறை, சுங்கத்துறை என்று எல்லா மட்டங்களிலும் இது நடைபெறும். அப்படியானால் அசல் பட்டியல் எதற்கு? அது வணிகர் களிடம் விற்பதற்கு மட்டும்.

பொதுவாக ஒப்பந்தக்காரர்கள் இதில் ஏமாறமாட்டார்கள். பெரும்பாலும் அவர்களுக்கு அசல் பட்டியல்தான் கொடுக்கப்படும். ஆனால் அதே ஒப்பந்தக்காரர்கள் தொழிலாளர்களை ஏய்க்கப் போலிப் பட்டியலைப் பயன்படுத்துவர். அப்பட்டியலின்படியே ஒப்பந்தக்காரர்கள் தங்கள் பணியாளர்களுக்குச் சம்பளம் தருவர். உயிரைப் பணயம் வைத்து உழைக்கும் ஆட்களுக்குக் கிடைப்பதே சொற்பம். அதிலும் பிடுங்கித் தின்ன ஆசைப்பட்டால் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? ஓமர் இதை மீற முடிவு செய்கிறார். அசல் பட்டியலை நகர அலுவலகத்துக்கு அனுப்பும் முன்னரே முகாம் அலுவலக அறிவிப்புப் பலகையில் அன்றாடம் ஒட்டிவைக்கச் சொல் கிறார். இது தொழிலாளர்கள் உண்மைக் கணக்கை அறியும் வாய்ப்பைத் தருகிறது. இம்முடிவு தொழிலாளர்கள் இடையே பெரும் வரவேற்பைப் பெற்றாலும் இதற்கான எதிர்வினை கூடிய விரைவிலேயே வரும் பார் என்கிறார் ஓமர்.

நான்குநாள் கழித்து அன்றைய பட்டியலை உருவாக்கி அறிவிப்புப் பலகையில் ஒட்டப்போகும் நேரத்தில் ஓமர் கையில் அட்டூர்பேசி யுடன் செய்தியைச் சொல்லியபடியே வருகிறார். இனி பட்டியல்களை ஒட்ட வேண்டாமாம். ஒப்பந்தக்காரர்கள் வருத்தப்படுகிறார்களாம். அலுவலகத்திலிருந்து செய்தி சொல்கிறார்கள்.

நீங்கள் சொல்லியது போலவே எதிர்வினை சீக்கிரமாகவே வந்து விட்டது. இப்போது நாம் என்ன செய்யவேண்டும்?

பட்டியலை வழக்கம்போல் ஒட்டிவிடு. அவர்களிடமும் இதைத்தான் சொன்னேன்.

இதனால் உங்களுக்கு ஒன்றும் சிக்கல் வராதா?

வராது. முகாம்களிலும் நடக்கும் ஓர் ஊழல் இருக்கிறது. ஒரு முகாம் மேலாளர் வெட்டப்படும் கட்டைகளில் சில கட்டைகளைக் கணக்கில் வராமல் ஒதுக்கி வைத்து ஒப்பந்தக்காரர்களுடன் கூட்டுச்சேர்ந்து அதைக் கள்ளச்சந்தையில் விற்றுப் பணம் பார்த்துவிடுவர். இப்படிக் குறுகிய காலத்தில் பெரும் பணம் பண்ணியவர்கள் நிறைய பேர் இருக்கிறார்கள். ஆனால் இந்த ஓமர் அப்படிப்பட்ட ஆளல்ல என்பது நிறுவனத்துக்கு நன்கு தெரியும். அதனால் தங்களுக்கு எந்த இழப்பையும் ஏற்படுத்தாத இதைப் பெரிதுபடுத்த மாட்டார்கள். தொழிலாளர்களுக்கு நன்மை செய்ய நமக்கும் இதுவொரு வாய்ப்பு. அதனால் துணிந்து ஒட்டிவிடு. வருவதைப் பார்த்துக்கொள்வோம்.

பட்டியல் ஒட்டப்படுகிறது.

**முகாம் மனைவிகள்**

மழைக்காலத்துக்குள் வேலைகளை விரைந்து முடிக்கவேண்டும். இல்லையெனில் வேலைகள் மூன்று மாதத்துக்குத் தடைபட்டுவிடும். எனவே கூடுதலான ஆட்களும் எந்திரங்களும் தேவையென ஓமர் கேட்டிருந்தார். ஆதலால் கூடுதலாக ஆட்கள் வந்திருக்கின்றனர். காலையிலிருந்து அவர்களுடைய பெயர், விவரங்களைப் பதிவேட்டில் பதிந்துகொண்டிருக்கிறேன். அதில் கடைசியாக வந்த இளைஞர் கைகளில் பொருட்களோடு நின்றுகொண்டிருப்பதைக் கவனிக்கிறேன். ஒரு கையில் மளிகைப் பொருட்களைக் கொண்ட அட்டைப்பெட்டி. மற்றொன்றில் இரண்டு தட்டு முட்டைகள். எல்லாப் பொருட்களையும் வெளியிலிருந்து வாங்கி வந்திருப்பதே அவ்விளைஞரின் சிக்கன உணர்வைச் சொல்லிவிடுகிறது.

இருபத்து நான்கு வயது. புக்கிஸ் இனம். பெயர் புர்கான். மரம் வெட்டும் பணிக்கு வந்திருக்கும் அவர் உதவியாள் எவரையும் உடன் அழைத்து வரவில்லை. கேட்டதற்கு தனியாக நன்றாக மரம் வெட்டுவேன் என்று பதில். பதிவேட்டை மூடிவைக்கிறேன். மரம் வெட்டுபவர்களை உதவியாள் இன்றித் தனியே மரம்வெட்ட அனுப்பும் மரபு கிடையாது. சிக்கன உணர்வு தேவைதான். ஆனால் அது இந்தளவுக்கு இருக்கக் கூடாது. ஓமரை அழைக்கிறேன். ஓமர் அந்த இளைஞரிடம், மரம் வெட்டுவது திறமை தொடர்பான பணிமட்டுமல்ல அது பாதுகாப்புடன் தொடர்புடையது. நாளை ஏதாவது சிக்கல் என்றால் நாங்கள்தான் பதில் சொல்லவேண்டும் என்று கடிந்துகொண்டு உதவியாள் வந்த பின்தான் மரம் வெட்ட அனுமதியளிக்க முடியும் என்று கண்டிப்பாகச் சொல்லிவிடுகிறார்.

பதிவுப்பணி முடிந்தவுடன் உணவுக்கூடத்துக்குச் செல்கிறேன். அருகில் வந்தமர்ந்த அன்னா கைகளில் இரு குவளை எலுமிச்சைச்சாறு. இப்போதுதான் கவனிக்கிறேன். அன்னாவின் கண்களுக்குக் கீழே இலேசாக கருவளையங்கள். ஏன் இந்தக் கருவளையங்கள் அன்னா?

மார்த்தாவை மருத்துவமனையில் இரவெல்லாம் கண்விழித்துப் பார்த்துக்கொண்டதால் வந்தது என்று சலிப்புடன் வந்த பதிலைக் கேட்டதும்தான் மார்த்தாவின் நினைவே வருகிறது. இப்போது மார்த்தா எப்படி இருக்கிறார் அன்னா?

இக்கேள்விக்கு அன்னாவிடம் இருந்து உடனே பதில் வரவில்லை. முதலில் சற்றுத் திகைத்தது போல இருந்த பார்வை பின் வெறித்தது போல மாறுகிறது. பின் தழுதழுத்த குரலில் அக்கேள்வி வருகிறது. மார்த்தா இறந்துவிட்டாள் என்பது உனக்குத் தெரியாதா?

இப்படிச் சொல்லிமுடித்தவுடனேயே கைகளால் முகத்தை மூடிக் கொண்டு உடல் குலுங்க அழத்தொடங்குகிறாள். அழுது முடியும்வரை காத்திருக்கிறேன். பின் கண்ணீரைத் துடைத்துக்கொண்ட அன்னாவின் பார்வை கூடத்துக்கு வெளியே தாவிக் காட்டு மரங்களின் உச்சியில் பதிகிறது. இருபத்து இரண்டு வயசு என்று அன்னாவின் உதடுகள் தானாக முணுமுணுக்கின்றன. முட்டாள் என்ற ஒற்றைச் சொல்லும் வெடித்து வெளிவருகிறது. அன்னாவையே உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். பிறகு திரும்பிப்பார்த்தவள் பித்துக்குளியைப் போல பேசிக்கொண்டிருக்கிறேன் இல்லையா என்கிறாள்.

மார்த்தாவின் இறப்பு அன்னாவைக் கடுமையாகப் பாதித்துள்ளது. அடுத்த கேள்வி வருகிறது. மார்த்தாவின் இறப்புக்கு என்ன காரணம் தெரியுமா? தெரியாது என்று தலையசைக்கிறேன்.

கருச்சிதைவு. நிறைய குருதி வெளியாகிவிட்டது.

அன்னாவின் சொற்கள் அதிர்ச்சியூட்டுகின்றன. மார்த்தாவுக்கு இன்னும் திருமணமே ஆகவில்லை. ஆனாலும் புரிகிறது. யார் காரணம்?

அம்முகாம் மேலாளர். மார்த்தாவின் வயதில் அவருக்கு ஒரு பேத்தி உண்டு. சரியான முட்டாள் இந்த மார்த்தா. நான்கு மாதமாம். என்னிடம்கூட சொல்லவில்லை. மருத்துவர் முடியாது என்று சொல்லி யிருக்கிறார். எனவே நாட்டு மருத்துவம் என்று தானே ஏதோ செய்யப்போய் நிலைமை மோசமாகிவிட்டது.

அந்த மேலாளரை என்ன செய்தீர்கள்?

என்ன செய்ய முடியும்? பணம் இருக்கிறது. உள்ளூர் என்கிற வலு இருக்கிறது. எதையும் சாதிக்கலாம். எங்களைப் போன்றவர்களுக்கு என்ன இருக்கிறது சொல்? நாங்கள் நாடு விட்டு நாடு பிழைக்க வந்தவர்கள்தானே? அன்னாவின் குரலில் தன்னிரக்கம் ததும்பி மீண்டும் குரல் உடைகிறது. விழிநீர் வழியத் தொடங்குகிறது.

வெட்டுமர முகாம்களின் சமையல் பணிக்குத் தாத்தோர் மற்றும் பிசாயா இனப்பெண்கள் மட்டும்தான் வருவார்கள். ஏனென்றால் இக்கனை ஆண்களுக்கு இடையில் பணிபுரியும் திறமையும் துணிவும் இவர்களுக்கு மட்டுமே இருக்கிறது. அப்படியிருக்க இந்நிகழ்வு அதிர்ச்சியாக இருக்கிறது. மார்த்தாவுக்குக் கொஞ்சம் துணிவு இருந்திருக்கலாம். அந்த மேலாளரைத் தொடக்கத்திலேயே எதிர்த்திருக்கலாம். இதைச் சொன்னவுடன் அன்னாவின் விரல்கள் கண்ணீரைத் துடைத்துக் கொள்கின்றன.

துணிவு, திறமை அது இது என்று உளறாதே. எங்களைப் போன்ற பெண்கள் இம்முகாம் வேலைக்கு வருவதற்குக் காரணம் நீ சொன்னது போல் துணிவு, திறமை எல்லாம் கிடையாது. வெளியில் வேலை பார்ப்பதைவிட இங்கு இரண்டு மடங்குச் சம்பளம் அதிகம். அங்கு நான்கு வருடங்கள் சம்பாதிப்பதை இங்கு இரண்டே வருடத்தில் சேர்த்துக்கொண்டு சீக்கிரமே நாட்டுக்குப் போய்ச் சேர்ந்து விடலாம் என்றுதான் வருகிறோம். ஆனாலும் இதற்கும் ஒரு விலை இருக்கிறது. முகாமில் முதன்மைப் பொறுப்பில் உள்ள ஒருவரோடு அனுசரித்துத் தான் போக வேண்டியிருக்கிறது. எங்களை மணம் செய்துகொள் பவர்கள் வெகு சொற்பம். அப்படியே மணந்துகொண்டாலும் நாங்கள் முகாம் மனைவிகள்தாம். முகாம் மனைவி என்றால் என்னவென்று தெரியும்தானே?

முகாம் மனைவியா? அது என்ன மனைவி?

நினைத்தேன். உனக்கு இம்முகாமில் காடு, மரம், பறவை, விலங்கு தான் தெரியும். மற்ற மற்ற முகாம்களிலே என்ன நடக்கிறது என்று முதலில் விசாரித்துப் பார். பொதுவாக முகாம் மேலாளர்களின் வாழ்க்கை வயதாகும்வரை முகாமிலேயே ஓடும். நகரத்துக்கு அவ்வப் போது சென்று வருவதோடு சரி. எனவே இவர்களுக்கு இங்கே நிரந்தரமாக பெண் துணை தேவைப்படுகிறது. அதுதான் முகாம் மனைவி. மனைவி என்பது நாகரிகமான சொல். வைப்பாட்டிதான் சரி. இடையில் தவறிக் குழந்தை பிறந்துவிட்டால்? அதை யாருக்காவது தத்துக் கொடுத்துவிடலாம். நகரத்தில் போய் விசாரித்துப்பார். எத்தனை முகாம் மனைவிகளின் குழந்தைகள் தத்துபோகின்றன என்று. இந்தப் பாவி மார்த்தா அப்படியாவது ஒழுங்காகப் பெற்றுக் கொடுத்திருக்கலாம்.

கடைசியில் என்னதான் செய்தீர்கள்?

மார்த்தாவின் உறவினர் ஒருவருடன் சமாதானம் பேசி முடித்து விட்டார்கள். சமாதானம் என்ன சமாதானம். பணம் கொடுத்திருப் பார்கள். இறுதியில் இங்கேயே அடக்கம் செய்துவிட்டோம்.

அந்தப் பணம் மார்த்தாவின் குடும்பத்துக்குப் போய்ச் சேரும் தானே?

சேர்ந்தால் என்ன? சேராவிட்டால் என்ன? அநாதைப் பிணம்

போல் அடக்கம் செய்யப்பட்டாள். இதுவே எங்கள் கம்போங்கா இருந்திருந்தால் மார்த்தாவின் மரணம் எவ்வளவு மரியாதையோடு இருந்திருக்கும் தெரியுமா? அதையெல்லாம் இழந்து விட்டாளே பாவி எனச் சொல்லி முடிக்கும் அன்னாவின் கண்களில் நீர் முட்டுகிறது.

இவர்களுடைய மரணச் சடங்குகளைப் பற்றி ஏதோ சொன்னாரே ஓமர்? இறந்த உடலை மம்மி போல் இன்றும் பதப்படுத்துவார்கள் என்றுதானே சொன்னார்? ஆனால் அன்னா இருக்கும் மனநிலையில் அதைப்பற்றிக் கேட்பது நாகரிகமாக இருக்காது. வேறொரு சூழ்நிலை வரட்டும். கேட்கலாம்.

**புதிய பறவை**

மறுநாள் விழிக்கிறபோதும் அப்பெண் கிப்பனின் குரல் கேட்கிறது. சற்றுநேரம் படுக்கையில் படுத்திருக்கும்போது ஒரு புதிய குரல் கேட்கிறது. குரலா அது? வெடிக்குரல். ஆனால் சுதி சுத்தமான இரட்டைக்குரல்.

கொவ்-வவ்.

இதுவரை இக்கானகத்தில் கேட்காத குரல். அவசரமாக எழுந்து கொள்கிறேன். வீட்டுக்கு வெகு அருகே கேட்கிறது. குசினிக்கு வந்த போது எதிர்க்கரையில் ஒப்பந்தத் தொழிலாளர் குடியிருப்பில் சிறு கூட்டமொன்று கூடியிருப்பது தெரிகிறது. அங்கு என்ன செய்கிறார்கள்? அன்னாவிடம் விசாரிக்கிறேன். எல்லாம் உனக்குப் பிடித்ததுதான். புதிதாக ஒரு பறவையைப் பிடித்து வைத்திருக்கிறார்கள் என்று அன்னா சொல்லி முடிக்கும் முன்னரே அங்கு சென்று நின்றுவிடுகிறேன்.

வான்கோழியின் அளவுள்ள ஓர் அழகிய பறவை. காலில் கட்டிப் போட்டிருக்கிறார்கள். அதன் தலை, கழுத்து இரண்டிலுமே மென் மயிர்கள் இல்லை. ஆனால் அந்த இடங்களில் அதன் தோல்நிறமே அழகிய நீலநிறத்தில் மிளிர்கிறது. சற்றுச் செந்நிறம் கலந்த அதன் கண்களில் மிரட்சி மிதந்துகொண்டிருக்க சிவந்த கால்களோ அங்கு மிங்கும் நிலையற்றுத் தவித்துக்கொண்டிருக்கின்றன. இளவெயிலில் சிறகும் வாலும் பளபளக்கின்றன. ஒவ்வொரு இறகிலும் இருக்கும் சிறிய வட்டங்கள் அதன் உடல்முழுவதும் பல கண்கள் விழித்துப் பார்ப்பதைப் போலக் காட்சியளிக்கிறது. கண்களில் மருள் மிரளத் தன் மஞ்சள்நிற அலகால் மீண்டும் ஒருமுறை கொவ்-வவ் என்று வெடிக்கிறது. வலுமிக்கக் குரல்.

இது என்ன பறவை, எப்படிக் கிடைத்தது? காட்டுக்கோழி, துவான். நான்தான் பிடித்தேன். கண்ணி வைத்திருந்தேன். அதில் மாட்டியிருந்தது என்ற குரலைக் கேட்டுத் திரும்புகிறேன். புன்சிரிப்புடன் புர்கான். காட்டுக்கோழி இவ்வளவு அழகாக இருக்குமா? இதை என்ன செய்யப் போகிறாய் புர்கான்?

பார்க்க அழகாக இருக்கிறது. வளர்க்கப்போகிறேன் துவான்.

மனதுக்கு நிறைவான பதில். இதைக் கொன்று தின்றுவிடாமல் என்ன செய்தாலும் சரி. திரும்பி வருகிறபோது ஓடையில் ஜோஸும் ஓமரும் குளித்துக்கொண்டிருக்கிறார்கள். அங்கே ஒரு காட்டுக்கோழி இருக்கிறது. பார்த்துவிட்டு வருகிறேன் என்றதும் காட்டுக் கோழியா? அது 'துவோவ்' என்கிறான் ஜோஸ். அவர்கள் காட்டுக்கோழி என்று தானே சொன்னார்கள் என்று கூற உடனே ஓமர் சொல்கிறார். இன்னும் கொஞ்சம் விசாரித்துப்பார். அதை மயில் என்றுகூடச் சொல்வார்கள்.

மயிலா?

ஆமாம். இந்தக் காட்டுக்கு இதுதான் மயில். இது மயிலைப் போலத் தன் வால்சிறகை விரித்து நடனமாடக்கூடிய பறவை. அதனாலேயே அதை மயில் என்று சொல்பவர்களும் இருக்கிறார்கள்.

இங்கு ஏதாவது ஒரு பெயரைக் கேட்கப் போனால் இப்படிப் பல பெயர்கள் கிளம்பி வந்து தலையைக் குழப்பிவிடுகிறதே.

ஓமர் சிரிக்கிறார். ரொம்பவும் குழம்பிக்கொள்ளாதே. பல இனங்கள் வசிக்கும் இடத்தில் மொழிக்கு ஒரு பெயர் இருக்கத்தானே செய்யும். இது பகட்டுக்கோழி. இதைப்பற்றி ஜோஸுக்குதான் நன்கு தெரியும். முருட் இனத்துக்கும் இந்தப் பகட்டுக்கோழிக்கும் நெருங்கிய தொடர்பிருக்கிறது இல்லையா ஜோஸ் என்று கேட்டவாறே தலையைத் துவட்டிக்கொள்ளத் தொடங்குகிறார். பதிலுக்காக ஜோஸைப் பார்க்கிறேன்.

ஆமாம், இப்பறவையின் வால் இறகை எங்கள் பாரம்பரிய தலைப் பாகையில் செருகிக்கொள்வோம். அதைப்பற்றி இன்னொருமுறை சொல்கிறேன். சரி நீ இன்று பங்கலான் போவாய்தானே?

போவேன். ராக்கிட் வேலை தொடங்குகிறது. ஏன் கேட்கிறாய்?

ஒரு கடிதம் கொடுத்தனுப்ப வேண்டும் என்று சொல்லிய ஜோஸ் வெட்கத்துடன் சிரிக்கிறான். அப்படியா? அவசியம் போகிறேன் ஜோஸ். வேலையே இல்லையென்றாலும் இதற்காகவாவது அவசியம் போகிறேன். அருகில் நெருங்கிய ஜோஸ் கரையேறிச் செல்லும் ஓமர் காதில் விழாதவாறு கிசுக்கிசுக்கிறான். ரலாவுக்கான உன் சலாமும் இக்கடிதத்தோடு போகிறது. இம்முறை வெட்கம் இடம் மாறுவது போல் இருக்கவே திரும்பிக் கொள்கிறேன்.

பங்கலான் செல்லும் வழிநெடுக எங்களுடைய சுமையுந்துகள் கட்டைகளை எடுத்துக்கொண்டு விரைந்து கொண்டிருக்கின்றன. கணிசமான அளவுக்குக் கட்டைகள் பங்கலான் சென்று சேர்ந்திருக் கின்றன. பாதையில் இரண்டு உடும்புகள் சுமையுந்துச் சக்கரத்தில் அடிபட்டு இறந்திருப்பது தெரிகிறது. இவ்வழியில் பலமுறை உடும்பு களைப் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் வண்டியின் வேகத்தைக்

குறைத்துக் கவனமாகப் போவோம். ஆனால் இந்த நிஸ்ஸான் வி-டெல் வண்டிகளுக்கு இதைப் பற்றியெல்லாம் என்ன கவலை?

இந்த உடும்புகள் எப்போதும் கூட்டமாகவே இருக்கும். சாலையின் ஓரத்தில் ஓய்வெடுக்கும். இவை சாலையைக் கடக்கும்போதுகூட மெதுவாகவே கடக்கும். வண்டியைக் கண்டுகூட அச்சமில்லை. சிறு முதலை அளவுள்ள உடும்புகள். இவைமட்டும் எங்கள் இடத்தில் இருந்திருந்தால் வயிற்றுக்குள் போயிருக்கும் என்றேன் ஒருமுறை.

இங்கு மட்டும் என்ன துவான்? இங்கும் இதன் இறைச்சியைத் தின்னுபவர் இருக்கத்தான் செய்கிறார்கள். கடமானும், கேழையாடும் கிடைக்குமிடத்தில் இந்த உடும்பை யாரும் சீண்டுவதில்லை. அதனால்தான் இது இன்னும் பிழைத்துக் கிடக்கிறது என்று பதில் வருகிறது.

இனி எங்கே பிழைப்பது?

**மீன் பங்காங்**

ராக்கிட் எனும் மிதவையை உருவாக்கக் கட்டைகளின் மீது வளையம் பொருத்தும் பணி நடக்கிறது. கட்டைகளின் பருமனைப் பொறுத்து நீளவாக்கில் சுமார் மூன்று மீட்டர் இடைவெளியில் வளையங்கள் பொருத்தப்படுகின்றன. ஓரளவு சமநீளமுள்ள இரு கட்டைகளைத் தேர்ந்தெடுத்தபின் வளையங்களுக்குள் நைலான் கயிற்றை நுழைத்துக் கட்டைகளைப் பிணைக்கிறார்கள். இப்படிப் பிணைக்கையில் கட்டைகளுக்கு இடையே சிறிய இடைவெளி இருக்கிறது. அந்த இடைவெளியில் நைலான் கயிறு தொட்டில்போல் தொய்ந்து நீரில் கிடக்கிறது. அந்த இடைவெளியின் நடுவில் சிலாங்கன் பத்து போன்ற கனவகைக் கட்டை பாரந்தூக்கியின் உதவியால் தூக்கி வைக்கப்படுகிறது.

மூழ்கும் தன்மையுடைய அக்கட்டை மிதக்கும் தன்மையுள்ள இருகட்டைகளுக்கு இடையே கயிற்றின் உதவியால் தொட்டில் குழந்தைபோல் மிதக்கும். அக்கட்டை நழுவிவிடாமல் இருப்பதற்காகத் தேவையான இடங்களில் ஒருசுற்றுச் சுற்றி பக்கத்தில் உள்ள கட்டைகளோடு பிணைத்துக் கட்டிவிடுகிறார்கள். சுமார் பதினைந்து, இருபது கட்டைகள் அகலம்வரை ராக்கிட் அமைக்கப்படுகிறது. பிறகு ஒரு கட்டையின் முனை முடியும் இடத்தில் மற்றொரு கட்டையென இந்த நீளம் தொடர்கிறது. அகலத்தைவிட நீளமே அதிகம்.

ராக்கிட்டின்மீது நின்றே பணிகளைக் கவனித்துக்கொண்டிருக்கிறேன். நீச்சல் தெரியாத ஒருவர் இதன்மேல் அச்சமில்லாமல் நிற்கும் அளவுக்கு மிக நெருக்கமானப் பிணைப்பு. கிளபத்தாங்கன் ஆற்றின் மேல் நின்றுகொண்டு கிளபத்தாங்கனையே பார்ப்பதும் கரையைப் பார்ப்பதும் அழகாக இருக்கிறது. கரையோர மரத்தின் கிளையொன்றில் பாம்புவாத்துக் கூட்டமொன்று அமர்ந்திருக்கின்றது. கன்னத்திலிருந்து

ஒரு வெண்கோடு கழுத்தின் கீழிறங்குவது தெரிய அவை தங்கள் இறக்கைகளை விரித்து வெயிலில் உலர்த்தியபடியே அமர்ந்திருக்கின்றன. நீரில் முக்குளித்துத் திரும்பியிருக்க வேண்டும்.

இவற்றின் அமைதிக்கு நேர்மாறாக கரையில் நண்டின் இடுக்கி போன்ற அமைப்பால் கட்டைகளைப் பொறுக்கி எடுத்து கரையோரமாகக் கொண்டு வைக்கும் கப்பித்தான் வண்டியின் இரைச்சல். கூடவே பாரந்தூக்கியின் இரைச்சலும். இவற்றைக் கரைக்கப்பால் நின்றிருந்த போருபோக் மரத்தின் கிளையிலொரு கரியநிறப் பறவை வேடிக்கை பார்ப்பதுபோல் அமர்ந்திருப்பதைக் காண்கிறேன். கொக்கா? ஆனால் கருப்பாக இருக்கிறதே? அருகில் வளையத்துக்குள் கயிற்றைப் பிணைத்துக்கொண்டிருந்த பணியாள் ஒருவரிடம் அது என்ன பறவை என்று விசாரிக்க அவர் ஒருமுறை நிமிர்ந்து பார்த்து, 'பங்காவ்' என்கிறார்.

நாரை. கருப்பு நிறத்தில் நாரையா? கரைக்கு விரையும்போது ஓமரும் அப்பறவையைக் கவனித்துவிடுகிறார். அது ஸ்டோர்ம் நாரை என்றவர் இதைப் பார்த்து எவ்வளவு நாட்களாகிவிட்டன தெரியுமா? முன்னெல்லாம் மூன்று நான்கு நாரைகளைக்கூட ஒன்றாகப் பார்த்திருக்கிறேன். இப்போது இது அருகிவரும் பறவையாகிவிட்டது. பாரேன் இப்போதுகூட ஒற்றையாகத்தான் நிற்கிறது.

அரக்கு நிறத் தட்டான்கள் தாழப் பறக்கின்றன. மழை வரப் போகிறதோ? ஆமாம். முகாம் இருக்கும் திசையில் வானம் கருத்திருக்கிறது. ஆட்களிடம் பணிகளைக் குறித்து விளக்கிச் சொல்லிவிட்டுக் கிளம்புகிறோம். ஆங், ஒருநாள் அவசர விடுப்பில் சென்றிருக்கிறார். அதனால்தான் இருவருமே வந்திருந்தோம். வீட்டை அடையும்போது மழை வலுத்துவிடுகிறது. வீட்டில் ஒரு விருந்தினர் வந்து காத்திருந்தார் பிலியவ்.

இவர் என்ன மாய மனிதரா? திடீர் என்று வருகிறார். திடீர் என்று போகிறார். எங்களைப் பார்த்ததும் புன்னகைக்கிறார். ஆனால் எப்போதும் அழகு ததும்பும் அம்மொழியில் இன்று வறட்சி. குசினி மேடையில் பெரிய கெளுத்தி மீன்கள் நாலைந்து இருக்கின்றன. அன்னா தேநீரும் மைதா இனிப்புப் பலகாரமும் தருகிறார்.

என்ன பிலியவ் கெளுத்தி மீன் கொடுத்துப்போகலாம் என்று வந்தீர்களா? இவ்வளவு தொலைவும் நடந்துதான் வந்திருப்பீர்கள். வண்டியில் வரலாம். கேட்டால் கால்கள், சக்கரங்கள் என்று சொல்வீர்கள் என்று ஓமர் நகைச்சுவையாய்ப் பேசியபோதும்கூட அவர் சிரிப்பில் சுரத்தே இல்லை. ஓமர் அதைச் சரியாகப் புரிந்துகொள்கிறார். என்ன பிலியவ் உடல்நிலை சரியில்லையா?

உடலுக்கு ஒன்றுமில்லை. மனம்தான் சிறிது அச்சப்படுகிறது. இம்மீன்களைக் கொண்டு வருகிறபோது உங்கள் தரைப்பாலத்துக்கு

மேலேயொரு பெரிய குன்று இருக்கிறதல்லவா? அதன் உச்சிக்கு வந்த போது ஒரு நிமித்தம் பார்த்தேன். அது கெட்ட நிமித்தம். அதற்கெதிரே இருந்த குன்றில் வானவில் தெரிந்தது. ஆனால் அது வழக்கத்தைவிட மிகவும் தாழ்வாகத் தெரிந்தது. அது அப்படித் தெரியக்கூடாது.

அப்படித் தெரிந்தால்?

கம்போங் மக்கள் நம்பிக்கையின்படி ஒரு துயர நிகழ்வு நடக்கும். இந்தப் பக்கம் கம்போங் எதுவும் கிடையாது. உங்கள் முகாம்தான் இருக்கிறது. அதனால் உங்களிடம் சொல்கிறேன். எதற்கும் எல்லோரும் எச்சரிக்கையாய் இருங்கள். நல்லதே நடக்கட்டும். பிலியவ் கூறி முடித்ததும் உங்கள் வாக்குப்படியே ஆகட்டும். முதலில் சாப்பிடுங்கள் என்கிறார் ஓமர்.

மழையும் கனத்துப் பெய்கிறது. மாலைநேரம் இன்னும் முடிய வில்லை. அதற்குள் இருட்டிக்கொண்டுவிட்டது. இம்மழையில் போகவேண்டாம். காலையில் போய்க்கொள்ளலாம் என்று ஓமர் சொல்லியதை ஒப்புக்கொள்கிறார் பிலியவ். இரவு முழுக்க மழை. காலையில் கிழக்குத்திசை வெளிச்சம் காட்டினாலும் முந்தைய இரவு மழையினால் எவரும் வேலைக்குச் செல்லவில்லை. எல்லோரும் அருவிக்குப் போகலாம் என்று முடிவாகிறது. அந்த அருவி இப்போது ஜோஸ் சொன்னதுபோல குட்டிச் சுற்றுலா இடமாக மாறிவிட்டது. பக்கத்து முகாம்களில் இருந்து எங்கள் அனுமதி பெற்று வந்து போகிறார்கள். பிலியவையும் அருவிக்கு வந்துவிட்டு அப்படியே போகலாம் என்று ஓமர் அழைக்க அவரும் ஒத்துக்கொள்கிறார்.

அங்கேயே மீன்பிடித்துச் சமைத்துச் சாப்பிடத் திட்டம். சோற்றை யும், சமையல் பொருட்களையும் எடுத்துக்கொள்கிறோம். ஆட்கள் தூண்டிலையும் வலையையும் எடுத்துக்கொண்டு மீன் வேட்டைக்குச் செல்கிறார்கள். பிலியவ் அருவியின் மேலே அந்த விளிம்பில் குனிந்து எதையோ தேடிக்கொண்டிருக்கிறார். இவர் நீருக்குள் எதைத் தேடுகிறார் என்று யோசித்துக்கொண்டிருக்குபோதே நிமிர்கிறார். கையில் ஒரு பெரிய மீன் துள்ளிக்கொண்டிருக்கிறது. அவரவர் வலையையும் தூண்டிலையும் வைத்துக்கொண்டு மீன்களைத் தேடிப்போகும்போது இம்மனிதர் வெறும் கையாலேயே பெரும் மீனைப் பிடித்துவிட்டாரே! எப்படி பிலியவ் பிடித்தீர்கள் என ஆர்வத்தோடு கேட்கிறேன். இங்கே வா. சொல்லித் தருகிறேன் என்றழைத்தவுடன் ஓடுகிறேன்.

கற்களும் சிறுபாறைகளும் கொண்ட இந்த அருவியின்மேல் நிறைய சிறுபள்ளங்கள் இருக்கும். இதுபோன்ற பள்ளங்களிலும் இப்பெருங் கற்களின் இடுக்குகளிலும் மீன்கள் பதுங்கிக்கிடக்கும். கையால் துழாவிப்பார் என்கிறார். துழாவுகிறேன். முதல் இரு பள்ளங்களில் ஒன்றுமில்லை. மூன்றாவது பள்ளத்தில் வழவழப்பாக ஏதோ நெளிகிறது.

விடவில்லை. அப்படியே இரு கைகளாலும் ஒரே அமுக்கு. மேலே தூக்கியபோது பிலியவ் பிடித்ததைவிட பெரிய மீன். முகத்தில் வழியும் மகிழ்ச்சியை ரசிக்கிறார் பிலியவ். இந்த மீனை பங்காங் செய்யப் போகிறேன் என்று சத்தமிடுகிறேன்.

மீனின் செதிள் நீக்கி, வயிற்றைச் சுத்தம் செய்கிறேன். துண்டு போடவில்லை. துடுப்புகளும் வாலும் நறுக்கப்பட்டு தலை நீக்கப் படாமல் முழுதாக இருக்கிறது மீன். அதன் இருபக்கச் சதை மீதும் வரிவரியாகக் கோடு கிழிக்கிறேன். கூர் சீவப்பட்ட நீளமான குச்சியை மீனின் வாய் வழியாக நுழைக்க அக்கூர்முனை சதைக்குள் ஊடுருவி வால்வரை செல்கிறது. குச்சியைத் தூக்கினால் அக்குச்சியில் மீன் விரைப்பாக நிற்கிறது. இனி மசாலா தடவல். சின்ன வெங்காயம் விழுது இருபங்குக்கு ஒருபங்கு இஞ்சிப்பூண்டு விழுது, இவ்விழுதுக்குக் கால்பங்கு வரமிளகாய் விழுது. இந்த வரமிளகாயை நீரில் ஊறவைத்து எடுத்து நன்றாக சிறு கல்லுரலில் மசித்து விழுதாக்கிச் சேர்த்து இத்தோடு கொஞ்சம் மஞ்சள்தூள், உப்பு சேர்த்து ஒன்றாகக் கிளறிக் கடைசியில் சிறிது எலுமிச்சைச்சாறு விட்டு கலவையாக்கி வீட்டிலிருந்து எடுத்து வந்திருக்கிறேன். இம்மசாலா கலவையை மீனின் இருபக்க சதைமீதும் தடவுகிறேன். கீறப்பட்ட இடுக்குகளில் மசாலா இறங்கி உள்ளுக்குள் நன்றாகப் படிய அரைமணி நேரமாவது ஊறவேண்டும்.

இது ஊறுவதற்குள் நெருப்பைமூட்டி அதைத் தணலாக்குகிறேன். குச்சியோடு மீனையெடுத்து தணலின்மீது வாட்டத் தொடங்க அன்னாவின் கையிலிருந்த தழைக்கொத்து தீயை விசிறுகிறது. தீயின் நாவுகள் அளவோடு புரள அவ்வெப்பத்தில் மீனின் சதை வெந்து விடுகிறது. பிய்த்துச் சுவைக்கிறேன். இனிது. இனிது. சுட்ட மீன் சுவை இனிது. அன்னா சுவைக்கிறாள். ஓமர் சுவைக்கிறார். பிலியவ் சுவைக் கிறார். தூண்டிலிலும், வலையிலும் மீன்பிடித்துக்கொண்டு திரும்பி வந்தவர்கள் அதற்குள் ஏது இவர்களுக்கு மீன் என்று திகைக்கிறார்கள். அனைத்து மீன்களும் பங்காங் ஆகின்றன.

பகலுக்குமேல் அருவியைவிட்டுத் திரும்பிச் சாலைக்கு வந்ததும் பிலியவ் விடைபெறுகிறார். கடைசியாக ஜோஸ் அவரிடம் பேசி விடைகொடுத்ததால் அவனிடம் கேட்கிறேன். இந்த பிலியவ் என்ன முருட் இனத்தவரா? ஜோஸ் பதிலும் காடோவின் பதிலைப் போலவே இருக்கிறது. அவர் தகோல் மொழி பேசுகிறார். ஆனால் முருட் இல்லை.

அப்படியானால் இவர் என்ன இனமாக இருப்பார்? கண்டுபிடிக்கவே முடியவில்லை. அனேகமாக அடுத்தமுறை வரும்போது இவர் என்னிடம் வந்து தமிழ் பேசப்போகிறார் என நினைக்கிறேன்.

# 11

**எட்டாவது கண்டம்** உ-உ-உ-உ-உ... ச்சிட்-ச்சிட்-ச்சிட்-ட்டீ... ப்ளக்-ப்ளக்-ப்ளக்... ஃபி-ஃபி... ஊ-ஊ-ஊ... காக்-காக்... க்கோ-குக்... யீ-யீ-யீ-யீ... க்குக்-க்குக்-க்குக்-க்குக்-க்குக்... க்ரோங்க்... ப்போர்-வில்... சி-சி-த்யூ... இத்தனை உயிரோசைகளையும் இழந்த கனத்த அமைதி.

அமைதி. நிழல்களைத் தொலைத்த கானகத்தின் தரையில் வெயில் கள்ளொளி விரவிப் படர்ந்துகொண்டிருக்கிறது. கவிகையின் பரப்பில் துளைகள் அகன்றதால் இடைவெளிகளின் பெருக்கம். மேலே பறக்கும் இருவாழிகளைக் காணமுடிகிறது. கருநிற பறக்கும் அணில்களின் செம்பழுப்புநிற மார்பு தெளிவாகத் தெரிகிறது. ஆனால் தெளிந்து ஓடிக்கொண்டிருந்த பளிங்குநீர் ஓடைகள் வீழ்ந்த மரங்களால் வழிமறிக்கப்பட்டுத் திசை தொலைத்துத் தடுமாறிக் கலங்கி மாற்று நிறத்தில் தவித்துத் திரிகின்றன.

இதற்கெல்லாம் காரணம் எட்டாவது கண்டம் மெல்ல இறந்துகொண்டிருப்பதுதான். கவிகைதான் புவியின் எட்டாவது கண்டம். மனிதர்களின் பார்வையிலே படாதவாறு இங்கு தொங்கு தாவரங்கள், பூச்சிகள், பறவைகள், விலங்குகள் போன்று பல உயிரினங்கள் வாழ்கின்றன. பதினான்கு இலட்சம் வகை உயிரினங்கள்.

வீழ்ந்திருக்கும் மரக்கிளைகளில் பாசி படர்ந்திருக்கிறது. ஆண்டுப் பெரும்பாலான நாட்கள் பெய்யும் மழையால் கிடைக்கும் ஈரத்தின் அன்பளிப்பு. மரத்துக்குக் குறைந்தது பத்துவகையான ஒட்டுண்ணிச் செடிகள் தொங்கு தாவரங்களாய் இருக்கின்றன. கூரல் தாவரங்கள். ஆர்க்கிட் தாவரங்கள். ஆர்க்கிட் செடிகளைத் தேடிச்சேர்ப்பது பொழுதுபோக்காகி இருக்கிறது. விதவித வடிவங்களில் இதன் இலைகளை வடித்த சிற்பியின் விரல்கள் எவை? இயற்கையின் எத்தூரிகையிலிருந்து வடிந்த வண்ணங்கள் இம்மலர்களின் மேல் தெளிக்கப்பட்டிருக்கின்றன?

கட்டைகளாக மாறிவிட்டன மரங்கள். இந்த இளமரக்குடைகளில்தான் எட்டாம் கண்டத்தின் உயிர்கள் இனி வாழப் பழகவேண்டும். ஆனாலும் இவ்வளவு தொலைவுக்கு அகன்றுவிட்ட இடைவெளிகளில் சறுக்கிகள் சறுக்கிப் பறக்க முடியுமா? மரக்குடை சாய்ந்து வீழும்போது அதிலிருக்கும் உயிரினங்களில் சில இறந்து விடுகின்றன. இப்படித்தான் பறக்கும் பல்லி ஒன்றைப் பார்க்கிறேன். அதன் நான்கு கால்களிலும்

சவ்வு இருக்கிறது. சிறுகுச்சியால் அதைப் புரட்டிப்போடுகிறேன். உடலின் அடியில் சவ்வு மடிந்து ஒடுங்கியிருக்கிறது. அதைக் குச்சியால் விரித்தால் விரிகிறது. இதன் உதவியால்தான் இது சறுக்கிப் பறந்திருக்கும். எல்லாம் கணிப்புதான். உயிரோடு இருக்கும்போது யார் பார்த்தது?

தொகுதியைவிட்டு வெளியேறி வீட்டுக்கு வருகையில் எதிரே தொழிலாளர் குடியிருப்பில் அந்தப் பகட்டுக்கோழி தரையைச் சிய்த்து மேய்ந்து கொண்டிருக்கிறது. அதை மரத்தடியில் கட்டிப் போட்டிருக்கிறார்கள். அங்கிருக்கும் குழந்தைகள் அதைச் சீண்டும் போதெல்லாம் உடனே பறந்து தாழ்ந்த கிளைகளில் ஏறி அமர்ந்துகொள்ளும். இப்போது அங்குக் குழந்தைகளைக் காணவில்லை என்பதால் மேய்ந்து கொண்டிருக்கிறது. கண்கள் அதைப் பார்த்துக்கொண்டிருந்தாலும் செவி என்னவோ சங்கிலிவாளின் ஒலியிலேயே பதிந்திருக்கிறது.

சராசரியாக ஒரு மரத்தை வெட்ட எவ்வளவு நேரமாகும் என்பதைக் கணிக்கும் அளவுக்குத் தேர்ச்சி பெற்றிருக்கிறேன். ஒரு மரத்தை வெட்டி முடித்து அடுத்த மரத்தை வெட்டத் தொடங்கும் கால இடைவெளி அளவுகூடப் பழகிப்போயிருக்கிறது. மரத்தை வெட்டியவுடன் சங்கிலி வாளின் இரம்பத்தைக் கூர்தீட்ட வேண்டும். வெட்டப்பட்ட மரத்தின் வகை அதன் பருமனைப் பொறுத்து கால இடைவெளி அமையும். அதையும் வெட்டப்பட்ட மரம் வீழுகின்ற கனத்த ஒலியைக்கொண்டு கணித்துவிடமுடிகிறது. இப்போது ஒரேசமயத்தில் அய்ந்து சங்கிலி வாள்கள் இயங்கிக்கொண்டிருக்கின்றன. இருந்தும்கூட இந்த அய்ந்து சங்கிலிவாள்களின் ஒலியையும் இடைவெளியையும் ஓர்மையுடன் அளக்கச் செவியும் மனமும் பழகியிருக்கின்றன.

ஒருமுறை மரம்வெட்டி வெகுநேரமாகியும் மரம் விழுந்தபாடில்லை. நேரே அங்கு போய்விடுகிறேன். தொலைவில் நின்று கூப்பிட வெகு நேரம் கழித்து உதவியாள் வெளியே வருகிறார். இது ரொம்ப பெரிய மரம் துவான். அதுதான் வெட்ட வெகுநேரமாகிறது. இரம்பத்தைத் தேய்க்க வேண்டியிருப்பதால் தாமதமாகிறது. இதோ முடித்துவிடுவோம் என்கிறார். அவர்கள் மீதான இத்தகைய அக்கறை அளப்பரிய அன்பைப் பெற்றுத் தந்திருக்கிறது. எனினும் மனம் கேளாமல் அம்மரம் வெட்டப் பட்டு விழும் ஒலியைக் கேட்ட பிறகுதான் திடலிலிருந்து நகர்ந்து வருகிறேன்.

அப்பெரிய மரம் திடலுக்கு இழுத்து வரப்பட்டதும் அதைக்கண்டு திகைத்துவிடுகிறேன். உண்மையிலேயே பெரிய மரம். இருபத்து இரண்டு சுற்று. இதுவரை வெட்டியதிலேயே இதுதான் ஆகப்பெரிய மரம். மூன்று துண்டுகளாக்கியிருக்கின்றனர். அடித்துண்டுகள் இரண்டை யும் வழக்கத்துக்கு மாறாக இரு டிராக்டர்கள் சேர்ந்து இழுத்து வந்தன. கட்டைக்கு அருகே நின்றபோது அதன் குறுக்குவெட்டு உயரம் ஆளின்

உயரத்தைவிட அதிகம். அகலத்துக்கு இருகைகளையும் விரிக்க வேண்டியிருக்கிறது.

பீட்ரூட் நிறத்திலிருக்கும் இந்த ஒப சுலுக் மரத்தையே உற்றுப் பார்க்கிறேன். இது நிறமா? இல்லை இதன் குருதியா? இந்த ஒப சுலுக் பீட்ரூட் என்றால் நியாத்தோ செம்மஞ்சள். ஜெலுத்தோங் பால் நிறம். காயு மாலம் மரத்தின் வைரப்பகுதி இருள் நிறம். மொத்தத்தில் வண்ண வண்ணக் குருதிகள்.

இது எத்தனை ஆண்டுகால மரம்? வெட்டிய மரத்தின் வயதைக் கணக்கிட ஒரு வழியிருக்கிறது. மரத்தின் குறுக்குவெட்டில் ஒன்றன் மீது ஒன்றாக நடுவில் இருந்து வெளி விளிம்புவரை நிறைய வளையங்கள் இருக்கும். அந்த ஒவ்வொரு வளையமும் ஒரு வயது.

வளையங்கள் அகன்றிருந்தால் அந்த ஆண்டில் வளர்ச்சி வேகமாக இருந்திருக்கிறது. ஒடுங்கியிருந்தால் வளர்ச்சி குன்றல். இம்மரத்துக்கு எது மோசமான ஆண்டு?

இம்மரம் வெட்டப்பட்டிருக்கும் இந்த ஆண்டே இதற்கு மோசமான ஆண்டு.

**கொவ்-வவ்**

முதல்தவணை ஏற்றுமதி முடிந்துவிட்டிருக்கிறது. ஆட்கள் மகிழ்ச்சியோடு சண்டகானுக்குக் கிளம்பிப் போயிருக்கிறார்கள். சம்பளம் பெறப் போகும் மகிழ்ச்சி. குடும்பத்தைக் காணப்போகும் மகிழ்ச்சி. திரும்பிவர பத்து நாட்கள் ஆகலாம். முகாமில் மொத்தமே பத்துப் பேர்தான் இருக்கிறோம். ஒமரும் போயிருக்கிறார். அவர் வந்த பிறகுதான் சண்டகான் போக முடியும். போகத்தான் யார் இருக்கிறார்கள்? போனால் நண்பர்கள் இடத்தில் நாலுநாள் தங்கல். திரும்பவும் காடு. மூன்று மாதத்துக்கு ஒருமுறை போனாலே பெரிது. சம்பளத்தை வேறு கையில் வாங்குவதில்லை. குணா இருப்பதால் அவரிடம் சொல்லி அலுவலகக் கணக்கிலேயே வரவு வைக்கச் சொல்லியிருக்கிறேன். ஊருக்குப் போகும்போதே மொத்தமாக வாங்கிக்கொண்டு போக வேண்டும்.

அன்னாவும் போகவில்லை. மார்த்தா இறந்தபோது நீண்ட விடுப்பு எடுத்திருந்ததால் போகவில்லை. சம்பளப் பணத்தைத் தன் அக்காவிடம் தரச்சொல்லி ஒமர் மூலம் தகவல் அனுப்பியாகிவிட்டது. அன்னாவுக்கு ஜெய்னலின் மனைவி சூரியாத்தி துணையிருக்கிறார். அவரும் செல்லவில்லை. பேறுகாலம் நெருங்கும்போது செல்லக்கூடும். கணவர் ஜெய்னலும் தங்கிவிட்டிருக்கிறார். அவர் சம்பளப்பணத்தை ஓமர் வாங்கி வந்துவிடுவார். ஜோஸ், ரோஸ்லான், ஆண்ட்ரூஸ் உட்பட எல்லோரும் சென்றுவிட்டிருந்தார்கள். நட்புத் துணைக்கு ஆளில்லாத தனிமை.

இந்த முதல் தவணை ஏற்றுமதிக்கு நீண்ட காலம் ஆகிவிட்டது. ஏறக்குறைய ஓராண்டுக்கு மேல். முதலாம் முகாமிலிருந்து இவ்விடம் வரை சாலை அமைத்துக் குடியிருப்புகள் கட்டி முடிப்பதற்கே ஓராண்டு ஆகிவிட்டது. இது அதிகம்தான். ஆனால் இதற்கு நாங்கள் பொறுப் பல்ல. இதுவரை இரண்டு மூன்று தடவை துணை ஒப்பந்தக்காரர்கள் மாறிவிட்டார்கள். ஒரு டிராக்டர் போய்விட்டால் வேறொரு டிராக்டர் தேடி அனுப்புவதற்கு ஒரு மாதம் ஆக்கிவிடுகிறார்கள். குவான்தான் காரணம். அவருக்கு எல்லாமே மலிவாக வேண்டும். எவர் ஒருவர் மிகக் குறைந்த விலையைக் கோருகிறாரோ அவருக்கு ஒப்பந்தத்தைத் தர வேண்டியது. அந்த டிராக்டர் ஓர் ஓட்டை உடைசலாக இருக்கும். வாங்கிய முன்பணத்துக்குக்கூட வேலை செய்திருக்காது. மண்டையைப் போட்டு விடும். திரும்பவும் டிராக்டர் தேடல். மரம் வெட்டும் ஒப்பந்தம்கூட இப்படிதான். ஆறு ஆட்களுக்கு முன்பணம் வாங்கி இரண்டு ஆட்களை அனுப்பிவிட்டு இதோ அதோ என்று நாட்கள் மட்டுமே ஓடும். பிறகு துரத்திப் பிடிப்பார்கள். இப்போதும்கூட நகரத்துக்குச் சென்றவர்களில் எத்தனை பேர் திரும்பி வருவார்கள் என்பது உறுதியில்லை.

இங்கு இரண்டுபேர் மட்டும் தங்கி மரம் வெட்டிக்கொண்டிருக் கிறார்கள். ஒருவர் ஜெய்னல். மற்றொருவர் புர்கான். புர்கான் வந்து சில நாட்களேயானதால் நகருக்குப் போகவில்லை. இவர்கள் மரம் வெட்டினாலும் இழுப்பதற்கு டிராக்டர்கள் இல்லை. ஆனால் வெட்டி வைத்துவிட்டால் எப்போது வேண்டுமானாலும் இழுத்துக்கொள்ளலாம். மரம் வெட்டிக்கொண்டிருக்கும் வாளின் இரைச்சல் மட்டும்தான் முகாம் இயங்கிக்கொண்டிருக்கிறது என்பதைச் சொல்லிக்கொண்டிருக் கிறது. 'தொம்' என்ற அதிர்வோடு ஒரு மரம் வீழ்கிறது.

'கொவ்-வவ்'

சட்டென்று புலனாகிறது. இப்படி நிதானமாக இருக்கும்போதுதான் இதைக் கவனிக்க முடிகிறது. சென்றமுறை மரம் வீழ்ந்தபோதும் இந்தப் பகட்டுக்கோழி இதே போன்றுதானே குரல் எழுப்பியது? இது எதேச்சையானதா? இல்லை இதுதான் இயல்பா? இதைக் கவனித்துப் பார்க்க வேண்டுமே? அடுத்த மரம் வீழ்வதற்காகப் பொறுமையோடு காத்திருக்கிறேன்.

தொம்

கொவ்-வவ்

இல்லை இதுகூட எதேச்சையானதாக இருக்கலாம். இன்னொரு முறை காத்திருப்போம்.

தொம் - கொவ்-வவ்.

என்னவொரு விந்தை? ஒவ்வொரு முறையும் மரம் வீழும்போது சகமனிதருக்கு என்ன ஆனதோவெனக் கவலைப்படுகிறேன். ஆனால்

இப்பகட்டுக்கோழியோ தன் இனத்துக்காகக்கூட இல்லை தன்னை வாழ்விக்கும் காட்டின் மரத்துக்காகவும் அதன் வீழ்ச்சிக்காகவும் கவலைப்படுகிறதே? இது மிகை கற்பனையாகக்கூட இருக்கலாம். இப்பகட்டுக்கோழி திடுக்கிட்டுக்கூட இப்படிக் கொக்கரித்திருக்கலாம். ஆனாலும் மனிதரைத்தவிர இங்குள்ள எல்லா உயிரினங்களுக்கும் இத்துடிப்பு இருக்கிறது. அன்று அந்த முதல்மரம் வீழ்ந்தபோது இருவாசிகளும் பிற உயிரினங்களும் என்ன அலறு அலறின? ஆனால் இத்திடுக்கிடல் சிறிதும் நமக்கில்லையே!

**இருவாசி தந்தம்**

கற்பூர மணம் காற்றில் மிதந்து நாசியில் நிறைகிறது. பூர்கான் வெட்டிக் கொண்டிருப்பது கப்பூர் மரம் என்று எதிர்க்காற்றானது தெரிவிக்கிறது. இந்த மரத்துக்குதான் இப்படியொரு தனித்த மணம். திடலில் வைத்து மரத்தை நறுக்கும்போதெல்லாம் சங்கிலிவாளின் பின்புறமாக எகிறி விழுந்துகொண்டேயிருக்கும் மரத்தூள் காற்றில் மிதக்கவிடும் மணத்தை நுகர்வது பிடிக்கும். சற்றுநேரத்தில் மரம் விழும் சத்தம் கேட்கிறது. இந்நேரம் பூர்கான் வளர்த்துவரும் பகட்டுக்கோழி அங்குக் கொவ்-வவ் என்று கத்தியிருக்கும்.

இன்று பூர்கான் வெட்டும் இரண்டாவது மரம் இது. நேற்றுமட்டும் அய்ந்து மரங்களை வெட்டியிருந்தார். வெட்டிவிட்டு வெளியே வரும் போது அந்த எண்ணிக்கையைச் சொன்னதும் அசந்துபோய் எப்படி துவான் எண்ணிக் கொண்டிருந்தீர்களா எனக் கேட்டது நினைவிலிருக்கிறது. நிறைய வேலைகள் இருக்கும்போதே கவனமாக இருப்பேன். இன்று இப்படிக் கட்டையின் மீது சும்மா படுத்திருக்கும்போது எண்ணாமல் இருப்பேனா? பங்குங் திடலில் கிடந்த கட்டையின் மீது நன்றாகக் கால்களை நீட்டி படுத்துக்கொண்டிருக்கிறேன். என்னதான் வெட்டிச் சாய்த்தாலும் எவ்வித வஞ்சனையுமின்றி மிச்சமிருக்கும் இம்மரங்கள் இன்னும் கருணையுடன் ஈரக்காற்றை விசிறிக் கொண்டிருக்கின்றன. இமைகள் செருகிப் படுத்திருக்க திடீரெனச் சிரிப்பு கேட்கிறது. பேய்ச் சிரிப்பு.

அந்த அருவிக்கருகே கேட்ட அதே பேய்ச் சிரிப்பு. ஒரு கணம் வெலவெலத்துத்தான் போகிறேன். படுத்திருந்த நிலையிலேயே இமைகள் தானாகவே விரிகின்றன. எதிரே வானில் இரு பெரும் பறவைகள் ஒன்றையொன்று துரத்திப் பறந்துகொண்டிருக்கின்றன. எவ்வளவு பெரிய பறவைகள்? மயில் அளவு இருக்கலாம். இவ்வளவு எடைகொண்ட இப்பறவைகளால் வானில் உயரத்தில் பறக்கமுடிகிறது. வால்சிறகுகள் ஒரு மீட்டர் நீளமாவது இருக்கும். அலகுக்கொண்டையும் தெரிகிறது. அப்படியானால் இதுவொரு இருவாசி. ஆனால் இது காண்டாமிருக இருவாசி இல்லை. வேறு.

ஒரு பறவையின் குரல் இந்தளவுக்கு வலுவாக இருக்கும் என்று நினைக்கவேயில்லை. அன்று சிரித்தது பேய் அல்ல என்ற உறுதியான நம்பிக்கை வீண்போகவில்லை. இதை அவசியம் சோறு அள்ளி வீசிய ஜோனிடம் சொல்லவேண்டும். வெயில் ஊர்ந்து வந்து படுத்திருக்கும் இடத்தின் நிழலை விரட்டிவிடுகிறது. வீட்டுக்குக் கிளம்பலாம். தாகம் நாவை வறட்டுகிறது. குடுவையிலும் நீர் காலி. வழியில் இருக்கும் ஊற்றில் பிடித்துக்கொள்ள வேண்டும்.

வீட்டுக்குச் சற்று முன்பாக சாலையின் இடது ஓரமாக நீரூற்று இருக்கிறது. அது பாசிபடர்ந்த சிறிய பாறை. பாறையின் நடுவில் சிறு திறப்பு இருக்கிறது. அதில் இருந்து நீர் பொங்கி ஊற்றிக் கொண்டேயிருக்கிறது. எதேச்சையாக ஒருநாள் குடித்துப்பார்க்க... அருஞ்சுவை. அதிலிருந்து மழைநீரை விடுத்து இந்த ஊற்று நீரைக் குடித்துவருகிறேன். சுமார் நான்கடி உயரம் இருக்கும் பாறைமீது ஏறிப்போய் கைகளைக் குவித்து அருந்துகிறேன். இயற்கையின் குளிரூட்டல். தண்மையோ தண்மை. குடுவையிலும் பிடித்துக்கொண்டு இறங்குகிறேன். அந்நீர் வழிந்து ஒரு நாடாவைப் போலச் சாலையின் ஓரமாய் நெளிந்தோடிக் கொண்டிருக்கிறது.

வீட்டில் அன்னாவும் சூரியாத்தியும் தங்கள் நாட்டுக் கதையினைப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். பகட்டுக்கோழி மீண்டுமொரு முறை கத்துகிறது. புர்கானின் சங்கிலிவாள் இன்னொரு மரத்தையும் வீழ்த்தியிருக்கிறது. ஒரு புத்தகத்தோடு படுக்கையில் விழுகிறேன். அந்த இருவாசியைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும். போர்னியோவிலுள்ள எட்டுவகை இருவாசிகளில் இந்த இருவாசியின் மதிப்பே மிக அதிகம். போர்னியோவுக்கு வந்த சீன வணிகர்களின் வணிகப் பட்டியலில் இந்த இருவாசியின் அலகுக்கொண்டைக்குத்தான் அதிக விலை. யானையின் தந்தத்தைவிட அதிக விலை கொடுத்து இதை வாங்கியிருக்கிறார்கள். இதன் மதிப்பை விளக்க இதை இருவாசித் தந்தம் என்றே அழைத்திருக்கிறார்கள்.

அவ்வளவு மதிப்புமிக்கதா இது? இதைக்கொண்டு போய் என்ன செய்திருப்பார்கள்? எப்போதும்போல் சர்வரோக நிவாரணிதானா? மேலும் படிக்கிறேன். சீனாவில் இந்த இருவாசித் தந்தத்தை வைத்திருப்பவர்களின் சமூக மதிப்பு உயர்வானதாகக் கருதப்பட்டிருக்கிறது. சீனாவின் பேரரசர் மட்டுமின்றி மாண்டரின் செல்வந்தர்களிடையேயும் இதை வாங்குவதற்குப் போட்டா போட்டியிருந்திருக்கிறது. இதை வைத்திருப்பவர்கள் மதிப்புமிக்க செல்வந்தர்களாம். அடப்பாவிகளா, அப்படியானால் இதை எப்போதும் சுமந்து திரியும் இந்த இருவாசிகளல்லவா அனைவரையும்விட பெரும் செல்வந்தர்கள்?

அதேசமயம் இந்த அலகுக்கொண்டைகளை எடுப்பதற்காக எத்தனை இருவாசிகளைக் கொன்றிருப்பார்கள்? மனம் நடுங்கத்தான் செய்கிறது.

நமக்கு நடுங்குகிறதோ இல்லையோ, அந்த இருவாசிகள் நம்மைக் கண்டு நடுங்கிப் போயிருக்கும். அதனால்தான் அந்த அலறல் அலறிப் பறக்கிறதோ? இருக்கலாம். பகட்டுக்கோழிக்கூட அப்படித்தான் நினைத்துக் கத்துகிறதோ என்னவோ? ஆமாம் இந்தப் பகட்டுக்கோழி இறுதியாகக் கத்தி எவ்வளவு நேரம் ஆகிவிட்டது? ஏன் இன்னும் அடுத்த மரம் வெட்டப்படவில்லை? ஒருவேளை வீடு திரும்பி விட்டார்களா? வெளியே போய் பார்க்கிறேன்.

கடைசி மரம்

தம் தொகுதியிலிருந்து ஜெய்னனும் அவருடைய உதவியாளரும் வந்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் காலையிலிருந்து ஐந்து மரங்களை வெட்டியிருந்தார்கள். புர்கான் வந்தாச்சா என விசாரிக்கிறேன். இன்னும் தெரியவில்லையே துவான். நாங்கள் இப்போதுதான் வருகிறோம் என்று கூறிவிட்டுத் தங்கள் வீடுநோக்கிப் போகிறார்கள். புர்கான் மூன்றாவது மரம் வெட்டி எப்படியும் இரண்டுமணி நேரம் ஆகியிருக்கும். இன்னும் ஏன் ஒரு சத்தமும் கேட்கவில்லை? ஜெய்னனும் அவரது உதவியாளரும் வீட்டுக்குச் சென்றவுடன் புர்கானின் உதவியாளர் அறையிலிருந்து வெளியேறிவந்து அவர்களிடம் பேசுவதைக் காணமுடிகிறது. அப்படியானல் புர்கான் வந்தாகிவிட்டதா? பார்க்கவே இல்லை. இன்று ஏன் வெறும் மூன்று மரம் மட்டுமே வெட்டியிருக்கிறார்? போய்க் கேட்கலாம்.

அங்கு சென்றபோது அந்த உதவியாளர் மட்டும் நிற்கிறார். எப்போது திரும்பி வந்தீர்கள் என்று கேட்கிறேன். இல்லை துவான், உடல்நிலை சரியில்லை என்பதால் நான் போகவில்லை. புர்கான் மட்டும் தனியாகப் போயிருக்கிறார் என்று சொல்லச் சட்டென்று சினம் பொங்குகிறது.

தனியாகப் போக அனுமதியில்லை என்று சொல்லியும் எப்படித் தனியாகப் போனார் இந்த புர்கான்? இதை ஏன் முன்பே வந்து சொல்லவில்லை எனக் கத்த அந்த உதவியாள் சற்று அச்சத்தோடு சொல்லுகிறார். புர்கான்தான் உங்களிடம் சொல்ல வேண்டாம் என்று சொல்லிவிட்டார் துவான். புர்கானுக்குக் கொஞ்சம் காசு ஆசை அதிகம். தனியாகப் போனால் எனக்குத் தரவேண்டிய தொகையை மிச்சப்படுத்திக் கொள்ளலாம். ஆனால் இதை நான் சொன்னேன் என்று சொல்லிவிட வேண்டாம் துவான்.

நல்ல ஆசை. இப்போது கடைசி மரம் வெட்டி இரண்டுமணி நேரமாகப் போகிறது. சத்தமும் காணோம். ஆளையும் காணோம். வா, என்னவென்று பார்த்துவிட்டு வரலாம் எனப் புறப்பட்டபோது என்ன நினைத்தாரோ தெரியவில்லை எங்கள் இருவரோடு ஜெய்னனும் சேர்ந்துகொள்கிறார். அத்தொகுதிக்குச் சென்று சாலையோரமாக

நின்று குரல் கொடுக்கிறோம். பதில் இல்லை. ஒருவேளை உள்ளே தொலைவில் இருக்கலாம். போய்ப் பார்ப்போம். டிராக்டர் நடத்தில் ஜெய்னல் முதலில் இறங்கி நடக்கிறார். கொஞ்ச தொலைவிலேயே அத்தடம் முடிந்து அதற்கப்பாலுள்ள மரங்கள் இழுக்கப்படாமல் கிடக்கின்றன. செடிகளை விலக்கி நடக்கிறோம். ஜெய்னல் குரல் கொடுக்கிறார். பதில் இல்லை. என்ன செய்கிறார் புர்கான்?

வெட்டப்பட்டிருந்த மரங்களைக் கடந்து செல்கிறோம். கப்புர் மரம் கிடக்கிறது. இது காலையில் வெட்டியது. இதற்கு அப்புறம் எத்தனை மரம் வெட்டினார்? ஒன்றே ஒன்றுதான். அம்மரத்தையும் கண்டு பிடிக்கிறோம். சுமார் எட்டுச் சுற்றுள்ள அம்மரம் அறுபட்டு வீழ்ந்து கிடக்க அதன் பக்கத்திலேயே சுமார் மூன்று சுற்றுள்ள மற்றொரு மரமும் விழுந்து கிடக்கிறது. அங்கு நின்று திரும்பவும் குரல் கொடுக்கிறோம். பதில் இல்லை. ஒருவேளை நமக்குத் தெரியாமல் குறுக்கே போயிருக் கலாம். எதற்கும் இன்னும் கொஞ்ச தொலைவு உள்ளே போய் பார்த்துவிட்டு வரலாம்.

வெட்டப்பட்ட மரத்துக்கருகே இருந்த மரம் முறிந்துகிடக்கிறது. இரண்டும் அருகருகே கிடக்கின்றன. புர்கானின் உதவியாளருடன் முறிந்த கிடந்த மரத்தையொட்டி வலப்பக்கமாக நடக்கிறேன். ஜெய்னல் வெட்டப்பட்ட மரத்தின் ஓரமாக இடப்பக்கமாக நடக்கிறார். நாங்கள் இருபதடித் தொலைவுகூட போயிருக்கமாட்டோம். சற்றுத்தொலைவில் முறிந்துக்கிடந்த மரத்தின்கீழே என்னவோ நீட்டிக்கொண்டிருப்பது தெரிகிறது. அது சங்கிலிவாளின் ரம்ப முனை. இது எப்படி இங்கே வந்தது? மனசுக்குள் ஒருவகை அச்சமும் திகிலும் அப்பிக்கொள்ள அலறுகிறேன். ஜெய்னல்ல்ல்...

ஓடி வருகிறார். வந்து அதைப் பார்த்தவரின் முகத்திலும் திகில். இது மட்டும் ஏன் அடியில் கிடக்கிறது? அந்தப் பக்கமாகப் போய் பார்க்கலாம்.

வெட்டப்பட்ட மரத்துக்கும் முறிந்து கிடக்கும் மரத்துக்கும் இடையே உள்ள இடைவெளியில் நுழைகிறோம். அங்கு நுழைந்ததுமே விதிர்விதிர்த்துப் போகிறோம். அடுத்த அடி எடுத்து வைக்க முடிய வில்லை. கால்கள் நிலத்தோடு ஒட்டி இறுகிவிடுகின்றன. நாக்கும் மேலண்ணத்தில் ஒட்டிக்கொள்ள படபடபடபடத்த துடிப்புகள் எகிறி காதுக்குள் வெப்பத்தின் அனல்ல்ல்ல்.

அம்மரத்துக்கு இப்பக்கமாய் சிவப்புநிற முழுக்கால் ஆடை அணிந்த இருகால்கள் வெளியே நீட்டியபடி கிடக்கின்றன. தெளிவாகப் புரிகிறது. அம்முறிந்த மரத்தின் அடியில்தான் புர்கான் தலைநசுங்கிச் செத்துக்கிடக்கிறார்.

# 12

காட்டுக்கொடி
ஓர் இலையும் அசையாத இறுக்கம்.

நெடுநேரமாக கட்டையின் மீதுதான் அமர்ந்திருக்கிறேன். இது புர்கான் வெட்டிய கட்டைகளுள் ஒன்று. இன்னும் சற்று உள்ளே சென்றால் புர்கான் வெட்டிய கடைசி மரத்தையும் கூடவே புர்கானின் பிணத்தையும் காணலாம். உள்ளே காவல் துறையின் புலன் விசாரணை நடந்துகொண்டிருக்கிறது. ஓமர் உடன் இருக்கிறார். அவருடைய விடுமுறை இப்படியாகும் என நினைத்திருக்கமாட்டார். மண்டுரும் சேர்ந்து வந்திருக்கிறார். இது விபத்துதான் என்று முடிவு செய்வதில் காவல்துறை அதிகாரிகளுக்கு ஒரு சிக்கலும் இல்லை. ஆனால் விபத்து எப்படி நேர்ந்திருக்கும் என்பதில்தான் குழப்பம். உள்ளே அது குறித்துத் தான் பேசிக்கொண்டிருக்கிறார்கள். மேலும் புர்கான் தனியாகச் சென்று மரம்வெட்டியதில் சட்டரீதியாகத் தவறேதும் இல்லை. ஓர் உதவியாள் அவசியம் இருக்கவேண்டும் என்பது நிர்வாகம் வலியுறுத்தும் ஒரு மரபுதான். இருட்டிக்கொண்டு வருவதால் சீக்கிரமே சடலத்தை அப்புறப்படுத்த வேண்டியிருக்கிறது.

பகலில் புர்கானை அந்நிலையில் பார்த்ததுமே மூவருமே வெலவெலத்துவிடுகிறோம். அடுத்த நிமிடம் பதறியடித்துக்கொண்டு வீட்டுக்கு ஓடிவந்து அட்டூர் பேசியை எடுத்துக்கொண்டு சமிக்ஞையைத் தேடுகிறபோது சிரமப்படுத்தாமல் அது சமிக்ஞையைக் கொடுக்கிறது. அலுவலகத்திலும் அந்நேரம் பார்த்து ஓமரும் இருக்கிறார். செய்தியைப் பதற்றத்தோடு சொல்கிறோம். எதையும் தொடவோ அப்புறப்படுத்தவோ வேண்டாம். உடனே காவல் துறையினரோடு வருகிறோம் என்று சொல்லுகிறார். அடுத்த ஆறுமணி நேரத்தில் வந்து சேர்ந்துவிடுகிறார்கள்.

வந்தவுடன் டிராக்டர் உதவியுடன் அம்மரத்தைத் தூக்கி அப்புறப் படுத்துகிறார்கள். புர்கானின் உடல் முழுமையாகத் தெரிகிறது. அதைப் பார்த்ததும் எல்லோருக்குமே அதிர்ச்சி. புர்கான் வெறுமனே மரம் மட்டும் தாக்கி இறந்திருக்கவில்லை. அவர் கையில் வைத்திருந்த சங்கிலிவாள் அடியில் கிடக்க அதன் மேல் புர்கானின் முகம் குப்புறக் கவிழ்ந்து கிடக்கிறது. பின்பக்கமாக அம்மரம் விழுந்து தாக்கியிருக்கிறது.

ஒரு காவலர் அந்த உடலைப் புரட்டிப் போட முயன்றபோதுதான் அந்தக் கோரம் தாக்குகிறது. அடிவயிறு கலங்கிக் குமட்டலே வந்து விடுகிறது. அத்தோடு இங்கு ஓடிவந்தவன்தான். இப்போது நினைத் தாலும் வயிற்றில் அமிலத்தின் பரவல்.

சங்கிலிவாளின் பின்புறம் உள்ள எரிதிரவக் கலனையொட்டிக் கூர்மையான பெரிய இரும்புப் பற்கள் போன்ற அமைப்பு இருக்கும். அந்தக் கூர்மையான பற்களின் மீதுதான் அந்த அழகுமுகம் பதிந்து கிடந்தது. அதிலிருந்த கூர்முனை ஒரு கண்ணைக் குத்திக்கிழித்து வெளியே தள்ளி... அய்யோ வேண்டாம். நினைவிலிருந்து இப்பதிவு முழுமையாக அழிந்து போகட்டும். கண்ணெதிரே கைகளில் மளிகைப் பொருட்களோடும், முட்டைத் தட்டுகளோடும் நின்ற புன்னகை நிறைந்த அழகுமுகத்தோடு புர்கான் நிற்கும் கோலம். நீ இப்படியே நில் புர்கான். எங்கும் போக வேண்டாம்.

எல்லோரும் வெளியே வருகிறார்கள். விசாரணை முடிந்துவிட்டிருந்தது. விரைவாகப் புறப்படவேண்டும் என்கிறார்கள். பிணப் பரிசோதனை சண்டகானில்தான். விபத்து எப்படி நடந்தது என்று கண்டுபிடித்து விட்டார்களா? புர்கான் வெட்டிய மரத்தால் தாக்கப் படாமல் இன்னொரு மரத்தால் தாக்கப்பட்டு இறந்து போயிருந்தார். இது எப்படி? இம்மர்ம முடிச்சை இறுதியில் தன் தொழில் பட்டறிவால் மண்டுர்தான் விடுவித்திருக்கிறார். வெகுநேரம் யோசனை செய்து கொண்டிருந்தவர் விறுவிறுவென அம்மரத்தின்மீதே நுனி நோக்கிச் சென்றிருக்கிறார். அம்மரக்குடையில் எதையோ பார்த்தவுடன் அவருடைய குழப்பம் மறைந்துவிட்டது. அவர் கண்டுபிடித்துவிட்டார். ஒரு மரத்தை வெட்டும்போது அம்மரம் சாயும் திசையில் உள்ள மரங்களே வழக்கமாக முறிந்து சாயும். ஆனால் இம்முறிந்த மரமோ வெட்டப்பட்ட மரம் சாய்ந்த திசைக்கு எதிர்புறம் நின்றிருந்த மரம். இது எப்படி முறிந்து சாய்ந்தது என்பதுதான் கேள்வி. அதுதான் மண்டுர் மூலம் விடுவிக்கப்பட்டிருக்கிறது. மரங்களைச் சுற்றும் கனத்த காட்டுக் கொடி புர்கான் வெட்டிய மரத்திலும் சுற்றிக்கொண்டிருந்திருக்கிறது. வழக்கமாக மரம் வெட்டுபவர்கள் அதையும் சேர்த்து வெட்டுவது போல்தான் புர்கானும் கவனமாக வெட்டியிருந்தாலும் ஊழ் வேறு வகையில் செயல்பட்டிருக்கிறது. அக்காட்டுக்கொடி வெளிச்சம் தேடியேறி மரக்குடைக்கு உயர்ந்து சென்றதும் உச்சிக்குடையில் பரவிப் படர்ந்து அப்படியே பக்கத்து மரத்தின் மரக்குடையிலும் படர்ந்து பரவிவிட்டிருக்கிறது. இது வெகுநாளைய முதிர்ந்த கொடி. பெரும் பருமனுடனும் மிக வலுவாகவும் இருந்த கொடி. வலு என்றால் வெட்டப் பட்ட இம்மரம் அப்பக்கத்து மரத்தையும் சேர்த்து இழுத்துக் கொண்டு அறுபடாமல் சாயுமளவுக்கு வலுத்த கொடி. இதனால்தான் அந்தப் பக்கத்துமரம் இழுபட்ட வேகத்தில் முறிந்து சாய்ந்துவிட்டிருக்கிறது.

வெட்டப்பட்ட மரத்தின் பின்பக்கமாகச் சரியாக அந்த இழுபட்ட மரத்தின் கீழ்ப் பாதுகாப்புக்காக ஒதுங்கி நின்றிருந்த புர்கான் இதைக் கவனித்திருக்கவில்லை. அம்மரம் அவர் மேல் வீழ்ந்து சாய்த்துவிட்டது. ஆனால் புர்கான் அன்று உதவியாளரோடு சென்றிருந்தால் அவராவது இதைப் பார்த்து எச்சரித்திருக்கும் வாய்ப்பு இருந்திருக்கும்.

இதுநாள்வரை வியக்க வைத்த காட்டுக்கொடியே இந்நிமிடத்திலிருந்து உனை வெறுக்கிறேன்.

## பகட்டுக்கோழியின் விடுதலை

முகாமுக்கே பிணக்களையைப் பூசிவிட்டது புர்கானின் மரணம். பரப்பாக இருந்த இடம் வெறிச்சோடிக் கிடக்கிறது. கலகலப்பாக இருந்த உணவுக்கூட மேசை காலியாகக் கிடக்கிறது. சில ஆட்கள் முதல்தவணை ஏற்றுமதியோடு வேலையை விட்டு விலகியிருந்தார்கள். காடோ இல்லை. ஆண்ட்ரூசும் இல்லை. இருவரும் தங்கள் ஊருக்குத் திரும்பிவிட்டார்கள். ஆண்ட்ரூசின் வேடிக்கைகள் இனி கிடையாது என்பதே இன்னும் வெறுமை உணர்வைத் தருகிறது.

மரம் வெட்டும் பணி நடக்கவில்லை. ஜெய்னல் தவிர வேறெந்த மரம் வெட்டுபவரும் இங்கில்லை. எல்லோரும் ஒருவகையில் அச்சமடைந்து வரமறுத்துவிட்டிருந்தார்கள். இக்காட்டில் ஏதோ கெட்ட ஆவியின் நடமாட்டம் இருப்பதால்தான் சாவு நிகழ்ந்திருப்பதாகப் புரளி கிளப்பப்பட்டிருந்ததால் டிராக்டர்களும் இயங்கவில்லை. டிராக்டர்கள் இயங்காததால் சுமையுந்துகளும் ஓடவில்லை. ஆக ஆட்கள் இல்லாததால் முகாம் ஏறக்குறைய காலி. இந்த நிலைமை குவானைக் கவலையுறச் செய்கிறது. ஆட்கள் அனைவரும் முகாமில் ஒரு பரிகாரம் செய்தால் நிலைமை சீரடையும் என்று தெரிவித்திருந்தார்கள். வழக்கமாக இதில் நம்பிக்கையற்ற குவானும் வேறுவழியில்லாமல் வேலை நடந்தால் சரிதான் என்று ஒத்துக்கொண்டிருக்கிறார்.

ஆனால் ஓமர்தான் சரியாகக் கணித்திருந்தார். மழைக்காலம் நெருங்கி விட்டது. குறைந்தது இரண்டு மூன்று மாதத்துக்கு வேலை நடக்காது. எனவே தன் நாட்டுக்குத் திரும்ப விரும்பும் வெளிநாட்டு தொழிலாளர்களுக்கு இதுதான் உகந்த காலம் என்பதால் இயல்பாகவே ஆட்கள் பற்றாக்குறை ஏற்படும் பருவம் இது. அப்படியே ஆட்கள் கிடைத்தாலும் மழையினால் வேலை தொடர்ந்து நடைபெறாது என்பதும் உண்மை. இம்மழைக்காலத்தில் இப்படி ஒரு சுணக்கம் ஏற்படுவது தவிர்க்க இயலாதது. ஆனாலும் இறப்புக்குப் பரிகாரம் என்பது ஆட்களின் நம்பிக்கை சார்ந்தது என்பதால் ஓமர் அதற்கு ஏற்பாடு செய்வதாக வாக்களித்திருந்தார்.

ஓமர் கொண்டு வந்து சேர்த்திருந்த புத்தகங்கள் பொழுதைத் தள்ளிக் கொண்டிருக்கின்றன. இருவருக்கும் மேசையில் அமர்ந்து படித்துக்

கொண்டிருப்பதுதான் வேலை. அன்னாவுக்கு வானொலியே அடைக்கலம். எதிரே ஒப்பந்தத் தொழிலாளர் குடியிருப்புத் தெரிகிறது. அங்கு புர்கான் நின்றுகொண்டிருப்பதுபோல ஒரு கள்ளக்காட்சி. புர்கானும் இல்லை. புர்கான் வைத்திருந்த பகட்டுக்கோழியும் இல்லை. அது எப்படித் திடீரென மறைந்துபோனது என்று எவருக்குமே தெரியவில்லை. தெரிந்தவன் அமைதியாக இருந்தால் தெரியாமல்தானே போகும்?

புர்கான் இறந்தபிறகு அக்கோழியை எடுத்துக்கொள்ள ஒரு போட்டியே நடக்கிறது. எல்லோருக்கும் அதன் இறைச்சி மீது குறி. மறுநாள் அதை இறைச்சியாக்க நாள் குறித்துவிட்டுக் கூட்டமாக அருவிக்கு மீன்பிடிக்கக் கிளம்பியிருந்தார்கள். அவ்வீட்டில் யாருமில்லை. ஜெய்னலின் மனைவி சூரியாத்தியும் உறங்கிக்கொண்டிருக்கிறார். கடைசியாக ஒருமுறை அப்பகட்டுக் கோழியைப் பார்த்துவிட்டு வரவேண்டும் போலிருக்கிறது. கட்டிப்போடப்பட்டிருந்த பகட்டுக் கோழி மட்டுமே நின்றுகொண்டிருக்கிறது. அருகில் நெருங்குகிறேன். அது விலகிச்சென்று நின்றுகொள்கிறது. வெகுநேரம் உற்றுப்பார்த்துக் கொண்டேயிருக்கிறேன். முதலில் சற்று படபடப்போடு இருந்த அது பின்னர் அமைதியாகிச் செங்கபில நிறக் கண்களால் பார்த்துக்கொண்டே யிருக்கிறது. ஓரிரு நிமிடங்கள் இருவரும் பார்வைகளைப் பரிமாறிக் கொள்கிறோம்.

தற்செயலாக வீட்டின் வெளிப்புறத்தில் யாரோ தன் பாராங் கத்தியைத் தொங்கவிட்டிருப்பதைப் பார்க்கிறேன். கணநேரத்தில் ஒரு யோசனை. அதை எடுக்கிறேன். கோழியை நெருங்கிச் செல்கிறேன். இம்முறை அது ஆளைப் பார்த்தும் நகரவேயில்லை. இரண்டடி இடைவெளியில் அதைக் கட்டியிருந்த கயிற்றை அறுத்துவிடுகிறேன். ஆனாலும் அது இன்னும் நகராமல் அங்கேயே நிற்கிறது. ச்சூ என்று கைகளால் விரட்டுகிறேன். அது சற்று நகர்கிறது. மேலும் நெருங்கி விரட்டுகிறேன். இப்போது இன்னும் சற்றுத் தொலைவு நகர்ந்தபிறகு கயிற்றிலிருந்து தான் விடுபட்டிருப்பதை உணர்ந்தது. அப்படியே நடையோட்டமாகச் சிறிது தொலைவு ஓடுகிறது. பிறகு அப்படியே எழும்பி மரக்கிளையில் அமர்ந்துகொள்கிறது. பிறகு தொடர்ச்சியான கத்தல். அது வழக்கமான கொவ்-வவ் இல்லை. பிறகு தன் குரலைச் சட்டென்று நிறுத்திக்கொண்டு ஒரு பார்வை பார்க்கிறது. பின்னர் காட்டுக்குள் புகுந்து மறைந்து போகிறது. யாரும் பார்ப்பதற்கு முன் அங்கிருந்து விறுவிறுவென நடக்கத் தொடங்குகிறேன்.

**ஆனி**

மழைக்காலம் துவக்கம். வெளியே பெய்துகொண்டிருக்கும் மழையை வேடிக்கை பார்ப்பதில் பொழுது கழிகிறது. அதிலும் ஒராங் ஊத்தான்கள் மழைக் காலத்தை இன்னும் அழகுபடுத்துகின்றன. படுக்கையில்

இருந்து பார்த்தால் தெரியும் மரங்களில் ஒராங் உனத்தான்கள் தங்கியிருக்கின்றன. மழை ஓய்ந்த நேரங்களில் சோம்பலாக அமர்ந்திருக்கும் அவை மழை தொடங்கியதும் சுறுசுறுப்பாக அதை எதிர்கொள்ள தயாராகின்றன. அதுவே தனியொரு அழகு. மழைத்தூறல் தொடங்கியதும் இலைகளைப் படக்படக்கென்று கொப்புகளோடு உடைத்துக்கொள்கின்றன. அடுத்து அவற்றை ஒழுங்குசெய்து வட்டமாகக் குடைபோல விரித்துக்கொள்கின்றன. பின்னர் வாகானக் கிளையொன்றைத் தேடியமர்ந்து இலைக்குடையைத் தலைக்கு மேலாகத் தூக்கிப் பிடித்துக்கொண்டு மழை தன்மேல் விழாமல் பார்த்துக்கொள்கின்றன.

மழை சற்றுக் கனத்துவிட்டால் அவ்விடத்திலேயே தன்னுடலை ஒடுக்கிக்கொண்டு படுத்துக்கொண்டுவிடுவது இன்னும் அழகு. அப்போது அந்த இலைக்குடை அதற்குப் போர்வையைப் போல் பயன்படுகிறது. மழைபெய்து ஓய்ந்ததும் இலைக்கொப்புகளைத் தூக்கிப் போட்டுவிட்டு இலேசாக நனைந்த உடலைச் சிலுப்பிக் கொண்டு கைகால்களை விரித்துச் சோம்பல் முறிப்பதுபோல் மெல்ல எழுந்துகொள்வது அழகோ அழகு. ஆனால் இதையெல்லாம்விட அழகு மழை நின்று போவது. பின்னே எவ்வளவு நேரம்தான் படுத்தே கிடக்க முடியும்?

வெளியேவந்து பழைய நாளிதழுக்குள் புகுந்து கொள்கிறேன். உள்ளே புகுந்து கொண்டு அப்படியென்ன பார்க்கிறாய் எனக் கேட்டவாறே வந்தமர்கிறார் ஓமர். போர்னியோக் காட்டைப் பற்றி வந்திருந்த செய்தியைப் படித்துக்கொண்டிருந்தேன். ஒரு வெளிநாட்டுக் காரர் இந்த நிலநடுக்கோட்டு மழைக்காடுகளின் மரங்களை வெட்டக் கடும் எதிர்ப்பு தெரிவித்துச் சரவாக் பகுதிக் காட்டில் புது முயற்சியில் இறங்கியிருந்தார். அவர் காட்டில் உள்ள பெரிய மரங்களைத் தேர்ந்தெடுத்து அதில் ஆணிகளை அடித்து வைக்கிறார். ஏனென்றால் மரத்தை வாளால் அறுக்கும்போது அடிக்கப்பட்ட ஆணிகள் சங்கிலி வாளைத் தேய்த்துச் சேதப்படுத்தி விடும். இச்செய்தியை ஓமரிடம் சொல்கிறேன்.

அப்படித் தேய்ந்தால் இவர்கள் மரம் வெட்டுவதை விட்டு விடுவார்களாமா? வேறு சங்கிலி வாங்கி வெட்டமாட்டார்களாமா? முட்டாள். எந்த நாட்டுக்காரர் அவர் என்று விசாரிக்கிறார் ஓமர். ஜெர்மன் என்று பதில் சொன்னதும் அவர் ஒன்றும் சொல்லாமல் யோசனையில் ஆழ்கிறார். வெகுநேரம் கழித்து எதற்கு இவ்வளவு யோசனை என வினவுகிறேன். ஓமர் வாய் திறக்கிறார்.

இதற்குப் போய் அவர் ஏன் இத்தனை ஆணிகளை அடித்து வீணாக்க வேண்டும்? அதுவும் இவ்வளவு தொலைவு வந்து சிரமப்படவேண்டும்? அவருடைய சொந்த நாட்டில் உள்ள ஓரிடத்தில் ஓரேயொரு ஆணியை

அடித்தால் போதும். இந்தக் காடு என்ன உலகத்தில் உள்ள மொத்தக் காடுகளையும் காப்பாற்றி விடலாம்.

அப்படி எந்த இடத்தில் அடிக்கச் சொல்கிறீர்கள்?

ஓமரின் சொற்கள் வெகு பொறுமையாக வருகின்றன. இச்சங்கிலி வாளைத் தயாரிக்கும் முதலாளியின் ஆசனவாயில் அடிக்கச் சொல்கிறேன்.

ஒரு கணம் எனக்கொன்றும் விளங்கவில்லை. விளங்கியவுடன் வெடித்துச் சிரித்து விடுகிறேன். ஏனென்றால் இங்குள்ள எல்லா சங்கிலிவாள்களுமே ஜெர்மன் நாட்டின் ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தின் தயாரிப்புத்தான்.

அன்னா தன் வானொலியின் ஒலியைக் குறைத்துவிட்டு எட்டிப் பார்க்கிறாள். மற்றவர்களும் தங்கள் தலையை வெளியே நீட்டிப் பார்க்கிறார்கள். அந்தளவுக்குச் சிரிப்பு. சிரித்து மூச்சிரைப்பே வந்து விடுகிறது.

### அழியா வளையங்கள்

வெயிலடித்த இரண்டாம்நாள் நாங்கள் பங்கலானுக்குப் புறப்பட்டுப் போகிறோம். மழையினால் சாலை ஆங்காங்கே சேதமுற்றிருந்தாலும் ஹைலக்ஸ் செல்லுவதில் சிக்கல் இல்லை. இதுபோன்று வெயிலடிக்கும் நாட்களில் கொஞ்சம் வேலைகளைச் செய்யலாம். ஆனால் பரிகாரம் செய்யாமல் வேலையைத் தொடங்கும் எண்ணத்தில் யாருமே இல்லை. அதற்காகத்தான் பங்கலானுக்குப் புறப்பட்டிருக்கிறோம். பங்கலானைக் காவல் காக்கும் முதியவர் இதுபோன்ற பரிகாரச் சடங்கைச் செய்யக் கூடியவர்.

பங்கலானை அடைந்தவுடன் அங்கே ஜோஸ் வந்திருப்பதைப் பார்க்கிறேன். இங்கே எப்படி வந்தாய் ஜோஸ்?

சண்டகானிலிருந்து அண்ணன் ஓட்டிவரும் இழுவைப்படகு வந்த போது அதிலேறி காலையிலேயே வந்துவிட்டேன். எப்படி அங்குவந்து சேருவதென யோசித்துக் கொண்டிருந்தேன். நல்லவேளை நீங்களே வந்துவிட்டீர்கள்.

இவ்வளவு அவசரமாக ஏன் புறப்பட்டு வந்தாய்? மழைக்காலம் தானே? ஒருமுறை உன் கம்போங் போய்விட்டு வந்திருக்கலாமே என்கிறார் ஓமர்.

ஒரேயடியாகக் கம்போங் போய்விடுவோம் என்றுதான் புறப்பட்டு வந்திருக்கிறேன் துவான். வேலையை விட்டுவிட்டேன். கம்போங் போய்க் கொஞ்ச நாள் ஓய்வெடுத்துக் கொள்ளலாம் என்று நினைக் கிறேன். என் முதலாளிக்கு வேறொரு இடத்தில் ஒப்பந்தம் கிடைத்திருக் கிறது. அதனால் வண்டியை எடுத்துக்கொண்டு போகப்போகிறார். எனக்கு அங்கு போக விருப்பமில்லை. அதனால் வெயில் அடிக்கும்

போது வண்டியைப் பங்கலானுக்கு ஓட்டிவந்து அதை இங்கே விட்டுவிடச் சொல்லிவிட்டார். பிறகு இதை இங்கிருந்து எடுத்துக்கொண்டு போய் விடுவாராம்.

ஓமரிடம் பேசிக்கொண்டிருக்கும் ஜோஸ் இந்தப் பக்கம் பார்க்கவேயில்லை. தன் முடியைக் கோதிக்கொண்டிருக்கும் அவன் வேண்டுமென்றே பார்வையை வேறுபக்கம் திருப்பிக் கொண்டிருப்பதை உணரமுடிகிறது. ஆக ஜோஸ் போகப்போவது உறுதி. இது எதிர்பார்த்த ஒன்று என்றாலும் இப்படி திடுதிப்பென நிகழும் என்று எதிர்பார்க்கவில்லை. சாலை அமைக்கும் பணி பத்தாம் தொகுதியின் பாதியிலேயே நின்றுகொண்டிருக்கிறது. ஓமர் சொல்கிறார். அது சரி, எந்த ஒப்பந்தக்காரரும் இரண்டு மாதத்துக்கு வேலையில்லாமல் தன் இயந்திரத்தைப் போட்டு வைத்திருக்க விரும்பமாட்டார். அவரும் சம்பாதிக்க விரும்புவது இயல்புதான்.

முகாம் திரும்பிச் செல்லும்வரை நாங்கள் எதுவுமே பேசிக்கொள்ளவில்லை. எங்களை அறியாமலேயே எங்களிடையே கனத்த அமைதி அமர்ந்துகொண்டிருக்கிறது. பகலுணவுக்குப் பின் தானே வந்து அருவிவரை சென்று வரலாம் வருகிறாயா என ஜோஸ் அழைக்கிறான். செல்லும் வழியிலும் ஏனோ இருவருமே பேசிக்கொள்ளவில்லை. வழியில் முதன்முதலில் பேய்ச் சிரிப்பு கேட்ட இடம்வந்ததும் அது பேயின் சிரிப்பு இல்லையென்று சொல்லி அந்த இருவாசியைப்பற்றிச் சொல்லவேண்டும் என நினைக்கிறேன். ஆனால் சொல்லவில்லை.

இருவரும் அருவியின் மேலே நடந்து கடந்து அக்கரை செல்லுகிறோம். பாறையில் அமர்கிறோம். ஜோஸ் அமர்ந்திருக்கும் இடத்தில் கட்டையில் எண்களைச் செதுக்கும் உளியைக்கொண்டு எங்கள் பெயரை அப்பாறையின் மீது முன்பு கீறியிருந்தோம். இதைப் பார்த்துவிட்டு ஓமரிடம் அன்னா சொல்லியது நினைவுக்கு வருகிறது. இங்கே பாருங்கள் துவான். இந்தக் காதலர்களின் தொல்லை தாங்கமுடியவில்லை. வீட்டில்தான் எப்போதும் வளவளவென்று பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்றால் இங்கும் காதலர்கள் போல் பெயரைப் பொறித்துவைத்திருக்கிறார்கள்.

அப்பெயர்களின் மீது இப்போது மழைநீரால் பெருக்கெடுத்திருந்த வெள்ளநீர் பரவி ஓடிக்கொண்டிருக்கிறது. அந்த எழுத்துக்களின் மீது விரல்களால் தடவிக்கொண்டிருந்த ஜோஸ் முதன்முதலாக வாய் திறக்கிறான்.

நீர் ஓட ஓட இந்த எழுத்துக்கள் அழிந்து போகலாம். இல்லையா துவான்?

நிமிர்கிறேன். அவனுடைய கண்களை உற்றுப்பார்த்துக்கொண்டே கேட்கிறேன். அழிந்து போகுமா ஜோஸ்?

அவனுடைய கண்களும் ஆழமாக ஊடுருவுகின்றன. இதழ்கள் சிரிக்கின்றன. போகலாம்தான் கவான். இது போனால் என்ன? மரங்களுக்குள் இருக்கும் வளையங்கள் மறைந்து போகுமா என்ன? சொல்லி முடித்ததும் பார்வை மேலே விசும்புக்குத் தாவுகிறது. மீளவும் சிரிக்கின்றன இதழ்கள்.

நம் இதயத்துக்குள் வளையமாகப் பதிந்துவிட்ட நம் நட்பை எதுவும் அழித்துவிட முடியாது கவான். நீ யார்? நான் யார்? இருவரும் எங்கிருந்து இங்கு வந்துசேர்ந்தோம்? ஏன் இப்படிப் பழகினோம்? இப்போது பிரியப்போவது உறுதியாய்த் தெரிகிறது. எதிர்காலத்தில் நாம் மீண்டும் சந்திப்போம் என்பதும் உறுதியில்லை. ஆனால் ஒன்றை உறுதியாகச் சொல்கிறேன் கவான். இந்த ஜோஸ் நாளை வயதாகி இறக்கும் காலம் வரும்போது என் மனதில் உள்ள வளையங்களை ஒவ்வொன்றாகத் தடவிப் பார்ப்பேன். எந்த ஒரு வளையத்தைத் தடவும்போது என் உடல் சிலிர்த்து அடங்குகிறதோ அந்த வளையம் தான் இந்த ஆண்டின் வளையம், நம் நட்பின் வளையம் என்று புரிந்துகொள்வேன் கவான்.

கண்களில் நீர் முட்டிக்கொண்டுவிடும் போல் இருக்கிறது. ஓமரின் மீது அதிக பாசம் வைத்திருந்தபோதும் அவரிடம் பேசமுடியாத செய்திகளையெல்லாம் பகிர்ந்து பேசும் நட்பாக ஜோஸ் இருப்பதை மறுக்க முடியாது. மறக்கவும் முடியாது. அவனுடைய மனதுக்குள் என்ன ஓடியதோ தெரியவில்லை. சட்டென்று கரங்களைப் பிடித்துக் கொள்கிறான். என்னோடு என் கம்போங் வருகிறாயா கவான்? வந்து இரண்டு மூன்று நாட்களாவது தங்கிவிட்டு வரமுடியுமா?

ஓமரைக் கேட்போம் என்கிறேன்.

ஓமர் முன் நிற்கிறோம்.

இங்கேயும் வேலை ஒன்றுமில்லை. பரிகாரச் சடங்கு முடிந்துதான் எல்லாம் தொடங்கும். புர்கான் இறந்ததைப் பார்த்ததில் இருந்து உன் மனசும் சரியில்லை என்பது எனக்குத் தெரியும். ஒரு மாற்றம் இருந்தால் நல்லதுதான். ஆனால் அலுவலகத்தில் கேட்டால் என்ன சொல்வாய்?

எப்படியும் சண்டகானுக்கு நாலுநாட்கள் விடுப்பில் போவேன். இம்முறை அங்கு போகவில்லை. அவ்விடுப்பை இங்கு மாற்றிக் கொள்கிறேன் என்றதும் பிறகென்ன சிக்கல் ஒன்றுமில்லை. என் பொறுப்பிலேயே அனுமதி தருகிறேன். போய் வா என்ற ஓமர் ஜோஸைப் பார்த்துக் கேட்கிறார்.

எப்படி அழைத்துப்போகப் போகிறாய்?

இம்மழைக்காலத்தில் சாலை வழியாகப் போவது சிரமம் துவான். வேறு வழி ஒன்று இருக்கிறது. இங்கிருந்து கினபத்தாங்கன் ஆற்றில் இரண்டு மணிநேரம் பயணம் செய்தால் ஒரு பங்கலான் வரும்.

அண்ணன் அந்த பங்கலானுக்குத் தன் இழுவைப்படகோடு வருகிறார். அவரும் கம்போங்கில் மூன்று நாட்கள் தங்கப்போகிறார். அந்த பங்கலானில் இறங்கினால் அங்கிருந்து ஒரு முகாம் பாதை உள்ளே செல்லுகிறது. ஒரு வண்டியை அண்ணனே ஏற்பாடு செய்துள்ளார். அதில் சென்று ஓரிடத்தில் இறங்கி அங்கிருந்து ஆற்றில் சிறுபடகில் அரைமணி நேரம் பயணம் செய்தால் கம்போங் வந்துவிடும். இதுதான் இப்போதைக்குக் குறுக்கு வழி.

குறுக்கு வழியா? விவரிப்பதைப் பார்த்தால் ஏதோ சாகசப் பயண ஏற்பாடு போலல்லவா இருக்கிறது என்று ஓமர் கூறியதும் சிரித்துக் கொண்ட ஜோஸ் மூன்று நாட்கள் என்னோடு தங்கவைத்துத் திரும்பவும் இதே வழியில் பத்திரமாக அண்ணனோடு அனுப்பி வைத்துவிடுகிறேன் துவான்.

ஓமர் மெல்லிய நகைதவழச் சொல்கிறார். நீங்கள் இருவரும் எவ்வளவு நட்புடன் இருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். ஆனாலும் உன்னுடன் அனுப்புவதை இங்கு பலர் விரும்பமாட்டார்கள் என்பதையும் நீ அறிவாய். எனக்கு உன்மேல் எப்போதும் நம்பிக்கை உண்டு. உன்னை நம்பி அனுப்புகிறேன். இங்குள்ள மற்றவர்களின் நம்பிக்கையைப் பொய்யாக்கும்படி பத்திரமாகத் திருப்பி அனுப்பி வைத்துவிடு ஜோஸ்.

உறுதியாக துவான்.

மறுநாள் இருவரும் பங்கலானுக்குப் புறப்படுகிறோம். அங்கு சென்றதும் வண்டியை ஓட்டிவந்த ரோஸ்லான் தனியாக அழைத்துச் சொல்கிறான். துவான், இந்த ஜோஸ் வேண்டுமானால் நல்லவனாக இருக்கலாம். ஆனால் அங்குள்ள மற்றவர்கள் எப்படி இருப்பார்கள் என்று சொல்லமுடியாது. எதற்கும் எச்சரிக்கையாக இருங்கள் அப்புறம்...

என்ன செய்தி சொல்லு ரோஸ்லான்.

ரோஸ்லானின் குரல் இன்னும் தணிகிறது.

முருட் மக்களின் வீடுகளில் ஒரு பெரிய சம்ப்பா இருக்குமாம் துவான். அந்த சம்ப்பாவுக்குள்ளேதான் முருட்கள் தாங்கள் வெட்டிய தலைகளைப் பாதுகாத்து வைத்திருப்பார்களாம். அப்படி ஏதாவது பார்த்தால் உடனே தப்பித்து வந்துவிடுங்கள் துவான். நான் உங்களுக்காகத் துவா செய்துகொண்டிருப்பேன்.

# 13



சம்ப்பா கழுத்தில் வெண்ணிறப் பட்டைகொண்ட மீன்கொத்தியொன்று வெயிலில் நீலநிற இறகுகள் மின்ன நீரிலிருந்து மீனைக் கவ்விப் பறக்கிறது. இச்சின்னஞ்சிறிய ஆற்றங்கரையில் இப்படி அழகான சம்போங் ஒன்றை எதிர்பார்க்கவில்லை. மெய்ம்மையான அழகு. இம்மொத்த இடத்தையும் ஒருசேர மூடிவைத்திருக்கிறது ஆழ்அமைதி. கரையோரமாகத் தென்னை ஓலைகளைப் போலக் காட்சியளிக்கும் நீப்பா புதர்கள். அதையொட்டிப் பிசின் மரங்களின் வரிசை. அடுத்து நிழல் கோதும் ஒரு பாதை. படகுத்துறையிலிருந்து இறங்கி நிழற் பாதையில் நடக்கிறோம்.

தொலைவில் ஆங்காங்கே வீடுகள் தெரிகின்றன. ஒன்றுக்கொன்று தள்ளி அமைந்திருக்கும் வீடுகள் பிற்பகல் அமைதியில் மூழ்கியிருக் கின்றன. காலையில் தொடங்கிய பயணம் இப்போதுதான் முடிந்தது. அசதி கூடிய நீள்பயணம். தொலைவில் சில குழந்தைகள் விளையாடிக் கொண்டிருக்கின்றன. ஊஞ்சல் விளையாட்டு. மரக்கிளையிலிருந்து இரண்டு மூன்று கயிறுகள் நீளமாகத் தொங்க, அதில் தரைக்குச் சற்று உயரத்தில் கிடைமட்டமாக இரண்டடி நீளமுள்ள கழி ஒன்று ஒவ்வொரு கயிற்றிலும் பிணைக்கப்பட்டிருக்கிறது. அக்கயிற்றைப் பிடித்தவாறு கழியின் மீதமர்ந்து கால்களைக் கயிற்றின் இருபக்கமும் தொங்கவிட்டு குழந்தைகள் அமர்ந்திருக்க சில குழந்தைகள் அவர்களை நெட்டித் தள்ளி ஊஞ்சலாட்டிக் கொண்டிருக்கின்றனர்.

எங்களைப் பார்த்ததும் குழந்தைகள் குதூகலமாக ஓடிவருகின்றனர். ஜோஸ் அவர்களை அன்போடு அணைத்து விசாரித்தவாறே நடக்கிறான். ஆனால் குழந்தைகள் அவனை விடுத்து என் பக்கமே திரும்பிப் பார்த்துச் சிரித்துக்கொண்டிக்கின்றனர். ஒரு புன்னகையோடு நலம் விசாரிக்கிறேன். ஆப்ப கபார்? அட பாகூஸ்கா? விசாரித்ததற்குச் சிரிப்பே பதில். அப்படியானால் இக்குழந்தைகள் இன்னும் மலாய் மொழிக்குப் பழகவில்லை.

ஜோஸுடைய வீடு வருகிறது. நீள்வீடு. இது முருட் மக்களின் கலாச்சார அடையாளங்களுள் ஒன்று. தரையிலிருந்து இரு ஆள் உயரத்துக்கு மரத்தூண்களால் தாங்கு கால்கள் நிறுத்தப்பட்டிருக்க

கதவு ஏதும் இல்லாத ஓர் அகன்ற வாயில். அவ்வாயிலுக்கு ஏறிச்செல் ஏதுவாக பெரிய வெட்டுமர உருளை ஒன்று தரைக்கும் வாயிலுக்குமாகச் சாய்த்து வைக்கப்பட்டிருக்கிறது. அதில் படிகளும் செதுக்கப்பட்டிருக்கின்றன. இருபுறமும் பிடித்துக்கொள்ளத் தோதாக மூங்கில் கைப்பிடிகள். படியிலேறி வீட்டுக்குள் நுழைகிறோம். வலப்பக்கம் வரிசையாக ஆறு அறைகள் தெரிகின்றன. ஒவ்வொரு அறைக்கும் ஒரு தட்டிக்கதவு. இடப்பக்கம் ஒரு நீண்ட கூடம். அது முடிகின்ற எதிர்முனையில் கதவுகளற்ற வாயிலும் அதற்கப்பால் வெளிப்பக்கம் துருத்திக் கொண்டிருக்கும் பெரிய குசினியும் தெரிகின்றன. வீட்டுக்குக் கூரையாக வேயப்பட்டிருக்கும் தகரங்கள். ஆனால் குசினி அறை முழுக்க ஓலைகளால் வேயப்பட்டிருக்கிறது.

கூடத்தின் இடப்பக்கம் ஓலைகளால் வேயப்பட்ட சுவரில் நீள் செவ்வக வடிவில் தடுப்புக்கம்பிகளோ கதவுகளோ அற்ற நான்கு சன்னல்கள் தெரிகின்றன. மழை வந்தால் இறக்கிக்கொள்ளும் வகையில் ஓலைகளால் பின்னப்பட்ட தடுப்பு அச்சன்னல்களுக்கு வெளிப்பக்கமாக இரு குச்சிகளால் முட்டுக்கொடுத்து வைக்கப்பட்டிருக்கின்றது. இன்றைய முருட் இன மக்களுள் பெரும்பான்மையோர் பிரித்தானிய ஆட்சிக்குப் பிறகு கிறித்தவர்களாக ஆக்கப்பட்டிருந்தாலும் தொல் கலாச்சரத்தை இன்னும் தொலைத்துவிடவில்லை என்பது இவ்வீட்டைப் பார்க்கும்போது தெரிகிறது. வீட்டில் கிறித்தவத்தின் ஒரே அடையாளமாகக் கூடத்து மரத்தூண் ஒன்றின்மீது ஒரே ஒரு சிலுவைச் சின்னம் மட்டும் மாட்டப்பட்டிருக்கிறது.

வீட்டுக்குள் ஆண்கள், பெண்கள், குழந்தைகளென சுமார் இருபது பேர்களாவது இருந்தார்கள். எல்லோரும் எங்களைப் பார்த்ததும் உள்ளேயிருந்து வந்து குழுமுகிறார்கள். ஜோஸ் அவர்களை அறிமுகப்படுத்தி வைக்க அவர்களில் ஆண்கள் மட்டும் நெருங்கி வந்து கைகுலுக்க பெண்கள் அனைவரும் மிகுந்த நாணத்துடன்கூடிய புன்சிரிப்பொன்றை வழங்குகின்றனர். இவர்களா தலைவெட்டும் பாரம்பரியத்தில் வந்தவர்கள் என்று வியப்பு எழுகிறது.

தேநீர் அருந்தலாமே என்று ஜோஸின் தந்தை கேட்டவுடன் விரிக்கப்பட்ட சிறிய ஓலைப் பாயொன்றில் எல்லோரும் வட்டமாகச் சுற்றி அமர்ந்துகொள்கிறோம். ஜோஸின் தாய் கண்ணாடித் தட்டில் அவித்த மரவள்ளிக்கிழங்கினைக் கொண்டுவந்து வைக்கிறார். ஜோஸ் இடப்பக்கமாக அமர்ந்துகொள்ள வலப்பக்கமாக அமர்ந்த ஓர் பெண் அலுமினியக் கேத்தலில் இருந்த வரத்தேநீரை எடுத்துக் கோப்பையில் நிரப்புகிறார். கைக்குழந்தையொன்றைக் கொண்டிருக்கும் இப்பெண்ணை ஜோஸ் தன் தமக்கை என்று அறிமுகப்படுத்தி வைத்தது நினைவுக்கு வருகிறது. கிழங்குத் துண்டொன்றை எடுத்துக் கடிக்கிறேன்.

இக்கிழங்கெல்லாம் நீங்கள் சாப்பிடுவீர்களோ மாட்டீர்களோ என நினைத்தேன். பரவாயில்லை. சாப்பிடுகிறீர்கள் என்று சொல்லிப் புன்னகைக்கிறார் ஜோஸின் தந்தை. கவர்ச்சியான புன்னகை அவருக்கு. வயது அறுபதுக்கு மேல் இருக்கலாம். சற்று உடைந்த மலாய்தான் பேசுகிறார். ஜோஸுடைய தலைமுறைதான் இம்மொழியை நன்கு பழகிய முதல் தலைமுறை. அவரைப் பார்த்துப் பதில் சொல்கிறேன். இக்கிழங்கு எங்கள் ஊரிலும் இருக்கிறது.

இது அவருக்குத் திகைப்பூட்டும் ஒரு செய்தியாக இருந்திருக்க வேண்டும். உடனே தன் மனைவியுடன் அவர்களுடைய மொழியில் ஏதோ பகிர்ந்துகொள்கிறார். அமர்ந்தவர்கள் தவிர மற்றவர்கள் இன்னும் நின்றுகொண்டே வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். குழந்தைகள் எதற்கென்று தெரியாமலேயே தங்களுக்குள் ஏதோ கமுக்கம் பேசிச் சிரித்துக்கொண்டிருக்கின்றனர். இதுவரை இப்படிக் கருநிறமுள்ள வேற்றின மனிதரை பார்த்திருக்கவில்லை என்பதே காரணமாக இருக்கும். இருப்பினும் இப்படி உற்றுப் பார்க்கையில் இயல்பு கெடுவதைத் தவிர்க்க முடியவில்லை. ஜோஸ் அக்குழந்தைகளை அதட்டி ஏதோ சொல்ல அவர்கள் வீட்டுக்கு வெளியே இறங்கி ஓடுகிறார்கள். அவர்கள் இறங்கிச் சென்றதும் ஜோஸ் மன்னிப்புக் கோருவதுபோல் சொல்கிறான். நீ சாப்பிடு கவான்.

ஆனால் இச்செய்கை அவ்விடத்தின் இயல்பை இன்னும் குலைத்துப் போடுகிறது. ஜோஸினுடைய தாய் அனுமதி கேட்டெழுந்து குசினிக்குள் போகிறார். மற்றவர்களும் அதுபோலவே அனுமதி கூறியெழுந்து தங்கள் அறைப்பக்கம் செல்கின்றனர். நீ சாப்பிட்டுக்கொண்டிரு. நம் கைப்பைகளை அறைக்குள் வைத்துவிட்டு வந்துவிடுகிறேன் என்று ஜோஸும் எழுந்து செல்கிறான். இப்போது ஜோஸின் தமக்கை மட்டுமே அருகிலிருக்கிறார். அவர் விருந்தோம்பலின் பொருட்டு இன்னும் அமர்ந்திருக்கிறார். அவருக்குச் சுமாராக இருபத்தைந்து வயதுக்குள் இருக்கவேண்டும். சம்மணமிட்டு அமர்ந்திருந்த அவருடைய இடுப்பில் ஒரு சாரோங்கும் மேலே கைவைத்த பருத்திப் பனியனும் அணிந்திருக்கிறார். போர்னியோவின் எல்லாத் தொல்குடிகளைப் போல இளமஞ்சள் நிறம். அவர் கையில் வைத்திருந்த கைக்குழந்தை எதிர்பாராது அழத் தொடங்குகிறது.

குழந்தை பாலுக்காக அழுதது போலும். அவர் அக்குழந்தையைத் தன் மடியில் கிடத்திச் சாவகாசமாக எதிரே ஒருவனின் இருப்பையே சற்றும் பொருட்படுத்தாது பனியனை ஒரு பக்கமாக மேலேற்றி தன் ஒற்றை முலை வெளியே தெரியுமாறு குழந்தைக்குப் பாலூட்டத் தொடங்குகிறார். இருவர் மட்டுமே தனித்து அமர்ந்திருக்கும் நிலையில் இது சற்றுச் சிக்கலைத் தோற்றுவிக்கிறது. என்ன செய்வது? விட்டத்தை நோக்கியவாறே கிழங்கைக் கடித்துக்கொண்டிருக்கிறேன். ஒரு நிமிடம்

சென்றிருக்கலாம். என் வலக்கையின் மேல் ஒரு தொடுவுணர்வு. பார்வையைத் திருப்புகிறேன். அவர் தன் குழந்தைக்குப் பால் கொடுத்த நிலையிலேயே சற்று முன்புறமாக எக்கியவாறே தன் ஆட்காட்டி விரலால் என் முழங்கையிலிருந்து மணிக்கட்டு வரை நீளவாக்கில் ஒரு கோடிழுத்துக் கொண்டிருக்கிறார்.

ஒன்றும் விளங்காமல் அவரைத் திகைப்புடன் பார்க்கிறேன். அவரோ கோடிழுத்துப் பார்த்த தன் ஆட்காட்டி விரலை கையிலிருந்து எடுத்து அதைத் தன்பக்கமாகத் திருப்பி அவ்விரல் நுனியைப் பார்த்து விட்டு வாய்விட்டுச் சொல்கிறார். ஒன்றும் ஒட்டவில்லையே?

புரிந்துவிடுகிறது. கருத்த நிறம்தான் அவருடைய ஆவலைத் தூண்டியிருக்கிறது. இந்நிறத்துக்கு ஒட்டும் தன்மை உண்டோவென ஆய்வு செய்திருக்கிறார். எனினும் அவர்மீது சினமேதும் வரவில்லை. அந்த அளவுக்கு முகத்தில் வெகுளித்தனம். சிரித்து விடுகிறேன். அவருக்கே நாணமாகிவிட்டது. அதை மறைக்கும் வகையில் தலைகுனிந்து கோப்பையில் மேலும் தேநீரை நிரப்புகிறார். குழந்தை சிணுங்குகிறது. அவர் குழந்தையை மறுபக்கமாகத் திருப்பி படுக்கவைத்துக்கொண்டு அந்தப் பக்கத்து பனியனையும் மேலேற்றிவிட்டு பாலூட்டத் தொடங்குகிறார். அப்போது இப்பக்கம் திறந்திருந்ததை மூடுவதற்கு எந்த எத்தனிப்பும் செய்யாததால் காட்சிக்குத் திறந்தே கிடக்கிறது.

ஓமர் அவருடைய இளமைப் பருவத்தில் உலு பக்கம் சென்றிருந்த போது மேலாடையே அணியாத பல பெண்களைப் பார்த்திருக்கிறேன் என்று ஒருமுறை சொல்லியிருந்தது நினைவுக்கு வருகிறது. அப்பெண்களைப் பொறுத்த வரையில் கை மற்றும் கால்களைப் போல அவையும் சாதாரண உடல் உறுப்புகள். நம் பார்வைக்கு மட்டும்தான் அவை இனக்கவர்ச்சி என்று அவர் சொல்லியது நினைவுக்குவர, இவரும் அப்பழைய கலாச்சாரத்தின் தொடர்ச்சி எனப் புரிகிறது. ஆனால் இம்மனசு அந்தக் கலாச்சாரத்தைச் சேர்ந்ததில்லை. இந்த இளஞ்சிவப்பு நிற காம்பைக்கூட பால் உறுப்பாகவே பார்க்கும் கள்ளம் கொண்ட தற்கால மனசு. பார்வையை வேறு பக்கம் திருப்புகிறேன். அப்படி திருப்பும்போது பார்வைக்குள் வந்து விழுகிறது அந்தச் செம்பழுப்புநிற சீனக்களிமண் தாழி. சம்பப்பா.

கிளம்பும் தருவாயில் ரோஸ்லான் சொன்ன சொற்கள் சுழல்கின்றன. முருட் மக்களின் வீடுகளில் ஒரு பெரிய சம்ப்பா இருக்குமாம் துவான். அந்தச் சம்ப்பாவுக்குள்தான் அவர்கள் வெட்டிய தலைகளைப் பாதுகாத்து வைத்திருப்பார்களாம். அப்படி ஏதாவது பார்த்தால் உடனே தப்பித்து வந்துவிடுங்கள் துவான்.

கூடத்தின் இடது சுவர் ஓரமாக இரு சன்னல்களுக்கு இடையில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிற இந்தச் சம்ப்பா எப்படி இதுவரை

கண்ணில் படாமல் தப்பியது? இதற்குமேல் அதைப் பார்க்கும் ஆவலைத் தடுக்க இயலவில்லை. எழுந்து செல்கிறேன்.

சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் வணிகத்துக்காக இங்கு வரத் தொடங்கிய சீன வணிகர்களால் இம்மக்களுக்கு அறிமுகப்படுத்தப் பட்ட இந்தச் சீனக் களிமண் தாழிகள் இவர்களின் வாழ்வியல் கூறுகளுள் ஒன்றாக மாறிப்போனது. சம்ப்பாவின் வாய்ப்பகுதிக்குக் கீழே சுற்றிலும் நான்கு வளையங்கள் பொருத்தப்பட்டிருக்கின்றன. அதன் வெளிப்புறமாக நடுப்பகுதியில் டிராகன் உருவம் ஒன்று பொறிக்கப் பட்டிருக்கிறது. முற்காலத்தில் இவை முதுமக்கள் தாழிகளாகவும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. இறந்தவர்களின் உடலை அமர்ந்த நிலையிலேயே இத்தாழிக்குள் பொருத்தி அதன் வாய்ப்பகுதியை வட்டு போன்ற கோங் எனும் இசைக்கருவிகொண்டு மூடி அடக்கம் செய்திருக் கிறார்கள். இதுகுறித்து ஜோஸிடம் கேட்டபோது அதெல்லாம் வழக் கொழிந்துவிட்டது. மரத்தாலான சவப்பெட்டிகளைத்தான் தற்போது பயன்படுத்துகிறோம் என்று சொல்லியிருக்கிறான்.

ஆக இந்தச் சம்ப்பா இன்றைக்கு வெறும் நினைவுப்பொருளாக இக்குடும்பங்களில் எஞ்சியிருக்கலாம். இப்படிப்பட்ட சம்ப்பாவுக்குள் தான் இந்த இனத்தினர் முன்பு வெட்டிய தலைகளின் மண்டையோடு களைப் பாதுகாப்பாக வைத்திருக்கிறார்கள் என்று ரோஸ்லானைப் போலவே வெளியே உள்ள பலரும் நம்பிக்கொண்டிருக்கின்றனர். என்னதான் தெளிவிருந்தாலும் அது மெய்யா பொய்யா என்றறியும் ஆவலை மட்டும் தடுக்க இயலவில்லை. எட்டிப்பார்க்கிறேன். சம்ப்பா காலியாக இருக்கிறது.

சம்ப்பாவுக்குள் என்ன தேடிக்கொண்டிருக்கிறாய் கவான்?

ஜோஸினுடைய குரலைக் கேட்டதும் ஒரு கணம் வெட்கமாகி விடுகிறது. எதற்கு எட்டிப் பார்த்தோம் என்பது தெரிந்திருக்காது. ரோஸ்லான் சொன்னது ஜோஸுக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. பதற்றம் சற்று அடங்குகிறது. ஜோஸ் இயல்பாக இக்கேள்வியைக் கேட்டிருக்க வேண்டும் என்பது அடுத்த கேள்வியிலிருந்து தெரிகிறது.

இந்தச் சம்ப்பாவுக்கு என்ன வயது இருக்கும் என்று நினைக்கிறாய் கவான்?

ஊகிக்கத் தொடங்குவதற்குள் அவனுடைய அக்கா பதில் சொல் கிறார். இருநூறு ஆண்டுகளுக்கு மேல் ஆகிறது. திரும்பிப் பார்க்கிறேன். அவருடைய குழந்தை பால் குடிப்பதை நிறுத்திவிட்டு விளையாடிக் கொண்டிருந்தும்கூட இன்னமும் அவர் பனியன் மூடப்படாமலேயே திறந்திருக்கிறது. அவரோ அதைப் பொருட்படுத்தாது எங்கள் உரையாடலைச் செவிமடுத்துப் பதில் சொல்லிக்கொண்டிருக்கிறார். அப்பதிலைக் கேட்டதும் வியக்கிறேன். இருநூறு ஆண்டுகளா? ஒரு

முருட் குடும்பத்தில் சம்ப்பா என்பது பாதுகாக்கப்பட்டு வரும் ஒரு பொருள் என்பதை அறிந்திருந்தாலும் இத்தனை ஆண்டுகளை எதிர்பார்க்கவில்லை.

என்ன இப்படிக் கேட்கிறாய்? மனிதர்களே நூறு ஆண்டுக்கு மேல் வாழ்ந்துகொண்டிருக்கும் போது இதில் வியக்க என்ன இருக்கிறது; ஜோஸ் இப்படிச் சொன்னதும் கேட்கிறேன். இப்போது யார் அத்தனை வயது வரை வாழ்கிறார்கள் ஜோஸ்?

அவன் புருவம் உயர்கிறது. என்ன அப்படிச் சொல்லிவிட்டாய். என் தாத்தா இன்னும் வாழ்ந்துகொண்டிருக்கிறார்.

தாத்தாவா? இங்கே அவரைப் பார்க்கவில்லையே என்றதும் அவர் இங்கில்லை கவான். வேறொரு இடத்தில் இருக்கிறார் என்கிறான் ஜோஸ். பரபரப்பாகிறேன். அவரைச் சந்திக்க முடியுமா ஜோஸ்? துடிப்போடு எழுந்த கேள்விக்குப் பொறுமையாகப் பதில் சொல்கிறான் ஜோஸ். இங்குதானே இருக்கப்போகிறாய். பொறுமையாகப் பார்க் கலாம். முதலில் உடலைக் கொஞ்சநேரம் ஓய்வாகக் கிடத்துவோம் வா.

ரலா

மாலையில் உலாவச் செல்கிறோம். இதுவொரு சிறிய கம்போங்தான். ஆங்காங்கே மரங்களுக்கிடையே வீடுகள் ஒளிந்துகொண்டிருக்கின்றன. வீடுகள் கொஞ்சமே இருந்தாலும் கூட்டுக்குடும்பமாய் வசிப்பதால் ஆட்களின் எண்ணிக்கை கணிசமானதாக இருக்கலாம். வழியில் இருந்த ஒரு வீட்டுக்குச் சென்று ஜோஸ் ஏதோ விசாரித்துத் திரும்புகிறான். இது யார் வீடு? அந்த நூறு வயது தாத்தா வசிக்கும் வீடா? ஜோஸ் தன் உதடுகளில் சிரிப்பொன்றை வெட்கத்துடன் வழியவிட்டுச் சொல் கிறான். என்னுடைய துணாங் வீடு.

அடேய்... இதை எப்படி இவ்வளவு நேரம் மறந்து போனேன்? எங்கே உன் துனாங் ஜோஸ்? ஆளைக் காட்டாமல் ஏமாற்றப் பார்க்கிறாயா என்று படபடக்க, கொஞ்சம் பொறுமையாக இரு கவான். நானே பொறுமையாக இருக்கிறேன். உனக்கென்ன இவ்வளவு அவசரம்? வயல் பக்கம் சென்றிருக்கிறாராம். அந்தப் பக்கம்தான் போகிறோம் வா.

அண்மையில் பெய்த மழையின் தடங்கள் தெரிந்தாலும் பாதையில் நடப்பதற்கு ஒரு சிரமமும் இல்லை. வழியில் ஓரமாக ஒரு லங்சாட் மரம் நிற்கிறது. நெல்நிறக் கனிகள் பெரிய கோலிக் குண்டுகள் அளவுக்குக் கொத்துக்கொத்தாகத் தொங்கிக்கொண்டிருக்கின்றன. ஜோஸ் அதற்கருகே சென்று தாவிப்பறிக்க இரு கொத்துகள் கைக்கு வருகின்றன. இது யாருடைய மரம் ஜோஸ்? யாரையும் கேட்காமல் பறித்துக்கொண்டு வருகிறாய்?

யாரையும் கேட்க வேண்டாம் கவான். இங்குள்ள மரங்களெல்லாம் பறவைகள், விலங்குகள், மனிதர்கள் அனைவருக்கும் பொது. நீ சாப்பிடு.

ஒரு பழத்தை அதன் காம்பிலிருக்கும் பால் பட்டுவிடாமல் விரல் களால் பிய்க்கிறேன். கனிந்த பழம். பழத்தின் காம்புப் பகுதியை இரு விரல்களுக்கிடையே வைத்து நசுக்க தோல் பிய்ந்து விரிசல்விட்டு உள்ளேயிருக்கும் நுங்குநிறச் சுளைகள் வெளியே பிதுங்கி வருகின்றன. தோலை உரித்து வீசிவிட்டுச் சுளைகளைச் சுவைத்துக்கொண்டே நடக்கிறோம். அதில் உள்ள கொட்டையைத் துப்பும் போது அருகி லிருந்த சிறு குன்றின் சரிவில் நாணல்களைப்போல் புதர்கள் மண்டிக் கிடப்பதைக் கவனிக்கிறேன். ஆனால் அவை நாணலும் அல்ல கோரை யும் அல்ல. ஆள் உயரத்துக்கு நிற்கும் அதை மலைநெல் என்கிறான் ஜோஸ். அதை நின்றுகொண்டே அறுத்துவிடலாம். அவ்வளவு உயரம்.

கவான், நீ எங்களுடைய மலைநெல் சோற்றைச் சாப்பிட்டிருக்க மாட்டாய். உனக்கு அதில் விருந்து வைக்கச் சொல்கிறேன். சாப்பிட்டுப் பார். அவ்வளவு சுவையாக இருக்கும் என ஜோஸ் சொல்லிக் கொண்டிருக்கையில்...

இது என்ன சாரலின் தூவலா? இல்லை மென் காற்றின் மெல்லிசையா? தூவியொன்று மிதப்பதுபோல் வரும் மென்மையான பாடல். பெண்ணின் குரல். திரும்பிப் பார்க்கிறோம். குன்றிலிருந்து இறங்கி வரும் ஓர் ஒற்றையடித் தடம். அதில் வந்துகொண்டிருக்கும் ஒரு பெண். ஜோஸைப் பார்த்து ஓடிவந்ததில் அந்தத் தூனாங் இவர்தான் என்று புரிந்துவிடுகிறது. ஜோஸுக்கும் தன்னை அறியாமல் சிரிப்புப் பொங்கு கிறது. ஜோஸ் அறிமுகப்படுத்தி வைக்கிறான். அப்பெண் ஏற்கனவே அறிமுகமானவரைச் சந்திப்பது போன்ற பாவத்துடன் புன்னகைக் கிறார். அதுதான் கடிதங்கள் சொல்லியிருக்கிறதே.

ஜோஸ் தொல்குடிகளின் வழக்கமான உயரத்தைவிட சற்று உயர முடையவன். இப்பெண்ணும் ஜோஸுக்குப் பொருத்தமான உயரத்தில் இருக்கிறார். மஞ்சள் நிறம்தான். மெலிந்த மேனி. வேளாண் பணிக்குத் தகுந்தாற்போல் முழுக்கால் சட்டையும் முழுக்கைச் சட்டையும் அணிந் திருக்கிறார். வழக்கமான வட்ட முகத்துக்குப் பதிலாக ஜோஸைப் போலவே இப்பெண்ணுக்கும் செவ்வக முகமிருப்பது சற்று வியப்பு. மேற்கொண்டு பேசுவதற்குமுன் மீண்டும் அந்தக் காற்றினிலே வரும் கீதம். அப்படியானால் பாடியது இவர் இல்லை. திரும்பிப் பார்க்கிறேன்.

அதே ஒற்றையடிப் பாதையில் இன்னொரு பெண். இப்பெண்ணை விட இளம் வயது. அதே வேளாண் உடை. நெருங்கிவந்தபோது பதினெட்டு வயதிருக்கலாம் என்று கணிக்கமுடிகிறது. பூசிய உடல் வாகு. சற்று குள்ளமான உருவம். அதே மஞ்சள் நிறம். அடர்த்தியான

கூந்தல். வட்ட முகம். இடுங்கிய மின்னும் கண்கள். ஜோஸைப் பார்த்த அந்த உதடுகள் மாயவித்தை ஒன்றைப் புரிந்து மீள்கிறது. இப்பெண்ணுக்கு அழகே இந்த உதடுகள்தாம். இயல்பான நிலையில் ஓர் அழகிய வட்டமாய்க் காட்சியளிக்கும் அவ்வுதடுகள் சிரிக்கும்போது பறவை யொன்று சிறகு விரிப்பதுபோல அழகாய் விரிந்து மீளவும் வட்டமாய்க் கூடுவது அவ்வளவு சுர்ப்பு.

மடையா என்ன ஆயிற்று உனக்கு? ஏன் இப்பெண் வழக்கத்துக்கு மாறாக உனக்குள் இத்தனை அழுத்தமாகவும் இவ்வளவு துல்லிய மாகவும் பதிந்துகொண்டிருக்கிறாள்? உள்ளிருந்து கேட்கும் குரலை ஜோஸின் குரல் இடைமறிக்கிறது.

கவான், உனக்கு அறிமுகம் செய்து வைக்கிறேன். இதுதான் ஓராங் ஊத்தான்.

ஜோஸ் அறிமுகத்துக்குச் சற்றும் சளைக்காமல் அப்பெண்ணிடமிருந்து பதில் வருகிறது. நீங்கள்தான் கிடங்குகளில் இருந்து வரும் ரகோங் குரங்குகளா?

இதைக்கேட்டதும் ஜோஸினுடைய தூனோங் சற்றுத் துடித்துப்போய் அப்பெண்ணை முறைக்கிறார். ஜோஸும் உடனே குறுக்கிட்டு, தவறாக நினைத்துக்கொள்ள வேண்டாம் கவான். ரலாவுக்கு வால் போனதி லிருந்து குறும்பைக் கொஞ்சம் நீளமாக வைத்துவிட்டார் கடவுள் என்று சொல்லியபோது நினைவுக்குள் ஒரு மின்னலின் பாய்ச்சல்.

ரலா?

ஆமாம். என் தங்கை என்ற ஜோஸினுடைய தூனோங் புன்னகைக் கிறார். அப்புன்னகையில் தெளியும் பொருள் வெட்கத்தைத் துளிர்க்கச் செய்கிறது. இயல்பாகத்தான் இருக்கிறேன் என்பதைப் போலக்காட்ட ரலாவை நோக்கிச் சொல்கிறேன். உங்கள் பாடல் மிகவும் இனிமையாய் இருந்தது. உடனே அவ்வட்ட உதடுகள் ஒருமுறை சிறகுவிரித்து மீளவும் குவிந்து வட்டமாகிறது.

ரலா நல்ல நடனக் கலைஞரும்கூட. அக்காவின் அடுத்த வாக்கியத்தில் ரலாவுக்குச் சட்டென்று துடுக்குத்தனம் மறைந்து வெட்கம் கூடிய சிணுங்கல் பிறக்கிறது. உடனே ஜோஸ் சொல்கிறான். உண்மைதான் கவான். நாளை நடக்கப்போகும் விருந்தில் ரலாவின் நடனம் இருக்கிறது.

இதை ஜோஸ் சொல்லிக்கொண்டிருக்கும்போதே சட்டென்று ரலாவின் குரல் இடைமறிக்கிறது. பாவம். அவரை அதற்குள் அச்சுறுத்தி விரட்டிவிடாதே.

பார்... என்ன ஒரு கரிசனம்? விரட்டிவிடக்கூடாதாமே என ஜோஸும் அவனுடைய தூனோங்கும் சேர்ந்து கேலிசெய்ய பொய்யான சினம் கொண்டு நடக்கத் துவங்குகிறாள் ரலா. அடர்ந்த கூந்தலசைய நடக்கும் ரலாவிடமிருந்து பார்வையைப் பிரிக்க முயன்று தோற்கிறேன்.

ஒரு கேலிப் புன்முறுவலோடு ரலாவின் அக்காவும் விடைபெற்று இணைந்து கொள்கிறார். மீண்டும் பாடலின் சாரல். தித்திக்கத் துவங்கும் காற்று.

சற்றுப் பின்தங்கி வீட்டுக்குத் திரும்பியபோது உரலில் நெல் குத்திக்கொண்டிருக்கிறார்கள். மர உரல். மர உலக்கை. செவ்வக வடிவத்தில் இருந்த உரலின் வட்டக்குழிக்குள் நெல்லை இட்டு ஆளுயர உலக்கையால் குத்திக்கொண்டிருக்கிறார்கள். மலைநெல்லின் மணம் பிரிந்து காற்றில் கசிகிறது. மேலேறி அறைக்குள் நுழைகிறோம். நாளைக்கு விருந்து என்று ஜோஸ் சொன்னது நினைவுக்கு வருகிறது. அது என்ன விருந்து ஜோஸ்?

ஒன்றுமில்லை கவான். ஒரு விருந்தினரை வரவேற்க விருந்து நடக்க இருக்கிறது. அடுத்த கேள்வியைக் கேட்கிறேன். விருந்தினரா? யார் வருகிறார்கள்?

அவர் ஏற்கனவே வந்துவிட்டார். என்னுடன்தான் தங்கியிருக்கிறார் என்று சொல்லி ஜோஸ் சிரிக்கிறான். புரிந்துவிடுகிறது. ஜோஸ், என்ன இது? எதற்கு இதெல்லாம் என்கிறேன். என்ன இப்படிச் சொல்கிறாய்? நாளைய விருந்தில் என் கவானுக்காக நானும் நடனமாட இருக்கிறேன். அது கிடக்கட்டும். நீ எங்கள் பாரம்பரியம் பற்றி நிறைய கேள்வி கேட்டுக்கொண்டிருப்பாயே? எங்கள் பாரம்பரிய உடையைப் பார்க்கிறாயா என்று ஜோஸ் கேட்டதும் அனைத்தும் மறந்துபோகிறது. காட்டு பார்ப்போம் ஜோஸ்.

முதலில் கவட்டை வடிவத்தில் கழுத்து வெட்டப்பட்டிருந்த கையில்லாத ஒரு மேல்சட்டையை எடுத்துக்காட்டியபோது இளம் பழுப்பு நிறத்திலிருந்த அச்சட்டை பார்ப்பதற்குத் துணியைப் போலவே இல்லை. வாங்கித் தொட்டுப்பார்க்கிறேன்.

என்ன அப்படிப் பார்க்கிறாய் கவான்? நீ நினைப்பது போல் இது துணியில்லை. புப்புத்துல் மரத்தின் பட்டை.

மரவுரியில் இவ்வளவு நேர்த்தியாக அழகிய வேலைப்பாடுகளுடன் கூடிய ஓர் ஆடையா என வியந்துகொண்டிருக்கையிலேயே, நீ துப்பி சிலுலாதன் பார்க்கிறாயா என்று கேட்டு அதை எடுத்துக்காட்டுகிறான். அது பாரம்பரிய தலைப்பாகை. அதுவும் மரப்பட்டையில்தான் செய்யப்பட்டிருக்கிறது. அதில் துவோவ் என்றழைக்கப்படும் பகட்டுக்கோழியின் இறகுகள் மூன்று இடங்களில் அலங்காரத்துக்காகப் பொருத்தப்பட்டிருக்கின்றன. ஓரடி உயரத்துக்கு மேல் உள்ள இறகுகள். இது முதிர்ந்த ஆண் கோழியின் இறகு. ஒரு கணம் கொவ்-வல் என்ற குரல் காதுக்குள் ஒலித்து அடங்குகிறது.

அதற்குள் வெளியே யாரோ அழைக்கும் குரல். எட்டிப் பார்க்கிறோம். ஜோஸின் தூனாங்கும் அந்தப் பெண் ரலாவும் நின்றிருக்கிறார்கள்.

ஜோஸ் அவர்களைச் சிரித்தபடியே வரவேற்கிறான். புரிகிறது. தனியாகத் திரும்பியிருந்தால் தன் தூனாங்கோடுதான் ஜோஸின் பொழுது கழிந்திருக்கும். இப்போது அவர்களைத் தனியே பேசவிட்டுச் சற்று ஒதுங்கிக்கொள்வதுதான் நாகரிகம். கூடத்திலிருந்த சன்னலோரம் ஒதுங்குகிறேன். மேகங்கள் நிறைந்த வானில் ஆயாசமாக நிலவு நீந்தி வருகிறது.

என்ன நிலவையே பார்க்கிறீர்கள்? நீங்களும் நிலாவை விழுங்கப் போகிறீர்களா?

திரும்புகிறேன். ரலா. குளித்து முடித்த திருத்தமான முகம். காற்றில் அலைபாயும் அடர் கூந்தலுடன் அண்மையில் தீட்டி முடிக்கப் பட்டிருக்கும் ஓவியம். அடுத்த சன்னலோரம் ஜோஸ் தன் தூனாங் குடன் பேசிக்கொண்டிருப்பதைப் பார்க்கிறேன். அதனால்தான் ரலாவும் நாகரிகமாய் ஒதுங்கி வந்திருக்கிறாள்.

ஆமாம் என்ன கேட்டீர்கள்? நானும் நிலவை விழுங்கப் போகிறேனா என்றுதானே? அப்படியானால் ஏற்கனவே யாராவது நிலவை விழுங்கி யிருக்கிறார்களா என்ன?

ஆமாம். விழுங்கியிருக்கிறார்கள். எங்கள் கடவுளின் மகன் அப்படித் தான் விழுங்கியிருந்தார். அதுவொரு பழைய கதை.

அது என்ன கதை? சொல்லுங்களேன் கேட்கிறேன். ரலா உடனே மறுக்கிறாள். மாட்டேன். அதையெல்லாம் கேட்டால் நம்பமாட்டீர்கள். சிரிப்பீர்கள்.

சிரிக்க மாட்டேன், நம்பு. கதை என்றால் ரொம்பப் பிடிக்கும் எத்தனை உறுதிமொழிகளைத்தான் தருவது? ரலாவைக் கதை சொல்ல வைக்கக் கொஞ்சம் சிரமப்பட வேண்டியிருந்தது. ஆனால் சொல்லத் தொடங்கியதும் குரலில் குதூகலம் பீறிடுகிறது.

எங்கள் கடவுள் ஒருவரின் மகனுக்கு மற்றொரு கடவுளின் மகளைத் திருமணம் செய்துகொள்ள ஆசை. ஆனால் பெண்ணின் தந்தையோ நிறைய பிரியன் கேட்கிறார். அவர் கேட்ட பிரியனின் அளவு ரொம்ப அதிகம். அவ்வளவு பிரியன் கொடுத்து மணந்துகொள்ள இவரால் முடியவில்லை. எனவே ஒரு தந்திரம் செய்கிறார். அதன்படி நிலவை விழுங்கி வாய்க்குள் அடைத்து வைத்துக்கொள்கிறார். வானில் நிலவற்றுப் போய்விட்டதால் இரவு மேலும் இருளாகிவிடுகிறது மக்கள் கவலையில் குழுமிப் பேசுகிறார்கள். தங்கள் குழுத்தலைவ யிடம் முறையிடுகிறார்கள். அவர் மக்களைக் கூட்டிச் சொல்கிறார் கவலைப்படாதீர்கள் மக்களே, நம் கடவுளின் மகன் மிகவும் சினமாக இருக்கிறார். நாம் இணைந்து அவருக்கு பெரிய படையல் அளிப்போம் அவருடைய மனம் குளிர்ந்தால் நமக்கு நிலவு கிடைத்துவிடும். அதனால் விருந்து தடபுடலாக இருக்கட்டும்.

மக்கள் அனைவரும் குதூகலத்துடன் விருந்துக்கு தயாராகின்றனர். நிறைய விலங்குகள் பலிகொடுக்கப்பட்டு வகைவகையாக உணவுகள் சமைக்கப்படுகின்றன. குடுவை குடுவையாய்த் தப்பாய் வேறு. மக்களெல்லாம் புத்தாடைகள் அணிந்து இரவெல்லாம் ஆடிப்பாடிக் கடவுளைப் போற்றுகின்றனர். இவ்வளவு பெரிய விருந்தை நிலவை விழுங்கிய கடவுளின் மகன் அதுவரை பார்த்ததேயில்லை. வியப்பில் மெய்யாகவே ஆ... என வாயைப் பிளந்து விடுகிறார். அப்போது அவர் வாயில் அடக்கி வைத்திருந்த நிலவு வெளியே வந்துவிடுகிறது. மக்களுக்கெல்லாம் ஒரே மகிழ்ச்சி. பிறகு என்ன? மக்கள் அந்த விருந்துப் பொருள் அனைத்தையும் அந்தக் கடவுளின் மகனுக்கே கொடுக்க அவர் அதையெல்லாம் கொண்டு போய் அப்பெண்ணின் தந்தைக்குப் பிரியனாகக் கொடுக்கிறார். அவ்வளவு பிரியனை அப்பெண்ணின் தந்தை எதிர்பார்க்கவில்லை. மகிழ்ச்சியோடு பெண்ணை மணம் செய்து கொடுத்துவிடுகிறார்.

கதையை முடித்துவிட்ட ரலா பதிலை எதிர்நோக்கி முகத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறாள். ஆனால் நினைவோ பிரியன் என்கிற அந்தச் சொல்லைச் சுற்றியே வருகிறது. பெண்களை மணந்து கொள்ள ஆண்கள் பிரியன் வழங்கவேண்டும் என்ற வழக்கம் இங்குள்ள எல்லா தொல்குடி மக்களிடத்தும் உள்ளது. ஆனால் முருட் பெண்களை மணப்பதைக் குறித்துப் பேசும்போது மட்டும் பிரியன் மாத்தி என்ற சொல்லைப் பயன்படுத்துவார்கள். அதற்குக் காரணம் என்னவாக இருக்கும்? பழங்காலத்தில் முருட் பெண்ணை மணந்துகொள்ள யாராவது ஒரு எதிர் இனப் பழங்குடியினரின் தலையைக் கொய்துவந்து மணம் செய்துகொள்ளும் வழக்கம் இருந்ததே அதுதான் காரணமா? அப்படியெனில் இன்று அவ்வழக்கம் இல்லாவிடினும் அந்தச் சொல் மட்டும் இன்னும் ஏன் புழக்கத்தில் இருக்கிறது?

என்ன அப்படி வலுத்த யோசனை? நிலவை எப்படி விழுங்குவது என்றா? திரும்பவும் ரலாவிடமிருந்து அந்தக் கேள்வியே வருகிறது.

ஏன் நிலவை விழுங்குவதைப் பற்றியே கேட்டுக்கொண்டிருக்கிறாய்?

யாருக்குத் தெரியும்? உங்களிடமும் யாராவது அதுபோல் பிரியன் கேட்டிருந்தால்?

பிரியனா? என்னிடமா? என்று சிரித்துவிட்டுக் கேட்கிறேன். பிரியன் என்றவுடன் ஓர் அய்யம். கேட்டால் தவறாக நினைத்துக்கொள்ள மாட்டாயே?

ரலா மனதைப் படித்ததுபோல் பளிச்சென்று கேட்கிறாள். பிரியன் மாத்தி பற்றித்தானே? இதழில் குறுநகை நெளிகிறது. நல்லவேளை இவள் தவறாக நினைக்கவில்லை. குறுநகையைத் தொடர்ந்து குறும்பும் வருகிறது. அது முருட் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ளப்

போகிறவர் கொள்ளவேண்டிய கவலை. இதில் உங்களுக்கு ஏன் ஆர்வம்?

தெரிந்துகொள்வது தவறா?

இல்லைதான். பிரியன் மாத்தி என்றால் முருட் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ளும் ஒருவர் சாகும்வரை அப்பெண்ணின் குடும்பத்துக்குப் பிரியன் கொடுத்துக்கொண்டே இருக்க வேண்டும் என்று வெளியில் இருப்பவர்கள் பேசிக்கொண்டிருப்பது எங்களுக்குத் தெரியும். ஆனால் எப்போதும் போலத் திருமணம் செய்யும்போது கொடுக்கவேண்டிய பிரியனைக் கொடுக்க இயலாதவர்கள் மணம் முடித்துவிட்டுப் பின்னர் கிடைக்கும்போது கொடுத்தால்போதும். அதை அய்ந்து, பத்து ஆண்டுகள் கழித்துப் பிள்ளைகள் பெற்ற பின்னரும் கொடுக்கலாம். ஆனால் அதற்காக இன்னொருமுறை கம்போங்கைக் கூட்டி விருந்து வைக்க வேண்டும். முருட் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ளும் ஆண் அப்பெண் குடும்பத்தோடே தங்கிக் கொள்வதாலும், இப்படி வசதி கிடைக்கும்போது மறுமுறை பிரியன் கொடுப்பதாலும் வெளியில் இருந்து பார்ப்பவர்களுக்கு அந்த ஆண் தான் சாகும்வரை அக்குடும்பத்துக்குப் பிரியன் கொடுத்துக் கொண்டே இருக்கவேண்டும் என்று தவறாக நினைத்துக்கொள்கிறார்கள். இத்தகவல் போதும்தானே என்று கேட்டுப் புன்னகைக்கிறாள்.

ஆமாம். உங்கள் பிரியனில் அப்படி என்ன கேட்பார்கள்?

அது கேட்கும் ஆணைப் பொறுத்தது.

சரி, உங்கள் வீட்டில் ஜோஸிடம் என்ன பிரியன் கேட்டிருக்கிறார்கள்?

ஓர் எருமை மாடும் ஒரு விருந்தும். ஏன் கேட்கிறீர்கள்?

இல்லை ஒருவேளை ஜோஸுக்கும் நிலவை உறிஞ்சவேண்டிய நிலை ஏற்பட்டிருக்குமோ என நினைத்தேன்.

இம்முறை வெகுநேரம் வாய்விட்டுச் சிரிக்கிறாள். சிரிக்கும்போது ரலாவின் இதழ்கள் மலர்ந்து சிரிக்கின்றன. ஓடையின் நீரோட்டம் போல் மெல்லிய தொனியில் சலசலக்கும் சிரிப்பு. இந்த முருட் இனப் பெண்களின் குரல் பேசும்போது மட்டுமல்ல சிரிக்கும்போதுகூட மென்மையாக இருக்கிறது. மனசுக்குள் இம்மென்சிரிப்பில் அப்படியே ஒரு கையள்ளிப் பருகத் துடிக்கும் ஒரு தவிப்பு.

ரலாவின் முகத்திலிருந்த பார்வையை வலுக்கட்டாயமாக வான் நோக்கித் திருப்புகிறேன். நிலவு இன்னும் நீந்திக்கொண்டு இருக்கிறது. யாருமறியாமல் வாயினால் மெல்ல உறிஞ்சிப் பார்க்கிறேன். காற்று மட்டுமே உள்நுழைகிறது.

கருப்பு முருட்

கால்கள் தயங்கி நிற்கின்றன. காலையில் குளிப்பதற்காக ஆற்றுக்

வந்திருக்கிறோம். வழியில் வண்ணத்துப் பூச்சிகளின் கூட்டம். அவ்வளவு அழகிய வண்ணத்துப் பூச்சிகள். இறக்கைகள் செங்குத்தாக மடங்கி நிமிர்ந்த நிலையில் அமர்ந்திருக்கின்றன. காண்பதற்கு மழைக்குப் பிந்தி மண்ணிலிருந்து முளைவிட்டிருக்கும் ஈரிலைத் தாவரங்களைப் போலக் காட்டி. இலைப்பச்சை நிறத்தில் உடல். கதிரொளியால் நீலம் கலந்த இளம்பச்சையில் மினுமினுக்கும் இறக்கைகள். அதன் விளிம்புகளை அலங்கரிக்கும் கருமை நிறம். இவற்றைத் தாண்டிச் செல்லுவதற்கே மனமில்லை. இருப்பினும் போக வேண்டுமே.

ஆற்றங்கரையை அடைந்தபோது அங்கே ரலா துவைத்து முடித்த துணிகளை மூங்கில் கூடையில் திணித்துக்கொண்டிருக்கிறாள். குளித்து முடித்த முகம் பளிச்சென்று இருக்கிறது. அரைக்கை பனியனும் சாரோங்கும் அணிந்திருக்கிறாள். துவட்டிய கூந்தலில் இன்னமும் பிரியாமல் தவிக்கும் ஈரம். அது ஒளியைச் சபித்துக்கொண்டிருக்கக் கூடும். ரலாவின் புன்னகை அன்புடன் எங்களை வரவேற்கிறது. ஜோஸ் ஆற்றைக் கண்டதுமே இங்கு குளித்து எத்தனை நாட்களாகிவிட்டன என்று ஆற்றுக்குள் பாய்ந்து நீச்சலைத் தொடங்கிவிடுகிறான். நீச்சல் தெரியாததால் கரையோரமாகக் குளிக்கவேண்டும். அதுவும் ரலா போனதும்தான் குளிக்க முடியும். அங்கிருந்த சிறு பாறையின் மீது அமர்ந்துகொள்கிறேன்.

நல்லவேளை ஆற்றுக்குள் நீங்கள் காலை வைக்கவில்லை. வைத்திருந்தால் முதலை உங்களைக் கடித்திருக்கும்.

முதலையா? இந்த ஆற்றுக்குள்ளா? கேலி செய்கிறாளோ? ஆனால் முகத்தில் அப்படியேதும் தெரியவில்லை. இயல்பாக இருக்கிறது. எதற்கும் ஆற்றில் காலை வைப்பதற்கு முன் முதலையைப் பற்றிக் கொஞ்சம் உறுதி செய்துகொள்வோம். ஆனால் நேரடியாகக் கேட்கத் தன்மானம் தடுக்கிறது. கேள்வியை மாற்றிக் கேட்போம்.

ஏன் அந்த முதலை உங்களைக் கடிக்காதோ?

கடிக்காது.

பதில் தீர்மானமாக வருகிறது. ஏன் கடிக்காது என்று அடுத்து வரப்போகும் கேள்வியை அறிந்துகொண்டது போலத் தொடர்ந்து சொல்லுகிறாள். ஏனென்றால் நான் முருட் இனப்பெண். அது எப்படி என்னைக் கடிக்கும்?

சிரிக்கிறேன். இது என்ன புதுக்கதை? முருட் என்றால் நான் கடிக்கமாட்டேன் என்று உங்களிடம் முதலை சொல்லியதா என்று சொன்னதும் முகத்தில் சற்றுத் தீவிரம் கூடுகிறது. புதுக்கதையெல்லாம் கிடையாது. எல்லாம் பழைய கதை. முதலை முருட்காரர்களைக் கடிக்கமாட்டேன் என்று சத்தியம் செய்து கொடுத்திருக்கிறது. அந்தக் கதை தெரியாதா உங்களுக்கு?

எதற்கெடுத்தாலும் கதைகளாக வருகிறது. இளம்கதிர்கள் வருடும் முகத்தைப் பார்த்தவாறே சொல்லுகிறேன். சரி அது என்ன கதை என்று சொல்லேன். ஒளியைக் குடித்திருக்கும் அம்முகம் நிலவாய் மாறுகிறது. கம்போங்காரர்களுக்குக் கதை சொல்லுவதென்றால் அவ்வளவு உவகை.

ரொம்ப காலத்துக்கு முன்னால் ஓர் ஆற்றில் முதலைக் கணவனும் முதலை மனைவியும் வசித்து வந்தார்களாம். முதன்முறையாக பெண் முதலை கருவுற்றிருந்தது. முட்டையிடும் காலம் நெருங்கியது. ஆனால் அப்பெண் முதலை முட்டைகளை வெளியேற்ற முடியாமல் சிரமப்பட்டது. அது தன் கணவனிடம் யாராவது ஒருவரை உதவிக்கு அழைத்து வருமாறு கூறியது. அந்த ஆற்றில் வேறு முதலைகள் கிடையாது. எனவே அந்த ஆண்முதலை உதவி தேடிக் கரைக்கு வருகிறது. அப்போது அங்கே ஒரேயொரு முருட் பெண்மணி மட்டும் நின்றுகொண்டிருப்பதைப் பார்க்கிறது. அவரிடம் சென்று நிலைமையைச் சொல்லி உதவி கேட்கிறது. அப்பெண்ணுக்கு முதலை மீது அச்சம். இருந்தாலும் ஒரு பெண் தவிப்பது மனசு கேட்கவில்லை. ஒத்துக்கொள்கிறார். அந்த ஆண் முதலை அப்பெண்ணிடம் தன் வாலை பிடித்துக்கொள்ளச் சொல்கிறது. அப்பெண்ணும் அப்படியே பிடித்துக் கொள்ள நீருக்குள் மூழ்கிய முதலை அப்பெண்ணை அழைத்துச் செல்கிறது. அங்கு சென்றதும் முருட் பெண் தனக்குத் தெரிந்த சில கைவைத்தியங்களைச் செய்து முட்டைகள் வெளியேற உதவுகிறார். இதனால் மகிழ்ச்சியடைந்த இரு முதலைகளுமே பெண்ணைத் திரும்பவும் கரைக்குக் கொண்டுவந்து விட்டுவிட்டு வரம் தருகின்றன.

முருட் இனத்தைச் சேர்ந்த ஆணோ பெண்ணோ யாராக இருந்தாலும் கால்களிலோ கைகளிலோ இரு முதலை உருவங்களைப் பச்சை குத்திக்கொள்ளுங்கள். அப்படிப் பச்சை குத்தியிருந்தால் அவர்களை முருட் என்று அடையாளம் கண்டுகொள்வோம். அவர்களை எந்த முதலைகளும் இனி கடிக்கமாட்டோம் என்று சொல்லிச் சென்றன. இப்போது புரிகிறதா முதலைகள் ஏன் முருட்காரர்களைக் கடிக்காது என்று?

எல்லாம் சரி. ஆனால் நீ பச்சை குத்தவில்லை. ஆனால் ஆற்றில் இறங்கிக் குளித்திருக்கிறாய். உன்னை ஏன் அந்த முதலை கடிக்கவில்லை?

ஆனால் என் அம்மா குத்தியிருக்கிறார்கள். நான் குழந்தையாய் இருக்கும்போதிலிருந்தே அவரோடு இந்த ஆற்றுக்கு வருகிறேன். அதனால் நான் முருட் மகள் என்று எல்லா முதலைகளுக்கும் தெரியும்.

நல்ல விளக்கம் என்று சொல்லிச் சிரித்தாலும் உள்ளுக்குள் இன்னும் அச்சம். உண்மையிலேயே இந்த ஆற்றில் முதலைகள் இருக்கின்றனவா? ஆற்றில் குளிப்பதே பெரும் சிக்கல். இதில் முதலை வேறு என்றால்?

ரலாவிடமே நேரில் கேட்டு விடலாம். ஆனால் வெட்கம் தடுக்கிறது. கேள்வியை மாற்று வழியில் அனுப்புவோம்.

இப்போது ஆற்றில் இறங்கினால் முதலை கடித்துவிடும் என்கிறாயா?

உடனே பதில் வரவில்லை. ரலாவின் அழகிய அல்லி வட்டம் ஒரு முறை விரிந்து குவிகிறது. ஒன்றும் சொல்லாமல் ஆற்றுநீரைப் பார்க்கிறாள். ஏதோ முணுமுணுப்பது போல் பாவனை செய்கிறாள். திரும்பிப் பார்த்துச் சொல்கிறாள். நான் முதலைகளிடம் சொல்லி விட்டேன். இனி உங்களை ஒன்றும் செய்யாது.

துணிகள் நிரம்பிய மூங்கில் கூடையைச் சுமந்துகொண்டு நடக்கத் தொடங்கிவிடுகிறாள். குழம்பித் தவிக்கிறேன். ரலா சொல்ல வருவது என்ன? இந்த ஆற்றில் முதலைகள் உண்டா? இல்லையா? திரும்பி ஜோஸைப் பார்க்கிறேன். அவருக்கென்ன? அய்யா உலகை மறந்து தூங்கிக் கொண்டிருக்கிறார். ஒருவேளை ஜோஸ் முருட் என்பதால் முதலை கடிக்காமல் இருக்கிறதா? இங்கொருவன் இப்படித் தத்தளிப்பது பற்றி அவருக்கு ஒரு கவலையும் இல்லை. ரலாவிடமே மீண்டும் பார்வையைத் திருப்புகிறேன். உரத்த குரலில் கேட்கிறேன். நிறத்தைப் பார்த்தாலே உங்கள் முதலைகள் இவன் முருட் இல்லை என்று கண்டுபிடித்து விடுமே?

ரலா நடந்து போய்க்கொண்டே இருக்கிறாள். திரும்பிப் பாராமலேயே குரல் மட்டும் வருகிறது. நீங்கள் யாரென்று அவற்றிடம் சொல்லி விட்டேன். எனவே இனி அவை உங்களைக் கடிக்கவே கடிக்காது.

அப்படியானால் உண்மையாகவே இந்த ஆற்றில் முதலைகள் இருக்கின்றன. முதலையைவிடக் கவலையானது கடிக்கிறது. திரும்பவும் கேட்கிறேன். அப்படி என்னதான் சொன்னாய்? கொஞ்சம் சொல்லி விட்டுப் போகக் கூடாதா?

உடனே பதில் வரவில்லை. மஞ்சள் நிறக்கால்கள் சற்றுத் தொலைவுக்கு நகர்ந்திருக்கின்றன. அவை நடந்துகொண்டிருக்கும் பாதையின் முன்பாக மீளவும் பச்சைநிற வண்ணத்துப் பூச்சிகளின் கூட்டம். ரலாவின் முகம் திரும்புகிறது. ஒய்யாரமாய் வருகிறது பதில்.

முருட் ஈத்தாம் என்று சொன்னேன்.

கருப்பு முருட். கருப்பாக இருப்பவன் எப்படி முருட் ஆகமுடியும்? கேள்வி உதடுவரை வந்துவிடுகிறது. ஆனால் கேட்கவில்லை. கேட்கவும் முடியவில்லை. திரும்பிப் பாராமல் ரலா செல்வதையே பார்த்துக் கொண்டிருக்கிறேன். அவ்வண்ணத்துப் பூச்சிகளின் தூரிகைகள் காற்றில் தீட்டும் பச்சைநிற ஓவியங்களுக்கு இடையே மஞ்சள் மலரைக் கண்ட உவகை.

ஒரு கரு நிறத்துளி இதைக் கெடுத்துவிடாதா ரலா?

தங்கும் நூறுக்கு மேல் அகவை கொண்ட தாத்தாவைப் பார்க்கப் போய்க் கொண்டிருக்கிறோம். இந்தக் கம்போங்கில் எல்லோருமே ஒருவருக்கு ஒருவர் உறவினர்களாக இருக்கிறார்கள். அந்தத் தாத்தா வேறொரு இடத்தில் வசிக்கிறார். அந்த இடத்தை நெருங்கச் செம்பகப் பூக்களின் மணம் காற்றில் இசையாய் கரைந்து வருகிறது. செம்பகப் பூக்கள் இசைக்குமா? அல்லது இசைதான் செம்பகமாய் மணக்குமா? அம்முதியவர் செம்பக மரத்தின் கீழுள்ள சிறு மூங்கில் மேடையில் அமர்ந்திருக்கிறார். அவருடைய கையில் நரம்பிசைக் கருவி இருக்கிறது. தளர்ந்த அவருடைய விரல்கள் அதைச் சுண்டிக்கொண்டிருக்கின்றன. செம்பகப் பூக்கள் இசைக்கும் கமுக்கம்.

அவ்விசைக்கருவி காட்சிக்கு சிறிய கிடாரைப் போல இருக்கிறது. மரத்தினால் செய்யப்பட்டிருக்கும் இக்கருவி சொந்தக் கைவினைப் பொருள். அதில் இரண்டே இரண்டு நரம்புகள் இருக்கின்றன. அவைதாம் காற்றை மென்மையாக மணக்கச் செய்துகொண்டிருக்கின்றன. எங்களைக் கண்டதும் வாசிப்பதை நிறுத்துகிறார். வயதைத் தோற்கடிக்கும் பார்வையின் தெளிவு. ஜோஸைப் பார்த்து இலேசாகத் தலையசைத்துவிட்டு தன் இடுங்கிய கண்களால் உற்றுநோக்குகிறார். அறிமுகப் படலம் தகோல் மொழியில் நிகழ்கிறது. அவருக்கு அறவே மலாய் தெரிந்திருக்கவில்லை. ஜோஸின் மொழிபெயர்ப்பின் வழிதான் உரையாடல். முதலில் அம்முதியவரின் பாதங்களைத் தொட்டு வணங்குகிறேன். அவருடைய பார்வையில் கனிவு பெருகுகிறது.

பெரியவர்களை வணங்கும் வழக்கம் எங்களைப் போல் உங்களிடத்தும் இருப்பது மகிழ்ச்சியாக இருக்கிறது.

மெல்லிய குரல் நெகிழ்ந்து வருகிறது. முதியவரை உற்று நோக்கு கிறேன். இவருக்கு அகவை நூறுக்கு மேல் இருக்க வாய்ப்பில்லை. ஆனால் நூறை நெருங்கிக் கொண்டிருக்க வாய்ப்புண்டு. தோல் முழுக்க வயோதிகத்தின் வரிகள். உடல் முழுக்கப் பச்சை குத்தியிருக்கிறார். அது முருட் கலாச்சாரத்தின் ஒரு பகுதி. ஆனால் ஜோஸ் போன்ற இளைய தலைமுறையினர் இதில் அவ்வளவாக ஆர்வம் காட்டுவதில்லை. தன் நரைத்த தலைமுடியை நீளமாக வளர்த்து அதைத் தோளின் இருபக்கமும் முன்புறமாகத் தொங்கவிட்டிருக்கிறார். இருகைகளிலும் தோள் பகுதியில் தொடங்கி மணிக்கட்டுவரை மூன்று நீள்கோடுகளாய் குத்தப்பட்டிருக்கும் பச்சையானது நரம்புகளைப் போல் தோற்றம் தருகிறது. அதைப்போல இரு தோள்பட்டையில் தொடங்கித் தொப்புள் அருகே முடிந்திருந்த இன்னதென்று அறிய இயலாத அலங்கார வரைகலையின் வடிவம். தொடைகளிலும் கெண்டைக்கால்களில்கூட பச்சையின் ஊடு முள் குத்திய வடிவங்கள். இம்முதியவரிடம் எப்படிப் பேச்சைத் தொடங்குவதென்றே தெரியவில்லை. உண்மையில் இவரிடம் தலை

...டையாடும் அவர்களுடைய பண்டைய கலாச்சாரம் குறித்து ...க விருப்பம். ஆனால் அவற்றின் சுவடையெல்லாம் மறந்து வாழவிரும்பும் ஜோஸ் போன்ற தலைமுறையினர் முன்பு அதைப்பற்றிக் கேட்பது முறையல்ல. ஆகவே பொதுவாகத் தொடங்குகிறேன். உங்கள் காலத்தைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்.

தன் இடுங்கிய கண்களால் சிலநொடிகள் ஆழமாகப் பார்க்கிறார். சில நொடிகள்தாம் அந்த ஆழம் அவருடைய நிலத்துக்குள் ஓர் ஊற்றை உடைத்துப் பொங்க வைக்கிறது.

எங்கள் காலமெல்லாம் ஒந்தோரோஸ், கோரம் இவர்கள் இரண்டு பேரோடு முடிந்துவிட்டது. இல்லையென்றால் உன்னைப் போன்ற அந்நியரெல்லாம் எங்கள் மண்ணில் வந்து இப்படிக் கேள்வி கேட்டுக் கொண்டிருக்க முடியுமா?

இக்கேள்வி வருத்தம் தரும் என்று கருதியோ என்னவோ ஜோஸ் மொழிபெயர்க்கச் சற்று தயங்குகிறான். எதையும் மறைக்க வேண்டாம் ஜோஸ். தாத்தா சொல்வதை அப்படியே சொல்லிவிடு என்று கேட்டுக் கொள்கிறேன். சொல்கிறான். இப்படிச் சொல்லிவிட்டு அம்முதியவர் மெலிதாகப் புன்னகைத்துக்கொண்டிருக்கிறார். அவருடைய கேள்வியை ஏற்றுக்கொண்டேன் என்பதை அதே புன்னகையால் தெரிவிக்கிறேன். ஆனாலும் அவர் குறிப்பிட்ட இரண்டுபேரும் யாரென்று அடையாளம் தெரியவில்லை. ஜோஸிடம் வினவ, அவர்கள் இருவரும் முறையே பிரித்தானிய, ஜப்பானியப் படைகளை எதிர்த்த விடுதலை வீரர்கள் என்ற தகவல் கிடைக்கிறது. முதியவர் தொடர்கிறார்.

இதில் கோரம் பிறவியிலேயே கண் பார்வையற்றவர். ஒரு முறை மூங்கில் காட்டில் அவர் தூங்கிக் கொண்டிருந்தார். அப்போது அங்கு வந்த எங்கள் கொற்றவை அவரிடம் என்னை நீ மணந்துகொள்கிறாயா? அப்படி மணந்துகொண்டால் உனக்கு எல்லா ஆற்றல்களையும் தருவேன் என்கிறாள். அப்படிக் கிடைத்த ஆற்றலினால்தான் அவரை ஜிப்புன்காரர்களாலும் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஒருமுறை அவருடைய கைகால்களைக் கட்டி கோணிக்குள் வைத்துத் திணித்துத் தண்ணீருக்குள் வீசி எறிந்துவிட்டுப் போய்விட்டார்கள் ஜிப்புன் காரர்கள். பிறகு அவர்கள் ஊருக்குத் திரும்பியபோது ஒரு கோப்பிக் கடையில் அதே கோரம் கோப்பி குடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து அப்படியே அசந்து போய்விட்டார்கள். எல்லாம் எங்கள் கொற்றவையின் ஆற்றல். இன்று இந்தச் சிறியமரம் அளவுக்குக்கூட வேண்டாம். மரத்தின் உரிபட்ட பட்டையளவுக்குக்கூட முருட்கள் வீரியற்றுப் போய்விட்டார்கள். காய்ந்து உலர்ந்துவிட்ட பட்டைகள்.

பேச்சை நிறுத்திவிட்டுக் கால்களைத் தடவி விட்டுக்கொள்கிறார். அதில் இரு முதலை உருவங்கள் பச்சை குத்தப்பட்டிருப்பது தெரிகிறது.

எல்லாம் அந்த வெள்ளைப் பிசாசுகள் இக்காட்டுக்குள் நுழைந்த நேரம். அப்புறம்தான் எல்லா அழிவுகளும் தொடங்கின. அவர்கள்தாம் எங்கள் காட்டுக்குள் நுழைந்து மரங்களையெல்லாம் வெட்டி இந்த ஈரமண்ணை வெளிச்சத்துக்குக் காட்டிக்கொடுத்தார்கள். அதுமட்டுமா? எங்கள் நிலத்தில் வாழ்வதற்கு எங்களுக்கே வரிகள் போட்டார்கள். நாங்கள் முன்பு கேள்விப்பட்டிராத வரிகள். அதிலே ஒரு வேடிக்கையைக் கேளேன். ஒரு குடும்பத்தில் இரு பிள்ளைகள் இருந்தால் அதில் ஒரு பிள்ளையை அவர்களுக்கு வேலை செய்ய அனுப்ப வேண்டும் என்றார்கள். யார் குடும்பத்துப் பிள்ளையை? ஒரு முருட் குடும்பத்துப் பிள்ளையை. முருட் வாள் என்ன கீரை வெட்டுகிற வாளா? ஒந்தோரோஸ் துடித்துப் போய்விட்டார். உடனே அந்த வெள்ளைப் பிசாசுகளுக்கு எதிராகப் போராட அழைப்பு விடுக்கிறார். தெனோம், கினிங்காவ், பென்சியாங்களில் இருந்து ஆயிரம் பேர் திரண்டோம். எல்லோரும் நேராகப் போய் வெள்ளையரின் அலுவலகங்களையெல்லாம் அடித்து உடைத்தோம். அவர்கள் நானூறு பேர். கையில் தீக்கக்கும் துப்பாக்கிகளை வைத்திருந்தார்கள். இருந்தென்ன, முருட்களின் தாக்குதலைக் கண்டு அச்சமடைந்துவிட்டார்கள். எங்களிடம் இருந்ததெல்லாம் இந்த சும்பித்தான், வாள், ஈட்டிதான். அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. சரி சமாதானமாய்ப் போவோம். எல்லோரும் 'ருண்டும்' என்ற இடத்துக்கு வாருங்கள் பேசித் தீர்த்துக் கொள்ளலாம் என்று அழைத்தார்கள் அந்தச் சதிகாரர்கள். நாங்கள் அப்போதே இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது என்று அய்யம் கொண்டோம். ஆகவே போகவில்லை. ஆனால் வெள்ளை மனசுக்காரர் ஒந்தோரோஸ் நம்பிப் போனார். அப்படிப் போன எல்லோரையும் சுற்றி வளைத்துப் பிடித்து விட்டனர்.

முதியவர் சற்று நேரம் பேச்சை நிறுத்துகிறார். அந்நினைவு அவரைக் கவ்வியிருக்கிறது. பிறகு தணிந்த குரலில் கேட்கிறார்.

நீ சிலாங்கிட் ஆற்றுப் பக்கம் போயிருக்கிறாயா?

இல்லை. ஏன் கேட்கிறீர்கள்?

எப்போதாவது போனால் அந்த ஆற்றில் ஓடும் நீரின் ஓசையைச் சற்று உற்றுக்கேள். என்னைவிட அதிகமான கதைகளை அது உனக்குச் சொல்லும்.

தயக்கமான குரலில் கேட்கிறேன். சிலாங்கிட் ஆற்றிலா? ஏன்?

அவருடைய ஆழமான பார்வை கண்களுக்குள் ஊடுருவுகிறது ஏனென்றால் அங்குத்தான் அவர்கள் ஒந்தோரோசைக் கொன்று போட்டார்கள்.

வெகுநேரத்துக்கு அவரால் எதுவும் பேசமுடியவில்லை. நாங்கள் இருவரும் கரையும் நொடிகளோடு காத்திருக்கிறோம். காற்றும்

...காமல் வீசிக்கொண்டிருக்கிறது. அம்முதியவரே மெல்ல மீண்டு ...கிறார். அப்போது அந்த வீரனுக்கு வயசு என்ன தெரியுமா? வெறும் ...துதான்.

அப்புறம் என்ன நடந்தது?

அவர்கள் நினைத்தது போல நடந்தது. எந்த வெள்ளையர்களை எதிர்த்து எங்கள் வீரத்தைக் காட்டினோமோ அவர்களிடமே எங்கள் வீரத்தை விற்கத் தொடங்கினோம். அவர்கள் எங்கள் வீரத்தைப் பார்த்து பலரை அவர்களைப் பாதுகாக்கும் போலீஸ் பணியில் அமர்த்தி விட்டார்கள். ஒரு முருட்டின் வாள் அப்போதுதான் முதன்முதலாக முழங்கத் தொடங்கியது. இப்போது அது துருப்பிடித்தே போய்விட்டது என்று சொல்லும்போதே அவருடைய குரல் அப்படியே மங்கிவிடுகிறது.

உங்கள் காலத்து வீரவாட்கள் இப்போது எங்கிருக்கின்றன? அவற்றைப் பார்க்க முடியுமா?

முதலில் எதுவும் பேசாமல் வெறுமனே புன்னகைக்கிறார். பிறகு ஆட்காட்டி விரலை மட்டும் தரையை நோக்கிக் கவிழ்த்துக் காட்டி எல்லாம் இந்த மண்ணுக்குள்ளே உறங்கிக்கொண்டிருக்கின்றன என்று சொன்னவர் ஜோஸ் பக்கமாகத் திரும்புகிறார். இந்த இளவட்டப் பையன்கள் எல்லாம் அவ்வாளைக் கண்டுபிடித்துவிட்டால் எல்லா மந்திர ஆற்றலையும் பெற்றுவிடலாம் என்ற நினைப்பில் காட்டுக்குள் தோண்டித் தேடிப்பார்ப்பதெல்லாம் எனக்குத் தெரியாது என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் கையில் அது எப்படி அகப்படும் என்று சிரிக்கிறார்.

இதைக் கேட்ட ஜோஸ் கூச்சத்துடன் சிரிக்க முதியவரிடம் கேட்கிறேன். ஏன் இப்படிச் சொல்கிறீர்கள்? இவர்களும் முருட் மக்கள்தானே?

இருக்கலாம். ஆனால் இவர்கள் இப்போது வணங்குவது எங்கள் கொற்றவையை அல்ல. எங்கள் கொற்றவை இந்தக் காட்டுக்குள், மரங்களுக்குள் வாழ்பவள். ஆனால் இவர்கள் வணங்கிவரும் கடவுள் இந்த நிலத்தில் வசிப்பவர் இல்லை. அவருக்கும் இக்காட்டுக்கும் தொடர்பே இல்லாமல் அங்கேயல்லவா இருக்கிறார் என்று சொல்லி விட்டு கழுத்தை நிமிர்த்தி அண்ணாந்து தலையால் வான்நோக்கிக் காட்டுகிறார். அவரது தொண்டையில் விண்மீன் வடிவப் பச்சை வரையப்பட்டிருப்பது தெளிவாகத் தெரிகிறது. ஜோஸிடம் இருந்து இறுக்கும் சிரிப்புத்தான் பதிலாக வருகிறது. ஆனால் முதியவர் குனிந்து கனிவுடன் ஜோஸின் தலையைத் தடவிக் கொடுத்தபடி சொல்கிறார்.

ஆனாலும் நம் கொற்றவை உங்களைக் கைவிடமாட்டாள் மக்களே.

முதியவர் அருகில் கிடத்தியிருந்த நரம்பிசைக் கருவியை மீண்டும் கையில் எடுக்கிறார். அதை ஜோஸின் கையில் கொடுக்கிறார். இந்தத்

தங்குங்'கை எனக்காகக் கொஞ்சம் இசைத்துக் காட்டு. மனம் கொஞ்சம் இலகுவாக வேண்டும் என்று கூறிவிட்டு இப்பக்கமாகத் திரும்புகிறார். இந்தப் பையனின் கேள்விகளால் என் வயது நிறையவே குறைந்து போய்விட்டது. மீண்டும் வயோதிகத்துக்குத் திரும்ப வேண்டுமல்லவா? புன்னகைக்கிறார்.

'தங்குங்' கை வாங்கிக்கொண்ட ஜோஸ் நரம்புகளை மீட்டத் தொடங்குகிறான். தேர்ந்த இசைவாணன். இசை கசிந்து பெருகத் தொடங்குகிறது. முதியவர் இமைகளை மூடிக்கொள்கிறார்.

தங்குங்கில் இருந்து வழியும் இசையை மென்மையாக ஏந்திக் கொண்ட காற்று கானகத்துக்குள் நுழைகிறது. அக்காற்றை ஆரத்தழுவி வரவேற்கின்றன மரங்கள். தாகித்திருந்த இலைகளின் நரம்புகள் தொல் இசையைக் குடித்துக் கிளைகள் தண்டுகள் வழியே வேருக்கு அனுப்பி வைக்கின்றன. வேர்கள் தம் விரல்களை ஆழமாய்ச் செலுத்துகின்றன. அவை விரைந்து மண்ணுக்குள் புதையுண்டு உறங்கிக்கொண்டிருக்கும் பழைய முருட் வாட்களை ஆதூரத்துடன் பற்றிப் படர்ந்து இறுக்குகின்றன. அரவணைப்பின் முத்தச்சிலிர்ப்பு. முதன்முறையாக அவ்வாளிலிருந்து குருதிக்கு மாற்றாக நீர்த்துளிகளின் சொட்டுதல். முதியவர் கண்களை துடைத்துக்கொள்கிறார்.

அக்கண்ணீரைப் பார்த்ததும் ஜோஸின் இசைத்தல் நின்றுவிடுகிறது. பதற்றத்துடன் முதியவரின் கரங்களை ஜோஸின் கரங்கள் தாவிப் பற்றிக் கொள்கின்றன. மரம் மிதமான காற்றால் அசைகிறது. சில இலைகள் உதிர்கின்றன. அதில் ஓர் இலை அவர்கள் இருவருக்கும் இடையே வீழ்கிறது. அந்த இலையைக் கையில் எடுத்துக்கொண்ட முதியவர் அதைச் சற்று நேரம் உற்றுப்பார்க்கிறார். பிறகு அண்ணாந்து மரத்தை ஒருமுறை பார்க்கிறார். பிறகு ஜோஸிடம் சொல்கிறார்.

நம் கொற்றவை உங்கள் தலைமுறைக்குச் சொல்லும் செய்தி இதுதான்.

ஜோஸின் விழிகள் புரியாது பார்க்கின்றன. அவரது உதடுகளில் இருந்து பழுத்த சொற்கள் மெல்ல உதிர்கின்றன.

மரம் எவ்வளவு உயரத்துக்குச் சென்றாலும் இறுதியில் இலைகள் வேருக்குத்தான் வந்தாகவேண்டும்.

**போர் நடனம்**

இரவு தொடங்கியதும் விருந்து தொடங்கவிருக்கிறது. இவ்வளவு சிறப்பாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்குமென நினைக்கவேயில்லை. இரு நடன நிகழ்ச்சிகள் வேறு உண்டாம். ஜோஸ் பாரம்பரிய நடனக் கலைஞன் என்பது இப்போதுதான் தெரியவருகிறது. நடன உடையில் தயாராகிக்கொண்டிருக்கும் ஜோஸைப் பார்க்கிறேன். மேலே அந்தப்

புப்புத்துல் மரவுரி. இமே தொடையோடு நின்றுவிட்ட கால்சட்டை போன்ற இறுக்கமான ஆடை. இடையில் கோவணம் கட்டியது போல் முன்னும் பின்னுமாகச் சாண் அகலத்தில் சிவப்பு நிறத்துணி ஏறக் குறைய இருமுழ நீளத்துக்குத் தொங்கிக்கொண்டிருக்கிறது. துப்பி சினுவாதனை எடுத்துத் தலையில் பொருத்த அது தளர்வாக இருக்கிறது. அதை இறுக்கமாக்கிக் கொள்ள துணியாலான பட்டையை எடுத்து இறுக்கிக் கட்டிக்கொள்கிறான். இப்போது ஜோஸ் பார்ப்பதற்குப் பண்டைய முருட் வீரனாக இருக்கிறான். முன்புறம் செருகப்பட்டி ருக்கும் துவோவ் இறகுகளும் பின்புறத்தில் செருகப்பட்டிருந்த செந்நிற இறகுகளும் அத்தலைப்பாகைக்கு நேர்த்தியைத் தருகின்றன. விருந்தைத் தொடங்கலாமா? கேட்டபடியே அறைக்குள் நுழைகிறார் ஜோஸின் தந்தை.

வெளியே வந்தபோது கூடத்தில் கூட்டம் நிரம்பியிருக்கிறது. கூடத்தில்தான் விருந்து ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அனைவருக்கும் ஜோஸின் துவான் என்று அறிமுகப்படுத்தி வைக்கப்படுகிறேன். அவர்கள் புன்சிரிப்பைப் பரிசளிக்கின்றனர். இப்படியொரு சிறப்பான விருந்தளிக்கும் அளவுக்கா நம் நட்புக்கு மதிப்பு கொடுத்திருக்கிறா ஜோஸ்? மனசு குழைந்து நெகிழ்கிறது. ஜோஸின் கைகளை அழுத்திப் பிடித்துக்கொள்கிறேன். புரிந்துகொண்டது போல அக்கரங்கள் தோளைத் தட்டிக்கொடுக்கின்றன.

கூடத்தின் ஒரு பகுதியில் வட்டமாக அமர்ந்துகொள்கிறோம். நடுவில் தஜாவ் எனப்படும் ஓரடிக்கும் உயரமான களிமண் குடுவை வைக்கப்பட்டிருக்கிறது. இது தப்பாய் குடுவை. அக்குடுவையின் அகன்ற வாய்ப்பகுதிக்குள் மூங்கில் குழல் செருகி வைக்கப்பட்டிருக் கிறது. அதனைக் கொண்டுதான் அரிசித்தேறலை அனைவரும் உறிஞ்சி குடிப்பர். ஒருவர் குடித்து முடித்ததும் மற்றொருவரென அது சுற்றில் வரும். கூடத்தின் மறுபுறத்தில் நடன நிகழ்ச்சி. இசைக் கலைஞர்கள் வரிசையாக அமர்ந்திருக்கின்றனர். ஒரு மூங்கில் கழியில் இரு பெரிய வட்டவடிவத் தட்டுகள் தொங்கிக் கொண்டிருக்கின்றன. முதிர் பெண்கள் அதை வாசிக்க அமர்கின்றனர். அதன் மையம் குமிழ் போன்று வீங்கிய வடிவத்தில் இருக்கிறது. அதுதான் கோங். மற்றவர் கைகளில் ஜால்ரா போன்ற பெரிய அளவிலான இசைக் கருவிகள் இருக்கின்றன. பெயர் தெரியவில்லை. கோங்க் வாசிப்பவர்கள் சிறிய மரத் தடியினால் அதைத் தட்டி இசைக்கத் தொடங்கினர். அந்த ஜால்ராக்களும் இணைந்துகொள்கின்றன. நடனம் தொடங்குகிறது.

இதுதான் எங்கள் போர் நடனம் என்கிறார் அருகில் அமர்ந்திருந்த ஜோஸின் தந்தை. ஜோஸுடன் இன்னும் மூன்று பேர் அதே ஆடை அலங்காரத்தோடு ஆடத்தொடங்குகின்றனர். அவர்கள் கேடயம் போன்ற ஒன்றை ஒரு கையில் பிடித்திருக்கின்றனர். நீள் செவ்வக

வடிவில் மரத்தால் செய்யப்பட்டிருந்த அதன் இரு முனைகளும் முக்கோண வடிவில் கூராக இருக்கின்றன. அக்கேடயத்தின் நடுவே சில கோட்டோவிய வடிவங்கள் தீட்டப்பட்டிருக்கின்றன. மறுகையில் ஓர் ஈட்டியைப் பிடித்திருக்கின்றனர். முந்தைய தலைவெட்டிப் போரின் நவீனவடிவம்தான் இந்நடனமெனத் தொடர்ந்து விளக்கிக் கொண்டிருக்கிறார் ஜோஸின் தந்தை. ஒரு குழுவாகச் சென்று எதிரிகளின் தலைகளைக் கொய்துவரும் வீரர்கள் ஆடும் நடனம் இது. முன்பு நடத்தப்பட்ட வெற்றி நடனத்தில் இக்கேடயங்களுக்குப் பதிலாக வெட்டப்பட்ட தலைகள் இருந்திருக்கலாம். நடனக்கலைஞர்கள் கைகளில் ஈட்டியோடும் கேடயத்தோடும் அமர்ந்து, எழுந்து, பதுங்கிப் பாய்ந்து போர் புரிவதைப் போலவே நடனமாடிக்கொண்டிருக்கையில் அருகில் அமர்ந்திருப்பவர் தப்பாய் அருந்தும்படி அழைக்கிறார்.

விருந்து தொடங்கியிருப்பதைக் கவனிக்கிறேன். நிலைமை சிக்கலாகிறது. மதுவருந்தும் பழக்கமில்லாததால் அவர் தப்பாய் அருந்த அழைத்ததும் தயக்கமாகிறது. இதனாலேயே கடசன் நண்பர்கள் நடத்தும் பல தப்பாய் விருந்துகளைத் தவிர்த்திருக்கிறேன். ஆனால் இங்கோ முதன்மை விருந்தினர். இவ்விருந்தில் இதைப் பருகாவிட்டால் மரியாதை குறைவு ஆகிவிடும். என்ன செய்வது? யோசித்துக் கொண்டிருக்கும்போது ஜோஸின் தந்தை உதவிக்கு வருகிறார். இதெல்லாம் துவானுக்குப் பழக்கம் இல்லை. ஜோஸ் ஏற்கனவே என்னிடம் சொல்லியிருக்கிறார். துவானை வற்புறுத்த வேண்டாம் என்று அவர் சொல்லியதும் தப்பாய் சுற்று அடுத்தவருக்குத் தாவ அவர் அக்குழலால் உறிஞ்சத் தொடங்குகிறார். ஜோஸின் தந்தை கேட்கிறார். பன்றி இறைச்சி சாப்பிடுவீர்கள் அல்லவா? சாப்பிடுவேன் என்றதும் இறைச்சி வறுவல்களைக் கொண்ட தட்டு வைக்கப்படுகிறது. எடுத்துக் கொறிக்கிறேன்.

இப்போது அடுத்த நடனம். நடனத்தின் பெயர் அங்கலாங். இது பெண்களின் நடனம். முன்பு தலைகொய்து திரும்பிய வீரர்களுக்கு பெண்கள் அளித்த வரவேற்பு நடனம். நடனமாட வந்த நான்கு பெண்களுள் ரலாவும் ஜோஸுடைய தூனாங்கும் அடக்கம். கருப்பு முருட்டைப் பார்த்ததும் பிறை இதழ் நிலவாகி மீளவும் பிறையாகிறது. இதர நடனமணிகளைப் போலவே ரலாவுக்கும் கருப்புநிற ஆடை. கீழே முழங்காலுக்கு மேல் நின்றுவிட்ட இறுக்கமான அரைப்பாவாடை. இவ்விரு ஆடைகளும் முழுக்க மணிகளால் அலங்கரிக்கப்பட்டு பின்னல் வேலைகளாலும் நிறைந்திருக்கின்றன. இடுப்பில் பழைய வெள்ளி நாணயங்களாலான ஒரு வார்ப் பட்டி. அதற்குக் கீழே தனியாக சிவப்பு, மஞ்சள், நீல நிறங்களாலான மணிவரிசைகளில் தளர்வாக இன்னொரு அணிகலன் தொங்கிக் கொண்டிருக்கிறது. நெற்றியில் படுமாறு தலையைச் சுற்றிலும் மூன்று நெருக்கமான வரிசைகளாகச் செந்நிற மணிகளைக் கோத்துக் கட்டியிருக்கின்றனர். தலையில் பகட்டுக்கோழியின்

முடிகள் செருகப்பட்ட தலையலங்காரம். இவ்வளவு துல்லியமாக இந்த அலங்காரங்களைக் கவனித்துச் சொல்ல முடிவதற்கு ரலா இம்முறை அணிந்திருப்பதுதான் காரணம்.

அவர்கள் அனைவரும் இரு கைகளையும் முழுவதுமாகப் பக்க வாட்டில் விரைத்து நீட்டியபடி அசைத்து ஆடத்தொடங்குகிறார்கள். கைகளின் இரு மணிக்கட்டுகளும் கையோடு ஒட்டாமல் தனியே இசைச்சேர்ப்பச் சுழன்று ஆடுகின்றன. உடலும் அச்சுழற்சிக்கேற்ப நேர்த்தியாக அசைந்தாடுகிறது. ரலாவின் கண்கள் மட்டும் கருப்பு முருட்டை நோக்கும்பொதெல்லாம் புன்னகையை மலர்த்தத் தவற வில்லை. பார்வையாளர் அனைவருமே நெகிழ்வான மனநிலையில் இருக்கின்றனர். நடனம் முடிகிறது. ஆடிய பெண்கள் நெருங்கி வருகின்றனர். எப்படி இருந்தது நடனம்?

தேவதைகளின் நடனம்போல் இருந்தது என்கிறேன். ஜோஸின் தானாங் மட்டும் புன்னகையோடு கேட்கிறார். தேவதைகளா? இல்லை தேவதையா? ரலாவைத் தவிர மற்ற மூவரும் சிரிக்கின்றனர். தொடர்ந்து அவர்கள் ரலாவின் காதுக்குள் ஏதோ கிசுகிசுக்கின்றனர். அவர்களிடம் இப்போது ரலா காட்டுவது பொய்க் கோபம். அவர்கள் என்ன சொல்கிறார்கள்? ரலாவிடம் கேட்கிறேன்.

நீங்கள் தேவதை என்று சொன்னதற்கு இவர்கள் கேலி செய்கிறார்கள்.

எல்லோரையும் சேர்த்துத்தானே சொன்னேன்.

இருக்கலாம். ஆனால் இவர்கள் என்னைத்தான் சொன்னீர்கள் என்கிறார்கள்.

அப்படிச் சொன்னாலும் தப்பில்லைதானே?

ரலா பதில் சொல்லவில்லை. சில நொடிகள் தலைகுனிந்தபடியே அமர்ந்திருந்து பின் அவர்களோடு எழுந்து செல்கிறாள். தலை ஒரு முறை திரும்பிப் பார்க்கிறது. பிறகு நாணத்துடன் நகர்வு. உணவு தொடங்குகிறது.

எல்லோரும் வட்டமாய் அமர்ந்துகொண்டிருக்கிறோம். நடுவில் உணவு வகைகள் இருக்கின்றன. மூங்கில் குழாய்களுக்குள் வைத்து சமைக்கப்பட்டிருந்த மலைநெல்லின் கைக்குத்தலரிசிச் சோறு மணக் கிறது. பச்சை மூங்கில் கணுக்கணுவாய் வெட்டப்பட்டு குவளைகளாக ஆக்கப்பட்டிருக்கின்றன. மரவள்ளிக்கிழங்கு இனிப்புக்கஞ்சியும் கூடவே மீன்தெளிவும் இருக்கிறது. சோயாச் சாற்றில் சமைக்கப்பட்ட பன்றி இறைச்சி மற்றும் ஏற்கனவே சுவைத்த பன்றி இறைச்சியோடு உப்புக்கண்டத்தில் ஊறுகாய் போல ஒன்றும் இருக்கிறது. காடியில் ஊறவைத்த அன்னாசியும் வெள்ளரிப்பச்சடியும் இருக்கின்றன. உணவைச் சுவைத்துச் சாப்பிட்டு முடிக்கிறேன். எல்லோரும் இன்னும் கொண்டாட்டத்தில் மிதந்துகொண்டிருக்கின்றனர். தப்பாய் மயக்கம்.

ஜோஸ் உரத்தகுரலில் ஒரு பாடலைப் பாடிக்கொண்டிருக்கிறான். எல்லோருமே வேறு உலகத்துக்குள் நுழைவு. விருந்தினரைத் தற்காலிகமாக மறந்தது நன்மை.

வீட்டைவிட்டுக் கீழிறங்கி வருகிறேன். வெளியே மங்கியதொரு நிலவு. அருகிலிருந்த மூங்கில் மேடையொன்றில் அமர்கிறேன். மேகத்திலிருந்து நிலவு மீண்டு வெளியே வருகிறது.

தப்பாய் அருந்த மாட்டீர்களோ?

ரலாவின் குரல்.

சிரித்தவாறே தலையாட்டிக்கொண்டு அமர சற்று நகர்ந்து இடம் தருகிறேன். அமர்ந்ததும் கேட்கிறேன். நீ அருந்தவில்லையா?

கொஞ்சம்.

அது ஏன் கொஞ்சம்?

நீங்கள் வெளியே வந்ததைப் பார்த்தேன். வந்துவிட்டேன்.

ஓ... நான்தான் தொந்தரவு செய்து விட்டேனோ?

ஆம் என்று தலை ஆடுகிறது. ஒரு கவர்ந்திழுக்கும் புன்னகை. இன்னமும் அந்த நடன உடை களையப்படவில்லை. கன்னங்களில் பூசப்பட்டிருக்கும் செந்நிறப்பொடி நிலவொளியிலும் தெரிகிறது. அந்த அல்லி வட்டத்தில் பூசப்பட்டிருக்கும் அடர் செந்நிற உதட்டுச்சாயம் நெற்றியில் கட்டப்பட்டிருந்த அதேநிற மணிகளுக்கு வெகுபொருத்தம். தலைமுடி படிய இழுத்து வாரி சீவப்பட்டுப் பின்புறமாய் முடியப்பட்டிருக்கிறது. அதன்மேல் பூக்கள் அலங்காரம். அதற்கும் மேல் பகட்டுக்கோழியின் இறகுகள். மொத்தத்தில் நிலவொளியில் மிளிரும் மற்றொரு நிலா. மிளிரும் முகத்தையே பார்த்துக்கொண்டிருக்கிறேன். கண்கள் நகர மறுக்கின்றன. நாணத்துடன் ரலாவின் பார்வை தாழ்கிறது. உரையாடு, உரையாடு என உதடு தவிக்கின்றது.

உன் குரல் மிகவும் மிருது. நேற்றைய அந்த மலைச்சாரல் பாடல் இன்னமும் என் காதுக்குள் இருக்கிறது. அதை மீண்டும் பாடமுடியுமா?

நிமிர்ந்த ரலாவிடமிருந்து பாடலைப் போலவே சொற்கள். எங்கள் மொழிப்பாடல் அல்லவா அது? உங்களுக்கு எப்படிப் புரிந்தது?

காற்றுக்கு நாடும் காடும் இல்லை. இனிமைதானே பாடலின் மொழி.

பதில் அமைதிக்குள் முடங்கிக்கொள்கிறது. ஆனால் மொழி காற்றை உரசத் தொடங்குகிறது. குழல் இனிது யாழ் இனிது என்பர் ரலாவின் குரல் இனிமை கேளாதார். இசைக் கருவிகளைத் தொலைத்த அக்குரல் காற்றில் தன்னந்தனியே தன் பயணத்தைத் தொடங்கி விடுகிறது. மொழி, இனம், நாடு என மானுடம் விதித்திருந்த எல்லைகள் பொடியாய் உதிர்கின்றன. ஒன்றன் பின் ஒன்றாய் பாடல்கள் தொடர்ந்து

கின்றன. நிலவின் குளிர்மை அப்பாடலின் மீது தொடர்ந்து கொண்டிருக்கிறது. குளிர்மை கூடி ஒரு மாபெரும் பனித் துளிக்குள்ளே அமர்ந்திருக்கிறோம். இமைகள் மூடிக்கிடக்கின்றன. வாயும் முடங்கிக் கிடக்கிறது. செவிவழி மட்டுமே சுவாசம். இது என்ன சுவாசத்தில் கோளாறு? ஓ... ரலாவின் கடைசிப் பாடல் முடிந்துவிட்டது. இதுவரை நாங்கள் வசித்திருந்த பனிக்கோளம் உடைந்துவிடுகிறது. அமர்ந்திருந்த மூங்கில் பலகையெங்கும் ஈரப் பனித்துளியின் பூக்கள். உடலில் சில்லிப்பு. பின்னிரவு ஆகிவிட்டதென புரிகிறது.

பிறகுதான் கவனிக்கிறோம். எங்களைச் சுற்றி ரலாவின் தமக்கையும் தோழிகளும் அமர்ந்திருக்கின்றனர். அவர்களுடைய புன்னகையில் கேலியின் பிம்பம். ரலாவுக்கு வெட்கமாகி விடுகிறது. அவர்கள் புறப்பட எழுகின்றனர். ரலாவும் புறப்படுகிறாள். பார்வையிலேயே விடைபெறுகிறாள். சரிந்திறங்கும் பாதையில் அவர்களின் பாத அணி வகுப்பு தொடர்ந்து கொண்டிருக்கிறது. கடைசி பாதம் ரலாவுடையது. திரும்பிப் பார்க்கும் பார்வைகள். தயங்கி நடக்கும் பாதங்கள். தயங்கிய பாதங்கள் சட்டெடன நிற்கின்றன. திரும்புகின்றன. ஓடி வருகின்றன. மூச்சு இலேசாக இரைக்கிறது. என்ன ஆச்சு? தன் தலையலங்காரத்தில் இருந்து பகட்டுக்கோழியின் இறகொன்றை எடுத்து அக்கரம் நீட்டு கிறது. யாதொரு சொல்லும் இல்லை. பாதங்கள் திரும்புகின்றன. விறுவிறுவென ஓடுகின்றன. மறைகின்றன.

நிகழ்வின் பொருள் ஒன்றும் விளங்கவில்லை. கொடுத்துவிட்டுச் சென்ற பகட்டுக்கோழியின் இறகை நிலவின் ஒளி வருடுகிறது. இறகின் ஒரு பக்கமாக அடியிலிருந்து நுனிவரை கருநிற வட்டக்கண்கள் ஒன்றின் மீது ஒன்றாக அடுக்கப்பட்டிருக்கின்றன. விளிம்புகளில் கரும்புள்ளியின் அடர்த்தி. எதிர்ப்பக்கத்திலோ கருப்பு வெள்ளையில் நெளிநெளியாய் வரிகள் அவ்வட்டக்கண்களைப் போலவே ஒன்றின் மீது ஒன்றாக அடுக்கம். இறகினை விரல்கள் மென்மையாய் வருட முன்னரே வருடிக்கொண்டிருந்த நிலவொளி ஒதுங்கிக்கொள்கிறது. வட்டக் கண்கள் அனைத்தும் ஒன்றுகூடி இரண்டே இரண்டு கண்களாக மாறுகின்றன. அவ்விரு கண்களும் இடுங்கியதுபோலப் பார்க்கின்றன. ரலாவின் கண்கள்.

நிமிர்ந்து அவர்கள் சென்ற பாதையைப் பார்க்க, அவர்கள் மறைந்திருந்தனர். வானிலிருந்த நிலவும் மறைந்து விட்டிருந்தது. ஒருவேளை அதை விழுங்கிவிட்டேனோ?

**அன்பின் பிணம்**

காலையிலேயே இலேசாகத் தூறிக்கொண்டிருக்கிறது. ஜோஸ் கண் விழிக்கவில்லை. இரவின் கொண்டாட்டம் எழவிடவில்லை. சாரலின்

இதம் நேற்றைய இரவின் நினைவை மீட்டு வருகிறது. பகட்டுக் கோழியின் இறகை எடுக்கிறேன். ஒரு பக்கம் புருவங்களும் மறுபக்கம் கண்களுமாய் ரலாவின் பார்வை. இதைக் கொடுத்துவிட்டுச் சென்ற நிகழ்வின் கமுக்கம் இந்த இறகில் தீட்டப்பட்டிருக்கிறது. இம்மொழியின் எழுத்துருக்களை எத்தனைமுறை வாசிக்க முயன்றாலும் எப்போதும் மூன்றெழுத்து கொண்ட அந்த ஒற்றைச் சொல்லிலேயே அது வந்துமுடிகிறது.

அறைக்கதவு தட்டப்படுகிறது. ஜோஸினுடைய தாய் தேநீர் கொண்டு வந்து தருகிறார். எழுந்து தேநீரை வாங்கிக்கொண்ட ஜோஸிடம் ஏதோ செய்தியைச் சொல்லுகிறார். ஜோஸின் முகம் மாறுகிறது. அவர் சென்றபிறகு என்னவென்று விசாரிக்கிறேன். அவன் அண்ணனிடமிருந்து செய்தி வந்திருக்கிறதாம். இன்றே புறப்படவேண்டுமாம். திட்டப்படி நாளைதான் பயணம். ஆனால் ஏதோ அவசரம் என்று ஜோஸ் அண்ணன் சொல்லியனுப்பியிருக்கிறார்.

இதைவிட்டால் இன்னும் பத்துநாள் ஆகும். இருந்துவிட்டுப் போகிறாயா கவான்?

உடனடியாக ஒன்றும் சொல்லவில்லை. விருப்பம்தான். விட்டால் வாழ்நாள் முழுக்க இருக்கவும் விருப்பம்தான். அருகில் இருக்கும் இறகின் மீது பார்வை பதிகிறது. ஜோஸின் கண்களும் அதன் மீது பதிகின்றன. பார்த்துக்கொண்டே தேநீரை அருந்துகிறான். இரண்டு மிடறு அருந்திய பின் சொற்கள் வருகின்றன.

ரலாவுக்காக நான் மன்னிப்பு கோருகிறேன் கவான்.

நிமிர்ந்து பார்க்கிறேன். எதற்காக ஜோஸ்?

ஒரு சின்ன விளையாட்டு. என்னாலும் என் தூனாங்காலும் தொடங்கி வைக்கப்பட்ட விளையாட்டு. இவ்வளவு தீவிரமாய் ரலாவை உருமாற்றும் என நாங்கள் எதிர்பார்க்கவில்லை என்றவன் மீண்டுமொரு மிடறு தேநீரை அருந்திவிட்டுத் தொடர்கிறான். நேற்றிரவு ரலா உன்னிடம் பாடிக்கொண்டிருந்த பாடல்கள் அனைத்துமே காதல் பாடல்கள். அவை வெறும் பாடல்கள் மட்டுமல்ல, கோரிக்கைகள்.

இதற்கு மன்னிப்பு கோர வேண்டிய அவசியம் என்ன இருக்கிறது ஜோஸ்?

முதன்முதலில் ரலா குறித்து என் தூனாங் எழுதிய கடிதத்தை உன்னிடம் குறிப்பிடும்போது உன்னிடம் மென்அசைவுகூட இல்லை. ஆனால் இங்கு வந்தபிறகு நடக்கும் நிகழ்வுகள் உன் நீரோட்டத்தைத் தடுத்திருக்கின்றன கவான். அதற்காக மன்னிப்புக் கோரினேன்.

மொழியால் பதிலைப் பகர முடியவில்லை. அந்த இறகை எடுத்து பைக்குள் பத்திரப்படுத்துவதன் மூலம் சொல்ல முடிகிறது. அதைப் பார்த்த ஜோஸ் ஒன்றும் சொல்லாமல் எழுந்துகொள்கிறான். மனழ்

காரணமாக ஆற்றுக்குக் குளிக்கச் செல்லாமல் வீட்டுக்குப் பின்புறத்தில் குளித்து முடித்துப் பசியாறிவிட்டுக் கிளம்புகிறோம். இன்று புறப்பட விட்டால் ஓமருக்குத்தான் சிக்கல்.

நேரம் நெருங்குகிறது. மனசின் மென்புள்ளிகள் இறுக்கம் கொள்ளத் தொடங்குகின்றன. இங்கு தங்கியது முழுதாக இரண்டு நாட்கள்கூட இல்லை. இருப்பினும் அன்புமிகுந்த இம்மக்களைப் பார்க்கும் வாய்ப்பு இனி கிடைக்குமா என்கிற அய்யம் இறுக்கத்தை மேலும் உறைய வைக்கிறது. ஜோஸினுடைய தந்தை இறுக்கியணைத்து முத்தமிடுகிறார். ஒவ்வொருவரிடமும் விடைபெறும்போது இதயத்தில் உப்புப் பூக்கும் ஈரம். எப்போதும் பார்த்துச் சிரித்துக் கொண்டிருக்கும் குழந்தைகள்கூட அப்புன்னகையைத் தொலைத்து நிற்கின்றனர். பெண்களின் முகத்திலும் சிரிப்பே இல்லை. ஜோஸின் தமக்கை நெருங்கிவந்து கைகளைப் பற்றி அழுத்தி தன் கண்களில் ஈரம் காட்டி நிற்கிறார். இம்முறை அவருடைய கைகளில் உறுதியாய் ஒட்டிக்கொண்டிருப்பேன். விடைபெற்று வீட்டை விட்டு இறங்குகிறேன். இம்மக்களின் அன்புக்காக இவர்கள் கேட்டால் இப்போது என் தலையை நானே வெட்டிக் கொடுத்துவிடுவேன்.

ஜோஸுடன் படகுத்துறை நோக்கி நடக்கிறேன். சாரல் தூவிக் கொண்டிருக்கிறது. நாங்கள் ரலாவிடம் விடை பெற்றுக்கொள்ளச் செல்லவில்லை. ஜோஸும் அதைக் குறித்த பேச்சு எதையும் எழுப்ப வில்லை. நல்லதுதான். அதற்கான வலுவும் இல்லை. ஆனால் படகுத் துறையை நெருங்கியபோது ஜோஸ் என்னைத் திரும்பிப் பார்க்கிறான். அவன் முகத்தில் மென் அதிர்ச்சி. என்னவென்று பார்க்கிறேன். படகுத் துறையில் கையில் அழகிய மூங்கில் கூடையோடு ரலாவும் அவளுடைய அக்காவும் நின்றுகொண்டிருக்கிறார்கள்.

மூங்கில் கூடையில் உணவு இருப்பது தெரிகிறது. நாங்கள் நெருங் கியதும் அதை ஜோஸ் வசம் கொடுத்த ரலா அவனிடம் கேட்கிறாள். இன்று போகப் போவதைப் பற்றி ஒரு சொல்கூடச் சொல்லவில்லை அல்லவா நீ?

அக்கேள்வி ஜோஸுக்கானது மட்டுமல்ல. தலைகுனிந்தபடி வாங்கிக் கொண்ட ஜோஸ் எதுவும் சொல்லவில்லை. அவன் கால்கள் படகிருக்கும் பக்கம் நோக்கி நகர அவனுடைய தூணாங்கும் இணைந்துகொள்கிறான். அங்கு ஜோஸுடைய அண்ணன் அழைத்துச் செல்ல படகுக்காரரோடு காத்திருக்கிறார். ரலாவுடன் தனித்து நிற்கிறேன். மொழியின் தோல்வியை இருவருமே முதன்முதலாக உணர்கிறோம். நொடிகள் வென்று கொண்டிருக்கின்றன.

ரலா.

குரல் தழுதழுக்கிறது. வேறு ஒரு சொல்லுமே வரவில்லை. இப்போது தான் முதன்முதலாக ரலாவைப் பெயர் சொல்லி அழைப்பதை

உணர்கிறேன். ரலாவின் விழிகளில் நீர்முட்டிக் கொண்டு நிற்கிறது. அல்லி வட்டம் மொட்டாக மாறித் துடிக்கிறது. மொட்டு பலவந்தமாய் அவிழ்கிறது.

நீங்கள் திரும்பவும் இங்கு வர மாட்டீர்கள்தானே?

பதில் சொல்ல முடியவில்லை. பதில் தெரியவுமில்லை. கல் உதடுகள். தலையைக் கவிழ்த்துக்கொள்கிறேன். விசும்பும் ஓசை கேட்கிறது. இவ்வளவு கலகலப்பான ஒரு பெண் விசும்புவதைக் கேட்கும் துணிச்சல் இல்லை.

புறப்படுகிறேன் ரலா.

கையை விருட்டென்று பற்றித் தூக்கிய ரலா புறங்கையில் தன் அதரங்களைப் பதிக்கிறாள். கூடவே இரு துளிகளும் பதிந்து கொள்கின்றன.

சட்டென்று அந்த அல்லிவட்ட அதரங்களில் உயிர் பதிக்கும் துடிப்பு எழுகிறது. துடிப்பு மட்டும்தான். கோழை. கோழை.

படகில் இருப்பவர்களும் ஜோஸும் தூணாங்கும் இதை உறுதியாய்ப் பார்த்திருப்பார்கள். நிமிர்ந்து ரலாவின் விழிகளைச் சந்திக்கத் துணிவில்லாமல் தலைகுனிந்தபடியே நிற்கிறேன். பார்த்தால் உறுதியாய் அழுகைதான். கையை மெல்ல விடுவித்துக்கொண்டு படகை நோக்கி நகர்கிறேன். ரலாவின் விசும்பல் அழுகையாய் மாறுகிறது. அந்த அழுகையும் ரலாவின் குரலைப் போலவே மென்மையாய் கேட்டுக் கொண்டிருக்கிறது. படகை நெருங்குகிறேன். ஜோஸிடம் எதுவும் பேசவில்லை. தலையை மட்டும் ஆட்டி விடை பெற்றுக்கொள்கிறேன். இறுகிய மன நிலையில் இருக்கும் ஜோஸாலும் பேசமுடியவில்லை.

எந்த நட்புக்கும் சந்திப்பது இதுவே கடைசி முறை என்ற நிலையை அறிந்துகொண்டால் அதைவிடக் கொடுமை வேறில்லை. படகு நகரத் தொடங்குகிறது. யாரையுமே திரும்பிப் பார்க்கவில்லை. ஜோஸ், இனிய நண்பா. நீ சொன்னபடி நம் நட்பின் வளையம் இதயத்தில் வலுவாக வரையப்பட்டுவிட்டது. என்றாவது ஒருநாள் நாம் வீழும் போது இதைக் காணமுடியும் நண்பா.

ரலா, எனக்குத் தெரியும். நீ இன்னும் அழுதுகொண்டு இருப்பாய். அழுது ஓய்ந்து இரவில் கண்ணயரும்போது உனக்கொரு கனவு வரலாம். நம் இருவருக்குமிடையே துளிர்க்க முற்பட்ட அன்பின் பிணத்தைச் சம்ப்பாவுக்குள் வைத்து கோங் கொண்டு மூடிப் புதைக்கப்பட்ட நிலத்தின்மீது யாரோவொரு முருட் இளைஞன் போர் நடனம் ஆடிக்கொண்டிருப்பான். அவன் கையில் கேடயத்துக்குப் பதிலாகத் தலை இருக்கும். உற்றுப்பார். அது என் தலையாகத்தான் இருக்கும். அதை அன்பளிப்பாய் பெற்றுக்கொண்டு அவனோடு உன் வாழ்வைத் துவங்கிவிடு ரலா.

முதிர்காலத்தின் ஓர் ஓய்வு நாளில் உன் மரத்தின் பட்டுப்போன கிளையொன்றில் ஒரு துளிர் துளிர்க்கும் மாயக்காட்சி கட்புலனாகும் போது உன் 'தங்குங்'கை எடுத்து மீட்டு ரலா. அப்போது ஒரு நரம்பு நானாகவும் மற்றொரு நரம்பு நீயாகவும் மாறியிருப்போம். இருவரின் இருபத்தையும் மீட்டும் உன் விரல்களில் நாம் இசையாய் இணைகை யில் விடைபெற்ற இத்தருணம் மீளவும் உயிர் பெறும். அப்போது வழியும் இசையை அன்போடு ஏந்தி வெளியெங்கும் பயணிக்கும் காற்றின் அணுக்களில் ஓர் அணுவையாவது இப்புவிக்கோளத்தின் எம்மூலையில் இருந்தாலும் மூச்சு நிருவதற்குள் சுவாசித்துவிடுவேன் ரலா.

உறுதியாக ரலா.

உறுதியாக.

பைப்பைக்குள் இருந்த பகட்டுக்கோழியின் இறகை ஒருமுறை எடுத்துப் பார்த்துவிட்டு உள்ளே வைக்கிறேன். விசைப்படகு விரைந்து கொண்டிருக்கிறது. பார்வையை வெளியே ஓட்டியபோது ஆற்றின் கரையில் நீருக்கு மேலாகத் தெரிந்த ஈரச் சதுப்புநிலத்தின் மீது படுத்தவாறு இந்தக் கருப்பு முருட்டையே பார்த்துக்கொண்டிருக்கிறது ஒரு முதலை.

தலை வேட்டைக்காரர்

முகாமுக்குத் திரும்பிய பிறகு முழுக்கதையையும் ஓமரிடம் ஒப்பிக்கிறேன்.

ஆனால் ஓமரின் கவனம் முழுவதும் அம்முதியவரின் மீதே குவிந் திருக்கிறது. அவரைக் குறித்தே கேள்விகளைக் கேட்டுக்கொண்டிருக் கிறார். குறிப்பாக அவர் உடம்பில் குத்தியிருந்த பச்சையைக் குறித்தே கேட்டுக்கொண்டிருக்கிறார். அவருடைய மார்பில், தோள்பட்டைக்குக் கீழே என்ன உருவத்தைப் பச்சை குத்தியிருந்தார் என்று கவனித்தாயா?

இல்லை, பார்க்கமுடியவில்லை. ஏனென்றால் தன் தலைமுடியைக் கூந்தலைப்போல் முன்புறமாகத் தொங்கவிட்டிருந்தார்.

மறுபுறத்தில்?

பார்க்கவில்லை. இருபுறமும் அப்படித்தான் தொங்கவிட்டிருந்தார்.

நன்றாக யோசித்துப் பார். எப்போதாவது அங்கு விண்மீன் வடிவப் பச்சை குத்தியிருந்ததைப் பார்த்தாயா?

விண்மீன் வடிவமா? பார்த்தேன். ஆனால் நீங்கள் சொன்ன இடத்தில் இல்லை. அதை அவருடைய தொண்டையில் பார்த்தேன்.

தொண்டையிலா? ஓமர் திகைத்துப்போகிறார். சில நொடிகளை இருந்தவர் மீண்டும் கேட்கிறார். நன்றாகப் பார்த்தாயா?

நன்றாகத்தான் பார்த்தேன். அவர் ஒருமுறை தன் தலையை வான் நோக்கி நிமிர்த்தியபோது அதைப் பார்த்தேன். தெளிவாகத் தெரிந்தது.

ஓமர் ஒரு நிமிடம் யோசிப்பது போல் இருந்துவிட்டு பிறகு சொல்கிறார். நீ ஓர் அரிய மனிதரைச் சந்தித்துவிட்டு வந்திருக்கிறாய்.

எப்படிச் சொல்கிறீர்கள்?

பச்சை குத்துவது முருட் மக்களுக்கு வெறும் சடங்கு அல்ல. அந்த இனத்து ஆண்களைப் பொறுத்தவரை அது அவர்களுடைய வரலாற்றுக் குறிப்பு. வீரசாகசம் செய்பவரே மார்பிலிருந்து தொப்புள் வரை பச்சை குத்திக்கொள்வர். அதிலும் அவருடைய கை முழுவதும் மூன்று நீண்ட கோடுகள் இருந்ததல்லவா? தலைவெட்டும் வீரப்போரில் ஈடுபட்ட வீரர்கள்தாம் அது போன்ற பச்சையைக் குத்திக்கொள்வார்கள்.

திகைத்து அமர்ந்திருக்க ஓமர் தொடர்கிறார். நீ பார்த்த அம்முதியவருக்கு உறுதியாய் அவருடைய இருபுற மார்பிலும் விண்மீன் வடிவ பச்சை இருந்திருக்கவேண்டும்.

எப்படி அவ்வளவு உறுதியாய்ச் சொல்லுகிறீர்கள்?

ஓமர் சாய்ந்து தளர்வாக அமர்ந்துகொள்கிறார். முதன் முதலாக ஒரு தலை கொய்யும் முருட் வீரர் ஒரு பக்க மார்பின்மேல் பதக்கத்தைப் போல் ஓர் விண்மீன் குறியைப் பச்சை குத்திக்கொள்வார். இரண்டாவது தலையைக் கொய்தால் மறுபுற மார்பில் குத்திக்கொள்வார். மூன்று தலையைக் கொய்தவர் அந்த மூன்றாவது தலைக்காக தன் தொண்டையில் அந்த விண்மீன் குறியைப் பச்சை குத்திக்கொள்வர்.

குரல் தொண்டைக்குள் முடங்கிப்போகிறது. சிரமப்பட்டே அதை விடுவிக்கிறேன். அப்படியானால் அம்முதியவர்?

அய்யமே இல்லை. உறுதியாக அவர் தலை வேட்டைக்காரர்.

## பகுதி இரண்டு

நீங்கள் திரும்பிச் செல்லும்போது இக்காடு பெரிய பிணமாகக் கிடக்கும். அவ்வளவு பெரிய பிணத்துக்கும் ஒரு பிணப்பெட்டி செய்து கொடுத்துவிட்டுச் செல்லுங்கள்.

# 1

கோடானு கோடி பூக்கள்

துளி நேரம் மூச்சில் உயிர்வளி தொலைகிறது.

ஒரு சமயத்தில் ஒரு பூப் பூத்துப் பார்த்திருக்கிறேன். சில பூக்கள் பூத்தும் பார்த்திருக்கிறேன். பல பூக்கள், ஏன் ஆயிரம் பூக்கள் பூத்தும் பார்த்திருக்கிறேன். இலட்சம் பூக்களெல்லாம் பூக்குமா என நினைத் திருக்கிறேன். ஆனால் கோடிப் பூக்கள் பூப்பதைப் பார்ப்பேன் என்று எவராவது சொல்லியிருந்தால் அது மிகைக் கற்பனையென ஒதுக்கி யிருப்பேன். ஆனால் அது கற்பனை அல்ல மெய். மெய்யென விழி களின் முன்னே விரிந்து கிடக்கிறதே இக்காட்சி.

குன்று முகட்டின் மீது நின்றிருக்கிறோம். எதிரே மாபெரும் பள்ளத்தாக்கு. அதில் எதிர்க் குன்றுவரை விரிந்து பரந்திருக்கும் கவிகை. ஆங்காங்கே பச்சை, இளம்பச்சை, இளமஞ்சள் நிறங்கள் தீற்றி சாம்பல் துளிகள் தெளித்துக் கிடந்த கவிகையில், வானவில் உடைந்து அதிலிருந்த வண்ணங்கள் உருகி ஊற்றிப் பரவியதோ என்றொரு மயக்கம். பச்சைநிறச் சீலை முழுக்க இப்படி வண்ணப்பூக்களை வரைந்து முடித்த மாயத் தூரிகை எது? வெயிலில் மிளிரும் ஓவியமே சொல், சொல்.

மரம் பூப்பது வியப்பல்ல. ஆனால் இப்படி ஒட்டுமொத்தமாக வான் உடுக்கள் எல்லாம் உதிர்ந்தது போல் கவிகை முழுக்கக் கோடானு கோடிப் பூக்கள் எப்படிப் பூத்தன? சென்ற கோடையில்கூட இப்படிப் பூக்கவில்லையே? கலைத்து விளையாடும் காற்றே சொல், சொல்.

குன்றேறி வந்த களைப்பு தீரத் தரையில் அமர்ந்து நீர் அருந்திக் கொண்டிருக்கிறார் ஓமர். அருகமர்ந்து நீரை வாங்கிப் பருகிவிட்டு, மீளவும் வண்ணக்கவிகையின் அழகைப் பருகத் தொடங்குகிறேன். ஓமரிடமிருந்து ஓவிய விளக்கம்.

நம் முகாமின் செயல்பாடுகள் முடிவடைவதற்குள் இப்படியொரு பருவத்தை உனக்குக் காட்டிவிட வேண்டும் என்று மனதுக்குள் துடித்துக்கொண்டிருந்தேன். நல்லவேளை அது நடந்துவிட்டது. இக்காட்டுக்கு நீ வந்ததில் காணவேண்டிய அரியகாட்சியே இதுதான். அப்பலன் இப்போது கிடைத்துவிட்டது. இது இயற்கையின் விந்தை. பூக்கள் இப்படி ஒட்டுமொத்தமாய் பூப்பது நான்கைந்து ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் நிகழும். அப்படி உறுதியாகவும் கூறிவிட முடியாது.

ஓரிரு ஆண்டுகள் கூடலாம் குறையலாம். அது முழுக்க இயற்கையின் தேர்வு.

எங்கள் ஊரிலும் குறிஞ்சி என்று ஒரு மலர் உண்டு. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும். அதுவொரு சிறு தாவரம். ஆனால் இப்படி மரங்கள் அனைத்தும் ஒட்டுமொத்தமாகப் பூத்ததாகத் தெரியவில்லை. ஒவ்வொரு மரமும் அதனதன் பருவத்துக்குத்தான் பூக்கும்.

நீ சொல்வது ஒருவகையில் உண்மை. இங்கும் ஒரேவகை மரங்கள்தான் பூத்திருக்கின்றன. பிசின் வகை மரங்கள். ஆனால் பார்ப்பதற்கு அனைத்து மரங்களும் பூத்திருப்பது போல இருப்பதற்குக் காரணம் இந்தக் காட்டில் இருப்பவை பெரும்பாலும் பிசின் மரங்கள். அதனாலேயே பார்ப்பதற்குக் கவிகை முழுக்கப் பூத்திருப்பது போலத் தோன்றுகிறது. இங்கு தெரியும் ஒவ்வொரு வண்ணமும் ஒவ்வொரு வகை பிசின் மரங்களின் பூக்கள்தாம். இந்த வெண்ணிறப் பூக்கள் அனைத்தும் கப்புர், ரசாக் மரங்களின் பூக்கள். வெண்மையோடு மஞ்சள் கலந்திருப்பன மஜாவ், சிலாங்கன் பத்து, குருவிங் பூக்கள். அதே வெண்மையோடு இளம்சிவப்பு கலந்திருப்பது சிரயா. சிவப்பாகப் பூத்திருப்பது மஞ்சள் சிரயா பூக்கள். மஞ்சளாகப் பூத்திருப்பது பஞ்ஜுத்தன், மெலாப்பி, ஒபகுலுக் மரங்கள். அம்மஞ்சளோடு இளம்சிவப்பு கலந்திருந்தால் சிவப்புச் சிரயா.

ஓமரின் துல்லிய அறிவு எப்போதும் வியப்புக்குரிய ஒன்று. நீலந்த விசும்பின் கீழே வரையப்பட்டிருக்கும் வண்ணக் கவிகையோவியத்தைப் பார்த்தபடியே தொடர்கிறார். இது இப்படிப் பூத்திருப்பதைவிட இப்படிப் பூத்ததற்கான காரணம்தான் அறியப்பட வேண்டிய செய்தி. பூக்கள் பூப்பதில் அப்படி என்ன அரிய காரணம் இருக்கப்போகிறது எனத் தோன்றலாம். இருக்கிறது. ஒவ்வொரு விளைவுக்கும் இயற்கை எத்தனை காரணங்களை ஒளித்து வைத்திருக்கிறது என்பதை அறிய நேர்ந்தால் கடைசிவரை இயற்கையை வியந்தே நம் வாழ்நாள் முடிந்துபோகும்.

இதை ஆங்கிலத்தில் 'மாஸ்டிங் இயர்' என்பார்கள். கோடைப் பருவம் ஒவ்வொரு ஆண்டும் வரக்கூடியதுதான். ஆனால் எல்லாக் கோடைகளும் வறட்சியைக் கொண்டு வருவதில்லை. சில ஆண்டுகளுக்கு ஒருமுறையே வறட்சி வரும். அதை இயற்கைதான் தீர்மானிக்கும். அப்படியொரு ஆண்டுதான் இது. மாஸ்டிங் என்ற சொல்லுக்கு விதையுண்ணிகளுக்கு உணவாகும் காட்டுமரக்கனிகள் என்று பொருள் சொல்லலாம். அது என்ன விதையுண்ணிகள்? காட்டுப்பன்றி ஒரு விதையுண்ணி. இப்பன்றிகள் மரங்களுக்குக் கீழே கிடக்கும் கனிகளைத் தேடி உண்ணுபவை. இதனாலேயே எங்கெல்லாம் மரங்களில் குரங்குகள் இருக்கின்றனவோ அந்தந்த மரங்களின் பாதையில் பின்தொடர்ந்து அலைந்து திரிந்துகொண்டிருக்கும். மரங்களிலிருந்து குரங்குகள் தின்றுபோட்ட

பழங்கள், கொட்டைகள் போன்றவைதாம் இவற்றின் உணவு. ஆனால் வறட்சி வருடம் வரும்போது இம்மரக்கனிகள் காய்க்காது குறைந்துவிடும், நின்றுவிடும். அப்போது விதையுண்ணிகளுக்கு உணவுப் பற்றாக்குறை ஏற்படும். அப்படியானால் இவற்றுக்கு எப்படி உணவு கிடைக்கும்? அல்லது யார் உணவளிப்பார்கள்? வேறு யார் செய்வார்கள்? இயற்கைதான் செய்யும். இயற்கையைவிட கருணைமிக்க தாய் உலகில் ஏது?

இயற்கை தன் உதவியை இப்பிசின்வகை மரங்களின் மூலமாகச் செய்யத் தொடங்கும். மற்ற வகை மரங்களெல்லாம் பூத்துக் காய்த்துக் கனிந்துகொண்டிருக்கும் போதெல்லாம் அடக்கி வாசித்த இம்மரங்கள் அவை ஓய்ந்ததும் இப்படிச் சட்டென்று இனப்பெருக்கத்தைத் தொடங்குகின்றன. ஒட்டுமொத்தமாக எல்லா பிசின்வகை மரங்களும் பூக்கத் தொடங்கும். இப்படிப் பூத்துக் காய்த்துக் கொட்டுகின்ற கனிகளில் விதையுண்ணிகள் தின்றவை போக மீதமிருப்பவை முளைத்துப் பெருகுகின்றன. இத்தனை கோடிப் பூக்களும் காய்த்துக் கனிந்தால் எத்தனை கோடிக் கனிகள் இருக்கும் என்று நீயே கணக்கிட்டுப்பார்.

காட்டுக்குள் கீழிருந்து பார்த்தால் இப்பூக்களைப் பார்த்திருக்கவே முடியாது. மொத்தமாக இப்படிக் கோடிப்பூக்களைக் காட்டியதற்கு மிகவும் நன்றி என்றதும் ஓமர் புன்னகைத்தவாறே கேட்கிறார். இங்குள்ள ஒரு மரத்தில் எத்தனைப் பூக்கள் பூத்திருக்கின்றன?

பதில் தெரியாமல் விழிப்பதைப் பார்த்து அவரே சொல்கிறார். அறிவியல் கணக்குபடி ஒரு மரத்துக்கு நாற்பது இலட்சம் பூக்கள்.

நாற்பது இலட்சமா? வாயடைத்துப்போகிறேன்.

இப்பூக்கள் எல்லாம் துணர், மஞ்சரியாக இருப்பதால் இவ்வளவு பூக்கள்.

மனசுக்குள் கணக்கு ஓடுகிறது. மரத்துக்கு நாற்பது இலட்சம் என்றால் பத்து மரத்துக்கே நாற்பது கோடிப்பூக்கள். அப்படியானால் இங்குள்ள இலட்சோப இலட்சம் மரங்களில் எத்தனை கோடிப் பூக்கள் இருக்கும்? கோடி, கோடி, கோடி, கோடானு கோடி?

### தாடிப்பன்றி

முகாம் புதிய முகமூடியை அணிந்திருக்கிறது. ஆட்களும் வண்டிகளும் அதிகரித்துப் பணிகள் மும்முரமாகியிருக்கின்றன. சுமையுந்துகள் பங்கலானுக்குக் கட்டைகளைக்கொண்டு சேர்க்க இரவுபகலாக விரைந்துகொண்டிருக்கின்றன. மழைப்பருவத்தில் நின்று போயிருந்த வேலைகளையும் சேர்த்து முடிக்கவேண்டிய கட்டாயம். எல்லோருக்குமே வேலைப் பளு அதிகம். ஆனாலும் இரவுநேரக் கலகலப்பு மட்டும் மாறவில்லை. இப்போது உணவு மேசைகள் இரண்டாகி விட்டன. புதிய மேசையில் சீனர்களின் மஜோங் கட்டைகளின் கலகல சூதாட்ட-

ஒலி கேட்டுக்கொண்டேயிருக்கிறது. சமையல் பணிக்கு இரண்டு ஆள். கூடுதலாக லிசா என்ற பெண்ணும் சேர்க்கப்பட்டிருக்கிறார். ஆனால் மேலாளரும் இரண்டாக ஆனதுதான் சிக்கல். ஒரு முகாமுக்கு ஒரு மேலாளர்தான் இருப்பார். துணை மேலாளர் இருப்பார். ஆனால் இணை மேலாளர் கிடையாது. இங்கு அப்படி ஒருவர் அனுப்பப்பட்டிருந்தார். நிர்வாகத்தின் இந்நடவடிக்கை எவருக்குமே பிடிக்கவில்லை. குவானைப் பேசியில் அழைத்து இது ஒட்டுமொத்த பணிச்சூழலின் ஒற்றுமையைக் குலைத்துவிடும் என எதிர்ப்பைப் பதிவு செய்கிறேன். அதற்கு அவர் புதிய மேலாளர் சமையுந்துப் போக்குவரத்தையும் பங்கலான் பொறுப்பையும் கவனிப்பார். மற்றபடி இதர பொறுப்புகள் அனைத்தும் ஓமர் வசமே இருக்கும் எனப் பதிலளிக்கிறார்.

இத்தனைக்கும் இதுகுறித்து ஓமரிடம் எந்தப் பிரதிபலிப்பும் இல்லை. அதே அமைதி. அதே புன்னகை. வலியுறுத்திக் கேட்கையில் உண்மைகள் வெளிவருகின்றன. வெளிப்படையாகக் கட்டைகளின் பட்டியலை முகாம் அலுவலகத்தில் ஒட்டியதிலிருந்தே அவர் மீதிருந்த வருத்தம் புர்கானின் காப்பீட்டு வழக்கில் பெரிதாகியிருக்கிறது. புர்கானுக்கு நிர்வாகத்தின் சார்பாகப் பணியாளர் குழுக்காப்பீடு எடுக்கப்பட்டிருக்கிறது. அக்காப்பீட்டுப் பணம் இந்தோனேசியாவில் இருக்கும் புர்கானின் குடும்பத்திடம் நேரடியாகச் சேர்ப்பிக்கப்பட வேண்டும் என்பது ஓமரின் நிலை. ஆனால் அலுவலகம் அம்முயற்சியை எடுக்கத் தலைப்படவில்லை. அது மண்டுரிடம் அப்பொறுப்பை ஒப்படைத்து விலகி விட்டது. புர்கானுக்கு இங்கு நெருங்கிய உறவினர் இல்லாத நிலையில் இங்குப் பயனாளராக நியமிக்கப்பட்டிருந்த மண்டுர் அத்தொகையை அவரே எடுத்துக்கொண்டு விட்டார்.

ஓமரால் இன்னும் என்னென்ன நியாயமான சிக்கல்கள் வருமோ என்ற எச்சரிக்கையில் எதற்கும் இருக்கட்டுமே என்று ஆங் என்ற சீனர் இணைமேலாளராக நியமிக்கப்பட்டிருக்கிறார். ஆனால் ஆங் எதிர்பார்த்த மாதிரி வில்லனாக இல்லை. வந்தவுடனேயே ஓமரிடம் உங்களால் முடியாத வேலை எது என்று சொல்லுங்கள் அதைமட்டும் நான் செய்கிறேன் என்று கேட்டுக்கொண்டதும் அவரிடம் பணியாளர்கள் கனிவைத் தோற்றுவித்துக் கொண்டனர். மேலும் ஓமரிடமிருந்து அதிகாரத்தைக் கைப்பற்றும் வேட்கை எதுவும் அவரிடம் கிடையாது என்பது தெரிந்ததும் எல்லோருக்கும் அவரையும் பிடித்துப்போகிறது. அவரிடம் ஈர்ப்பு ஏற்பட இன்னொன்றும் காரணமாகிறது. அது ஆங் தன்னுடன் ஒரு துப்பாக்கியைக் கொண்டு வந்திருக்கிறார் என்பது.

மற்ற முகாம்களிலிருந்து எங்கள் முகாம் ஒரு விதத்தில் குறைபட்டிருப்பதாக எல்லோரும் நினைத்தது இந்த வேட்டையைத்தான். ஏனெனில் வெட்டுமர முகாம் என்றாலே அதிலிருந்து வேட்டையைப் பிரிக்க முடியாது என்பதுபோல் எல்லா முகாம்களிலும் வேட்டைக்கு

போவது தவறாது. முகாம்களில் அனுமதி பெற்ற துப்பாக்கி வைத்திருப் பவர்கள் ஓரிருவராவது இருப்பர். அப்படி வேட்டைக்குப் போகும் போது விலங்குகள் அதிகம் கிடைத்தால் அதைப் பக்கத்து முகாம் களுக்கும் பகிர்ந்தளிப்பது வழக்கமாயிருந்தது. அப்படித்தான் எங்கள் முகாமுக்கும் சிலவேளை இறைச்சி கிடைக்குமே தவிர எங்களிடம் துப்பாக்கி கிடையாது. இந்நிலையில் எங்கள் முகாமுக்கும் ஒரு வேட்டைக்காரராக ஆங் உறையிலிட்ட தன் வேட்டைத் துப்பாக்கி யைத் தோளில் மாட்டிக்கொண்டு கம்பீரமாக வண்டியிலிருந்து இறங்கியதும் சிலர் நாவில் வேட்டை இறைச்சியை நினைத்து எச்சில் ஊறிவிடுகிறது. அவர் தன் துப்பாக்கியை அடிக்கடி எடுத்துப் பார்த்து துடைத்துக்கொண்டிருப்பார். வேட்டைத் துப்பாக்கியின்மேல் அப்படி யொரு காதல் அவருக்கு.

முதல்நாள் வேட்டைக்குத் தன் சீன நண்பர்களுடன் சென்றுவந்த ஆங் காட்டுப்பன்றியைச் சுட்டு வந்திருந்தார். இங்குள்ள காட்டுப் பன்றியை ஓரிருமுறை இருட்டில் பார்த்திருந்தாலும் அதன் தாடியை ஊன்றி கவனித்ததில்லை. ஓரிடவாழ்வியான இப்பன்றியின் சிறப்பே அதன் தாடிதான். அதனாலேயே இதை தாடிப்பன்றி என்கிறார்கள். இப்போது இதை வெகு அருகில் பார்க்கும் வாய்ப்பு கிடைத்திருக்கிறது. உண்மை. இப்பன்றிக்குத் தாடி இருக்கிறது. மூக்கின் மேற்பாகத்தி லிருந்து காதின் கீழ்வரை அதன் கண்களுக்கும் கீழாக முடிகள் அடர்த்தி யாக வளர்ந்து தாடியைப் போல் தொங்கிக்கொண்டிருந்தன. மங்கிய வெண்ணிறத் தாடியில் புழுதிக்கறையும் உறைந்த குருதிக்கறையும் ஒட்டியிருக்கின்றன. எம் முகாம் சார்பான முதல் துப்பாக்கி காவு.

இறகுக் கனிகள்

காலிஃபிளவர் வடிவக் கிளைகளை உச்சியில் விரித்திருந்தது குருவிங் மரம். காற்று சிலுப்பியதும் உச்சியிலிருந்து என்னவோ சுழன்று இறங்கிக் கொண்டிருக்கின்றன. என்னவென்று ஊகிக்க முடியவில்லை. ஒவ்வொன்றும் தனித்தனியே ஓர் உலங்கு வானூர்தியைப் போல் காற்றில் மிதந்து சுழன்றபடியே ஈர்ப்பு விசைக்குக் கட்டுப்பட்டு மெல்லக் கீழிறங்குகின்றன. கைக்கருகே வந்த ஒன்றைத் தாவிப் பிடிக்கிறேன். சுமார் ஓர் அங்குல உயரத்தில் முந்திரிப்பழ வடிவம். சிவப்பும் பச்சையும் கலந்த நிறம் மாறிக் காய்ந்துகொண்டிருக்கிறது. அதன் உச்சியில் கொம்பு முளைத்ததுபோல் இரு இறக்கைகள். அந்த இறக்கைகள் அதன் கீழ்ப்பகுதியான முந்திரிவடிவத்தைவிட நீளம். இரு இலைகள் முளைத்தது போன்று இருக்கிறது.

இது என்னவென்று உன்னால் ஊகிக்க முடிகிறதா என்கிறார் ஓமர். இல்லை. முடியவில்லை என்கிறேன். இதுதான் பிசின் மரக்கனி என்கிறார்.

கனியா? குரலில் வியப்பும் அய்யமும் வழிகின்றன. குழந்தைகளின் விளையாட்டுப் பொருளைப் போலிருக்கும் ஒன்றைக் கனியென்றாய் எப்படி ஒப்புக்கொள்வது?

முதலில் இந்தக் காட்டின் தரைப் பகுதியைப் பார். அதை நீ இன்னும் கவனிக்கவேயில்லை என்கிறார் ஓமர். வழக்கம்போல் உதிர்ந்த இலைச் சருகுகள் கொட்டிக்கிடக்கிறதென நினைத்ததை இப்போது கவனித்தால் அனைத்தும் பிசின் மரக்கனிகள். இக்கனிகள் கானகத் தரை முழுக்கக் கம்பளி விரித்தாற்போல் பரவிக்கிடக்கின்றன. இக்கனிகளின் மீதா நடந்துவந்தோம்? கீழே கிடக்கும் கனிகள் வடிவத்தில் ஏறக்குறைய ஒன்றேபோல் இருந்தாலும் வண்ணத்திலும் சிறகுகள் அமைப்பிலும் மாறுபட்டிருக்கின்றன. அவற்றை வகைக்கொன்றாய் எடுத்துக்கொண்டே நகர்கிறேன்.

கடுமையான வெயில். இக்காட்டுப் பகுதி ஒன்றும் அடர்த்தி இல்லை. தாகம் நாவை வறட்டுகிறது. கொண்டு வந்திருந்த குடுவை நீரும் காலி. வழியிலிருக்கும் ஓடைகளும் நீர் வற்றி சேற்று நிலம்போல் இருக்கின்றன. ஆனால் முகாமருகில் இருக்கும் கற்பாறை நீருற்றில் வறட்சியிலும் இன்னமும் நீர் பொங்கிக்கொண்டு இருக்கிறது. இன்னும் எவ்வளவு தொலைவு போகவேண்டும்?

எங்கள் அலுவலகத்திலிருந்து ஓர் உத்தரவு வந்திருந்தது. முகாமுக்குச் சற்று தொலைவில் உள்ள காட்டுநிலம் வெட்டுமரக் குத்தகைக்கு வருகிறது. அது வாங்குவதற்குத் தோதான காட்டுநிலம்தானா என்று ஒரு பார்வை பார்த்துவிட்டு வாருங்கள் என்று சொல்லியிருந்தார்கள். ஓமர், லிபராத்தோவோடு மொத்தம் நால்வர் கிளம்பி வந்திருக் கிறோம். முகாமுக்கு வடமேற்கே சுமார் இருபது கி.மீ. தொலைவி லிருக்கிறது இந்த இடம். ஒரு கைவிடப்பட்ட முகாம் சாலை இங்கு வருவதற்கு உதவியது. சிறு பள்ளத்தாக்குப் பகுதியில் அமைந்திருக்கும் இதைப் பார்த்ததுமே இது தேறாது என்று புரிந்துவிடுகிறது. பத்து வருடங்களுக்குள் இதில் வெட்டு நடந்திருக்கிறது என்கிறார் லிபராத்தோ. இருப்பினும் ஒருமுறை உள்ளே நுழைந்து பார்த்துவிடுவோம் என்று வந்துவிட்டிருந்தோம். இப்பள்ளத்தாக்கின் எதிர்ப்பகுதியில் பழைய முகாம் சாலை இருக்கிறது. எனவே ரோஸ்லானை அப்பாதை வழியாக வந்து அங்கு காத்திருக்கச் சொல்லியிருப்பதால் அங்கு சென்றே ஆகவேண்டும்.

மரம் வெட்டப்பட்டிருப்பதால் இக்காட்டுக்குள் வெளிச்சம் பரவிக் கிடக்கிறது. கீழே கிடக்கும் உலர்கனிகள் மிதிபடுவதால் சத்தம் எழும்பிக்கொண்டிருக்க அருகில் வேறு ஏதோ சத்தம் சருகுகளின் மீது கேட்கிறது. ஓமர் முகத்தில் மென்முறுவல். அவர் பார்த்த திசையில் திரும்பிப் பார்க்கிறேன். ஒரு புதரிலிருந்து ஓடிச் சற்றுதொலைவில் நின்று

பார்க்கிறது அது. இதுதான் நீ தேடிக்கொண்டிருந்த உன் மூப்பாட்டனான துபையயா என்கிறார் ஓமர்.

துபையயாவா? இதுவா? இதைப் பலமுறை பார்த்திருக்கிறேன். ஏதோ அணில் வகை என்று நினைத்திருந்தேன். உற்றுப் பார்த்தால் நீர்ப்பிள்ளையைப் போல் இருக்கிறது. கூரிய நீண்ட முகவாய். எதையோ மென்றுகொண்டே பார்க்கிறது. ஓமரிடமிருந்து குரல் வருகிறது. முதலில் அதன் காதைக் கவனி. அதன் காதுக்குப் பக்கத்திலிருந்து பொன் நிறத் தீற்றல் தெரிகிறதே, அதுதான் துபையயாவின் அடையாளம்.

பார்க்கவேண்டும் என்று துடித்துக்கொண்டிருந்த மூதாதை விலங்கு. இச்சிறிய விலங்கிலிருந்தா வளர்ச்சியடைந்து மானுட நிலைக்கு வந்து சேர்ந்திருக்கிறோம்? அணில்களைப்போல உணவைக் கொறித்துத் தின்னாமல் பாலூட்டிகளைப்போல மென்று தின்றுகொண்டிருக்கிறது. இது பறக்கும் பாலூட்டியான வௌவாலுக்கும் முந்தைய காலத்தைச் சேர்ந்தது. எப்படியோ டினோசர் காலத்திலிருந்து இன்றுவரை மாற்றம் அடையாமல் வாழ்ந்துவரும் பூச்சி தின்னும் தொன்மையான பாலூட்டியைப் பார்த்துவிட்ட மெய்மறப்பு. எதையோ தேடி துபையா ஓடிவிட்ட பிறகே நடக்கிறேன்.

நடை நீள்கிறது. தாகம் தகிக்கிறது. தொண்டை வறள்கிறது. யாரிடமும் தண்ணீர் இல்லை. நடை தளரத் தொடங்குகிறது. சாலையை அடைய இன்னும் மணி நேரம் ஆகலாம். உடல் தொய்ந்து போய் நடக்கிறேன். ரொம்பத் தாகமோ என்று சாடையிலேயே விசாரிக்கிறார் ஓமர். குரல் எழும்பாமல் ஆம் என்று தலைமட்டும் ஆடுகிறது. இவ்வளவு கடும்வெயிலைக் காட்டுக்குள் இதுவரை கண்டதில்லை. ஓமர் ஸிபராத்தோவிடம் திரும்பி ஒரு பெர்பாஞ்சாட் வெட்டுவோமா என்று கேட்கிறார். வெட்டுவோம் எனக்கும் தொண்டை காய்ந்துவிட்டது என்கிறார் அவர். தண்ணீர் வேண்டும் என்றால் இவர்கள் காட்டுக் கொடியை வெட்டுவது குறித்துப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். ஒன்றும் புரியவில்லை.

அதற்குள் அவர்கள் பாராங்கத்தியை எடுத்து மரங்களைச் சுற்றித் தொங்கிக் கொண்டிருந்த காட்டுக் கொடிகளை ஆராய்கிறார்கள். கைப்பருமனுள்ள ஒரு காட்டுக்கொடியைத் தேர்ந்தெடுக்கின்றனர். மரத்தின் மீது தாவி ஏறியிருந்த அக்கொடியை முடிந்தவரை ஒரு எக்கு எக்கி உயரத்தில் ஒரு வெட்டு வெட்டினார் ஸிபராத்தோ. அது வெட்டுப்பட்ட பின்னர் அது கீழே சரிந்துவிழுந்திடாது ஓமர் தாங்கிப் பிடித்துக்கொள்கிறார். இப்போது ஸிபராத்தோ அதன் கீழ்ப்பகுதியிலும் வெட்ட அது தனித் துண்டாகிறது. உடனே ஓமர் வெட்டுப்பட்ட மேற்புறத்தைத் தன் உள்ளங்கையால் அழுத்திப் பொத்திக்கொண்டு மறுகையால் அத்தண்டைக் குத்துக்கு உயர்த்திப் பிடித்தபடி நெருங்கி வந்து, வாயைத் திற என்கிறார். திறக்கிறேன்.

பொத்தியிருக்கும் அவருடைய கை விலகுகிறது. அத்தண்டின் நடுவில் இருந்த காசளவுத் துளையில் இருந்து நீர்த்தாரை குழாய் நீரைப்போல் கொட்டுகிறது. கொட்டிய நீர் காய்ந்த தொண்டைக்குள் இறங்கி ஈரம், ஈரம் என வயிற்றுக்குள் நிறைகிறது. சாரலில் நனைந்த முகம் போல் ஈர சிலிர்ப்பில் தசைகள். நீரை விழுங்கிக் கொண்டிருக்கிறேன். போதும் என்கிற அளவுக்கு வயிற்றில் நிறைவு. தாகத்தின் தணியல். நீர் முடிந்தவுடன் அதைத் தூக்கி வீசிவிட்டு அவர்களுக்காக இன்னொன்றைத் தேடுகிறார்கள்.

தாகம் அடங்கிவிட்டது. திகைப்பு அடங்கவில்லை. சிறிதளவு தாவரத்தின் பசும்வாடை தவிர வேறெந்தக் குறையுமற்ற நீர். இவ்வளவு வறட்சியிலும் காடு எப்படியெல்லாம் நீரைச் சேமித்து வைத்திருக்கிறது? புர்கானின் மரணத்துக்குக் காரணமான இக்காட்டுக் கொடியின் மீது வெறுப்பு வந்திருந்தது. ஆனால் அது எவ்வளவு பெரிய அபத்தம். தாகத்துக்கு நீரைத் தந்து காப்பாற்றுவதும் இக்காட்டுக் கொடிதானே? மனிதத் தவறுகளை இயற்கையின்மீது சுமத்துவது பெரிய தவறு என இப்போது புரிகிறது.

நீர் அருந்தியதும் நிழலில் இளைப்பாறச் சற்றே அமர்கிறோம். செல்ல வேண்டிய இடம் அருகில் இருக்க வேண்டும். ஆனால் இங்கிருந்து பார்ப்பதற்கு எதுவும் தெரியவில்லை. கையில் வைத்திருந்த கனி மாதிரிகளைத் தரையில் வைக்கிறேன். எல்லாமே இறக்கைகள் கொண்ட கனிகள். மகுடத்தில் குத்திட்டு நிற்கும் இறகுபோல செங்குத்தான இறக்கைகள். கனிகள் உலர்ந்து ஏறக்குறைய பழுப்பு நிறத்தில் இருக்கின்றன. இதெல்லாம் எந்த மரத்தின் கனிகள்? ஓமரிடம் கேட்கிறேன்.

இக்கனிகள் மரத்தில் இருக்கும்போது ஒரு நிறமாகவும் உலர்ந்த பின்னே வேறு நிறமாகவும் இருப்பதால் நிறத்தை வைத்துக் கண்டறிவது சிரமம் என்றவர் அக்கனிகளை மூன்றாகப் பிரிக்கிறார். இரட்டை இறக்கைகள் கொண்ட கனிகள், மூன்று இறக்கைகள் கொண்ட கனிகள், அய்ந்து இறக்கைகள் கொண்ட கனிகள். இதுதான் உலர்நிலையில் அடையாளம் கண்டுபிடிக்க இலகுவான வழி. இரட்டை இறக்கைகள் கொண்டவை குருவிங், சிலாங்கன் பத்து. இதில் சின்னது பத்து. பெரியது குருவிங். அடுத்து மூன்று இறக்கைகள் கொண்டவை சிரயா குடும்பத்தைச் சார்ந்தவை. மூன்று இறக்கைக் கனிகளில் ஓப சலுக், மெலாப்பியும் அடக்கம். ஆனால் கப்புர் மட்டும் இவை அனைத்திலும் இருந்து வேறுபட்டது. அய்ந்து இறக்கைகள் உள்ளது அதுதான்.

அருமையான வகைப்பாடு. திடீரென வண்டியின் ஒலிப்பான் சத்தம் வெகு அருகில் கேட்கிறது. பதில் குரல் கொடுத்துவிட்டு நடக்கிறோம். ரோஸ்லான் காத்திருப்பது தெரிகிறது. சாலையில் அரைமணி நேரம் பயணித்தபிறகு நான்கு பேர் காட்டுக்குள்ளிருந்து

மூட்டைகளைச் சுமந்துவந்து அவற்றை ஹைலக்ஸ் வண்டியில் அடுக்கு வதைப் பார்க்கிறோம். அருகே சென்றபோது இறகுக்கனிகளைப் பொறுக்கிக் கொண்டுவந்து அடுக்குகிறார்கள் என்பது தெரிகிறது. இது அட்மிரல் செங் ஹோ காலத்திலேயே தொடங்கப்பட்ட வணிகம். இக்கனிக்கு அயல்நாட்டில் நல்ல சந்தை மதிப்பு. இதன் பருப்புதான் அழகுசாதனப் பொருட்களின் மூலப்பொருள்.

இயற்கை உணவுப்பொருளாகப் படைத்ததைச் சந்தை ஒப்பனைப் பொருளாக மாற்றிவிட்டது.

# 2

வேட்டை

மெல்ல ஊர்ந்துகொண்டிருக்கும் ஹைலக்ஸ் வண்டியின் பின்புறத் திறப்பில் நின்றுகொண்டிருக்கிறேன். கையில் மின்கலத்துடன் இணைக்கப் பட்டிருக்கிற வட்ட மின்னொளி விளக்கு. விளக்கின் கைப்பிடிப் பொத்தானை அமுக்குகிறேன். வெளிச்ச வெள்ளம் பீறிட்டுக் கிளம்பு கிறது. சாலையின் இருபக்கமும் விளக்கு வெளிச்சத்தைப் பாய்ச்சி ஏதாவது விலங்கு தென்படுகிறதா என்று கவனித்துக்கொண்டே வருகிறேன். பக்கத்தில் ஒரு கையில் துப்பாக்கியையும் மறுகையால் வண்டியையும் பிடித்தபடி நிற்கிறார் ஆங்.

இரவுநேர வேட்டையில் துப்பாக்கியால் குறிபார்ப்பது எவ்வளவு முதன்மையோ அவ்வளவு முதன்மை, விளக்கைக்கொண்டு விலங்கைக் கண்டுபிடிப்பது. அவ்விலங்கைக் கண்டவுடன் தடுமாற்றம் இல்லாமல் வண்டி சற்று முன்னேறிச் சென்றிருந்தாலும்கூட அவ்விலங்கின் மீது பாய்ச்சப்பட்டிருந்த வெளிச்சம் குறிப்பாக அதன் முகத்தின் மீதிருந்து வெளிச்சம் சற்றும் விலகிவிடக்கூடாது. கண்களில் வெளிச்சம்பட்டதும் அவ்விலங்கு சற்றுநேரம் குத்திட்டு நின்றுவிடும். அந்தக் குறைந்தளவு நேரம்தான் அதைச் சுடுவதற்குரிய நேரம். அதை ஆங் மிகத் துல்லிய மாகப் பயன்படுத்திக்கொண்டு விடுவார். விளக்கின் வெளிச்சம் அசைந்து சிறிது விலகினாலும்கூட விலங்கு அக்கணநேரத்தைப் பயன் படுத்திக்கொண்டு ஓடிவிடும். விளக்கை வெகுநேரம் வைத்திருக்கும் கைகள் வலிக்கும்போது மட்டும் அதைப் பிறருக்கு மாற்றிவிடுவேன். அப்படியான சமயங்களில் விலங்குகள் தப்பித்ததுண்டு. அதனால் நீ பிடித்திருக்கும்போது இதுவரை ஒரு விலங்கும்கூட தப்பித்ததில்லை. இதனால் இந்த விளக்கை நீயே எப்போதும் வைத்திரு என்று சொல்லி இருக்கிறார் ஆங்.

துப்பாக்கியையாவது விலங்கைப் பார்த்தவுடன் எடுத்துச்சுட்டால் போதும். ஆனால் மணிக்கணக்கில் விளக்கைப் பிடித்துக்கொண்டு வருவது, அதுவும் சாலையில் இருபக்கமும் வெளிச்சத்தைப் பாய்ச்சிக் கொண்டு, மரங்களின் அல்லது புதர்களின் இடுக்கில் எங்காவது கண்களின் வெளிச்சப் புள்ளிகள் தெரிகின்றனவா என்று பார்த்துக் கொண்டு, அதற்காக அடிக்கடி இமைக்காது விழித்துக்கொண்டு வருவது கடினமான செய்கை. இவ்வளவு துல்லியமாக செயல்படும் உன்னால்

மிகச் சிறந்த வேட்டையாளராக மாறமுடியும். எனவே துப்பாக்கி சுட கற்றுக்கொள். நான் உனக்குக் கற்றுத்தருகிறேன் என்று அடிக்கடி சொல்கிறார் ஆங். உள்ளுக்குள் அது துப்பாக்கி என்பதைவிட ஒரு கொலைக்கருவி என்கிற படிமம் ஆழப்பதிந்து போய்விட்டதால் அதைத் தொட்டுப் பார்க்கக்கூட ஆர்வம் காட்டுவதில்லை. நமக்கு இவ்விளக்கே போதும். அதில் வெளிக்கிளம்பும் இந்த வெளிச்.... சட்டென்று வலது கையால் விளக்கைப் பிடித்துக்கொண்டு இடக்கை விரல்களால் ஓட்டுநரின் இருக்கைக்கு மேல்கூரையைத் தட்டுகிறேன். அதை உணர்ந்துகொண்ட ஓட்டுநர் வண்டியை மெல்ல நிறுத்துகிறார்.

சாலையின் வலப்பக்க ஓரமாக ஓர் ஒளிரும் புள்ளி. விளக்கின் வெளிச்சம் அவ்விலங்கைத் தவறவிடவில்லை. ஆங் தன் துப்பாக்கியால் குறிவைக்கிறார். அதற்குமுன் ஒருசில நொடிக்குள்ளாக இலைகளுக்குப் பின்னே மறைந்திருக்கும் அவ்விலங்கின் உடலளவு, உயரம் ஆகியவற்றைக் கணித்த ஆங் கிஜாங் என்கிறார். அடுத்த ஓரிரு நொடிகளில் சுடும் ஒலி கேட்கிறது. அப்புதர் மறைவில் துள்ளலும் தீவிரமான அலறல் ஓலமும் கேட்டநொடியே வெளிச்சப் புள்ளி மறைகிறது. அக்கேழையாடு சுடப்பட்டு விட்டது.

வண்டியிலிருந்து இருவர் குதிக்கின்றனர். ஒருவர் கையில் சுட்டு விளக்கு, மற்றொருவர் கையில் பாராங் கத்தி. பிஸ்மில்லாஹ் சொல்லி அறுப்பதற்கு. குண்டடிபட்ட விலங்கைத் தேடிப்போகும்போது அது காட்டுப்பன்றியாக இல்லாத பட்சத்தில் ஒரு முஸ்லிம் கூடப்போவது வழக்கம். குற்றுயிராய்க் கிடக்கும் அவ்விலங்கைக் கண்டுபிடித்து அதன் உயிர் பிரியும் முன்னரே பிஸ்மி சொல்லி அறுத்து அதை ஹலால் ஆக்கிவிடுவார். சுடப்பட்ட விலங்கொன்றும் அதைச் சுட்ட இடத்திலேயே கிடக்காது. குண்டடிபட்டதில் மிரண்டு ஏதாவது ஒரு திசையில் துள்ளிப் பாய்ந்து ஓடத்தொடங்கிவிடும். முடிந்தவரை ஓடித்தளர்ந்து உயிரை இழந்துகொண்டிருக்கும் அது ஓரிடத்தில் சரிந்து சாய்ந்துவிடும். அவ்விலங்கைத் தேடிப்போகும்போது அது நின்ற இடத்திலிருந்தே தொடங்கவேண்டும். சென்ற திசையை ஒடிந்து கிடக்கும் சிறு சிறு கிளைகள் வழியில் சிந்திக்கிடக்கும் குருதித்துளிகள் காட்டிக்கொடுக்கும். சுட்டுவிளக்கு வெளிச்சத்தால் பின்தொடர்ந்து சென்று அது வீழ்ந்து கிடக்கும் இடத்தைக் கண்டுபிடிக்கவேண்டும். சிலவேளை அரை கிலோமீட்டர் தொலைவுக்குக்கூட ஓடியிருக்கும்.

வண்டியிலேயே அமர்ந்திருக்கிறோம். ஆங் வெண்சுருட்டைப் பற்ற வைத்துக்கொள்கிறார். ஒரு வாரத்துக்கு முன்பு ஏறக்குறைய இதே இடத்தில்தான் ஒரு கேழையாட்டைச் சுட்டிருந்தோம். பொதுவாக இக்கேழையாடுகள் இணையாகவே திரிகின்றன. அதுவும் பொழுது மங்கிய நேரங்களில் சாதாரணமாக வண்டியில் போகும்போது கண்களில் தென்படும். இருப்பினும் வேட்டையில் கேழையாடுகள்

கிடைப்பது அதிகமிருக்காது. இந்தக் கேளையாட்டையும்கூட போன வாரம் இதே இடத்தில் ஒன்றைச் சுட்டிருந்ததால் அதன் இணை இங்குதான் சுற்றிக்கொண்டிருக்கும் என்ற கணிப்பிலேயே மீண்டும் வந்திருந்தோம். கணிப்புத் தவறவில்லை. கேளையாட்டு இறைச்சியின் சுவை அப்படி. ஆனால் கேளையாடுகள் கிடைப்பது சிரமம். கடமான்கள் அப்படியல்ல. அதிகம் கிடைக்கும்.

அதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று பொதுவாகவே கடமான்கள் எண்ணிக்கையில் அதிகமிருப்பது. சாலை மருங்கில்தான் அவை மேய்ந்துகொண்டிருக்கும். சாலையோரத்தில் முளைக்கும் புதிய செடிகளின் இளம்தளிர்கள் அதன் விருப்ப உணவு. தனித்தும் குழுவாகவும்கூட சுற்றித் திரிந்துகொண்டிருக்கும். இதனால் அதிக அலைச்சல் இல்லாமல் எளிதில் சிக்கக்கூடிய வேட்டை விலங்காக இருந்தது. இரண்டாவது காரணம் அதன் பெரிய அளவு உடல். நெஞ்சளவு உயரத்தில் ஒரு வளர்ந்த கன்றுக்குட்டி போன்ற அதன் உடல் சுடப்பட்டால் தோட்டாக்களிலிருந்து தப்புவது இலகுவல்ல. உடலின் ஏதாவதொரு இடத்திலாவது தோட்டா பாய்ந்துவிடும். ஒரு கடமான் கிடைத்தாலே முகாமில் உள்ளவர்கள் முழுக்கச் சாப்பிட்டு விடலாம். இப்படியிருக்கையில் இவை அடிக்கடி கிடைத்தால்? ஏறக்குறைய முகாமில் உள்ள எல்லோருக்குமே கடமான் இறைச்சி அலுத்துப் போயிருந்தது. சமயத்தில் சிலநாட்கள் மூன்று வேளைகளும் மானிறைச்சி சாப்பிட வேண்டியிருந்தது. ஒருகட்டத்தில் கணக்கிட்டதில் இதுவரை சாப்பிட்ட இறைச்சி வகைகளில் கோழி, ஆடு, பன்றி இவற்றைவிட மானிறைச்சிதான் அதிகமாக இருந்தது.

வேட்டைக்குச் செல்பவர்கள்கூட ஒன்று கிடைத்தால் போதுமெனத் திரும்புவதில்லை. ஏனெனில் இது உணவுக்கான வேட்டையல்ல சாகசத்துக்கான வேட்டை. ஆனால் எவ்வளவுதான் புசிக்க முடியும்? பயாவ் இறைச்சி என்றாலே அவரவர் அலறத் தொடங்கினார்கள். அந்தளவுக்கு சலிப்புத் தட்டிவிட்டது. சொல்லப்போனால் அதைவிட ஒரு முட்டைக்கோசுக்கு ஏங்கத் தொடங்கினோம். அப்படியும் உபரியாக இருக்கும் இறைச்சியை என்னென்னவோ செய்தும் பார்த்தாகிவிட்டது. வண்டி சண்டகானுக்குப் போகும்போது முப்பத்திரெண்டாவது மைல் காவல்சாவடியை ஏமாற்றிவிட்டு உறவினர்களுக்காகப் பொட்டலம் கட்டிப்போகும். வண்டி போகாத நாட்களில் மீதமிருக்கும் இறைச்சியை உப்புக்கண்டம் போட்டுவைப்பர். தொழிலாளர் குடியிருப்புகளில் துணி காய்வதுபோல உப்புக்கண்டம் தொங்கிக்கொண்டிருக்கும். இதைத்தவிர உபரி இறைச்சியைக் காலி செய்ய இன்னொரு வழியும் உண்டு. அது அருகிலுள்ள முகாமுக்கு அன்பளிப்பாய்த் தந்துவிடுவது. இப்படி அலுத்துப்போய் இறுதியில் ஒரு முடிவெடுத்திருந்தோம். வரும் சில நாட்களுக்குக் கடமான்களைச் சுடுவதில்லை.

வேளையாட்டைத் துரத்திச் சென்றவர்கள் இருபது நிமிடங்களுக்குப் பிறகு அதைத் தூக்கிக்கொண்டு திரும்புகின்றனர். அதன் விலாப் பகுதியில் தோட்டா பாய்ந்திருக்கிறது. பிஸ்மி சொல்லி அறுக்கப் பட்டதில் குரைக்கும் குரல் கொண்ட தொண்டை அரைகுறையாய்ப் பிளந்துகிடக்கிறது. வண்டியின் பின்புறம் ஏற்றுகின்றனர். பிடரியி லிருந்து முதுகுநெடுக நீண்டு வாலின் நுனிவரை கருங்கோடு ஒன்று ஓடியிருக்கிறது. செங்கபில நிற உடலில் குருதிக்கறை உறைந்து வெண்மையான வயிற்றுப் பகுதியிலும் பரவியிருக்கிறது. காலத்தைத் தொலைத்த அதன் கண்கள் வெறித்து விழித்திருக்கின்றன. விளக்கின் ஒளிப்பாய்ச்சலை நிறுத்துகிறேன்.

இன்னமும் நேரமாகியிருக்கவில்லை. எனவே வேட்டையைத் தொடர்வதெனத் தீர்மானிக்கிறார் ஆங். இம்முறை புதிதாக ஒரு சாலையில் செல்வதென முடிவுசெய்து அங்கிருந்து கிளம்புகிறோம். இக்காட்டின் பல இடங்களில் வெட்டுமர வேட்டைகள் நிகழ்ந்து முடிந்ததற்கான அடையாளங்களாகப் பல சாலைகள் கைவிடப்பட்டுக் கிடக்கின்றன. அப்படிப்பட்ட சாலைகளில் சுமையுந்துகள் செல்ல முடியாது. இது போன்ற சிறுவண்டிகள் தாராளமாகச் செல்லலாம். இதுதான் வேட்டைக்குத் தோதாக இருக்கிறது. அப்படி நாங்கள் இதுவரை போகாத சாலையொன்றில்தான் இப்போது செல்லுகிறோம். காட்டுயிர்களைக் கொல்லத்தான் இக்காட்டுச் சாலைகளே இருக் கின்றனவா? இங்கு ஏற்கனவே வேறு பலர் வந்து சென்றதற்கான சக்கரத் தடயங்களைக் காணமுடிகிறது.

விளக்கொளியைப் பாய்ச்சிக்கொண்டு வருகிறேன். வழியிலேயே நாலைந்து கடமான்கள் தென்படுகின்றன. உங்களுக்கு நேரம் நன்றாக இருக்கிறது; பிழைத்துப்போங்கள் என்று கூறிய ஆங் சிரிக்கிறார். வண்டியின் முன்விளக்கு வெளிச்சத்தில் தெரிந்த அவற்றை ஓட்டுநர் திடுமென ஒலிப்பானை அழுத்தி மிரட்ட கணநேரம் வெளிச்சத்தில் கூசிநின்ற அவை மிரண்டு ஓடுகின்றன. வண்டி மேலும் நகர நாங்கள் வேட்டையாட நினைத்திருந்த எதுவும் கண்ணில் சிக்கவில்லை. இரு காட்டுப்பன்றிகள் மட்டும்தான் குறுக்கே கடந்துசென்றன. இன்று பன்றி வேட்டை என்று தீர்மானித்து விட்டால் முஸ்லிம்களை உடன் அழைத்துச் செல்லமாட்டார் ஆங். அதுபோல் அவர்கள் உடனிருக்கும் தருணங் களிலும் இதுபோன்று வலிய வருபவற்றையும் சுடமாட்டார். பன்றி களுக்கும் இன்று நல்ல நேரமாக இருக்கிறது என்று சிரிக்கிறார் ஆங்.

வண்டி ஒரு குலுங்கு குலுங்கி நிற்கிறது.

இதற்குமேல் போகாது என்று ஓட்டுநரிடமிருந்து குரல் வருகிறது. விளக்கை கைமாற்றிக் கொடுத்துவிட்டுக் கீழே அமர்ந்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தேன். ஏன் வண்டி போகாதாம்? எழுந்து பார்க்கிறேன். எதிரே தாழ்வான பழைய தரைப்பாலம். ஆனால் அதைக் கடக்க

முடியாதவாறு சேதமுற்றிருக்கிறது. அப்படியானால் இத்தோடு திரும்ப வேண்டியதுதான். ஏற்கனவே அங்கு வந்திருந்த வேட்டை வண்டிகளும் அத்தோடு திரும்பிப் போயிருந்ததற்கான தடயங்கள் தெரிகின்றன. வண்டியைத் திருப்பச் சொல்கிறோம். எதற்கும் இருக்கட்டுமே என்று கடைசியாக ஒருமுறை அப்பாலத்தின்மீது ஒளியைப் பாய்ச்சுகிறேன். அப்பாலம் கடக்க முடியாதவாறு நடுவில் பிளவுற்றிருப்பது தெரிகிறது. விளக்கை அணைக்க முற்படும்போது பாதையில் வெளிச்சத்தை நன்றாகக் காட்டு என்கிறார் ஆங். காட்டுகிறேன். எதுவும் தென்பட வில்லை. ஆனால் ஆங் எதையோ கவனித்துவிடுகிறார். வண்டியை நிறுத்தச் சொல்லிக் கீழே இறங்குகிறார். சுட்டுவிளக்கோடு அப்பாலத்தை நோக்கி நடக்கத் தொடங்கியதும் இறங்கிப் பின்தொடர்கிறேன்.

அவர் அப்படி எதைப் பார்த்தார் என்று இன்னமும் புரியவில்லை. சாலையின் நடுவில் சுட்டுவிளக்கின் ஒளியைப் பாய்ச்சிக்கொண்டே செல்கிறார். சாலையின் நடுவில் அவருக்கு முன்னால் சில தடங்கள் தெரிகின்றன. அவற்றின் அருகில் சென்றமர்கிறார். அவை பெரிதாக இருந்தன. கடமானின் குளம்படிகளைவிடப் பெரிய குளம்படிகளாக இருக்கின்றன. இதுவரை நாங்கள் வேட்டையாடியிராத ஒரு விலங்கின் குளம்படி என்பது மட்டும் புரிந்துவிடுகிறது. அதுமட்டுமல்ல இவ்விலங்குகள் கூட்டமாகச் சாலையைக் கடந்திருப்பதும் தெரிகிறது. இது ஏதோ மாடுகளின் குளம்படிகள் போல் இருக்கிறதே என்று மெதுவான குரலில் சொல்கிறேன். அதைக் கேட்ட ஆங் ஆமோதிப்பது போல் தன் தலையை மெல்ல ஆட்டி, 'தெம்படாவ்' என்கிறார். காட்டுமாடு, வேட்டைக்குரிய விலங்குகளிலேயே மூர்க்கமானது என்பதை அறிந்திருக்கிறேன்.

ஜம்போங்கானில் இருந்தபோது ஒருமுறை அங்கிருந்த கான்துறை அலுவலர் எங்கள் முகாமுக்கு வண்டியில் வந்து வேட்டைக்கு உடன் வருமாறு அழைத்து வியப்பை ஏற்படுத்தினார். ஒரு கான்துறை அலுவலரே வேட்டைக்கு அழைக்கிறாரே! அவர் அழைக்கும் போது முடியாது என்று மறுக்கமுடியுமா? உடன் செல்லுகிறேன். அங்குக் காட்டுப்பன்றிகளைத் தவிர வேறு வேட்டை விலங்குகள் இல்லை யென்பார்கள். எங்கள் கையில் வேட்டைக்குரிய விளக்கும் இல்லை. நிலா வெளிச்சம்தான் துணை. இருந்தும் போகிறோம். வெகுதொலைவு வரை அலைகிறோம். ஒன்றையும் காணவில்லை. தூக்கம்தான் வருகிறது. அவருக்குத் தெரியாமல் மூன்று கொட்டாவி கூட விட்டு விடுகிறேன். அப்போது ஒரு பெரிய பரந்த புல்வெளிக்கு அருகில் இருந்தோம். அதோ, அதோ என்று கத்துகிறார் அந்த அதிகாரி. அரைகுறை தூக்கத்திலிருந்து விழித்துப் பார்த்தபோது ஒன்றும் தெரிய வில்லை. என்ன என்கிறேன். தெம்படாவ். அதோ அப்புல்வெளிக்குள் போய்க்கொண்டிருக்கிறது பார் என்கிறார். அப்புல்வெளி ஆள்

உயரத்துக்கு மண்டிக்கிடக்கிறது. அது காற்றினால் அசைகிறதா அல்லது காட்டுமாடு புகுந்ததால் அசைகிறதா என ஒன்றும் புரியவில்லை. ஆனால் கேட்பது கான்துறை அதிகாரியாயிற்றே. இல்லையென்றா சொல்லமுடியும்? தெரிகிறது என்கிறேன்.

அதற்கவர் நாளை அவசியம் வேறொரு துப்பாக்கி ஒன்றைக் கொண்டு வரவேண்டும் என்கிறார். ஏன் இந்தத் துப்பாக்கி சுடாதா என்று அவரிடம் கேட்கிறேன். அப்பாவித்தனமாகத்தான் கேட்டேன். ஆனால் அவருக்கு ஆத்திரம் வந்துவிடுகிறது.

அப்படி எதிரே போய் நில். சுடுமா இல்லையா என்று நீயே பார்க்கலாம்.

மொத்தத் தூக்கமும் கலைந்துபோய் நிலைமை முழுமையாகப் புரிகிறது. தப்பு செய்து விட்டோம். கான் துறையினரும், மர வணிகர் களும் எது சொன்னாலும் ஆமாம் என்ற சொல்லைத்தவிர எதுவும் வரக்கூடாது என்றல்லவா பயிற்றுவிக்கப்பட்டிருக்கிறோம். தூக்கத்தில் மறந்து போயிற்றே. கழிவிரக்கம் முகத்தில் ரொம்பி வழிந்துவிட்டது. அந்த அதிகாரியே அமைதிக்குத் திரும்புகிறார். இந்தத் தெம்படாவுக்கு பெரிய உருவம். இதைவிடப் பெரிய துப்பாக்கியால்தான் அதைச் சுடமுடியும் தெரிகிறதா? தெரிகிறது என்று தலையை ஆட்டுகிறேன். நாளை வேறு ஏற்பாட்டோடு வருகிறேன்.

சொன்னபடியே வந்தார். அவருடன் இரண்டு இராணுவ வீரர்களை உடன் அழைத்து வந்திருந்தார். அவர்களின் கைகளில் இயந்திரத் துப்பாக்கிகள் இருந்தன. மருட்டி வருகிறது. சண்டகான் நகரில் சும்மா ரோந்துக்குப் போகும் காவலர்கூட கையில் எம்-16 ரகத் துப்பாக்கியுடன் தான் போவார். பார்த்தாலே ஒவ்வாது. இப்படி இயந்திரத் துப்பாக்கி யோடு வேட்டைக்கு வந்தால்? அன்று வயிறு சரியில்லை என்று சொல்லி உடன் செல்லவில்லை. அன்றும் சரி அதற்குப் பிறகும் சரி அவர்கள் அப்படி எதையும் சுட்டதாகத் தெரியவில்லை. ஆக அந்தத் தெம்படா வைப் பார்க்கும் வாய்ப்பையும் பெறவில்லை. அப்படி அன்று காணக் கிடைக்காமல் போனது மீண்டும் இவ்விடத்தில் திரும்பி இருக்கிறதா?

ஆங் திரும்பி நடக்கிறார். என்ன செய்யபோகிறீர்கள் என்று கேட்கிறேன். இந்தத் தெம்படாவைச் சுட இந்தத் தோட்டாக்களுக்கு வலு போதாது. இன்னும் ஆற்றல் மிக்கத் தோட்டாக்கள் தேவை. அதை வாங்கிய பிறகுதான் இங்கு வருவதைப் பற்றி யோசிக்க வேண்டும் என்கிறார். ஆனால் அத்தோட்டாக்களை வரவழைப்பதற்காக அடுத்த நாளே அவருடைய வீட்டுக்குத் தகவலை அனுப்பிவிடுகிறார். இது அவர் தெம்படாவ் வேட்டைக்குப் போவதை உறுதிப்படுத்துவதாக இருக்கிறது.

**தெம்படாவ் வேட்டை**



ஆயாக்-யாக்-யாக்-யாக்...

பறவையின் குரல். இன்றும் வந்துவிட்டது. பல் துலக்கியவாறே வெளியே வந்து எட்டிப்பார்க்கிறேன். எதிரே ஓடையின் மறுகரையில் தொழிலாளர்கள் பயிரிட்டிருந்த மரவள்ளிச் செடிகள் குற்றுயரத் தோப்பாக அடர்ந்திருக்கின்றன. அதன் மேல் வழக்கமாக அப்பறவைகள் இருக்கும். ஆனால் இப்போது இல்லை. முதன்முறையாக அதைப் பார்க்க நேர்ந்தபோது உடல்மயிர்களின் குறுநடனம். பார்வைக்கு அப்படியே காக்காதான். மரவள்ளிச் செடிகளின் மீது அமர்ந்திருக்கையில் தொலைப் பார்வைக்கு அது அப்படித்தான் தெரிந்தது. இந்தக் காட்டுக்குள் காகம் என்றதும் அயல்நாட்டில் ஓர் உறவினரைக் கண்ட குதூகலம். ஊரில் ஒரு காக்கா குருவியை மதித்திருப்போமா? ஆனால் அந்நிய மண்ணில் இப்படித் தனித்து அலையவிட்டால் உடனே அய்... காக்கா.

இப்போது அப்பறவையைக் காணோம். ஆனால் சத்தம் கேட்டதே! இப்பறவையைக் காக்கா என்றுதான் தொலைவில் இருந்து ரசித்து வந்தேன். ஆனால் ஒருநாள் அது வாய் திறந்து ஆயாக்-யாக்-யாக்-யாக் என்று கத்தியபோது அது காகம் இல்லை என்பது தெரிந்துவிடுகிறது. இப்போதும் அதே குரல். அருகில்தான் கேட்டது. வீட்டுக்கு வெளியே வந்து திடலில் பார்க்க ஒன்றுக்கு இரு பறவைகளாகத் தரையில் எதையோ கொத்தித் தின்றுகொண்டிருக்கின்றன. இது என்ன பறவையெனச் சொல்லாமல் சொல்லுகிறது அதன் அலகுக்கொண்டை. நல்ல பெரிய கொண்டை. மஞ்சளும் வெண்மையும் கலந்த நிறம். இந்த இருவாசியின் பெயர் என்னவாக வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். இதற்கொரு பெயர் நாமே வைக்கலாம். காக்கா இருவாசி. பின்னே ஊர்க் காக்காவைப்போல இதுவும் எவ்வளவு நெருக்கமாய் வீட்டுக்கும் மனிதருக்கும் அருகில் நெருங்கி வருகிறது. இருவாசிகள் என்றாலே அது கவிகைவாழ் பறவை. இதுவோ தரைவரை இறங்கிவந்து இப்படிக் காக்காவைப்போல் கொத்தித் தின்றுகொண்டிருக்கிறது. மேய்ந்து கொண்டிருந்த இருவாசிகள் திடீரென வண்டி வரும் ஒலி கேட்டு மைநிறச் சிறகின் விளிம்போரமாய் வெண்ணிறம் காட்டிப் பறக்கின்றன.

பக்கத்து முகாமின் வாகனம். வியோங் இறங்கி வருகிறார். என்ன காலை நேரத்திலேயே என்று தோன்றியதுமே அவர்கள் ஏன் வந்திருக்கிறார்கள் என்பது தெரிந்துவிடுகிறது. நினைத்தது சரி. அவர்கள் வண்டியில் வந்தது கடமானின் இறைச்சி. எதை வேண்டாம் என்று தவிர்த்துவிட்டு வந்தோமோ அது தானாக வந்துசேர்கிறது. அவர்கள் வெறும் கடமான் இறைச்சியோடு மட்டும் வரவில்லை, ஆங் கேட்டு அனுப்பியிருந்தத் துப்பாக்கித் தோட்டாக்களோடும் வந்திருக்கின்றனர். அதைப் பார்த்த ஆங் முகம் மலர்கிறது. சீனத்தேநீரின் சுவையோடு வேட்டைக் கதையின் சுவையும் தொடர்கிறது.

அந்தக் குறிப்பிட்ட பாலத்துக்குத் தாங்களும் சென்றிருப்பதாகவும் பின்னிரவில் அங்கு தெம்படாவைப் பார்த்திருப்பதாகவும் ஆனால் அதை வேட்டையாடும் அபாயம் அறிந்து எதுவும் செய்யாமல் திரும்பி விட்டதாகவும் அவர்கள் தெரிவிக்கின்றனர். அதற்கு ஆங், நானும் இதுவரை அதை வேட்டையாடியதில்லை. இதுதான் முதல்முறை. சவாலை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். பிறகு வேட்டைக்காரன் என்று சொல்லிக்கொண்டு துப்பாக்கியைத் தூக்கித் திரிவதில் என்ன பொருள் இருக்கிறது சொல்லுங்கள் என்றதும் அவர்கள் வாழ்த்துக் கூறி விடைபெறுகின்றனர். வேட்டையில் தெம்படாவ் சிக்கினால் உங்களுக்கும் உறுதியாய் பங்குண்டு எனச் சொல்லி அனுப்பி வைக்கிறார் ஆங். அவர்கள் சென்றபிறகு தோட்டாக்கள் நிரம்பிய பெட்டியை வைத்துப் பார்த்துக்கொண்டிருந்த ஆங் சொல்கிறார். இன்று முழுநிலவு நாள். தெம்படாவ் வேட்டைக்குப் போகிறோம்.

நிலவொளியின் வனப்பு சொட்டிக்கொண்டிருக்கும் அப்பாலத்துக்கு வந்து சேருகிறோம். வேறொரு காலமாக இருந்தால் அமைதியாக இரசித்துக்கொண்டிருக்கலாம். ஆனால் எல்லோருக்கும் உள்ளே பரபரப்பு குதித்துக் கொண்டிருக்கிறது. வழக்கமான வேட்டைதானே ஏன் இப்படிப் படபடப்பாய் இருக்கிறீர்கள் என்று கேட்கிறேன். இதர அவ்வரும் சேர்ந்து தெம்படாவைப் பற்றித் திகில் படர்ந்த முகத்துடன் விவரிக்கத் தொடங்கியதில் படபடப்பு அவர்களுக்கு இன்னும் கூடி விடுகிறது. பாலத்திலிருந்து இருநூறு மீட்டர் தொலைவில் வண்டியை நிறுத்தியிருக்கிறோம். அதுவும் திரும்பிப் போவதற்குத் தோதாக வண்டி யின் திறந்த பின்புறம் பாலத்தை நோக்கி இருக்கிறது. ஒருவேளை அவ்விலங்கு துரத்திவந்தால் உடனே கிளம்பிவிடலாமாம். அந்தளவுக்கா அது துரத்தப்போகிறது? சரிவில் வண்டி இறங்கிவிடாமலிருக்க இரு கற்களைக்கொண்டு பின்சக்கரத்தில் முட்டுக்கள் வேறு கொடுக்கப் படுவதைப் பார்த்தால் என்னவோ இராணுவ நடவடிக்கையைப்போல் ஆர்ப்பாட்டமாக இருக்கிறது. அவ்விலங்கைப் பார்த்துவிட்டால் அவரவர் பங்குக்கு என்னென்ன செய்ய வேண்டும் என்று முன்கூட்டியே சொல்லியிருந்ததைத் திரும்பவும் ஒருமுறை நினைவூட்டுகிறார் ஆங். ஆனால் பார்த்தால்தானே?

பத்துமணிக்கு வந்தவர்கள் பனிரெண்டாகியும் காத்திருக்கிறோம். இன்னும் விலங்கு வரவில்லை. ஆனால் தூக்கம் வருகிறது. ஒருவருக் கொருவர் பேசக்கூட முடியாமல் எவ்வளவு நேரம் அப்படியே அமர்ந்திருக்க முடியும்? முன்பகுதியில் இருவரும் பின்பகுதியில் நால்வருமாக அமர்ந்திருக்கிறோம். பாவம் அடிக்கடி வெண்சுருட்டுப் பிடிக்கும் ஆங் கூட அதன் வாடையால் எங்கே அவ்விலங்கு வராமல் போய்விடுமோவென அடக்கிக்கொண்டிருக்கிறார். பின்புறக் கதவின் விளிம்போரம் எதிரும் புதிருமாக இருவரும் அமர்ந்திருக்கிறோம்.

கையில் துப்பாக்கியைப் பிடித்தபடியே அரைத்தூக்கத்தில் இருக்கிறார் ஆங். அதே நிலையில் துப்பாக்கிக்குப் பதில் விளக்கோடு அமர்ந்திருக்கிறேன். இவ்விளக்கை வந்ததில் இருந்து இன்னும் இயக்கவே இல்லை. ஆங் சமிக்ஞை கொடுத்த பின்புதான் இதை இயக்கவேண்டும்.

தெம்படாவ் தெளிவாகச் சாலையின் நடுவில் தெரிந்த பின்புதான் அதைச் சுடவேண்டுமாம். மற்ற விலங்குகளைப்போல காட்டின் விளிம்பில் நின்றுகொண்டிருக்கையில் இதைச் சுடமுடியாதாம். அது வீண் வேலையாம். இப்போது இப்படிக் காத்திருப்பதும்கூட வீண் வேலைதானோ? அது இன்று வருமா? மற்ற வேட்டையென்றால் இந்நேரம் முடித்துக்கொண்டு திரும்பியிருப்போம். நிலவு வெளிச்சத்தில் அவ்வப்போது கடிகாரத்தைப் பார்த்தபடி அமர்ந்திருக்கிறோம். ஒருமுறை தூங்கிவிழுந்து எழுந்து கடிகாரத்தைப் பார்க்கிறேன் மணி ஒன்று. இதற்கும் மேலுமா? பாலத்தைத் திரும்பிப் பார்க்கிறேன். பாலத்தின் இடப்பக்கம் ஓர் அசைவு தெரிகிறது. கருப்பாக ஏதோ தெரிகிறது. அது மெதுவாக முன்னேறிச் சாலையை நோக்கி நகர நான்கு கால்களும், இரு கொம்புகளும், பெரிய உருவமும் காட்டு மாடேதான். தெம்படாவ்.

அரைகுறை தூக்கத்தில் இருக்கிறார் ஆங். தட்டி எழுப்புகிறேன். விழித்துப் பார்க்கிறார். அமைதியாகப் பாலத்தை நோக்கிச் சுட்டுகிறேன். அது இப்போது ஏறக்குறைய பாலத்தின் நடுவில் நின்றுகொண்டிருக்கிறது. வண்டிக்குள் பரபரப்பின் தொற்றல். திட்டமிட்டபடி வண்டியிலிருந்து இறங்கிக் கொண்ட ஆங் தன் துப்பாக்கியைச் சரிசெய்துகொண்டு அந்தத் தெம்படாவ்வை நோக்கி முன்னேறுகிறார். வண்டியின் விளிம்போரம் எந்நேரமும் விளக்கின் ஒளியைப் பாய்ச்ச தயாராகிறேன். ஆனால் முதலில் சுடும்போது விளக்கைப் பயன்படுத்த வேண்டாமென்று ஆங் சொல்லியிருக்கிறார். நிலவின் வெளிச்சத்தில் தான் அதை முதலில் சுடப்போகிறார்.

ஆங் முன்னேறி வருவதைப் பார்த்துவிட்டாலும் அது ஓடவோ ஒதுங்கவோ எத்தனிக்காது சற்றும் அசையாமல் தலைதூக்கி பார்த்தபடி நிற்கிறது. அதை நெருங்கிய ஆங் சுமார் நூறடி தொலைவில் நின்று கொள்கிறார். துணிச்சல். அவர் தன் துப்பாக்கியைத் தோள்பட்டையில் பொருத்திக் குறிபார்ப்பது நிலவொளியில் தெளிவாகத் தெரிகிறது. கைகள் எந்நொடியிலும் குதிரையை அழுத்தலாம். அக்காட்டுமாடு அமைதியாகப் பார்க்கிறது. துப்பாக்கியும் பார்த்துக்கொண்டிருக்கிறது. ஒரு நொடி. துப்பாக்கி பேசுகிறது. அப்பேச்சு கானகத்தின் அமைதியைக் குலுக்குகிறது. வலுத்த மொழி.

அந்தத் தெம்படாவின்மேல் குண்டு பாய்ந்துவிட்டது. அதன் முன் கால்கள் ஒருமுறை மடங்கியது. ஒரு சில நொடிகள்தான். அது மீண்டும் எழுகிறது. அதுவரை சாதுவாக நின்றுகொண்டிருந்த அதற்கு எங்கிருந்து

தான் சீற்றம் வந்ததோ தெரியவில்லை. அவரை நோக்கிச் சீறிப்பாய்ந்து துரத்தத் தொடங்குகிறது. அவரும் சட்டென்று சுதாரித்துக்கொள்கிறார். தன் துப்பாக்கியுடன் வண்டியை நோக்கி ஓடிவரத் தொடங்குகிறார். வண்டியில் இருந்து சீக்கிரம் சீக்கிரம் எனக் குரல்கள். திட்டமிட்டபடியே ஓட்டுநர் வண்டியை இயக்கி ஆயத்தநிலையில் வைத்துக்கொள்கிறார். இப்போதுதான் விளக்குக்கு வேலை. பொத்தானை அழுக்குகிறேன். ஒளி வெள்ளம் அதன் முகத்தில் பாய்கிறது. பெரும் வட்டமாய் மின்னும் கண்கள். வெளிச்சத்தை எதிர்பாராத அது நிலைகுத்தி ஓரிடத்தில் நிற்கிறது. அதற்குள் ஆங் ஓடிவந்து வண்டியில் தொற்றிக்கொள்கிறார். அந்தத் தெம்படாவும் கொஞ்ச நேரமே அசந்து நிற்கிறது. சற்று சுதாரித்துக்கொண்ட அது மீண்டும் பழைய வேகத்திலேயே துரத்தத் தொடங்குகிறது. ஓடும் வண்டியின் பின்னாலேயே துரத்திக்கொண்டு வருகிறது. ஒரு பெரிய புழுதிப் படலம் கிளம்புகிறது. இதற்குள் துப்பாக்கியின் தோட்டா இரண்டாம் முறை பேசுகிறது.

இம்முறை அது விலாப்பகுதியில் பாய்ந்ததை வெளிச்சத்தின் உதவியால் காணமுடிகிறது. தளர்ந்த தன் உடலை ஒரு குலுக்கு குலுக்கிக் கொள்கிறது. தோட்டா பாய்ந்த இடத்திலிருந்து குருதி கொப்பளித்துக் கிளம்புகிறது. தெம்படாவ் முதன்முறையாக உள்ளத்துள் ஓர் அச்சத்தைப் பரப்புகிறது. இதுவரையிலான எவ்வேட்டையிலும் இப்படி நேரடியாக ஒரு விலங்கின்மீது குண்டு பாய்வதைப் பார்த்ததில்லை. கையிலிருந்த விளக்கு அனிச்சையாக நழுவுகிறது. அவ்விளக்கை வண்டியின் பின்கதவு ஓரமாக ஒட்டி வைத்தபடி கெட்டியாகப் பிடித்துக்கொள்கிறேன். ஆனாலும் கைநடுங்குகிறது. வெளிச்சத்தை மீண்டும் அதன்மேல் விசிறுகிறேன். எதிர்பார்த்ததற்கு மாறாக அது இன்னமும் வண்டியைத் துரத்தியபடி வந்துகொண்டிருக்கிறது. இத்தகைய சீற்றம் வியப்புக்குரியது. இம்முறை மூன்றாம் முறை சுடுவதற்குத் தயாராகிறார் ஆங்.

தோட்டா மிகச்சரியாகத் தொண்டைப் பகுதிக்குள் பாய்கிறது. வண்டி ஓடிக்கொண்டிருக்கும் நிலையில் குறிபார்த்துதான் அவ்விடத்தில் சுட்டாரா அல்லது நிகழ்தகவாக அமைந்ததா எனத் தெரியவில்லை. ஆனால் அது அதன் ஆவேசத்தை முடக்குகிறது. நடை தளர்கிறது. வேகம் குறைந்து மெல்லக் கால்கள் மடங்க முதன்முறையாகத் தரையிலே சரிந்து விழுகிறது. வண்டி நிறுத்தப்படுகிறது.

கீழே விழுந்துவிட்டாலும் உடலில் இன்னும் அசைவிருக்கிறது. தலையை ஒருமுறை தூக்கிப் பார்க்க முயல்கிறது. ஆனால் முடியவில்லை. ஆங் வண்டியிலிருந்து இறங்கி அதை நோக்கி நடக்கிறார். சற்றுப் பாதுகாப்பான தொலைவில் நின்றுகொள்கிறார். துப்பாக்கியின் பேச்சு தேவைப்படவில்லை. உடல் ஒரு துள்ளுத் துள்ள இறுதியாக ஓய்கிறது தெம்படாவின் கடைசி மூச்சு.

ரெண்டாங் மணம் முகாம் முழுக்கப் பரவுகிறது. இன்று ரெண்டாங்காக உருவாகிக் கொண்டிருப்பது நேற்றிரவு சுடப்பட்ட தெம்படாவ். இன்னொரு பக்கம் மாட்டுவால் சூப் கொதித்துக் கொண்டிருக்கிறது. முகாம் முழுக்க ஒரே கும்மாளமாய் இருக்கிறது. ஆங் தன் வேட்டைச் சாகசக் கதையை யார் எத்தனை முறை கேட்டாலும் அலுக்காமல் சொல்லிக்கொண்டிருக்கிறார். உண்மையிலேயே அவருக்கு அது சாகசம்தான். நேற்றிரவு அவர் கடைசி முறையாகச் சுட்ட பின்பு யாரும் அத்தெம்படாவ் அருகில் போகக்கூடத் துணியவில்லை. அது இறந்து விட்டது என்பதை அறிந்தும்கூட யாரும் அதை நெருங்கவில்லை.

ஆங், ஜெய்னலை அழைத்து இது இறந்துகொண்டிருக்கிறது. சீக்கிரம் வந்து ஹலால் ஆக்கிவிடு என்கிறார். ஆனால் ஜெய்னலோ வண்டியை விட்டு இறங்கவேயில்லை. அந்தளவுக்கு அவ்விலங்கின் சீற்றம் அனை வரையும் மிரட்டியிருந்தது. கால்மணி நேரம் பொறுத்து அதனிடம் எந்த அசைவுமே இல்லை என்பது உறுதியானவுடன் அருகே நெருங்கினோம். அந்தக் கன்னங்கரிய உருவத்தின் கண்கள் நிலைகுத்தி உறைந்திருந்தாலும் மிடுக்கு மட்டும் குறையவில்லை. அருகே சென்றதும் கவனிக்கிறேன். காலுறை அணிந்த செவிலியர் போல அதன் நான்கு கால்களுமே முட்டிகள்வரை முழுக்க வெள்ளை நிறத்தில் இருக்கின்றன. அதைச் சுட்டியபோது அதன் புட்டத்தைப் போய்ப் பார்க்கச் சொல்கிறார்கள். பார்த்தபோது அங்கேயும் ஒரு வெண்ணிறத் திட்டு. இதுதான் இந்தத் தெம்படாவ் இனத்தின் சிறப்பு. ஆண், பெண் இரண்டுக்குமே இப்படித் தான் இருக்கும் என்கிறார்கள்.

அடுத்த சிக்கல் இவ்வளவு பெரிய உருவத்தை இந்தச் சின்ன வண்டியில் எப்படி ஏற்றிச் செல்வது? அப்படியே வண்டியில் ஏற்ற முடிந்தாலும் அதைத் தூக்கிப் போட இந்த ஆறு பேர் போதாது. கடைசியில் அதன் பின்னங்கால்கள் இரண்டோடு பின்பக்கத்தை மட்டும் வெட்டி எடுத்துச் செல்வது என்று முடிவாகிறது. மீதிப் பாகத்தை போகும் வழியில் பக்கத்து முகாமில் தகவல் சொல்லி அவர் களை வந்து எடுத்துக்கொள்ளச் சொல்வது. அதன்படி அம்முகாமுக்குச் சென்று தகவல் சொல்லி அவர்களை அனுப்பிவைத்துவிட்டு முகாமுக்குத் திரும்பியபோது விடிந்தே விடுகிறது. அதிலிருந்தே தொடங்கிய சாகசக்கதை இன்னமும் ஓயவில்லை.

தீராத் தூக்கத்தால் கண்கள் பொங்குகின்றன. இந்த ஆரவாரத்தில் எங்கே தூங்குவது? இச்சூழலிருந்து சற்று விலகியிருந்தால் போதும் என்று தோன்றப் பாறை நீரூற்றுக்குச் சென்று முகத்தைக் கழுவிக் கொள்கிறேன். பனிக்கட்டி போல் குளிர்ச்சியாக இருக்கிறது நீர். கொஞ்சம் நீரைக் குடிக்கிறேன். சோர்வு உடல், மனம் இரண்டிலிருந்தும் விடைபெறும் உணர்வு. என்ன வேட்டையெல்லாம் முடிந்ததா என்று

கேட்டவாறு வருகிறார் ஓமர். அவரது கேள்விக்கு உடனே பதில் சொல்ல முடியவில்லை. அவ்வளவு குண்டுகளையும் தாங்கிக்கொண்டு அந்தத் தெம்படாவ் சீறிப்பாய்ந்து ஓடிவந்த காட்சி தோன்றிக் கொண்டேயிருக்கிறது. இருவருமாக அப்பாறையில் அமர்கிறோம். ஓமரின் கேள்விக்கு பதில் சொல்லத் தொடங்குகிறேன்.

இவ்வளவு நாட்கள் வேட்டைக்குப் போனதற்கும் நேற்று வேட்டைக்குப் போனதற்கும் நிறைய வேறுபாடு. எல்லா வேட்டை எளிலுமே விலங்குகளைத்தான் கொன்றோம் என்றாலும் அவை யெல்லாம் எங்கோ வெகுதொலைவுக்கு ஓடிப்போய் இறந்துபோகும். ஆட்கள் சென்று அதைத் தூக்கி வரும்போது அது பிணமாகியிருக்கும். அதனால் ஒன்றும் தெரியவில்லை. ஆனால் நேற்றைக்குக் குண்டடி பட்ட ஒரு விலங்கு எப்படித் துடிதுடித்துச் சாகும் என்பதைக் கண்ணெதிரே பார்த்தேன். இப்போது நினைத்துப் பார்த்தால் கடமான்கள், கேழையாடுகள், தாடிப்பன்றிகள் எல்லாம் அப்பாவி அமெரிக்கந்தியர்கள் போல தோன்றுகின்றன.

இதில் அமெரிக்கந்தியர்கள் எங்கே வந்தார்கள்?

கொலம்பஸ் கதை கேள்விப்பட்டிருப்பீர்களே. அய்ரோப்பியக் கடலோடிகள் முதன்முதலில் அமெரிக்கத் தீவுகளுக்குச் சென்றபோது வேடிக்கை பார்க்கவந்தச் செவ்விந்தியர்களைத் துப்பாக்கியால் மனசாட்சியே இன்றிச் சுட்டுக்கொன்றார்களாம். துப்பாக்கி என்றால் என்ன? அது சுட்டால் என்ன ஆகும் என்பதைப் பற்றியெல்லாம் ஒன்றுமே தெரியாத அந்த அப்பாவி மக்கள் கொத்தாக மடிந்து வீழ்ந்தார்களாமே? அப்படித்தானே இந்த விலங்குகளும்?

இக்காட்டில் எனக்குத் தெரியாமல் ஏதும் போதி மரம் இருக்கிறதா என்ன? ஓமர் சிரிக்கிறார்.

நான் புத்தன் இல்லை. ஆனால் அசோகர் ஆகிவிட்டேன். நேற்றைய வேட்டைக்களத்தில் அந்தத் தெம்படாவ் நன்றாகப் பாடம் கற்றுக் கொடுத்துவிட்டது.

அதாவது பிலிப்பினோ பூர்வக்குடிகளைப்போல.

இதில் பிலிப்பினோ எங்கே வந்தார்கள்?

மெக்கல்லன் கதை கேள்விப்பட்டதில்லையா நீ? அவர் பல நாடுகள் சுற்றிவிட்டுத் தன் நாடு செல்லும் வழியில் பிலிப்பைன்ஸ் வந்தபோது அங்குள்ள தொல்குடிகளோடு நடந்த போரில் கொல்லப்பட்டார் என்பதுதானே வரலாறு.

ஆமாம். எல்லோரும் அப்பாவிகளாக இருந்துவிடுவார்களா? நேற்று தன் கடைசிமூச்சு உள்ளவரை எங்களை எதிர்த்துத் தாக்க ஓடிவந்த தெம்படாவை இன்னமும் மறக்க முடியவில்லை. என்ன ஒரு வீரம்! அதனால்தான் கடைசியில் அதை வெட்டப் போனபோது காணப்

பிடிக்காமல் வண்டியின் முன்னிருக்கையில் வந்து அமர்ந்துவிட்டேன்.

இதே கதைதான் எனக்கும். அதனால்தான் நான் வேட்டைக்கு வருவதில்லை.

ஆமாம். நீங்கள் எப்போதுமே வேட்டைக்கு வந்ததில்லை. உங்களுக்கு என்ன கதை?

உனக்குத் தெம்படாவ் என்றால் எனக்கு யானை.

யானையா? அதையுமா தின்னுவார்கள்?

தின்னுபவர்களும் இருக்கிறார்கள். ஆனால் அன்று நடந்த வேட்டை வெறும் சாகசத்துக்காக. தான் வேட்டையாடிய விலங்குகளின் பட்டியலில் இதுவும் உண்டு என்று காட்டிக் கொள்வதற்காக. இப்படி யெல்லாம் ஒரு பட்டியலை மனிதர்கள் வைத்திருக்கிறார்கள் என்பதை அறியாத அந்த யானை தன் பெருத்த உடலோடு எப்படித் துடிதுடித்து அடங்கியிருக்கும் என்று யோசித்துப்பார்.

உண்மை. அதை யோசிக்கவே முடியவில்லை. எப்படி முடியும்? ஒரு காட்டுமாடே இப்படி என்றால், யானை? திடீரென மனசுக்குள் தோன்றிய உணர்வை ஓமரிடம் பகிர்ந்துகொள்கிறேன். இந்த வேட்டை இறைச்சிக் குறித்து இன்றிலிருந்து ஒரு முடிவு எடுக்கப்போகிறேன்.

இனி இறைச்சியே சாப்பிடப் போவதில்லையா?

அந்தளவுக்குத் திருந்தவில்லை. இனிமேல் வேட்டை இறைச்சி எதையும் உண்ணப் போவதில்லை. அவ்வளவுதான்.

இதற்கு விடையேதும் கூறாமல் சாலையில் யாரையோ பார்த்து வரவேற்கிறார் ஓமர். யாரென்று திரும்பிப் பார்க்கிறேன். பிலியவ் தோளில் ஒரு மூட்டையைக்கொண்டு வந்து களைப்புடன் கீழே வைக்கிறார். ஒருமுறை எங்கள் இருவரையும் பார்த்துப் புன்னகைத்து விட்டு நேரே ஊற்றுக்குச்சென்று நீரைக்குடித்துவிட்டு முகம் கழுவிக்கொண்டு எங்களோடு அமர்கிறார். முகாம் வீட்டிலிருந்து ஆரவாரம் காற்றில் மிதந்து வருகிறது. பிலியவ் கேட்கிறார். என்ன ஏதாவது விருந்தா?

சரியாகச் சொல்லிவிட்டீர்கள். விருந்துதான். தெம்படாவ் விருந்து. இருந்து சாப்பிட்டுவிட்டுப் போகலாம்.

இல்லை. பரவாயில்லை.

என்ன பரவாயில்லை? எப்போது பார்த்தாலும் இப்படியே ஏதாவது சொல்லிக்கொண்டு நழுவிப் போய்விடுகிறீர்கள். இன்றைக்குச் சாப்பிட்டுவிட்டுப் போக வேண்டும்.

இல்லை. நீங்கள் என்னை மன்னிக்கவேண்டும். நான் சாப்பிடு கிறேன். ஆனால் எனக்கு வேறு ஏதாவது கொடுங்கள். இந்தத் தெம்படாவ் வேண்டாம்.

ஏன் பிலியவ், தெம்படாவ் பிடிக்காதா?

பிடிக்கும். ஆனால் துப்பாக்கியால் சுட்டது வேண்டாம். முதன்முதலாக உரையாடலில் குறுக்கிடுகிறேன். ஏன் பிலியவ் சும்பித்தானால் கொன்றால்தான் சாப்பிடுவீர்களா?

பிலியவ் இதற்கு உடனடியாக மறுமொழி கூறவில்லை. எதையோ யோசிப்பவர்போல் சற்று நேரம் அமைதியாக இருக்கிறார். பிறகுதான் வாயைத் திறக்கிறார். நீங்கள் எல்லாம் நகரவாசிகள். நான் எளிய காட்டுவாசி. நான் சொல்லுவதில் ஏதாவது தவறு இருந்தால் முதலில் என்னை மன்னித்துக்கொள்ளுங்கள். நாங்களும் வேட்டையாடிகள் தான். மறுக்கவில்லை. ஆனால் அதற்கென்று சில நியதிகளை வைத்திருக்கிறோம். எந்தெந்த விலங்குகளை எந்தெந்தப் பருவத்தில் வேட்டையாட வேண்டும் எனத் தெரிந்து வைத்திருக்கிறோம். அதை மீறமாட்டோம். குறிப்பிட்ட பருவத்தில் சில குறிப்பிட்ட விலங்குகள் இனப்பெருக்கத்துக்காகக் குழுமும். அப்போது அவற்றை வேட்டையாடக் கூடாது என்று புரிந்து வைத்திருக்கிறோம். பின் அந்த இனம் எப்படிப் பெருகும்? அந்தப் பருவங்களில் இனப்பெருக்கக் காலமல்லாத பிற விலங்குகளைத்தான் வேட்டையாடுவோம். அதேபோல் குறிப்பிட்ட பகுதியில் நிறைய பெண் விலங்குகள் இருக்கும். ஆனால் அவற்றுக்கு ஏற்ற வகையில் ஆண் விலங்குகள் இருக்காது. சமயத்தில் ஒரே ஒரு ஆண் விலங்கு மட்டுமே இருக்கும். அப்போது அந்த ஆண் விலங்கை வேட்டையாட மாட்டோம். எங்கள் சும்பித்தானுக்கு இந்த நியாயங்கள் எல்லாம் புரியும். ஆனால் உங்கள் துப்பாக்கி அப்படியல்ல. ஒரு விலங்கைப் பார்த்தாலே போதும். அதன் வாய் திறந்து விடுகிறது. அதனால்தான் மறுக்கிறேன். மீண்டும் கேட்டுக்கொள்கிறேன். நான் பேசியதில் ஏதும் தவறு இருந்தால் மன்னித்துவிடுங்கள்.

இருந்தால் அல்லவா மன்னிக்க? அவருடைய சொற்கள் சும்பித்தானின் அம்புகள். எங்களைச் சாய்த்திருந்தன. ஓமர் வாயைத் திறக்கிறார். உங்களை மன்னிக்க நாங்கள் யார் பிலியவ்? நீங்கள் நினைத்துக் கொண்டிருப்பது போல நகரத்து மனிதர்களாகிய நாங்கள் அறிவாளிகள் இல்லை. அடி முட்டாள்கள். நீங்கள் சொல்லிய இச்செய்திகளின் அடிப்படைகூட எங்களுக்குத் தெரியாது. இதையெல்லாம் உங்களை மாதிரி ஒருவர் அருகிலிருந்து சொல்லிக் கொடுத்தால்தானே எங்களுக்குத் தெரியும். நீங்கள் இப்படி விருந்தினரைப் போல வந்து போய்க் கொண்டிருந்தால் எப்படித் தெரியும்? முதலில் நீங்கள் அவசியம் எங்களோடு தங்கவேண்டும்.

ஓமர் வாய்ப்பை என்ன அழகாகப் பயன்படுத்துகிறார்? ஆனால் பிலியவ் வழக்கம் போலத் தனது அழகிய மொழியில் பேசுகிறார்.

இப்படிச் சிரித்தே மயக்காதீர்கள் பிலியவ். எங்களுக்குத் தெரிந்த வரை நீங்கள் இக்காட்டுப் பகுதிக்குள்ளேதான் சுற்றுகிறீர்கள். இங்கே

தங்கிக்கொண்டு சுற்றினால் என்ன என்று கேட்கிறேன் என்றதும் பிலியவ் மீண்டும் சிரித்துவிட்டுச் சொல்கிறார். சிக்கல் சுற்றுவதில் இல்லை. தங்குவதில்தான். என்னால் ஓரிடத்தில் நிலையாகத் தங்க முடியாது.

ஓமர் குறுக்கிடுகிறார். அநேகமாக இன்னும் மூன்று மாதங்களில் இந்த முகாம் முடிந்துவிடும். அதுவரை தங்கினால் போதும் பிலியவ்.

மூன்று மாதமா?

மூன்று மாதம் என்பது உங்களுக்கு மூன்று ஆண்டுகள் என்பது எங்களுக்குத் தெரியும். உங்களை இங்கே தங்கச் சொல்கிறோமே தவிர நீங்கள் உங்கள் விருப்பத்துக்கு எங்கே வேண்டுமானாலும் சென்று வரலாம். நீங்கள் எங்களோடிருந்தால் அது எங்களுக்குப் பெரிய ஆன்ம பலம். அதனால்தான் இவ்வளவு கெஞ்சிக் கேட்கிறோம். ஒத்துக் கொள்ளுங்கள் பிலியவ். ஏறக்குறைய கெஞ்சுகிறார் ஓமர்.

முதன்முதலாக பிலியவ் சற்று இறங்கிவரும் அறிகுறி அவருடைய சொற்களில் வருகிறது. என் படகு இங்கிருந்து வெகு தொலைவில் இருக்கிறது.

அவ்வளவுதானே. அதைப் பங்கலானில் நமது ஆட்கள் பார்த்துக் கொள்வார்கள். விடுங்கள் என்று ஓமர் சொன்னதும் கொஞ்சம் அமைதியாய் இருந்துவிட்டுச் சொல்கிறார்.

உங்கள் இருவருக்காகவும் ஒத்துக்கொள்கிறேன். இங்கிருக்கும் போது என்னால் முடிந்த சில உதவிகளைச் செய்து தருவேன். ஆனால் அதற்குச் சம்பளம் என்று எந்தத் தாளையும் தந்துவிடக்கூடாது.

இது போதும். முதலில் நீங்கள் முகாமுக்கு வாருங்கள் போகலாம்.

முதன்முதலாகப் பங்கலானில் சந்தித்த இரவுக்குப் பின்னர் இன்றுதான் இவர் இவ்வளவு அதிகமாய்ப் பேசியிருக்கிறார். எழுந்து கொள்கிறோம்.

இது என்ன மூட்டை பிலியவ்?

கவாங் ஜாந்தோங் கனிகள்

இக்கனிகளைப் பார்த்திருக்கிறேன். மரத்தில் காய்த்திருக்கும்போது தொலைப்பார்வைக்கு ரம்பூத்தான் கனிகளைப் போலச் சிவந்த நிறத்தில் கொத்தாகத் தொங்கும்.

வீட்டுக்குப் போனபோது பிலியவுக்கு தெரிந்தவர்கள் அவரை வரவேற்கிறார்கள். ஆங் வந்தபிறகு பிலியவ் இங்கு வந்ததில்லை என்பதால் அவரை அறிமுகம் செய்து வைக்கிறோம். பிலியவ் மூட்டையைப் பிரிக்கிறார். அதைப் பார்த்த ஆங், இது கவாங் ஜாந்தோங் கனிகள். இதன் பருப்பு எப்படியிருக்கும் தெரியுமா எனச் சப்புக்கொட்டி வியக்கிறார்.

எப்படி இருக்கும்?

உங்கள் ஊர் முந்திரிப்பருப்பைப் போல இருக்கும். அதுமட்டுமல்ல இதன் வெண்ணெய் இருக்கிறதே அதைச் சோற்றோடு கலந்து சாப்பிட்டால் சுவையாக இருக்கும். அது என் நாவில் இன்னும் ஒட்டிக் கொண்டிருக்கிறது.

ஏதேதோ சொல்கிறார்களே என்று ஆர்வம் கூடுகிறது. அக்கனி ஒன்றைக் கையில் எடுக்கிறேன். வழக்கமான பிசின் கனி. இறக்கை கருநீலமாக இருக்கிறது. கனியின் செந்நிறத்தில் சற்றுப் பழுப்பு நிறம் கூடியிருக்கிறது. அதை உடைத்துப் பார்த்தபோது கனியின் சதைப்பகுதி இளம்பச்சை. இதை தின்னலாமா?

கூடாது. கசக்கும். அதைப் பக்குவப்படுத்தித்தான் சாப்பிட வேண்டும். இவற்றை யாருக்காவது இங்கு பக்குவப்படுத்தத் தெரியுமா? பிலியவ் கேட்டதற்கு எந்தப் பதிலும் இல்லை. யாருக்கும் தெரியவில்லை. உடனே குறுக்கிடுகிறேன். இதையெல்லாம் கற்றுக் கொடுக்கத்தான் உங்களை இங்கேயே இருக்கச் சொல்கிறோம் பிலியவ்.

சரி. ஒரு பாத்திரத்தைக் கொண்டு வாருங்கள் என்கிறார் பிலியவ். நீர் வைக்கும் பெரிய பாத்திரம் வருகிறது. மொத்தக் கனிகளையும் அதில் கொட்டுவதற்குமுன் அதன் இறக்கைகளை நீக்குகிறார். நாங்களும் உதவ சிறிது நேரத்தில் பணி முடிகிறது. எல்லாக் கனிகளையும் அதற்குள் கொட்டி நீரூற்றி ஊறவைக்கிறார். பிறகு புறப்படத் தயாராகிறார். எங்கே கிளம்புகிறீர்கள் பிலியவ்? இங்கேயே தங்கப்போகிறேன் என்று சொன்னீர்கள்.

என் பொருட்களைக் கொண்டுவர வேண்டும். அத்தோடு இக்கனி களும் ஊறவேண்டும்.

நீங்கள் வருவதற்குள் இது ஊறிவிட்டால் என்ன செய்வது?

அதற்குள் எப்படி ஊறும்? அது ஊறுவதற்கு மூன்று நாட்கள் ஆகும்.

மூன்று நாட்களா என்று வியந்துகொண்டிருந்த நேரத்தில் பிலியவின் கால்கள் நடக்கத் தொடங்கிவிடுகின்றன.

# 3



பங்கலானுக்கு இரண்டு கட்டைகளை மாற்றி அனுப்பிவிட்டார்கள். வழக்கமாக நேரும் அதே எண் பிழை. கட்டைகளுக்குரிய எண்களை அதன் இருபக்கக் குறுக்குவெட்டு முகத்திலும் உளிகொண்டு பொறிப்பர். ஒன்று, ஆறு, ஒன்பது என்ற எண்களிடம் கொஞ்சம் கவனமாய் இருக்க வேண்டும். 169 என்கிற எண்ணுள்ள கட்டை தலைகீழாக உருளும் போது 691 ஆக மாறிவிடும். இந்தக் குழப்பத்தைத் தவிர்க்க எண்களுக்கு அடியில் ஒரு பட்டைக்கோடு உளியால் கீறப்படும். அது சரியாகப் பதியாது போனாலோ, சேற்றில், தூசியில் கட்டைகளைப் புரட்டும் போது அக்கோடு மூடிக்கொண்டாலோ இப்படி எண்கள் மாறிவிடும். ஏற்றவேண்டிய இருகட்டைகள் இங்கு திடலில் கிடக்க வேறு ஏதோ இரு கட்டைகளை மாற்றியனுப்பி வைத்துவிட்டார்கள்.

இதற்காகப் பங்கலான் வரவேண்டியதாகிறது. ஆங் பொறுப்பேற்றதில் இருந்து அதிகம் இப்பக்கம் வருவதில்லை. பங்கலானில் கட்டைகள் போட இனிக் கொஞ்சமும் இடமில்லை. அந்தளவுக்கு நிறைந்திருக்கின்றன. முழு லோடிங் அளவுக்குக் கட்டைகள். ஆனால் கினபத்தாங்கன் ஆற்றில் வறட்சிக்காலம் என்பதால் நீர் குறைவாக ஓடிக்கொண்டிருக்கிறது. கட்டைகளை நீர் வழியே கொண்டு போக முடியாது. ஒன்று சரியானால் ஒன்று இடிக்கிறது. அங்குள்ள காவலர் வசம் இருக்கும் பங்கலான் கட்டைகளின் இருப்புப் பட்டியலைச் சரிபார்க்க அந்தக் கட்டைகள் எதுவெனக் கண்டுபிடித்துவிட முடிகிறது.

வேலை முடிந்து திரும்பும் வழியில் வழக்கம் போலவே கிடக்கும் உடும்புகளை ஒலியெழுப்பி விரட்ட வேண்டியிருக்கிறது. ரோஸ்லான் ஓரிடத்தில் வண்டியை நிறுத்திவிட்டுக் குனிந்து வெளியே எட்டிப் பார்க்க, என்ன என்கிறேன்.

பெரோக்.

பிரைமேட் இனங்களுள் ஒன்று. மேலே ஆறேழு குரங்குகளைக் கொண்ட கூட்டம். பழுப்புநிறம், உடலெங்கும் அடர்ந்த முடி. அதன் உச்சி மண்டைக் கருந்திட்டுப் பகுதியைக் கண்டதும் இது இன்ன வகைக் குரங்கென்று தெரிந்துவிடுகிறது. இதை உறுதி செய்துகொள்ள இதன் வாலைப் பார்க்க வேண்டும். அதைத் தேடியபோது இந்தா

பார்த்துக்கொள் என்பது போல் ஒரு குரங்கு திரும்பி தன்வாலைக் காட்டுகிறது. இதுதான் பன்றிவால் குரங்கா? இக்குரங்கை முன்னேயே பார்த்திருக்கிறேன்.

இது தென்னைமரம் ஏறும் குரங்கு. மலாயாவில் தேங்காய் பறிப்பதற்குத் தென்னைமரம் ஏறும் பயிற்சியை இக்குரங்குக்குக் கொடுத்திருக்கிறார்கள். இதன் இடுப்பில் ஒரு கயிறுகட்டி அதை ஏறவிடுவார்கள். அந்தத் தென்னைமர உயரத்துக்குக் கயிற்றின் நீளமிருக்கும். இக்குரங்கு உச்சிக்கு ஏறியவுடன் எந்தக் குலையைத் தள்ளிவிட வேண்டுமோ அந்தக் குலையிலிருக்கும் தேங்காய்களைக் கீழே தள்ளிவிடும். ஆனால் இடுப்பில் கயிறு கட்டியிராத இக்குரங்குகள் மகிழ்ச்சியாய் இருக்கின்றன.

முகாமுக்கு முன்னரே நீரூற்றுப் பாறைக்கு அருகில் குடுவையில் நீர் பிடித்துக்கொள்ள இறங்கியபோது ஒரு வியப்பு காத்திருக்கிறது. இடைமட்டமாய் இருக்கும் ஊற்று வாயருகே சரிபாதியாய் பிளக்கப் பட்ட மூங்கில் ஒன்று உட்கணுக்கள் நீக்கப்பட்ட நிலையில் ஒருமுனை அந்த நீர்த் துளையருகே நெருக்கிப் பொருத்தப்பட்டிருக்கிறது. அதில் வழிந்து ஊற்றிய நீர் அதன் மறுமுனையின் கீழ் வைக்கப்பட்டிருந்த அதே போன்ற மற்றொரு நீண்ட மூங்கிலின் வழியே ஓடிவந்து சாலையின் விளிம்பில் ஊற்றிக்கொண்டேயிருக்கிறது. இரண்டு மூங்கில்களுக்கும் கீழே கவட்டைக் கழிகளால் முட்டுக் கொடுக்கப் பட்டு வைக்கப்பட்டிருந்தன. இதனால் பாறையின் மீதேறி நீர் பிடிக்கவேண்டிய அவசியமற்றுச் சாலையோரத்தில் நின்றே மூங்கில் வழி வழியும் ஊற்றுநீரைக் குடிக்கலாம். என்ன ஒரு யோசனை!

ரோஸ்லானுக்கும் வியப்பு. யார் துவான் இதைச் செய்திருப்பார்கள்?

பிலியவ் வந்து விட்டார் ரோஸ்லான்.

பிலியவ் ஓடைக்கு மறுகரையில் இருந்த ஜெய்னலின் வீட்டின் முன்பு எலுமிச்சை மரக் கிளையைக் கட்டித் தொங்கவிட்டுக் கொண்டிருக் கிறார். அது சூலியாக இருக்கும் சூரியாத்தியைப் பேய்கள் அண்டாமல் இருக்கும் காப்பாம். அதற்கு நாளும் புகை வேறு போட வேண்டுமாம். பொதுச்சேவை தொடங்கிவிட்டது. பிலியவ் மற்ற ஆட்களோடு இணைந்து தங்கக் கூச்சப்படலாம் என்று கருதி வீட்டுக்கு எதிரே இருந்த பணிமனையை ஒட்டித் தனியே ஓர் இடத்தை ஏற்பாடு செய்து தந்திருக்கிறார் ஓமர். சில்லறைப் பணிகளை முடித்துவிட்டுத் திரும்பிய பிலியவுக்கு ஒரு முதன்மைப் பணி காத்திருந்தது. அது அந்தக் கவாங் இந்தோங் கனிகள்.

அதை ஊற வைத்திருந்த பெரிய பாத்திரத்தில் இருந்த நீரையெல்லாம் வடிகட்டிப் பிறகு நீர்விட்டு அக்கனிகளை நன்றாக அலசிவிட்டு அப்பெரிய பாத்திரத்திலேயே மீண்டும் நீர்விட்டு அடுப்பிலேற்றிக்

கொதிக்க வைக்கிறார். அது நன்றாகக் கொதித்ததும் அப்பாத்திரத்தை இறக்கிக் கொதிநீர் முழுதையும் கீழே கொட்டுகிறார். பிறகு சற்றும் எதிர்பாராமல் மீண்டும் பாத்திரத்தில் குளிர்ந்த நீரை நிரப்பி மீண்டும் அதைக் கொதிக்க வைக்கிறார். ஒன்றும் புரியாமல், ஏன் திரும்பவும் கொதிக்க வைக்கிறீர்கள் பிலியவ் என்கிறேன்.

அப்படியே தின்றால் கசப்பு தாங்காது. அதுதான் மறுபடியும் கொதிக்க வைக்கிறேன்.

இப்படி இரண்டு தடவை கொதிக்க வைத்தால்தான் அந்தக் கசப்புப் போகுமா என்று சிரித்துக்கொண்டே விசாரிக்க, நான்கு தடவை என்று சொல்லிச் சிரிக்கிறார். இந்தளவுக்குக் கசப்புச் சுவையுள்ள ஒரு கனியையா சுவையான கனி என்கிறார்கள்? நான்காவது முறையும் கொதித்ததும் அதிலிருந்து ஒன்றை எடுத்து வாயிலிட்டுப் பார்க்கிறார். பிறகு நீரை வடித்து இறுக்கிறார். பின் அவற்றைப் பெரிய தட்டில் கொட்டி அதைச் சற்றுநேரம் காற்றில் உலர வைத்து அவை உலர்ந்ததும் உணவு மேசைக்குக் கொண்டுவந்து அதற்காகக் காத்திருந்த அதன் முதன்மை ரசிகரான ஆங் வசம் நீட்டுகிறார். அவர் அதிலொன்றை எடுத்து வாயில் போட்டுச் சுவைத்துப் பார்த்துவிட்டு சொல்கிறார். முதலில் நம் ஆட்கள் அனைவரும் பிலியவை வெளியேறவிடாமல் இங்கேயே கட்டிப் போடுங்கள்.

கவாங் ஜந்தோங் பருப்பைவிட மிருதுவான புன்னகை பிலியவிடமிருந்து வருகிறது.

## குருவிங் நெருப்பு

பிலியவ் கையிலிருந்த சிறு கத்தி அவர் விரல் அசைவுகளுக்கேற்ப நடனமாடி முடிக்கிறது. மெல்லிய மரச்சீவல்கள் கீழே விழுவதும் நிற்கின்றன. பாராங் கத்திக்கான உறையைச் செய்து முடித்ததும் அவருக்குள் இருக்கும் ஓர் அரிய கைவினைத்திறன் தெரிகிறது. இது ஓமருக்காக அவர் செய்திருக்கும் பாராங் கத்தி உறை. திடல்களில் நறுக்கிப்போட்டிருந்த சிவப்பு சிரயா மரக்கட்டை ஒன்றைக் கொண்டு வந்து இதைச் செய்திருக்கிறார். ஆவலுடன் வாங்கிப் பார்க்கிறேன். வழக்கமாக எல்லா உறைகளிலும் காணப்பெறும் பூவேலை இல்லை இது. பதிலாக இரு பக்கத்திலுமே பறவையின் அழகிய உருவங்கள். அதிலும் இருவாசி ஒன்றின் உருவம். பிலியவ் தேர்ந்த கைவினைஞர் தான். அந்த இருவாசிக்கு வால் நீளம். தலையில் நாணல் பூவொன்று முளைத்தது போல் செதுக்கியிருக்கிறார். எல்லாமே நுணுக்கமான வேலைப்பாடுகள்.

இங்குள்ள எட்டு வகை இருவாசிகளில் மூன்று வகைகளைத்தான் இதுவரை பார்த்திருக்கிறேன். இதைப் பார்த்ததில்லை. பிரைமேட்

பட்டியலையாவது பார்த்துவிடும் வாய்ப்பிருக்கிறது. இக்கவிகைவாழ் இருவாசிகளை காண இயலாது. இரு உறைகளும் இன்னமும் ஒட்டப்படாமல் தனித்தனியே இருக்கின்றன. உறுதியாக இவர் ஃபெவிகால் பயன்படுத்த மாட்டார் என்ற ஆவலில் கேட்கிறேன். இந்த உறைகளை எதை வைத்து ஒட்டுவீர்கள் பிலியவ்?

குருவிங் பிசினை வைத்துத்தான் ஒட்டுவேன். படகிலிருக்கும் இடுக்கை அடைக்கவே இதைத்தானே பாவிக்கிறோம் என்றதும் அப்படியானால் ஒட்டிக்காட்டுங்களேன் என்கிறேன்.

அதை எடுக்கத்தான் கிளம்புகிறேன் என்று எழுகிறார். அவரோடு இணைந்து ஏழாவது தொகுதியில் இருந்த ஒரு குருவிங் மரத்தை அடைகிறேன். பிலியவ் அம்மரத்தை ஏற்கனவே தேர்வு செய்து வைத்திருக்கிறார். அதுவொரு பொருக்கு விழுந்த மரம். அதனால் வெட்டப்படாது தப்பித்து நின்றுகொண்டிருக்கிறது. அடிமரத்தில் ஒரு பெரும் துளை. அதை ஏற்கனவே பிலியவ் துப்புரவாக்கி கத்தியால் கழித்துச் செதுக்கி வைத்திருக்கிறார். குறிப்பாக அத்துளையின் அடிப் பகுதி ஒரு குழிபோல் செதுக்கப்பட்டிருக்கிறது. இதனால் மரத்தின் இதர உயிர்ப்பகுதியிலிருந்து பிசின் வடிந்து இறங்கி அக்குழிக்குள் தேங்கியிருக்கிறது. பார்ப்பதற்குக் கசடு எண்ணெய் போல் கரியநிறத்தில் இருக்கிறது. பிலியவ் கையோடு கொண்டு வந்திருந்த மரக்கலனை எடுக்கிறார். அது இலகுவகை பெருபோக் மரத்திலிருந்து செய்யப்பட்ட கலன். சிரட்டையின் உதவியால் அப்பிசினைச் சேந்தி கலனில் நிரப்புகிறார். பிறகு அதைக் கீழே வைத்துவிட்டு கைநிறைய தழைகளை ஒடித்துக்கொண்டு வருகிறார். இது எதற்கு?

அருகில் வந்தவர் தீமூட்டியைக் கேட்கிறார். கடிக்கும் அட்டைகளைச் சுட்டு நீக்குவதற்காக எப்போதும் இடுப்புப்பையில் வைத்திருக்கும் அதையெடுத்துக் கொடுக்கிறேன். தீமூட்டியை வாங்கியவர் அதைக் கொண்டு அத்துளைக்குள் மீந்திருந்த குருவிங் பிசினைப் பற்ற வைக்கிறார். அடுத்தகணம் அது குப்பென்று பற்றி எரிகிறது. அத்தீயோடு திகைப்பையும் சேர்த்து மூட்டிவிட்டார். மனிதர் மரத்துக்குள்ளேயே பெட்ரோல் தயாரிக்கிறாரா? திகைப்பைப் பார்த்துச் சிரித்த பிலியவ் பிறகு கையில் வைத்திருந்த இலைதழைகளைக் கொண்டு நெருப்பை அடித்து அணைக்கிறார். தழைகளினூடே அது புகைகக்கி அணைகிறது. திகைப்பு இன்னமும் அணையவில்லை. தீமூட்டியைத் திருப்பித்தந்த பிலியவ் கேட்கிறார். நீயும் ஒருமுறை கொளுத்திப் பார்க்கிறாயா?

அந்த எண்ணமே இல்லை. திகைப்பிலும் அச்சத்திலும் உடனே மறுத்து தலையசைத்து விடுகிறேன்.

முகாமுக்குத் திரும்பியபோது வீட்டின் முன் எல்லோரும் கூடிய் எதையோ வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். ஆங் நண்பரான அந்தச் சீனர் துப்பாக்கியுடன் நின்றிருப்பது தெரிகிறது. இவ நேற்றிரவே வந்திருந்தார். உறுதியாக ஏதோவொரு குறிப்பிட்ட விலங்கைத் தேடி வந்திருக்கிறார் என்பது தெரிந்தாலும் அது என்ன என்பது தெரியவில்லை. அவருடன் புக்கிட்கரம் பகுதியைச் சார்ந்த இடாகன் இன இளைஞரும் வந்திருந்தார். இருவரும் விடியுமுன்னே எங்கோ புறப்பட்டுப் போயிருந்தனர். இப்போது திரும்பிவிட்டனர் போலும்.

அருகில் சென்று என்னவென்று எட்டிப் பார்த்தபோது அதிர்ச்சி குரங்கு ஒன்று பிணமாகக் கிடக்கிறது. அதை வேட்டையாடிக் கொன்றிருக்கிறார்கள். அச்சீனர் அதை எப்படி வேட்டையாடிக் கொன்றார் என்பதை உடன்வந்திருந்த அந்த இளைஞர் விவரித்துக் கொண்டிருக்கிறார். பேச்சிலிருந்தே அவர்தான் குரங்கிருந்த இடத்தைக் காட்டிக்கொடுத்தவர் என்பது புரிகிறது.

பிரைமேட் பட்டியலில் எட்டாவதாகப் பார்த்த இந்த ஒர்ட வாழ்வியான சாம்பல் குரங்கை இப்படிப் பிணமாகப் பார்ப்பேன் என நினைக்கவில்லை. சுமார் ஒன்றரையடி உயரமே உள்ள சிறிய வகைக் குரங்கு. உடலைவிட வால் நீளம். இரண்டடியாவது இருக்கும். முகம் வெளிர் சிவப்பில் இருக்க முதுகுப்புறம் சாம்பல் நிறம். இதன் தோற்றத்தை வேறுபடுத்திக் காட்டுகிறது முகஅமைப்பு. நடுநெற்றி நன்கு புடைத்து உயர்ந்து கொம்பு முளைத்தது போல் அமைப்பு உருவாகி இலேசாக முன் வளைந்திருக்கிறது. அதன் இரு கன்னங் களிலும் விரல்களால் தடவிவிட்டது போல கருப்புப்பட்டைகள் தெளிவாக இளம்சிவப்பு முகத்தில் தெரிகின்றன. வயிற்றுப்பகுதியில் குண்டடிப்பட்டிருந்ததால் அங்கு முழுக்க குருதி உறைந்து படிந்திருக் கிறது. நெஞ்சு முழுக்க ஓர் ஆற்றாமை பொங்கிப் பெருகுகிறது. இதுவரை எத்தனையோமுறை வேட்டைக்குப் போயிருந்தாலும் இப்படிக் குரங்கையெல்லாம் சுட்டுக் கொன்றதில்லை.

அங்கிருந்து அகன்று உணவு மேசைப்பக்கம் நகர்ந்து அங்கு அமர் இருந்த ஓமரிடம் கேட்கிறேன். குரங்கு இறைச்சியைக்கூட விட்டு வைக்கமாட்டார்களா?

இல்லை. இவர் கோரோசனைக்காக இதைக் கொன்றிருக்கிறார்.

கோரோசனை நாட்டு வைத்தியத்தில் அதிகம் பயன்படும் பொருள். விலங்கின் குடலுக்குள் உணவல்லாத வேற்றுப் பொருள் நுழைந்து விட்டால் அதைச் செரிக்க இயலாத நிலையில் குடல்பகுதியில் அப்பொருளைச் சுற்றி திரவம் சுரந்து அப்பொருளைச் சுற்றி மூடி

அடும். நாளடைவில் அப்பொருள் இறுகிக் கல் போன்று மாறிவிடும். சிப்பியின் உடலுக்குள் தூசி புகும்போது திரவங்களால் சூழப்பட்டு எப்படி முத்து உருவாகிறதோ அதே போல. இந்தக் கோரோசனையைத் தான் மருந்தெனக் கூறுகிறார்கள். இந்தக் குரங்குக்குள் கோரோசனை இருக்கிறதா என்று உறுதியாகக் கூறமுடியாது. அறுத்துப் பார்த்தால் தான் தெரியும். அப்படி இல்லையென்றால் இதற்காக இன்னொரு குரங்கைத் தேடிக்கொன்றாலும் கொல்வார்.

அவர்கள் இருவரும் உணவுமேசைப் பக்கம் நோக்கி வருகின்றனர். எங்களுக்கு ஏனோ அவர்களைப் பார்க்கவே பிடிக்கவில்லை. எழுந்து விலகிச் செல்கிறோம். அவர்கள் இருவரும் மேசையில் அமர்ந்து பேசத் தொடங்குகிறார்கள். அவர்களுடைய பேச்சு இன்னமும் வேட்டையைப் பற்றித் தொடர்கிறது. அந்த இளைஞரிடம் அச்சினர் சொல்கிறார். நான் ஒரு விடுகதை போடுவேன். அதை நீ திறக்க வேண்டும். அவ்விளைஞன் சரி சொல்லுங்கள் என்றதும் விடுகதை வருகிறது.

ஓர் இறைச்சி இருக்கிறது. அதைக் கணவன் தின்றால் அவனோடு சேர்ந்து மனைவியும் இரவு முழுக்கத் தூங்கமுடியாது. அது என்ன இறைச்சி?

அந்த இளைஞர் யோசிக்கத் தொடங்குகிறார். கணவன் சாப்பிட்டால் மனைவியும் தூங்க மாட்டாரா? சாப்பிட்டது கணவன்தானே? ஏன் மனைவி தூங்காமல் இருக்க வேண்டும்? அவ்விளைஞரின் முகம் மலர்கிறது. புரிகிறது தவ்கே. அந்த இறைச்சியைக் கணவர் சாப்பிடு கிறார். அவருக்குச் செரிமானமாகவில்லை. அதனால் தூங்க முடியாமல் போயிருக்கும். அப்போது மனைவி விழித்திருந்து அவருக்கு மருத்துவம் பார்த்திருப்பார். எனவே இருவரும் தூங்கியிருக்க முடியாது. சரியா?

உன் மூளையும் நீயும்... ஏன் நீயும் சேர்ந்து போய் மருத்துவம் பாரேன். முட்டாள். அந்த இருவர் கணவன் மனைவி என்றால் புரிந்துகொள்ள வேண்டாமா? தவிர அது என்ன இறைச்சி என்பதுதான் கேள்வி. நானே சொல்லிவிடுகிறேன். அது ரசோங் குரங்கின் இறைச்சி. நீ அந்த ஆண் குரங்கைப் பார்த்திருக்கிறாய்தானே?

சற்று யோசித்த இளைஞரின் முகம் பளிச்சிடுகிறது. புரியுது தவ்கே... புரியுது, புரியுது.

ஆண் தும்பிக்கைக் குரங்குக்கு அதன் குறி எப்போதும் விரைத் திருப்பது போல காட்சியளிக்கும். அதைத்தான் சொல்கிறார். அவர் தொடர்கிறார். ஆண்டு முழுவதும் அது அப்படியே நீண்டிருக்கிறது அல்லவா? அதேபோல்தான்...

அது அப்படியல்ல தவ்கே என்று அந்த இளைஞர் ஏதோ சொல்ல முற்பட... குறுக்கே பேசாதே. அது அப்படித்தான். நாம் அதனுடைய

இறைச்சியைச் சாப்பிட்டால் அதேபோல் நமக்கும் இருக்கும். அப்படி யானால் மனைவி எப்படித் தூங்கமுடியும்? இதைச் சொல்லிவிட்டு கண்சிமிட்டியபடியே வேகமாகச் சிரிக்கிறார்.

அப்படியானால் தவ்கே மனைவி தூங்காமலிருக்க உடனடியாக ரசோங் குரங்கு தேவை. அப்படித்தானே தவ்கே?

இப்போது வேண்டாம். போகும்போது பார்த்துக்கொள்வோம். அப்போதுதான் இறைச்சியும் சுவை கெடாமல் இருக்கும்.

இவர்களுடைய உரையாடலை எவரும் இரசிக்கவில்லை. இவர்கள் ஆங் விருந்தினர் என்பதால் எதையும் சொல்ல முடியவில்லை. ஆனால் ஆங் பங்களாவில் இருந்து திரும்பியபோது கதை மாறுகிறது. வண்டியிலிருந்து இறங்கிய ஆங் அந்தக் குரங்கின் சடலத்தைப் பார்க்கிறார். பிறகு உணவு மேசைக்கு அருகில் வந்தவர் அதைக் காட்டி ஹக்கா மொழியில் ஏதோ கேட்கிறார். அச்சினரும் வேகமான குரலில் ஏதோ பதில் சொல்ல சொற்போர் சூடாகிறது. மொழி புரியா விட்டாலும் குரங்கைச் சுட்டது ஆங் அவர்களுக்குப் பிடிக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. வாக்குவாதத்தின் முடிவில் சீனர் குரங்கை எடுத்துக்கொண்டு அந்த இளைஞரோடு வண்டியில் புறப் பட்டுப் போய்விடுகிறார்.

நல்லவேளை ஒரு தும்பிக்கைக்குரங்கைப் பிணமாகப் பார்க்கும் கெடுநிலை நீங்கிவிட்டது.

அவர்கள் சென்றபின் ஓமரைத் தேடுகிறேன். அலுவலக அறை யிலிருந்த அவரிடம் சாபு ஏதோ பேசிக்கொண்டிருப்பது தெரிகிறது. பார்த்ததும் ஓமர் மேலேறி வரச்சொல்கிறார். சாபுவுடைய வீட்டில் குடும்ப நிகழ்ச்சி இருக்கிறதாம். அதற்கு நம்மை அழைக்கிறார். இருவரில் ஒருவர் கட்டாயம் முகாமில் இருக்கவேண்டும். எனவே சாபு நிகழ்ச்சிக்கு நீ சென்று வா என்கிறார். தொழிலாளர்கள் வீட்டு நிகழ்ச்சிகளில் நிறுவனச் சார்பானவர்கள் கலந்துகொள்வது அவர் களுக்குப் பெருமைதரும் செய்தி. சாபு காடோரவுக்குப் பதில் பணிக்கு வந்திருப்பவர்.

என்ன நிகழ்ச்சி சாபு? திருமணமா? மணப்பெண்ணும் பையனும் திருமண உணவைக்கூட நிம்மதியாகச் சாப்பிட முடியாதே என்று கேட்டுவிட்டுச் சிரிக்கிறேன். சாபுவும் சிரித்துக்கொண்டே சொல்லு கிறார். இல்லை துவான், இது நைக் ஆயுன்.

சாபு திடோங் இன இளைஞர். திடோங் இனத்தில் வேடிக்கை யான கலாச்சார வழக்கமுண்டு. இவர்களின் திருமணச் சடங்கில் மணம் முடித்தவுடன் மணமகன் மணமகள் இருவரும் தொடர்ந்து மூன்று பகல், மூன்று இரவுகளுக்கு சிறுநீரோ மலமோ கழிக்கக் கூடாது. மறந்தும் கழிவறைப் பக்கம் ஒதுங்கிவிடாதபடிக்கு இவர்களை

உறவினர்கள் காவல் காப்பார்களாம். இயற்கை இந்நடைமுறைக்கு எதிராகாதபடிக்குச் சிறு அளவிலான நீரும் உணவும் அவர்களுக்கு வழங்கப்படும். இதை மீறினால் திருமண உறவு முறிந்துபோகும். குழந்தைப் பேறின்மை நிகழலாம் என்பது நம்பிக்கை.

சாபுவிடம் கேட்கிறேன். உன் திருமணத்தில் உன்னால் அப்படி இருக்க முடிந்ததா சாபு?

சாபு ஒன்றும் சொல்லாமல் சிரித்துவிட்டுப் பிறகு சொல்லுகிறார். உணவு குறைந்ததால் மலம் வரவில்லை என்பது உண்மைதான். ஆனால் இருமுறை நீர் கழித்தேன். யாருக்கும் தெரியாமல் ஒரு காலி கோலா போத்தலில் பிடித்து மறைத்து வைத்து வீசிவிட்டேன்.

ஓமர் வேகமாகச் சிரிக்கிறார். கோலா போத்தலால் இப்படி ஒரு பயன் இருக்கிறதா?

சாபு சிரித்துவிட்டுத் தொடர்கிறார். அதனாலென்ன? இதெல்லாம் அந்தக் காலத்துப் பழக்கம் துவான். இப்போது எனக்குக் குழந்தை பிறக்காமலா போய்விட்டது? அந்தக் குழந்தையின் நிகழ்வுக்குதானே உங்களை அழைக்கிறேன்.

மலம் கழிக்கும் நிகழ்வைப்பற்றிப் பேசியவுடன் பிலியவ் நினைவு வருகிறது. இங்கு வந்து தங்கிய அடுத்தநாள் காலை மனிதர் என்ன கேள்வி கேட்டார்? மறக்கவே முடியாத கேள்வி. பதில் சொல்லத் தெரியாமல் ஒரு நிமிடம் மலங்க விழிக்க வைத்த கேள்வி.

அன்று காலையில் ஓடையின் மறுகரைக்கு அப்பால் சென்று காலைக்கடன் முடித்துவிட்டு ஓடைக்குத் திரும்பிக் கொண்டிருந்த போது எதிரே பிலியவ் வந்துகொண்டிருக்கிறார். பார்த்ததும் அப்படியே அவருடைய விழிகள் ஏனோ வியப்பில் விரிகின்றன.

என்ன பிலியவ் அப்படிப் பார்க்கிறீர்கள்?

நீயும் எங்களைப் போல் காலை நேரத்தில்தான் மலம் கழிப்பாயா?

அந்தக் கொட்டகை பார்ப்பதற்குப் புதுவகையாக இருக்கிறது. உண்மையில் அதைக் கொட்டகை என்று சொல்ல முடியாது. ஒன்றரை ஆள் உயரத்துக்கு நான்கு பக்கமும் தகரத்தால் அடைக்கப்பட்டிருந்த ஓர் அறை. அதன்மேல் செவ்வகப் பரண். அப்பரணுக்கு ஏறிச்செல்ல ஓர் ஏணி இருக்கிறது. அவ்வறை அடைப்புக்குள் மூட்டம் போடப் பட்டுப் புகையானது மேலாகவும் பரண் இடுக்குகளின் வழியாகவும் வெளிவந்து கொண்டிருப்பது அது என்னவாக இருக்கும் என்கிற ஆவலைத் தூண்டுகிறது. அங்கு போய்ப் பார்த்து விடலாமா? ஆனால் சாபுவின் குரல் அந்த யோசனையைத் துண்டிக்கிறது. துவான், வீட்டுக்குள் போகலாமா?

குழந்தையைத் தொட்டிலில் போடும் நிகழ்வான நைக் ஆயுன் தொடங்குகிறது. நிகழ்வை வேடிக்கை பார்க்கிறேன். இங்கு யாரும் என்னை ஜோஸ் கம்போங்கில் வேடிக்கை பார்த்தது போலப் பார்க்கவில்லை. புக்கிட் கரம் மக்கள் தமிழர்களைப் பார்த்திருப்பது வசதியாகிறது. நிகழ்வு ஃபாத்திஹா ஓதி இஸ்லாமிய முறைப்படி தொடங்கப்பட்டாலும் பிற சடங்குகள் பாரம்பரிய முறைகளைக் கொண்டிருக்கிறது. இறுதியில் தொட்டிலில் போட வேண்டிய குழந்தையைக் கொண்டு வருகிறார்கள். அக்குழந்தைக்கு முடி திருத்தி உடல் முழுக்க மாவைப் பூசியிருக்கிறார்கள். தொட்டில் நிகழ்வு முடிந்ததும் விருந்தின் தொடக்கம்.

வாழையிலை போடப்பட்டு விருந்து தொடங்கப்படுகிறது. இவர்களுடைய பழைய பழக்கமோ? இங்கு வாழைமரங்கள் அதிகம் இருப்பதாலும் இருக்கலாம். எல்லோரும் வரிசையில் அமர்ந்ததும் வாழையிலையைப் போட்டுக்கொண்டு வருகிறார்கள். ஆனால் இலையைத் தலைகீழாகக் கவிழ்த்துப் போடுகிறார்கள். இலையில் எப்படிச் சாப்பிடுவது என்று இவர்களுக்கு இன்னமும் தெரியவில்லை. அடிப்பக்கம் வெளியே தெரியும்படி போடப்பட்ட இலையைத் திருப்பி மேல்பகுதி வெளியே தெரியும்படி புரட்டிப்போடுகிறேன். பக்கத்தில் இருந்த ஒரு பெரியவர், துவான் இலையை இப்படிப் போடக்கூடாது. இப்படித்தான் போட்டுச் சாப்பிடவேண்டும் என்று சொல்லி மீண்டும் இலையின் அடிப்பாகம் மேலே தெரியும்படி அதைத் திருப்பிப் போடுகிறார். இது என்ன சோதனை?

எங்கள் நிகழ்வுகளில் இலையை இப்படி நேராகப் போட்டுச் சாப்பிடுவோம் என்று அவரிடம் சொல்கிறேன். அதற்குப் பதில் இப்படி வருகிறது. அது எப்படி துவான் அப்படிச் சாப்பிட முடியும்? மரத்தில் இருக்கும்போது இந்த இலையின் மேல்புறத்தில்தானே தூசுகள் எல்லாம் படிகின்றன? தவிர குருவிகளும் அப்பகுதியில்தானே எச்சமிடுகின்றன? பிறகு எப்படி அப்பகுதி சுத்தமானதாக இருக்கமுடியும்? அடிப்பகுதிதானே தூய்மையாக இருக்கும்?

இவர் சொல்வதும் நியாயம். தவிர பந்தியில் எல்லோருடைய இலையும் ஒன்றுபோல இருக்கும்போது நான் மட்டும் என்ன செய்ய முடியும்? வாழ்க்கையில் முதன்முறையாக இலையைத் தலைகீழாகப் புரட்டிப் போட்டுச் சாப்பிடத் தொடங்குகிறேன். இலையில் சோற்றைப் போட்டவுடனே அது மணக்கிறது. ஆனால் இது கடையில் விற்கக்கூடிய சாதாரணமான அரிசிதான். பிறகு எப்படி மணக்கிறது? கொஞ்சம் எடுத்து வாயில் வைக்கிறேன். அவ்வளவு சுவை. சோறு சுவையாக இருக்கிறதா துவான்? இது சுவாங் வெண்ணெய் கலந்து சமைத்த சோறு.

இப்போது புரிகிறது. இது இவ்வளவு சுவையோடு இருக்கும் என்று ஒருபோதும் நினைக்கவில்லை. மாட்டிறைச்சி ரெண்டாங், கோழி இறைச்சிக் குருமா, மாட்டிறைச்சிச் சோயா சாஸ் பிரட்டல், வெள்ளரிப் பச்சடி, கடுகுக்கீரை பிரட்டல், தட்டைப் பயிற்றங்காயுடன் சேர்ந்த இறால் பிரட்டல், மீன் பொரியல் என உணவுப் பட்டியல் நீளமாக இருக்கிறது.

உண்டுமுடித்து வெளியேவந்து மீண்டும் தாழ்வாரத்தில் அமர அந்தப் புகைமூட்டப் பரண் திரும்பவும் கண்ணில்படுகிறது. சாபுவை அழைத்து அது என்னவென்று விசாரிக்க அவை எல்லாம் பிசின் மரக்கனிகள் துவான். புகைபோட்டு உலர்த்திக் கொண்டிருக்கிறார்கள் என்கிறார்.

அங்கு போய் பார்க்கலாமா சாபு?

தாராளமாக பார்க்கலாம் துவான். அது என் அம்மா வீடுதான். வாருங்கள் என அழைத்துச் செல்கிறார். அங்கு சென்றபோது சாபுவின் தாயார் வீட்டில் இல்லை. நீங்கள் மேலே ஏறிப் பாருங்கள் துவான்.

மேலே சென்று பார்த்தபோது அதில் இரண்டு, மூன்று, அய்ந்து என எல்லாவகைச் சிறகுடைய கனிகளும் கலந்திருந்தன. புகை ஆங்காங்கே கனிகளின் இடுக்குகளினூடே கிளம்பி வந்துகொண்டிருக்கிறது. கனிகள் எல்லாம் உலர்ந்து பழுப்பு நிறத்தை அடைந்திருக்கின்றன. இதன் ஓட்டை உடைத்தெடுத்துப் பருப்பை எடுப்பார்கள் போலும் என நினைத்துக்கொண்டே கீழே இறங்கி வந்தபோது சாபுவின் தாயார் வந்துவிட்டார். அருகே இரு தராப் மரங்கள் நின்றுகொண்டிருக்கின்றன. அம்மரங்களில் தேங்காய் பருமனுக்கு பலா வடிவத்தில் தராப் கனிகள் தொங்கிக்கொண்டிருக்கின்றன. அம்மரத்தின் கீழ்தான் இரு கனிகளைக் கையில் பிடித்தபடி அம்மூதாட்டி நின்றுகொண்டிருக்கிறார். இரு கனிகளுமே மரத்திலேயே கனிந்ததன் அடையாளமாகப் பச்சை நிறத்திலிருந்து மஞ்சள் தோய்ந்த பழுப்புநிறத்துக்கு மாறியிருந்தன. அருகில் சென்றதும் அவருக்கு அறிமுகம் செய்து வைக்கிறார் சாபு.

நானும் விருந்தில் பார்த்தேன். வீட்டுக்குள் வா குழந்தை. அக்குரலில் வழிந்த அன்பினை எவராலும் தட்டிக்கழிக்க முடியாது. சாபு தயங்கி நிற்கிறார். புரிந்துகொண்டு, நீங்கள் போய் விருந்தினரைக் கவனியுங்கள் சாபு. பேசிக்கொண்டிருந்துவிட்டுப் பிறகு வருகிறேன் என்றவுடன் சாபு மனநிறைவுடன் அகன்று செல்கிறார்.

சிறிய வீடு; ஆனால் நேர்த்தியாக இருக்கிறது. மற்ற எல்லா வீடுகளையும் போலவே பிலியன் கட்டையைத் தாங்கு கால்களாகக் கொண்ட வீடு. தகரத்தாலான மேற்கூரை. முன் தாழ்வாரத்தில் ஓர் ஓரமாகப் பிரம்புக்கொடிகள் ஒரேயளவில் கத்தரிக்கப்பட்டுக் கிடக்கின்றன.

கூடத்தில் அமரச்சொல்லிவிட்டு உள்ளே சென்ற அம்மூதாட்டி திரும்ப வரும்போது கண்ணாடித் தட்டோடு வருகிறார். அந்த தராப் சுனியைக் கைகளாலேயே பிதுக்கி அமுக்க தோல் பிய்ந்து உள்ளே கொத்தாக வெண்ணிறச் சுளைகள் நறுமணத்துடன் வெளிவருகின்றன. சுளைகள் ஒன்றோடு ஒன்று ஒட்டிக்கொண்டிருக்கின்றன. அதில் சிலவற்றைக் கொத்தாகப் பிய்த்துத் தட்டில் வைக்கிறார். அப்போதுதான் சாப்பிட்டு முடித்திருந்தாலும் இயற்கையாகப் பழுத்திருந்த கனியின் மணம் சுண்டியிழுக்கிறது. சாப்பிடு குழந்தை என்ற மூதாட்டியின் கனிவான குரலையும் தவிர்க்க முடியவில்லை.

அச்சுளைகளில் ஒன்றை எடுக்கிறேன். நாவல்பழ அளவிலிருந்த சுளைகள் பிசுபிசுப்போடு கையில் ஒட்டினாலும் நாவில் சுவையூறத் தொண்டைக்குள் வெண்ணெயாய் வழுக்கி இறங்குகின்றன. அதன் கொட்டைகளைத் தனியே எடுத்து ஓரத்தில் வைக்கிறேன். இந்தப் பழமெல்லாம் உங்கள் கம்போங்கில் உண்டா குழந்தை?

கிடையாது ஈபு.

அம்மா என்று விளித்ததும் அம்முகம் மேலும் கனிவாகிறது. அப்போ நீ உன் கம்போங்குக்குப் போகும்போது சொல்லியனுப்பு. நிறைய கொடுத்தனுப்புகிறேன் என்று அவர் சொல்லியபோது இலேசாக சிரித்துக்கொள்கிறேன். ஏன் குழந்தை சிரிக்கிறாய்?

இல்லை ஈபு, என் கம்போங் இங்கிருந்து தொலைவில் இருக்கிறது.

எவ்வளவு தொலைவு இருக்கும்? புலுங்கன் தொலைவு இருக்குமா?

புலுங்கன் போர்னியோவின் இந்தோனேசியப் பகுதியான கலிமந்தானின் கிழக்கில் உள்ள இடம். ஏன் அந்த இடத்தைக் குறிப்பிட்டுக் கேட்கிறார் என்று யோசித்துவிட்டு பதில் சொல்கிறேன். இல்லை ஈபு, இது அதைவிடத் தொலைவு.

அப்படியா? அப்படியானால் ஜாவாவிலிருந்து வருவது போல் கடல் தாண்டிதான் வரவேண்டுமா என்று கேட்டவர் திரும்பவும் தயங்கிய படியே அடுத்த வினாவை முன் வைக்கிறார். எனக்கு ஒரு வருத்தம் இருக்கிறது குழந்தை. இந்தக் கிழவி ஒன்று சொன்னால் வருத்தப்பட்டுக் கொள்ள மாட்டாயே?

சொல்லுங்கள் ஈபு

ஏன் ஓராங் பூத்திப் படிப்புப் படித்தவர்கள் எல்லாம் இப்படிக் காட்டை வெட்ட வந்துவிடுகிறீர்கள்?

இதற்கென்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை. கொஞ்சம் தாமதித்துச் சொல்கிறேன். எல்லோரும் அப்படி வருவதில்லையே ஈபு.

நீ சொல்கிறாய். ஆனால் இப்படிக் காடு வெட்ட வரும் அதிகாரிகள் எல்லாம் ஓராங் பூத்தி படித்தவர்களாய்த்தானே இருக்கிறார்கள்?

நான் அதிகாரி இல்லை ஈபு

இருக்கட்டுமே. ஏதோ ஒரு துவான்தானே. எதற்குச் சொல்கிறேன் என்றால் எனக்கெல்லாம் பள்ளிக்கூடம் என்றால் என்னவென்றே தெரியாது என்பதற்காக என் மகனைப் பள்ளிக்கு அனுப்பி வைத்தேன். இந்தக் கம்போங் பள்ளியில் ஆறு ஆண்டுகள்தான் படிப்பே. அதற்கே சாயு பலாக் நிறுவனங்களுக்கு வேலைக்குப் போய்விட்டான். இதிலிருந்து என்ன தெரிகிறது குழந்தை? அங்கு மரம் வெட்டும் படிப்புதானே சொல்லிக் கொடுக்கிறார்கள்?

பள்ளியில் சொல்லிக் கொடுப்பது மலாய் மொழி எனினும் அதற்கெனத் தனி எழுத்துக்கள் இல்லை என்பதால் ஆங்கில எழுத்துக்களே பயன்படுத்தப்படுகின்றன. அதை இவர் ஆங்கிலப் படிப்பென்று நினைத்துக்கொண்டிருக்கிறார். இதையெல்லாம் விளக்கிச் சொல்ல முடியுமா எனத் தெரியவில்லை. இதைவிடப் பேச்சைத் திசை மாற்றுவதே நலம். ஈபு, புலுங்கன் பற்றிக் கேட்டீர்களே அங்கு போயிருக்கிறீர்களா?

நாங்கள் அங்கேயிருந்து வந்தவர்கள்தாம்.

அங்கேயிருந்தா? அப்படியானால் இது சொந்த ஊர் இல்லையா?

நாங்கள் என்றால் எங்கள் முன்னோர்கள். அது முன்பு நடந்த கதை. புலுங்கனிலிருந்து ஆண்கள், பெண்கள் ஒரு குழுவாய்க் கிளம்பி வடக்கே வந்தார்கள். பிசின், பிரம்பு கிடைத்தால் விற்றுச் சம்பாதித்துக் கொள்ளலாம் என்று கிளம்பி வந்தார்கள். இந்த இடத்தில் ஒன்றைக் கவனிக்க வேண்டும் குழந்தை. அவர்கள் மரத்தை வெட்டிப் பிழைத்துக் கொள்வோம் என்று வரவில்லை. இந்தக் காட்டில் கிடைக்கிற பொருளை வைத்துப் பிழைத்துக்கொள்வோம் என்றுதான் கிளம்பி வந்திருக்கிறார்கள். நாங்கள் மலைகள், மரங்கள், இடி, மின்னல், மழையை வழிபடுபவர்கள். நம் கண்களுக்குத் தெரிகிற இவை தாமே நம்மை வாழ வைத்துக்கொண்டிருக்கின்றன. என்ன குழந்தை சொல்கிறாய்?

ஆமாம் என்று தலையாட்டுகிறேன். ஆமாம் நீ என்ன கடவுளை வணங்குகிறாய் குழந்தை? என் மகன் இஸ்லாமுக்கு மாறிவிட்டான். அதனால் கேட்கிறேன்.

இந்த விளையாட்டு வேண்டாம். பதில் சொன்னால் ஈபு குழம்பி விடுவார். பேச்சை மாற்றுவோம். ஈபு, உங்களை ஒன்று கேட்க வேண்டும். ஈபு தவறாக நினைத்துக் கொள்ளவில்லையென்றால் கேட்கிறேன்.

கேளு குழந்தை. என்ன தெரிய வேண்டும் உனக்கு?

பொதுவாக டிடோங் இனத்தவர் என்றாலே காட்டெரிப்பு வேளாண்மை செய்பவர்கள். அதனால் உங்களால்தான் காட்டுத்தீயே

ஏற்படுகிறது என்று வெளியில் பேச்சிருக்கிறது. ஆனால் நீங்கள் காட்டை வழிபடுபவர்களாக இருக்கிறீர்கள். இது எப்படி?

அம்மூதாட்டி பெருமூச்செறிகிறார். நீயே பதிலைச் சொல்லி விட்டாய் குழந்தை. இந்தக் காட்டெரிப்பு வேளாண்மையை இன்று நேற்றா செய்கிறோம்? முன்பு குழுவாக நாங்கள் தங்கும் இடங்களில் சின்ன இடத்தை எரித்துக் காய் கீரைகளைப் பயிரிடுவோம். அது முடிந்தவுடன் வேறொரு இடம் தேடிப் போவோம். எரிந்த இடத்தில் மீண்டும் செடிகள் முளைத்துவிடும். இதை நூற்றுக் கணக்கான ஆண்டுகளாகச் செய்துவருகிறோம். அப்போதெல்லாம் எரியாத காடு இப்போது சில ஆண்டுகளாக எப்படி திடீர் திடீரென எரிகிறது குழந்தை? இவ்வளவுக்கும் அப்போது காடு ரொம்ப அடர்த்தி வேறு. இதை விடு. அப்போது நாங்கள் காடெரித்து வேளாண்மை செய்த இடங்களில் புல் முளைக்கும், செடி முளைக்கும், மரம்கூட முளைக்கும். ஆனால் இப்போதெல்லாம் காடெரிந்த இடங்களில் செம்பனைத் தோட்டம், கொக்கோ தோட்டம் மட்டும் முளைக்குதே. அது எப்படிக் குழந்தை?

வேகமாகச் சிரித்துவிடுகிறேன். பன்னாட்டு வணிக அரசியலை இந்தக் காட்டுக்கிழத்தி என்ன அருமையாகச் சொல்லிவிட்டார். நியாயமான கேள்வி சபு. இக்கேள்விக்கு எவரிடத்தும் பதில் இல்லை என்று சொல்லிச் சிரிக்கிறேன். சற்றும் இடைவெளி இல்லாது அம்மூதாட்டி தொடர்கிறார்.

அதுமட்டுமில்லை குழந்தை. திடோங் என்று சொன்னால் மூன்று வகை திடோங் இருக்கிறோம். திடோங் புலுங்கன், திடோங் செசயாங், திடோங் மெலினாவ். எல்லோருமே பரந்த காட்டுக்குள்ளே வெவ்வேறு இடங்களில் வசித்தாலும் இனம் என்று பார்த்தால் ஒன்றுதான். ஆனால் இன்றைக்குத் தொன்மையான எங்கள் நிலத்தைப் பார்க்கப் போக வேண்டும் என்றால் அது முடியாது குழந்தை. புலுங்கன் போக வேண்டும் என்றால் அது கலிமந்தானில் இருக்கிறது. அது இந்தோனேசியாவைச் சேர்ந்ததாம். அது போல சபா வேறு, சரவாக் வேறு என்று பிரித்துவிட்டார்கள். இங்கேயிருந்து அந்த இடங்களுக்குப் போக வேண்டும் என்றால் ஏதோ ஒரு அட்டை வாங்க வேண்டுமாம். உனக்குத் தெரியும்தானே குழந்தை?

கடவுச்சீட்டைக் குறிப்பிடுகிறார். இவர் சொல்வது உண்மை. இந்த இடங்களுக்குச் செல்ல இன்று கட்டாயம் கடவுச்சீட்டு வேண்டும். ஆமாம் என்று தலையாட்டுகிறேன்.

நான் தெரியாமல்தான் கேட்கிறேன் குழந்தை. எங்கள் விருப்பம் போல நாங்கள் சென்று வந்துகொண்டிருந்த எங்கள் காட்டை எங்களைக் கேட்காமல் யார் பிரித்தது? அப்படிப் பிரிக்கும் அதிகாரத்தை

அவர்களுக்கு யார் கொடுத்தது? சொல் குழந்தை.

இது மிகப்பெரிய கேள்வி. ஆனால் இது போன்ற கேள்விக்குப் பதில் தெரியாமல்தான் உலகின் பலநாட்டு மக்கள் வாழ்ந்து கொண்டிருக் கிறார்கள். அவருடைய கேள்வியை ஆமோதிக்கும் வகையில் அமைதி காக்கிறேன். அம்மூதாட்டி மெல்ல எழுந்துகொள்கிறார். உன்னிடம் என்னென்னவோ பேசிக்கொண்டிருந்துவிட்டேன். இன்னும் கொஞ்சம் பழம் சாப்பிடுகிறாயா குழந்தை?

போதும் ஈபு. ஏற்கனவே வயிறு நிறைந்திருக்கிறது.

அவர் உள்ளே சென்று திரும்பியபோது ஒரு நீப்பா ஓலைப் பெட்டியை எடுத்து வருகிறார்.

உள்ளே பிசின் வண்ணக் கட்டிகளாகக் கிடக்கின்றன. மேலாக இருந்தது பார்ப்பதற்குக் கண்ணாடிக் கோலிக் குண்டுகள் போல உருண்டையாக இருக்கின்றன. இதுதான் மாத்தா கூச்சிங் மரத்துப் பிசின். அடுத்தது கூழாங்கற்களைப் போல் இருக்கிறது. காட்டில் நிறைய இடங்களில் இதைப் பார்த்திருக்கிறேன். அப்படியானால் இது நான் நினைத்தது போல் கற்கள் இல்லை. இது சிலாங்கன் பத்து மரத்துப் பிசின் என்கிறார் ஈபு.

நான் காட்டில் இதைப் பார்த்திருக்கிறேன் ஈபு. மஞ்சள் வண்ணத்தில் கூட பார்த்திருக்கிறேன். அப்படியானால் இவற்றையெல்லாம் காட்டி லிருந்து பொறுக்கிக் கொண்டு வருகிறீர்களா?

பெரும்பாலும் அப்படித்தான். மரத்தில் பொந்து செய்தும் கொண்டு வருவோம் என்கிறார். பிலியவ், குருவிங் மரத்தில் பொந்து தோண்டி யிருந்தது நினைவுக்கு வருகிறது. அது எப்படி? அது எண்ணெய் போலல்லவா இருக்கும் ஈபு?

முதலில் அப்படித்தான் ஊறும். நாளாக இப்படி மாறிவிடும். மரத்தைப் பொறுத்து வாரம் ஒரு தடவையோ மாதம் ஒரு தடவையோ சீவி எடுத்து வரவேண்டும். நல்ல மரமாக இருந்தால் முப்பது ஆண்டுகள் கூட சீவி பிசின் எடுக்கலாம் குழந்தை.

இந்தப் பிசின்கள் மருந்து, நறுமணப் பொருட்கள், பெயிண்ட் தயாரிக்க வாங்கப்படுகின்றன.

பார்த்தாயா குழந்தை... மரங்களை வெட்டாமல் மனிதர்கள் பிழைக்கக் காடு எத்தனை வழிகளை வைத்திருக்கிறது. இது மாதிரி பிசின் எடுக்கலாம். அந்தப் பரணில் பார்த்தாயே அதுபோல் புகை போட்டு பருப்பு எடுத்து விற்கலாம். தேன் எடுக்கலாம். பழங்கள், கிராம்பு, ஜாதிக்காய் பறிக்கலாம். சாகு மரத்தை வெட்டி சவ்வரிசி செய்யலாம். பிரம்பு, மூங்கில்களை வெட்டிப் பொருள்கள் செய்யலாம். இப்படி நிறைய வழிகள் இருக்கின்றன. மரத்தை வெட்டினால் ஒரே ஒரு தடவைதான் பணம் பண்ண முடியும். அதுவே காடு இருந்தால்

இப்படித் தொடர்ந்து சம்பாதிக்க முடியும். இது ஏன் படித்தவர்களுக்குத் தெரியவில்லை குழந்தை?

எல்லோருக்கும் ஒரே தடவையிலேயே நிறைய பணம் சம்பாதித்து விட வேண்டும் என்று ஆசை ஈபு.

அதை ஆசை என்று சொல்லக்கூடாது. பேராசை. ஆசை என்றால் அது அளவு. அது எல்லா மனிதருக்கும் இருப்பது. அளவோடு ஓடும் போதுதான் ஆறு. அளவுக்கு மீறும்போது அது வெள்ளம். அழிவு. இதெல்லாம் கிடக்கட்டும் குழந்தை எனக்கொரு ஆசை இருக்கிறது. அதைச் சொல்லவாமா?

சொல்லுங்கள் ஈபு

என் மகனுக்கு உன்னிடம் நிரம்பவும் மரியாதை இருக்கிறது. அவனிடம் இந்த வேலை வேண்டாம் என்று சொல் குழந்தை என்று அவர் சொல்லிமுடித்ததும் குற்றவுணர்வு மிக எதுவும் பேசாமல் இருக்கிறேன். ஈபு கேட்கிறார். ஏன் குழந்தை ஒன்றும் பேசாமல் இருக்கிறாய்?

இதை உங்கள் மகனிடம் சொல்லும் தகுதி எனக்கில்லை ஈபு. நானும் இப்படியான வேலைதானே பார்க்கிறேன் என்றதும் சற்று நேரம் அமைதியாக இருந்த அம்மூதாட்டி எழுந்துகொள்கிறார். எழும்போதே சொற்கள் வந்து விழுகின்றன.

இந்த ஒரு சொல் போதும் குழந்தை. மனதில் துளி மழை பெய்த மாதிரி இருக்கு. உன் மனதிலும் மாற்றம் வந்திருக்கிறது. இது என் மகனிடம் வராமலா போய்விடும்?

உள்ளே சென்று திரும்பியவர் இலையில் எதையோ சுற்றி எடுத்து வருகிறார். குழந்தை, நீ சாப்பிடும்போது கவனித்தேன். ஆசையாய்ச் சாப்பிட்டாய். இந்தக் கம்போங் கிழவியிடம் உனக்குக் கொடுக்க இதுதான் இருக்கிறது. மறுக்காமல் வாங்கிக்கொள் குழந்தை.

அது பார்ப்பதற்குக் குழாய்ப் புட்டு மாதிரி உருளையாய் வெள்ளை நிறத்தில் இருக்கிறது.

இது என்ன ஈபு?

கவாங் வெண்ணெய் குழந்தை. இதைக் கலந்துதான் விருந்தில் சோறு சமைத்திருந்தார்கள். வாங்கிக்கொள் குழந்தை.

வாங்கிக் கொள்கிறேன். இது வெண்ணெய் அல்ல. மூதாட்டியின் கனிந்த இதயத்தின் அன்பெல்லாம் உருகிக் குழைந்த குழைவு. விழித்துளி அரும்புகிறது. சட்டென்று ஈபுவின் பாதங்களில் விழுந்து வணங்குகிறேன்.

# 4

லைப்பாம்பு

கோடை தணிந்து கிடைத்தாங்களில் நீர்வரத்து அதிகரித்திருக்கிறது. உழுப் பகுதிகளில் மழை தொடங்கியிருக்கலாம். தேங்கியிருக்கும் கட்டைகள் விரைவில் ஏற்றப்பட்டுவிடும். பங்கலானில் செய்தி குவானிடமிருந்து வருகிறது. கொரியாவைச் சேர்ந்த பார்க் என்ற மரவணிகர் நம் முகாமுக்குக் கட்டைகளைப் பார்வையிட வருகிறார். அவர் கட்டைகளுக்கு அதிகவிலை கொடுக்கும் வணிக நிறுவனப் பிரதிநிதி. அவர் மனநிறைவு அடைந்துவிட்டால் நல்ல லாபம் கிடைக்கும். அதனால் அவர் மனம் குளிரும்படி நடந்து கொள்ளுங்கள்.

உறுதியாக. நம் விருந்தினர் அனைவருக்குமே தகுந்த மரியாதையை அளிக்க நாங்கள் தவறியதில்லை.

விருந்தோம்பலில் உங்கள்மீது முழுநம்பிக்கை உண்டு. ஆனால் நான் சொல்ல வந்தது பார்க் குறித்து மட்டுமே. அவர் கொஞ்சம் ஏறுக்கு மாறான ஆள். அவர் குறித்து நீங்கள் அனைவரும் சற்றுக் கூடுதல் கவனம் எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கும் என்று சொல்கிறேன்.

கொஞ்சம் அல்ல. நிறையவே ஏறுக்குமாறானவர் என்பது வந்த வுடனே தெரிந்துவிடுகிறது. மிகவும் இறுகிய மனிதராக இருந்தார். அறிமுகத்தின்போதுகூட புன்னகைக்கவில்லை. அவரை நேரே பங்கலான் அழைத்துச் செல்கிறோம். கட்டைகளை மேலோட்டமாகப் பார்வையிடுகிறார். அவருக்குப் பிடித்ததா? இல்லையா? எதுவும் புரிபடவில்லை. இருட்டப்போகிறது காலையில் வந்து தெளிவாகப் பார்த்துக்கொள்கிறேன். புறப்படலாம் என்கிறார்.

வேண்ட் குருசரில் முகாம் திரும்புகிறோம். ரோஸ்லான்தான் ஓட்டுநர். பார்க் பின்னிருக்கைக்குச் சென்று படுத்துக்கொள்கிறார். களைப்பாகயிருக்கலாம். மாலை மயங்கி உறங்கவும் தொடங்கி யிருக்கிறது. தரைப்பாலத்தைத் தாண்டி மேடேறியதும் சாலையின் குறுக்கே சிறுமரம் ஒன்று விழுந்துகிடக்கிறது. இதுவொரு குறுகிய இடம். சாலையின் அகலமே இருபத்தைந்து அடிதான். ஒரு பக்கம் மலைச்சரிவு. மறுபக்கம் பெரும்பள்ளம். மண்சரிவின் காரணமாக இப்படிச் சிறுமரங்கள் சாலையின் குறுக்கே வீழ்வதுண்டு. தொடைப்

பருமனுள்ள ஒருமரம்தான். கையால் தூக்கி அகற்றிவிடலாம். ரோஸ்லானுடன் இறங்கி அம்மரத்தை நெருங்கியபோது அம்மரம் நகர்ந்துகொண்டிருப்பதைப் பார்க்கிறோம். மரம் எப்படி நகரும்? அதற்குள் ரோஸ்லானின் அலறல்.

ஊலார் சாவா...

இருவரும் திடுக்கிட்டு சில அடிகள் பின்வாங்குகிறோம். அது மரம் அல்ல, மலைப்பாம்பு. இவ்வளவு நீளத்துக்கு ஒரு பாம்பு இருக்க முடியுமா? இச்சாலையின் அகலம் இருபத்தைந்து அடி. இப்பாம்பு அவ்வளவு நீளத்துக்கும் நீண்டுகிடக்கிறது. அதுமட்டுமல்ல அப்பாம்பின் தலையைக் காணமுடியவில்லை. அது இடதுபக்கப் பள்ளத்துக்குள் இறங்கியிருந்தது. வால்பகுதி மட்டும் இன்னமும் மலைச்சரிவின் மீது இரண்டடிக்கு நீண்டுகிடக்கிறது. அப்படியானால் இம்மலைப்பாம்பு எப்படியும் முப்பதடி நீளமாவது இருக்கவேண்டும். இவ்வளவு நீளமாகவா ஒரு பாம்பு இருக்கும்? அய்யோ... அப்படியானால் இது? அதிர்ச்சியோடு இப்போது ஒரு மகிழ்ச்சி இணைகிறது. இது உலகின் நீளமான பாம்பினத்தைச் சேர்ந்த ஒரு பாம்பு. நெருங்கிச் செல்கிறேன். குறை வெளிச்சத்திலும் பளபளப்பான உடல் தெரிகிறது. மங்கிய மஞ்சள் நிறத்தில் அதன் மேல்தோல் முழுக்க நெடுவாக்கில் முழுநீள வலைப்பின்னல் ஓவியம். இக்காட்டின் மூலை முடுக்கெல்லாம் அலைந்து திரிந்தபோது தென்படாத இப்பாம்பு இப்போது வழியிலேயே காட்சி தருகிறது.

பாம்பு பாதிவழியைக் கடந்துகொண்டிருக்கும்போது என்ன பார்த்துக்கொண்டு நிற்கிறீர்கள் என்று கேட்டவாறே வண்டியிலிருந்து இறங்கி வருகிறார் பார்க். அவருக்குப் புரியும்படிச் சொல்லவேண்டுமே என 'ரெடிகுலேட்டட் பைத்தான்' என்று ஆங்கிலத்தில் சொல்கிறேன். ஏன் சொன்னேன் என்று வாழ்நாள் முழுவதும் நொந்து போகப் போகிறேன் என்பதை அந்நிமிடத்தில் ஊகித்தறியும் திறன் இல்லை. சொன்னதைக் கேட்டதுமே பார்க் துள்ளிப் பாய்ந்து ஓடிவருகிறார். அவர் நெருங்கியபோது அப்பாம்பின் உடல் அய்ந்தாறு அடி நீளத்துக்குத்தான் தெரிந்துகொண்டிருந்தது. அதைப் பார்த்துவிட்ட பார்க் துப்பாக்கி, துப்பாக்கி என்றலறித் துப்பாக்கி வைத்திருக்கிறீர்களா என்று கத்துகிறார். நாங்கள் இல்லையென்று தலையாட்டுகிறோம். ஏன் இல்லை? ஏன் துப்பாக்கி வைத்திருக்கவில்லை?

இதற்கு என்ன பதில் சொல்வது? ரோஸ்லானும் நானும் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்கிறோம். இப்போது பாம்பின் வால்பகுதி மட்டுமே தெரிகிறது. பார்க் என்ன நினைத்தாரோ தெரியவில்லை. சட்டென்று பாய்ந்து யாரும் எதிர்பாராதவிதமாக அப்பாம்பின் வாலைப் பிடித்து இழுக்கத் தொடங்குகிறார். ஆனால் அது அவர்

கையிலிருந்து வழுவழுப்போடு நழுவி மறைந்துவிடுகிறது. திரும்பவும் அந்த வேகத்தோடு பாய்ந்து எழுந்தவர் அப்பாம்பு மறைந்த இடத்தைச் சுட்டிக்காட்டி, அதைப் பிடியுங்கள், அதைப் பிடியுங்கள், எனக்கு அது வேண்டும் என்று கத்துகிறார்.

அது என்ன கீழே விழுந்த குச்சி மிட்டாயா? பாம்பையாவது, பிடிப்பதாவது? திரும்பவும் நாங்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்கிறோம். எங்கள் முகம் எங்களுக்கே பரிதாபமாக இருக்கிறது. பார்க் இன்னமும் அடங்காமல் அங்குமிங்கும் துள்ளிப் பாய்ந்தபடி கொரிய மொழியில் ஏதேதோ பிதற்றிக்கொண்டிருக்கிறார். இவரைப் பார்த்தாலும் இரக்கமாக இருக்கிறது. கூடவே அச்சமாகவும் இருக்கிறது. இவருக்கு ஏதும் ஆகிவிட்டதோ? பார்க் திடீரென்று திரும்பிப் பார்த்துக் கேட்கிறார். உங்கள் முகாமில் துப்பாக்கி இருக்கிறதா?

அப்பாடா, தப்பிப்பதற்கு வாய்ப்பு. இருக்கிறது என்கிறோம். அப்படியானால் உடனே அங்கே போவோம். கிளம்புங்கள் என்கிறார். வண்டியில் போய்க்கொண்டிருக்கும்போதே வேகம், வேகம் என்று சொல்லிக்கொண்டே வருகிறார். கிடைத்த இடுக்கில் ரோஸ்வான் மெல்லிய குரலில் கேட்கிறான். துவான், உண்மையிலேயே இவர் மர வணிகர்தானா?

இவன் வேறு நேரம் காலம் தெரியாமல்...

முகாமை அடைந்தவுடன் எங்களை முந்திக்கொண்டு கீழே இறங்கி விடுகிறார் பார்க். அங்கிருந்தவர்களிடம், பாம்பு, பெரிய பாம்பு என்று சொல்லிவிட்டுத் துப்பாக்கி, துப்பாக்கி எங்கே என்று பதறிக் கேட்ட போது அவர்கள் எதுவும் விளங்காமல் விழிக்கிறார்கள். ஓமர் நெருங்கி வந்து எங்களிடம் விபரம் கேட்கிறார். சொன்னவுடன் அவர் பார்க்கிடம் சென்று, இது இரவு நேரம். எந்தப் பாம்பையும் வேட்டையாட முடியாது என்று பதமாக எடுத்துச் சொன்னதும் கொஞ்சம் தணிகிறார். காலையில் நான் உறுதியாய் பாம்பு வேட்டைக்குப் போகவேண்டும் என்று பார்க் சொல்ல, போகலாம், உறுதியாய்ப் போகலாம் என்று ஓமர் தணிக்கிறார்.

இரவு குவானிடம் இருந்து அழைப்பு வருகிறது. பார்க் கட்டை களைப் பார்த்துவிட்டாரா?

இல்லை, நாளைதான் பார்க்கப் போகிறார் என்று நினைக்கிறேன்.

என்னது? நினைக்கிறாயா? ஏன் அழைத்துப் போகவேண்டியது தானே? அதைவிட அப்படி வேறென்ன வேலை?

பாம்பு பிடிக்கவேண்டும்.

பாம்பா?

ஆம். திரு. பார்க் அப்படிதான் சொல்லியிருக்கிறார். அவர் மனம் கோணாமல் நடந்துகொள்ளச் சொல்லியிருக்கிறீர்களே? நாளை

காலையில் முதல் வேலையாக ஒரு மலைப்பாம்பைப் பிடித்துவிட்டுதான் மறுவேலையாம்.

மறுமுனையில் சற்றுநேரம் எந்தப் பதிலும் இல்லை. சில நொடிகள் கழித்துத் தொடர்பு தானாகத் துண்டிக்கப்பட்டவுடன் அடக்க முடியாமல் சிரித்துக்கொண்டிருக்கிறேன்.

பார்க் காலையில் எழுந்தவுடனேயே பாம்புப் புராணத்தைத் தொடங்கிவிடுகிறார். இங்கு என்னென்ன பாம்புகள் இருக்கின்றன. நாகம் உண்டா? கருநாகம் உண்டா? மலைப்பாம்புகள் நிறைய இருக்கின்றனவா என்று வரிசையாகத் தொடர் கேள்விகள். மிகுந்த எச்சரிக்கையோடு இந்தக் காட்டுக்கு வந்ததிலிருந்து நேற்றுதான் முதன்முதலாக ஒரு பாம்பையே பார்த்திருக்கிறேன் என்று சொல்லி விடுகிறேன். ஆனால் அவரோ ஓய்வதாக இல்லை. தேநீர் அருந்தும் போதுகூட அவரிடம் வசமாகச் சிக்கியிருந்தேன். எங்கள் ஊரில் நாகப்பாம்பு சூப் ரொம்பவும் விலை அதிகம். அதுவும் ஒரேயொரு துண்டுதான் அதில் போட்டிருப்பார்கள். அதுவே ஒரு கோப்பை முப்பது டாலர். அவர் சொல்லிக்கொண்டிருந்தபோதே அருகில் தேநீர் குடித்துக்கொண்டிருந்தவர்கள் எல்லாம் முகத்தைச் சுளித்தவாறு காணாமல் போய்விடுகிறார்கள்.

பார்க் மலாய் மொழியில் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்தார். இந்த அளவுக்குச் சரளமாக மலாய் பேசும் கொரியரை இப்போதுதான் பார்க்கிறேன். குவானுக்கு இங்கு வந்து மூன்றாண்டாகியும் நன்றி என்பதற்கான சொல்லைத் தவிர வேறொரு சொல் இதுவரைக்கும் தெரியாது. இவர் நெடுநாட்கள் வணிகத்தொடர்பில் இங்கு வந்து செல்பவராக இருக்கவேண்டும். பசியாறி முடித்துக் கிளம்புவதற்கு தயாரானவுடன் முதலில் எங்கே செல்வது என்று குழப்பம். நேரே கட்டைகளைப் பார்க்கச் செல்வதா? பாம்பு பிடிக்கச் செல்வதா? ஆனால் இந்தக் குழப்பமெல்லாம் எங்களுக்குத்தான். பார்க் தெளிவாக இருக்கிறார். முதலில் அந்தப் பாம்பைப் பிடித்து விடுவோம்.

பார்க் கிளம்பும்போது பழையபடி நாங்களே மாட்டிக்கொள்கிறோம். மூவரும் ஹைலக்ஸ் வண்டியில் கிளம்புகிறோம். ஏறிக்கொண்டதும் ரோஸ்லானின் கேள்வி: எந்த இடத்துக்குப் போகவேண்டும் துவான்? பார்க்கே பதில் சொல்கிறார். நேற்று பாம்பைப் பார்த்த இடத்துக்கே போ.

அந்த இடம் வந்ததும் இறங்கி அப்பள்ளத்தை எட்டிப் பார்த்த பார்க் இப்படியே இறங்கிச்சென்று தேடினால் அப்பாம்பைப் பிடித்தி விடலாம் என்று சொல்லியபோது சிரிப்பு வருகிறது. அது என்ன அங்கு விடுதியில் அறை எடுத்தா தங்கியிருக்கிறது? ரோஸ்லான் முன்வந்து அவரிடம் சொல்கிறான். பாம்பு பார்த்த இடத்தில் அப்படியே இருக்காது

அதுவும் மலைப்பாம்பைப் பொறுத்தவரை கொஞ்சம் ஈரமுள்ள இடங்களில்தான் பார்க்கலாம்.

பார்க் கேட்கிறார். அப்படியானால் எங்கு பார்க்கலாம்.

எங்காவது ஓடைக்கரையில் பார்க்கலாம் என்கிறான் ரோஸ்லான்.

சரி அப்படியானால் அங்கு போகலாம்.

நாங்கள் தரைப்பாலத்துக்கருகே வண்டியை நிறுத்திவிட்டு ஓடையின் வடக்குப் பக்கமாக இறங்கி நடக்கிறோம். ரோஸ்லானிடம் முணு முணுக்கிறேன். பாவி அங்கேயாவது கொஞ்ச தொலைவு தேடிப் பார்த்துவிட்டுத் திரும்பியிருக்கலாம். இப்போது இவர் பாம்பு கிடைக்கா விட்டால் இந்த ஓடை தொடங்கும் இடம் வரை நம்மை இழுத்துச் செல்லப்போகிறார் பார்.

ஆமாம் துவான். தப்பு செய்துவிட்டேன். இப்போதுதான் புரிகிறது. என்ன புரிந்து என்ன? ரொம்ப தாமதம். கையில் துப்பாக்கியோடு எதிரி நாட்டு இராணுவ வீரரைத் தேடுவதுபோல் இருபுறமும் கவனமாகப் பார்த்தபடி முன்னே போய்க்கொண்டிருக்கிறார் பார்க். ஒருவேளை இவருக்குப் பாம்பு கிடைக்காவிட்டால் என்ன செய்வார்? கட்டைகளை வாங்காமல் போய்விடுவரோ? ஓடைக்கரையில் பெரிய பெரிய மரங்களாக நிற்கின்றன. ஒரு யோசனை. இவருடைய கவனத்தைக் கட்டைகளின் பக்கம் திசை திருப்பிப் பார்த்தால் என்ன?

இந்த மரத்தைப் பாருங்கள். நம்முடைய கட்டைகள் எல்லாம் இந்தளவுக்குப் பெரிதாக இருக்கும் என்கிறேன். சுட்டிக்காட்டிய திசையில் சில நொடிகள் பார்த்தவர் பிறகு வாழைமரப் பருமனேயிருந்த சிறுமரத்தைக் காட்டிக் கேட்கிறார். இவ்வளவு பெரிதாக இருக்குமா?

அதுவல்ல. அதோ அதற்குப் பக்கத்தில் நிற்கும் அப்பெரிய மரத்தைப் பாருங்கள். அந்தளவுக்கு இருக்கும் நம் கட்டைகள்.

நான் கட்டைகளைப் பற்றிச் சொல்லவில்லை. நாம் நேற்றுப் பார்த்த பாம்பு இந்தப் பருமன்தானே இருக்கும்?

பட்டு தெளிவு. இவரை இனி ஒன்றும் செய்யமுடியாது. இவர் பாம்பு பிடிக்காமல் திரும்பப் போவதில்லை. அரைமணி நேரம் நடந்திருப்போம். சற்று களைத்த பார்க் ஓடையோரம் இருந்த சிறு பாறையொன்றில் அமர்ந்து சேலம் வெண்சுருட்டை எடுத்துப் பற்ற வைக்கிறார். துப்பாக்கி மடியில் கிடக்கிறது. இழுத்துப் புகையை விட்டவாறு சொல்கிறார். எனக்கு மட்டும் ஒரு மலைப்பாம்பு கிடைத்துவிட்டால் கொரியா திரும்பியவுடன் என் நண்பர்களிடமும், உறவினர்களிடமும் எப்படிப் பெருமையடித்துக் கொள்வேன் தெரியுமா?

அப்படியா? ஆனால் துவான் இங்கிருந்து போகும்போது மாஸ் வாழைப்பழங்களைத்தானே கொரியாவுக்கு எடுத்துச் செல்லுகிறார். அதைவிட இது கொரியாவில் மதிப்புள்ள பொருளா?

என்ன அப்படிக் கேட்டுவிட்டாய்? ஹாங்காங் போயிருக்கிறாயா நீ? போய் இருக்க மாட்டாய். அதனால்தான் இதன் மதிப்புத் தெரியாமல் பேசுகிறாய். ஹாங்காங்கில் விலை மதிப்புள்ள இரண்டாவது உணவே பாம்பு சூப்தான்.

அப்படியானால் அந்த முதல் உணவு எது என்று உள்ளுக்குள் ஒரு கேள்வி எழும்ப அவரிடமே கேட்கிறேன். 'குரங்கு' என்று பதில் வருகிறது. குரங்கா? குரங்கு இறைச்சி அவ்வளவு விலைமதிப்பா அங்கு?

குரங்கு என்றால் குரங்கின் இறைச்சி அல்ல. அதன் மூளை. உயிருள்ள மூளை.

உயிருள்ள மூளையா?

ஓ... உனக்கு அதைப்பற்றி ஒன்றுமே தெரியவில்லை. இங்கெல்லாம் அந்த உணவு கிடையாது. அதுதான் தெரியவில்லை. அதைப்பற்றிக் கொஞ்சம் விளக்கிச் சொன்னால்தான் உனக்குத் தெரியும் என்று சொல்லிவிட்டு வெண்சுருட்டைத் தூக்கியெறிகிறார். துப்பாக்கியை ஓரமாக வைத்துவிட்டு உடலை முன்வளைத்து ஆர்வமாக இரு கைகளையும் கொண்டு விளக்கத் தொடங்குகிறார்.

இப்படி வட்டமாக ஒரு மேசை இருக்கும். அதன் நடுவில் வட்டத் துளை இருக்கும். உயிருள்ள குரங்கை ஒரு பெட்டியில் அடைத்து அதன் தலைப் பகுதி மட்டும் வெளியே நீட்டிக்கொண்டு இருக்கும்படி கொண்டு வருவர். அக்குரங்கை மேசையின் அடியில் கொண்டுவந்து வைத்து அம்மேசையின் நடுத்துளைக்குள் பொருந்தும்படி செய்வர். தலையென்றால் முழுத்தலையும் அல்ல. அதன் முகமெல்லாம் வெளியே தெரியாது. நெற்றியோடு அதன் உச்சிப்பகுதி மட்டும்தான் அரைக் கோளமாக வெளியே தெரியும். அந்நிலையில் குரங்கால் அசையவோ நகரவோ முடியாது. இப்போது சாப்பிட வேண்டியவர்கள் மேசையைச் சுற்றி அமர்ந்துகொள்ள வேண்டும்.

அதை இன்னும் சமைக்கவே இல்லையே?

அவசரப்படாதே. சொல்வதைக் கேள். இது சமைக்காத உணவு. எல்லோரும் சுற்றி அமர்ந்தவுடன் அந்த உணவகச் சமையல்காரர் வந்து அக்குரங்கின் தலையைக் கத்தியால் அதாவது இப்படி என்று கூறிச் சைகையால் விளக்குகிறார். தன் நெற்றிப் பொட்டிலிருந்து ஒரு முழு வட்டமாக விரலால் தலையை ஒரு சுற்றுச் சுற்றி மீண்டும் அந்த நெற்றிப் பொட்டிலேயே வந்து முடித்துவிட்டு இப்படி வட்டமாக வெட்டி முடிப்பார். பிறகு அந்தக் குரங்கின் மண்டை மேலோடு ஒரு கிண்ணம் போன்று தனியே கழன்று வந்துவிடும்.

அய்யோ, அந்தக் குரங்கு உயிரோடு இருக்கிறதே?

பின்னே அதுதானே அந்த உணவின் சிறப்பே. தொடர்ந்து கேள். இப்போது அதன் மண்டைக்குள் மூளையானது குருதி கொப்பளிக்க

வெளியே தெரியும். உடனே சமையல்காரர் இந்த உணவுக்கான ரெப்புச் சாஸை அந்த மூளையில் இட்டுக் கலந்து தருவார். அதை அப்படியே சாப் ஸ்டிக்கால் எடுத்துச் சாப்பிட வேண்டியதுதான்... உவ்வ்வ்வாவ்...

ரோஸ்லான் ஓடை நீரிலேயே வாந்தியெடுத்துக் கொண்டிருக்கிறான். புரிந்துவிடுகிறது. அருகில் சென்று முதுகைத் தடவிக்கொடுக்கிறேன். இன்னும் அடங்கவில்லை. இன்னும் இரண்டு மூன்று முறை தொடர்ந்து வாந்தி வருகிறது. ஏன் அவருக்கு என்னவாயிற்று எனப் பார்க் கேட்கிறார். ஒன்றுமில்லை நேற்று மாலையில் இருந்தே இவருக்குக் கொஞ்சம் உடல் நலமில்லை என்று கூறிவிட்டு ரோஸ்லானிடம் நீ வேண்டுமானால் சென்று வண்டியில் அமர்ந்து ஓய்வெடுத்துக் கொள் என்று சொல்லி அனுப்பி வைக்கிறேன். ரோஸ்லான் சென்று மறைந்ததைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். நீ தப்பித்து விட்டாய் ரோஸ்லான்.

ஓடைக்கரையோரமாக மேலும் நடக்கத் தொடங்குகிறோம். இருவரும் பேசிக்கொள்ளவில்லை. ஓடையின் தெளிந்த நீரின் பேச்சு மட்டும் கேட்டுக்கொண்டிருக்கிறது. அரைமணி நேரம் நடந்திருப்போம்.

அதோ, அதோ... திடீரென பதற்றமாகிறார் பார்க். இம்மனிதருக்கு இப்படி ஒரு நல்வாய்ப்பு கிட்டும் என்று எதிர்பார்க்கவில்லை. அவர் காட்டிய திசையில் ஒரு பாம்பு கரையோர மரக்கிளையொன்றில் சுற்றிக்கொண்டிருக்கிறது. ஆனால் இது அந்தப் பெரியவகை மலைப் பாம்பைப் போலத் தெரியவில்லை. தோலில் வலைப்பின்னல் இல்லாமல் மஞ்சள் கலந்த பழுப்பில் தளும்பு தளும்பான வடிவம். நீளம் அய்ந்தடிதான். அப்படியானல் இது 'அகா போர்னியோ'. இதை ஜம்போங்கனிலேயே பார்த்திருக்கிறேன். ஓரிடவாழ்வி.

பார்க்கிடம் சொல்கிறேன். இது நேற்று பார்த்த பாம்பின் வகையில்லை. வேறு வகை. அதன் வாலைக் கவனித்துப் பாருங்கள். நீங்கள் நேற்று பிடித்து இழுத்த பாம்பின் வால் போலவா இருக்கிறது? வால் எவ்வளவு குட்டை என்று பாருங்கள்.

ஒருவேளை இது அப்பாம்பின் குட்டியாக இருக்கலாம்.

இல்லை. நன்றாகத் தெரியும். இதைப் 'போர்னியோ பைத்தான்' என்பார்கள் என்றதும் எதுவாக இருந்தால் என்ன? இதுவும் மலைப் பாம்பு வகைதானே என்று சொல்லிவிட்டுப் பார்க் துப்பாக்கியை எடுத்துக் குறி பார்க்கிறார். திரும்பி நின்றுகொள்கிறேன். உன் கெடுவாய்ப்பை என்னால் தடுக்க முடியவில்லை பாம்பே.

சுடும் ஓசை கேட்கிறது. ஒரு தோட்டாதான். இதைப் பிடித்துக் கொள் என்று துப்பாக்கியைத் தருகிறார். கழுத்துக்குக் கீழே சதை பிய்ந்து தொங்கிக்கொண்டிருந்த அப்பாம்பை எடுத்து வருகிறார். பிறகு இடுப்புப் பையைத் திறந்து ஒளிப்படக்கருவியை எடுத்துக்கொடுத்து

ஒவ்வொரு படமாய் எடு என்கிறார். பாம்பின் தலையைக் கையால் நிமிர்த்திப் பிடித்தவாறு ஒரு படம். பிறகு மொத்தப் பாம்பையும் இருகையால் பிடித்துத் தூக்கியவாறு ஒரு படம். இறுதியில் அதைக் கழுத்தில் மாட்டிக்கொள்ள ஒரு படம். அதன் குருதி ஆடையில் படிவதைக்கூட மனிதர் பொருட்படுத்தவில்லை. மீதிப் படங்களை வீட்டில் போய் எடுத்துக் கொள்வோம் எனக் கூறிவிட்டு வெற்றி வீரரைப் போலத் தலைநிமிர்ந்து முன்னே நடக்கிறார். துப்பாக்கியோடு அவர் பின்னே செல்கிறேன்.

வீட்டுக்குப் போனால் இந்த வெற்றிவீரர் மலைப்பாம்பை சுமந்து கொண்டு நுழைந்ததைப் பார்த்தவுடனேயே சமையல் செய்யும் இரு பெண்களும் ஓடி மறைந்துவிடுகிறார்கள். ஆண்களே காணாமல் போனபின்பு இவர்கள் எம்மாத்திரம்? ஆனால் வெற்றிவீரர் அதைப் பற்றியெல்லாம் அப்பாம்பின் வால்நுனி அளவுகூட கவலைகொள்ள வில்லை. சமையலைத் தானே செய்யத் தீர்மானிக்கிறார். நிம்மதியாகப் பெருமூச்சு விடுகிறேன். ஆனால் பெருமூச்சுக்கு ஆயுள் குறைவு. வெற்றிவீரர் அழைக்கிறார். என்னை ஒளிப்படம் எடுத்துக்கொண்டே இரு எனப் பணிக்கிறார். ஒரு ஒளிப்படக்கருவியை வதைக்கருவியாய் மாற்ற இயலும் என முன்பு யாராவது சொல்லியிருந்தால் நம்பி இருப்பேனா?

ஒரு கயிற்றை உத்திரத்தில் கட்டி அதில் பாம்பின் தலைப்பக்கம் மேல்வருமாறு கட்டித் தொங்கவிடுகிறார். அதனருகில் நின்றுகொண்டு ஒரு கையால் பாம்பைப் பிடித்துக்கொண்டு தன் பல்லைக்காட்டியவாறு ஒரு க்ளிக். பிறகு கத்தியெடுத்து கசாப்பு கடைக்காரரைப் போல தோலை உரிக்க க்ளிக். தோலை உரித்து முடித்துச் சதைப்பிண்டமாய் இருக்கும்போது அதை முத்தமிட ஒரு க்ளிக். ஒளிப்படக்கருவியின் காட்சித்துளை வழியாகப் பார்க்கும்போதே வயிற்றைப் புரட்டுகிறது. இவ்வெற்றிவீரரின் வதையிலிருந்து அப்பாம்பைப் போலவே தப்பிக்க முடியவில்லை. பிறகு பாம்பைத் துண்டுபோடச் சிரித்தபடியே கத்தியை ஓங்கும்போது ஒரு க்ளிக். ஒரு பெரிய சட்டியை எடுத்து எல்லா துண்டுகளையும் அதில் கொட்டும்போது க்ளிக். சூப்பைக் கரண்டியால் கிளற க்ளிக். ஒரு கிண்ணத்தில் அந்த சூப்பை எடுத்து ஊற்றி அதிலிருந்த வெந்த பாம்பு துண்டை சாப் ஸ்டிக்கால் எடுத்துக்காட்ட க்ளிக். சூப்பை ஒரு கையால் சுவைத்தபடி மறுகையின் கட்டைவிரலை மேல் நிமிர்த்திக்காட்ட க்ளிக். இப்படி வரிசையாகப் பல பல க்ளிக். க்ளிக். க்ளிக். அச்சுருளில் முப்பது க்ளிக்குகள் இப்படி முடிகின்றன. மீதி ஆறுதான் இருக்கிறது என்று நினைவூட்ட மிகவும் சோகமாகி சரி போதும் மீதியைக் கட்டைகளை எடுக்க வைத்துக்கொள்வோம் என்கிறார். எவ்வளவு பெருந்தன்மை?

அன்று முழுவதும் அவர் வேறு உணவையே தொடவில்லை. இதில் பெருமை வேறு. என் நண்பர்களிடம் இதையெல்லாம் சொன்னால் முதலில் நம்பமாட்டார்கள். அதனால்தான் இத்தனை படங்கள் எடுக்க சொன்னேன். இதைப் பார்த்தவுடன் அவர்கள் என்மேல் எப்படி பொறாமைப்படப் போகிறார்கள் என்பதை நினைத்து பார்க்கும் போதே பெருமிதமாக இருக்கிறது. பின்னே அவர்கள் ஒரு துண்டுக்கே அலையும்போது நான் ஒரு முழுப் பாம்பையே சாப்பிட்டேன் என்றால் எப்படி இருக்கும் அவர்களுக்கு?

எங்களுக்கான உணவு அன்று பணியாளர் குடியிருப்பில் சமைக்கப் பட்டது. மனிதர் அன்று மாலையும் பங்கலாவுக்குச் செல்லவில்லை. ஒளிப்படக்கருவியைத் தந்து கட்டைகளை நீயே படம் எடுத்துக் கொண்டு வந்துவிடு என்கிறார். வெற்றி வீரர் புறப்படும்போது மீதி இருந்ததையும் ஒரு பாத்திரத்தில் போட்டு மூடி எடுத்துக்கொண்டு கிளம்பிச் செல்கிறார். அவர் கிளம்பிச் சென்றவுடன் அங்கு வந்த ஆங் சத்தம் போடுகிறார். முதலில் அவர் சமைத்த, புழங்கிய பாத்திரம் பண்டமெல்லாம் ஒரு மூட்டையாய்க் கட்டித் தொலைவில் எறியுங்கள்.

மறுநாள் மாலை அலுவலகத்தில் இருந்து தகவல் வருகிறது. பார்க் நமது கட்டைகளை வாங்கச் சம்மதித்து விட்டார்.

அந்த மலைப்பாம்புக்கு ஸ்தோத்திரம்.

முதாய் மரம்

ஒன்பது, பத்தாம் தொகுதிகளில் மரம் வெட்டும் பணி தொடங்கி இருக்கிறது. வழமைப்போல் சங்கிலி வாளின் ஒலியைச் செவிக்குள் வாங்கிக்கொண்டே அலுவலகத்தில் அமர்ந்து நானும் ஓமரும் கனமீட்டர்களாக மாறிவிட்ட மரங்களின் பட்டியலைச் சரிபார்த்துக் கொண்டிருக்கிறோம். வாசலில் நிழல். வாருங்கள் பிலியவ் என வரவேற்கிறேன். இவர் இதுவரை எங்கள் அலுவலகத்துள் நுழைந்த தில்லை. முகம் சற்று வாட்டத்துடன் இருக்கிறது. ஏன் பிலியவ் உடலுக்கு ஏதும் முடியவில்லையா என்று விசாரிக்கிறார் ஓமர். இலேசாகப் புன்னகைத்தவர், உங்களிடம் ஒரு செய்தி சொல்லலாம் என்று வந்தேன் என்கிறார். சொல்லுங்கள் பிலியவ்.

நான் சொல்லும் செய்தி தவறாக இருந்தால் என்னை மன்னித்துக் கொள்ளவேண்டும் என்கிறார். குரலில் அவ்வளவு தயக்கம். பிலியவ், நீங்கள் இப்படி எல்லாம் பேசக்கூடாது. சொல்ல வந்ததைத் தயக்க மில்லாமல் சொல்லுங்கள் என்று ஓமர் கூறியதும் அவர் சற்று தளர்ந்து அமர்ந்து கொள்கிறார்.

நீங்கள் இருவரும் என்னிடம் அன்பாக இருக்கும் துணிவில் இச்செய்தியைச் சொல்லுகிறேன். மீண்டும் சொல்கிறேன். தவறாக

இருந்தால் மன்னித்துக் கொள்ளுங்கள். ஏனென்றால் இதைக் கேட்கும் உரிமை எனக்குக் கிடையாது என்பதை நான் அறிவேன். இப்போது மரம் வெட்டிக்கொண்டிருக்கிறார்களே அதன் தென்புறம் உள்ள காட்டில் ஒரு மரத்தைப் பார்த்தேன். மிகப்பெரிய மரம். சிலாங்கூர் பத்து கிட்டே சென்று பார்க்கிறேன். நல்ல மூத்த மரம். இந்தப் பக்கத்தில் எங்குமே இவ்வளவு பெரிய மூத்த மரம் இல்லை. இப்படி யொரு மூத்த மரத்தைப் பார்த்த மகிழ்வில் அம்மரத்தைச் சுற்றி வந்து பார்த்துக்கொண்டிருந்தேன். அப்போதுதான் அம்மரம் என்னிடம் ஒரு செய்தியைச் சொன்னது என்று சற்று நிறுத்தியவர் ஓமரிடம், இந்த முகாம் வீடு கட்ட என்னை முதன் முதலில் அழைத்துவந்து மரத்திடம் அனுமதி வாங்கச் சொன்னீர்களே உங்களுக்கு நினைவிருக்கிறதா என கேட்கிறார்.

ஓமர் ஆம் என்று தலையாட்டுகிறார்.

அந்த நம்பிக்கை உங்களுக்கிருக்கும் போது அம்மரம் சொன்னதைப் பற்றியும் நான் உங்களிடம் அவசியம் சொல்லித்தானே ஆகவேண்டும்? அம்மரத்திடம் நானாக எதுவும் கேட்கவில்லை. அம்மரமே என்னிடம் சொன்னதால்தான் இதைச் சொல்கிறேன்.

அப்படி என்னதான் அந்த மரம் சொன்னது பிலியவ்?

என்னை வெட்ட வேண்டாம் என்று சொல்லியது

ஒன்றும் விளங்காமல் ஓமரைப் பார்க்கிறேன். அவரும் ஒருகணம் பார்த்துவிட்டுத் திரும்பவும் பிலியவின் முகத்தைக் கூர்ந்து பார்த்தவாறே கேட்கிறார். ஏன் பிலியவ் அம்மரம் மட்டும் அப்படிச் சொல்கிறது? பிலியவ் பெருமூச்சுடன் கூறுகிறார். அது தாய் மரமாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. அநேகமாக இங்கு இருக்கும் பல மரங்கள் அதன் கனிகளில் இருந்து உருவானவையாகக்கூட இருக்கக்கூடும்.

நீங்கள் சொல்வதையெல்லாம் கேட்கும்போது உடனே அம்மரத்தைப் பார்க்கவேண்டும் போல ஆவலாக இருக்கிறது. இருப்பினும் பிலியவ் ஒன்றைப் புரிந்துகொள்ள வேண்டும். நீங்கள் சொல்வதைச் செய்யக் கூடிய முழு அதிகாரம் என்னிடம் இல்லை.

எனக்குத் தெரியும். ஏன் இதை உங்களிடம் சொல்ல மட்டும் எனக்கு அதிகாரம் உண்டா என்ன? ஆனாலும் அம்மரம் சொன்ன செய்தியை உங்களிடம் தெரிவிக்க வைத்தது என்மேல் நீங்கள் வைத்திருக்கும் அன்புதான். மீண்டும் கேட்டுக்கொள்கிறேன். தவறு இருந்தால் என்னை மன்னித்துவிடுங்கள்.

பெரிய சொற்களெல்லாம் வேண்டாம் பிலியவ். உடனே மரத்தைப் பார்க்கவேண்டும். வருகிறீர்களா? போய்ப் பார்த்துவிட்டு வருவோம்.

பத்தாம் தொகுதிக்குள் உள்நுழைந்து சென்று அம் மாபெரும் மரத்துக்கு முன்னால் மூன்று கட்டெறும்புகளைப்போல் நின்று

கொண்டிருக்கிறோம். அவ்வளவு பெரிய மரம். நெடிதுயர்ந்தும் அன்றும் எத்தகைய தோற்ற மிடுக்கு. இது உறுதியாக தாய் மரமாகத் தான் இருக்க முடியும். அதுவும் வெறும் தாயல்ல. மூதாய். நாலைந்து பேர் சுற்றி நின்றாலும் கட்டியணைக்க முடியாது. சிலாங்கன் பத்துவின் வழக்கமான அடையாளமான தேமல் வந்ததுபோல் திப்பித் திப்பியான பட்டையைக் கொண்டிருக்க அடிமரமோ முட்டு வேர்களில்லாமல் ஓரளவு உருண்டையாக இருக்கிறது. குவான் கண்ணில்பட்டால் கனஅடிகளைத்தான் கணக்கிடுவார்.

அண்மையில் செய்தித்தாளில் இதே போன்று ஒரு மரம் பற்றிய செய்தியைப் படித்தோம். ஜப்பான் நாட்டு மரம். ஒரு நெடுஞ்சாலை அமைக்கும்போது இதேபோன்ற ஒரு முதுமரம் குறுக்கிடுகிறது. நானூறு வயது மரம். அதை வெட்டிவிட்டுச் சாலைபோட முடியாதவாறு எதிர்ப்பு எழுகிறது. அதை வெட்டாவிட்டாலோ சாலையை வேறு வழியாக இரண்டு கிலோமீட்டர் கூடுதலாகச் சுற்றிப் போடவேண்டும். வழக்கு நீதிமன்றத்துக்குச் சென்றிருக்கிறது. இரண்டு கி.மீ. கூடுதல் சாலை என்பது இயலக்கூடியது. ஆனால் நானூறு ஆண்டு மரத்தை மீண்டும் உருவாக்குவது இயலாதது. எனவே இயலக்கூடியதைச் செய்யுங்கள் என்பதே அத்தீர்ப்பு.

ஆனால் பிலியவ் வேண்டுவதுபோல இம்மரம் வெட்டப்படாமல் காப்பாற்றப்படுவது இயலுமா? குவான் நீதிமன்றத்தில் என்ன தீர்ப்பு கிடைக்கும் என்பது வழக்காடாமலேயே தெரிகிறது. இம்மரம் எப்படியும் முப்பது சுற்றாவது இருக்கும். சண்டகான் கான்துறைத் தலைமை அலுவலகத்தில் இதைவிடக் குறைந்த அளவு சுற்றுள்ள ஒரு குறுக்குவெட்டுப் பலகையைத்தான் காட்சிக்கு வைத்திருக்கிறார்கள். இதை வெட்டித்தான் ஆகவேண்டுமா என்று ஓமரைக் கேட்கிறேன். அவர் பதிலுக்கு இதை வெட்டக்கூடாது என்று நீயும் நினைக்கிறாயா என்று கேட்கிறார்.

நீயும் என்றால் நீங்களும் அப்படிதான் நினைக்கிறீர்களா? பதில் கேள்வி. ஓமர் பெரிய நெடுமூச்சு விடுகிறார். நாம் மூவரும் நினைத்து என்ன ஆகப்போகிறது எனச் சொல்லிவிட்டுப் பிலியவைப் பார்த்துக் கேட்கிறார். இம்மரத்தின் உத்தரவையும் மீறி அதை வெட்டினால் என்ன ஆகும் என நினைக்கிறீர்கள் பிலியவ்?

கேடு நிகழும்.

மூவரும் சற்று நேரம் அமைதியாக மரத்தையே பார்த்துக் கொண்டிருக்கிறோம். பிறகு புறப்படுவோமா என்கிறார் ஓமர். நீங்கள் புறப்பட்டுச் செல்லுங்கள். நான் தாமதமாக வருகிறேன் என்கிறார் பிலியவ். அவரை அங்கேயே விட்டுவிட்டு நாங்கள் திரும்பும்போது ஓமரைக் கேட்கிறேன். இந்த மரத்தைப் பார்த்ததிலிருந்து இவ்வளவு

முதிர்ந்த மரத்தை வெட்டுவதில் எனக்கும் உடன்பாடில்லை. இருந்தாலும் ஓர் அய்யம். பிலியவின் சொற்களை ஏன் அப்படியே நம்புகிறீர்கள்? மரம் எப்படி மனிதர்களோடு பேசும்? அதுவும் வெட்ட வேண்டாம் என்று சொல்லும்? அறவே விளங்கவில்லை.

ஓமர் பதில் எதுவும் கூறாமல் அமைதியாக முன்னே நடந்து போய்க் கொண்டிருக்கிறார். பதில் இல்லாததால் திரும்பவும் கேட்கிறேன். அன்று இந்த பிலியவ் வானவில்லைப் பார்த்து நிமித்தம் சொல்லிய பிறகுதான் நம் முகாமில் புர்கானின் அகால இறப்பு நிகழ்ந்தது. அதனால்தான் இதையும் நம்புகிறீர்களா?

ஓமர் நின்று ஒருமுறை திரும்பிப் பார்த்துவிட்டு நடந்தவாறே சொல்கிறார். அதைக்கூட நிமித்தம் என்று சொல்லிவிடலாம். நம்புவதும் நம்பாததும் அவரவர் விருப்பம். ஆனால் இது அப்படியல்ல. இத்தொல்குடிகளும் காடும் வேறு வேறு அல்ல. மரமும் அதன் பட்டையும்போல ஒன்றோடு ஒன்றாய் இணைந்திருப்பவர்கள். இடையில் நம்மைப் போன்ற வெளியாட்கள் புகுந்து மரத்திலிருந்து பட்டையைத் தனியாகப் பிரிக்காதவரை தொல்குடிகளும் காடும் ஒன்றுதான்.

அவர் சற்றுப் பேச்சை நிறுத்தவும், நிறுத்திய அந்தச் சில நொடிகளில் சில்வண்டுகள் பேசிக்கொண்டிருந்தன.

இந்த சில்வண்டின் பேச்சைக் கேட்டாயா? இதுபோல்தான் காடும் தொல்குடிகளோடு பேசும். தொல்குடிகள் காட்டோடு பேசுவார்கள். ஓடை நீரும், ஊற்று நீரும், ஆற்று நீரும் இவர்களோடு பேசும். அதுமட்டுமா, பூச்சிகள், பறவைகள், விலங்குகளும் பேசும். இன்றுவரை நம்மிடையே புழங்கிக்கொண்டிருக்கும் ஈசாப் கதை போன்ற கதைகளில் எப்படி எல்லா உயிரினங்களும் பேசுகின்றன? அதை எப்படி நம் குழந்தைகள் நம்புகின்றன? நாம் குழந்தைகளாக இருந்தபோது அதை நம்பினோமே? இப்போது ஏன் நம்புவதில்லை? வளர்ந்து விட்டோம். அறிவில் வளர்ந்துவிட்டோம்.

ஓமர் உணர்வு வயப்பட்டிருப்பது புரிந்ததும் உடனே சொல்கிறேன். மன்னிக்கவும். உங்கள் மனதைப் புண்படுத்துவதற்காக இதைக் கேட்கவில்லை.

இப்படிச் சொன்னதும் ஓமர் உடனே திரும்பிக் கைகளைப் பிடித்துக் கொள்கிறார். தயவுசெய்து அப்படியெல்லாம் பேசாதே. நான் இப்போது காற்றைப் போல மிதக்கிறேன். ஒரு சீசாவின் தக்கையைப் பிடுங்கி விட்டால் உள்ளிருக்கும் காற்று ஓசையுடன் வெளிக்கிளம்புமே அப்படிதான் இப்போது இருக்கிறேன். இம்மனநிலை எப்போதும் வாய்க்காது. நீதான் இப்போது அந்தத் தக்கையைப் பிடுங்கி உதவி செய்திருக்கிறாய். உண்மையில் இதற்காக நான்தான் உனக்கு நன்றி சொல்ல வேண்டும்.

இதைச் சொல்லி முடித்து மீண்டும் அமைதியாக நடக்கிறார். சாலை வருகிறது. அருகிலிருந்த திடலில் பட்டை உரிப்பவர் எங்களைப் பார்த்து வணக்கம் தெரிவித்துவிட்டுத் தன் நீண்ட கடப்பாறையால் மீண்டும் பட்டையை உரிக்கத் தொடங்குகிறார். கொஞ்சம் இங்கே அமர்ந்து கொள்வோம். ஓமர் கட்டையொன்றில் அமர, அவர் அருகே அமர்ந்து கொள்கிறேன்.

விட்ட இடத்திலிருந்து தொடர்வோமா? எங்கே விட்டேன்? ஆம்... ஒரு மரம் பேசுகிறது என்றால் குழந்தை நம்புகிறது. ஒரு தொல்குடி மனிதர் நம்புகிறார். குழந்தைகளை நாம் என்ன சொல்கிறோம். குழந்தைகள் கடவுளுக்குச் சமம். குழந்தைகள் பொய் சொல்லாது. குழந்தை சொல்வது உண்மையென்றால் தொல்குடி மனிதர் சொல்வதும் உண்மையாகத்தானே இருக்கும்? மரம் மனிதரோடு பேசவோ, மனிதர் மரத்தோடு பேசவோ இரண்டு தனித்தனி மொழிகள் இருக்காது என்று நம்புகிறேன். ஏதோ ஒரு உள்ளுணர்வு இரண்டுக்குமிடையே இயங்குகிறது, இயக்குகிறது என்று நம்புகிறேன். 'உள்ளுணர்வு' இதை நாம் நம்புவோம்? உறுதியாக நம்புவோம். ஏனென்றால் இதைத்தான் அறிவியல் ஒப்புக்கொண்டிருக்கிறதே.

சிரித்துக்கொண்டே கேட்கிறேன். ஆனால் இதுவரை என் உள்ளுணர்வு ஏன் இப்படி எதையும் சொன்னதில்லை?

எனக்கும்தான் சொன்னதில்லை. ஏனென்றால் நீயும் நானும் பிலியவ் இல்லை. ஒரு தொல்குடி இல்லை.

ஒருவேளை ஓமர் சொல்வது உண்மையோ? அன்று ஜோஸும் முதன்முதலாய்ப் பேசும்போது இப்படித்தானே சொன்னான்?

*இந்தக் காற்றில் இலைகள் உரசும் ஓசையைக் கொஞ்சம் கேளுங்களேன்...*

*இலைகள் உரசும் ஓசையா? இதுவெல்லாம் என் யோசனைக்குள் நுழைந்ததுகூட இல்லையே...*

*பார்த்தீர்களா துவான். மரத்துக்கு மரம் இலைகள் உரசும் ஓசையில்கூட எவ்வளவு வேறுபாடு? சொரசொரப்பான இலைகளுக்கென்று ஓர் ஓசை. வழுவழுப்பான இலைகளுக்கு வேறு ஓசை. அதுவே தடித்த இலைகள் என்றால் தனி ஓசை. இவையெல்லாம் தனித்தனிப் பண்கள் அல்லாமல் வேறு என்ன? இத்தோடு கூடுதலாகக் கேட்கும் சிள்வண்டுகளின் ஓசை, பறவைகளின் குரல்கள் இவையெல்லாம் தாளங்கள். இவை அனைத்தையும் சேர்த்த முழு இன்னிசை நிகழ்வுதான் காட்டின் பாடல்...*

கண்களைமூடி ரசித்துக் கேட்டுக்கொண்டிருந்த அவனை வெகு நேரம் பார்த்துக்கொண்டிருந்தது நினைவுக்கு வருகிறது. கூடவே இன்னொரு யோசனையும் வருகிறது. இம்மரத்தைப் பற்றி அலுவலகத்துக்குத் தெரிவிக்காமல் விட்டுவிட்டால் என்ன? நாம் சொன்னால் தானே அவர்களுக்குத் தெரியும்?

நடக்காத கதை என்கிறார் ஓமர், சில காலத்துக்குதான் மறைக்க முடியும். எப்படியும் மரம் வெட்டுபவர் இதைப் பார்ப்பார். அவர் டிராக்டர் ஓட்டுநரிடம் சொல்லுவார். இம்மரத்தைப் பார்த்தவுடனேயே இதிலிருந்து கிடைக்கும் வருமானம்தான் அவர்கள் மனதில் ஓடும். அவர்கள் ஒப்பந்தக்காரரிடம் சொல்லுவார்கள். அவர்கள் மூலமாக அலுவலகத்துக்குப் போய்விடும். பிறகு அங்கிருந்து ஏன் அம்மரத்தை வெட்டவில்லை என்று கேள்வி வரும்.

அப்படியென்றால் இது வெட்டப்படுவதிலிருந்து காப்பாற்றவே முடியாதா?

தள்ளிப்போட்டுப் பார்ப்போம். வாய்ப்பிருந்தால் அம்மரம் பிழைத்துப் போகட்டும். நம் கையில் என்ன இருக்கிறது சொல்?

பதில் சொல்லாமல் பார்வையைப் பட்டை உரித்துக்கொண்டிருப் பவரிடம் திருப்புகிறேன். திடல் முழுக்க மரப்பட்டைகள் இறைந்து கிடக்கின்றன. அவர் இப்போது குருவிங் மரப்பட்டையை உரித்துக் கொண்டிருக்கிறார். குருவிங் மரப் பட்டையை உரிப்பது எளிதல்ல. மரத்துக்கும் பட்டைக்கும் இடையே இருக்கும் பிசின் இறுக்கமாக ஒட்டிக்கொண்டிருக்கும். இருப்பினும் வணிகக் கணக்குக்காக அதை ஆங்காங்கே திப்பித் திப்பியாகப் பெயருக்குப் பெயர்த்து வைக்க வேண்டும். இதர பட்டைகள் இவ்வாறில்லை. பாரையால் செதுக்கிய வுடனேயே நீளவாக்கில் எளிதாகப் பெயர்த்துக்கொண்டு வந்துவிடும். ஓமர் கூறியது எல்லாம் நினைவுக்குள் ஓர் ஓட்டம் ஓடிமுடிகிறது. அப்படியானால் நாமெல்லாம் இந்த உரித்த பட்டைகள்தானா? இயற்கை வாழ்விலிருந்து பிரிந்து விட்டோமா?

மரத்திலிருந்து பிரிய மாட்டேன் என்று அடம் பிடித்துக்கொண்டி ருக்கும் இந்த குருவிங் மரப்பட்டை ஒரு தொல்குடி. அல்லது பிலியவ்.

# 5

*வைகறை வெளவால்*

நள்ளிரவு இருக்கும். பரபரவென பேச்சுக்குரல்கள். ஆட்கள் அங்கு மிங்கும் அலைவதுபோல் இருக்கவே விழித்தெழுகிறேன். எல்லோருமே எழுந்துவிட்டிருந்தனர். சூரியாத்திக்குப் பேறுவலியாம். குழந்தைப் பெற்றுக்கொள்ள நகர மருத்துவமனைக்குப் போக மறுத்துவிட்டவர் சூரியாத்தி. நானும் கம்போங்கில் பிறந்தவள்தான். என் இரு குழந்தைகளும் அங்குதான் பிறந்தன. இந்தக் குழந்தை மட்டும் இங்கு பிறக்காதா என்ன?

தொழிலாளர் குடியிருப்புக்கு இறங்கிப் போனபோது குடிலின் முன்பு எல்லோரும் குழுமியிருக்கின்றனர். கூடுதலாக இரு விளக்குகள். வெளிச்சம் நன்கு பரவியிருக்கிறது. லிசாவும் அன்னாவும் வெந்நீர் போட்டுக்கொண்டிருக்கிறார்கள். உள்ளே மூத்த இரு பெண்கள் பேறு பார்ப்பதற்காக அருகிலிருக்கிறார்கள். சாபு எதையோ கொண்டு வந்து அவர்களை அழைத்து அதைத் தருகிறார். அது சுறாவின் வால் என்கிறார்கள். இதை வைத்துக்கொண்டு என்ன செய்வார்கள்?

வாங்கிக்கொண்ட பெண் அதை எடுத்துக்கொண்டு உள்ளே போகிறார். உள்ளே சூரியாத்தியின் மெல்லிய முனகல் ஒலி கேட்கிறது. ஜெய்னல் தொழுகை விரிப்பை எடுத்துக்கொண்டு வெளியேவந்து மூலையைத் தேர்ந்தெடுத்தவர், அவ்விரிப்பை விரித்து தொழுகையைத் தொடங்குகிறார். ஓமரைத் தேடினால் அவர் அனைத்தையும் கவனித்தவாறு ஓரிடத்தில் நிற்பது தெரிகிறது. இரு மூலைகளில் தீ மூட்டிக்கொண்டிருக்கின்றனர். ஃபிரான்சிஸ் அருகே நெருங்குகிறேன். அதுதான் இவ்வளவு வெளிச்சம் இருக்கிறதே. அப்புறம் எதற்கு இங்கு தனியே நெருப்பு?

குழந்தை பிறக்கப்போகும் நேரத்தில் தாய்க்கு நிறைய குருதி வெளியாகும். அதை உறிஞ்சிக் குடிக்க 'பிலான் பிலான்' என்ற பேய் வரும். அப்படி வரும்போது கொஞ்சம் முன்னால் சாபு கொடுத்தார் இல்லையா சுறா வால் அதைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு கூடவே இப்படி நெருப்பும் மூட்டினால் அப்பேய் ஓடிவிடும்.

ஃபிரான்சிஸ் கடசன்காரர். அவரிடம் கேட்கிறேன். இது உங்களுக்குரிய சடங்கு. இந்த அக்காவோ புக்கிஷ்காரர். அவர்களுக்கு உங்கள் சடங்கு நம்பிக்கை ஒத்துவருமா?

ஃபிரான்சிஸ் இதற்குப் பதில் ஏதும் சொல்லவில்லை. ஆழமாக ஒரு பார்வை மட்டும் வருகிறது. பிறகு ஃபிரான்சிஸின் ஒரு கை நெஞ்சின் மீது வந்து பதிகிறது. இது ஏன் இப்படி படபடப்பாகத் துடிக்கிறது? சொல்லுங்கள் துவான்.

என்ன பதில் சொல்வது?

பதில் சொல்ல முடியவில்லை இல்லையா? உங்கள் முகத்தை முடிந்தால் இப்போது கண்ணாடியில் போய்ப் பாருங்கள். சகிக்கவில்லை. அவ்வளவு பதற்றம். உங்கள் உணர்வு இப்படி வெளிவருகிறதென்றால் எங்களுக்கு இப்படி. அவரவருக்குத் தெரிந்ததைச் செய்வோமே?

அங்கிருந்து நகர்கிறேன். தொழுதுகொண்டிருக்கும் ஜெய்னலின் அருகே சென்று அவர் முகத்தையே பார்க்கிறேன். தொழுது கொண்டிருந்தாலும் ஒரு பதற்றம் முகத்தில் தெரிகிறது. குடிலில் இருந்து பேச்சுக் குரல்கள் அதிகமாகிக் கொண்டிருக்கின்றன. அதைக் கேட்டவுடன் வெளியிலும் பரபரப்பு கூடுகிறது. சூரியாத்தியின் குரல் உச்சமாவது தெளிவாகக் கேட்கிறது. மீண்டும் பெண்களின் பேச்சொலி. ஓரிரு நிமிடத்தில் அன்னாவும் லிசாவும் போட்டி போட்டுக்கொண்டு வெளியேவந்து கூவுகிறார்கள்.

பெண் குழந்தை, பெண் குழந்தை.

ஜெய்னலின் தொழுகை சட்டென்று நிற்கிறது. முகம் வெளிச்சமாகிறது. உதடுகள் விரிந்து புன்னகை அரும்புகிறது. கூடவே பெருமூச்சு. இரு கைகளையும் சேர்த்து ஏந்தி வான் நோக்கி பார்வை படர கண்களை மூடி நன்றி சொல்கிறார். கண்களில் நீர் துளிர்த்திருக்கிறது. பின் தன் தொழுகை நின்றுபோனதை உணர்ந்து மீண்டும் தொழுவதற்கு ஆயத்தமாகிறார். அதே சமயம் அங்கு கைதட்டல்கள் கேட்கின்றன. சிலர் நடனமாடத் தொடங்கியிருந்தனர். நடனமாடிக்கொண்டிருந்த ஃபிரான்சிஸ் பிலியவை அப்படியே தூக்கிக்கொண்டு நடனமாட அவருடைய மெலிந்த சிறு உடல் ஃபிரான்சிஸின் கைகளுக்குள் ஒரு குழந்தையைப் போல இருக்கிறது. பிலியவ் முகத்தில் மகிழ்ச்சி அப்பட்டமாகத் தெரிகிறது. ஓமரோ வாயெல்லாம் பற்கள் தெரியச் சிரிக்கிறார். இவர் இப்படிச் சிரித்து இதுவரை பார்த்ததேயில்லை. இதுவே மனிதர் இவ்வளவு நேரம் எவ்வளவு இறுக்கமாக இருந்திருப்பாரெனத் தெரிவிக்கிறது.

அதற்குள் குழந்தையைக் குளிப்பாட்டி முடித்துத் தூக்கி வந்து ஓமரிடம் காட்டுகிறார்கள். அவர் முதலில் பிலியவின் கையில்

கொடுக்கச் சொல்கிறார். கையில் வாங்கிக் கொண்ட பிலியவ் நெகிழ்ந்து போகிறார். குழந்தைக்கு மெல்லிய முத்தம் ஒன்றைப் பதிக்கிறார். ஓமர் சிறிது சர்க்கரையை அள்ளிக்கொண்டு வந்து ஜெய்னலை அழைத்து, மூன்றும் பெண் குழந்தைகள். இனிமேல் நீ பணக்காரர்தான் என்று வாழ்த்தி ஊட்டுகிறார்.

வெகுநேரம் கழித்து வீட்டுக்குத் திரும்புகையில் வீட்டுக்கு வெளியே இருந்த கட்டையொன்றில் பிலியவ் தனியே அமர்ந்திருப்பது தெரிகிறது. அருகே சென்றமர்கிறேன். மணி என்ன என்றே தெரியவில்லை பிலியவ்?

வானத்தையே பார்த்துக் கொண்டிருந்த பிலியவ் சொல்கிறார். விடியப் போகிறது. மணி நான்கு இருக்கும்.

விண்மீன்கள் சொல்கின்றனவா?

இல்லை வௌவால்கள் சொல்கின்றன என்கிறார் பிலியவ்.

மேலே பார்க்கிறேன். இரண்டு வௌவால்கள் வடக்கு நோக்கிப் போய்க்கொண்டிருக்கின்றன. வௌவால் கடிகாரமா? வௌவால்கள் இரவு முழுக்கப் பறந்துகொண்டுதானே இருக்கின்றன. இதை வைத்து எப்படி நேரம் சொல்லமுடியும் பிலியவ்?

இவை தேன் குடிக்கும் வௌவால்கள். இவை அதிகாலை நேரத்தில் தான் பறக்கும். இந்த வௌவால்கள் போவதைப் பார்த்தால் அந்த டூரியன் மரத்துக்குதான் போகின்றன என்பது தெரிகிறது.

பிலியவ் சொல்லும் மரம் ஓடைக்கு வடக்கில் இருக்கிறது. அது காட்டு டூரியன். அது பூத்துவிட்டதா? இதுவரை தெரியவில்லை. காலையில் சென்று பார்த்துவிட வேண்டியதுதான்.

டூரியன் பழத்தை அறவே பிடிக்காது. காரணம் அதன் கடுமணம். பலாப்பழம் போன்றிருக்கும் அதை உடைத்தால் ஒன்பது பெரிய சுளைகள் இருக்கும். ஒருமுறை தின்றதற்கே இரண்டு நாட்கள் அதன் கடுமணத்துடன் ஏப்பம் வெளியாகிக் கொண்டிருந்தது. அதற்கப்புறம் அதைத் தொடவே இல்லை. அதிகமாக சேட்டை செய்யும் குழந்தை களைச் சுத்த டூரியன் சீசனில் பிறந்தவை எனத் திட்டுவதைக் கேட்டிருக் கிறேன். ஆனால் அப்படியெல்லாம் ஒன்றும் கிடையாது. அந்தப் பழம் ரொம்பச் சூடு அதனால்தான் அப்படிச் சொல்கிறார்கள் என்பார்கள். அந்த டூரியன் மரத்தைப் பார்ப்பதைவிட வௌவால்களைப் பார்ப் பதற்கு வாய்ப்பு கிடைக்கும் என்பதால் விடிந்தவுடனேயே அங்கு போகிறேன். ஆனால் மரத்தில் வௌவால்களும் இல்லை. டூரியன் பூக்களும் இல்லை.

பூக்கள் தரையில் உதிர்ந்து கிடக்கின்றன. வெண் பொன்னிறம். ஆனால் ஒரு பூக்கூட முழுதாகக் கிடைக்கவில்லை. இதழ்களாக உதிர்ந்து கிடக்கின்றன. சில இதழ்களைப் பொறுக்கிக் கொண்டு திரும்புகிறேன்.

ஓமரிடம் காட்டியபோது, இந்தப்பூ நள்ளிரவில் பூக்கும். விடிவதற்குள் சூலகத்தைத்தவிர மற்றவை உதிர்ந்து போகும். அதனால்தான் அந்த நேரத்துக்குள் இதன் தேனை உறிஞ்ச வேண்டிய அவசியம் வௌவால்களுக்கு இருக்கிறது என்றவர் தொடர்ந்து சொல்லுகிறார். ஆனால் ஒன்று. இந்த வகை வௌவால்கள் அழிந்துவிட்டால் இந்த டுரியன் மரங்களும் மகரந்த சேர்க்கை இல்லாமல் அழிந்து போய்விடும்.

வௌவால்கள் இல்லாது போனால் மட்டும்தான் டுரியன் அழியுமா? அலுவலக அறிவிப்புப் பலகையில் ஒட்டப்பட்டிருந்த வெட்ட அனுமதிக்கப்பட்டிருக்கும் கட்டைகளின் பெயர்ப் பட்டியலைப் பார்க்கிறேன். அதில் இதர மரங்கள் என்ற வரிசையில் இருந்த அப்பெயர் கண்ணில் படுகிறது.

டுரியன்.

**கலோய் மீன்கள்**

பங்கலானிலிருந்து வெற்றிகரமாகக் கட்டைகள் தட்டைப் படகு மூலம் அனுப்பப்பட்டன. இழுவைப்படகு அதை இழுத்துச் சென்றபிறகு முகாமுக்குத் திரும்புகிறோம். வழியில் சிறீவந்தோ முகாமுக்குச் செல்லும் பிரிவுச்சாலையில் பிலியவ் சென்று கொண்டிருப்பதைப் பார்த்ததும் வண்டியை நிறுத்தி அவரை அழைக்கிறேன். எங்கே பிலியவ் இந்தப்பக்கம்?

வழக்கமான புன்னகையோடு பதில் வருகிறது. மீன் பிடிக்கப் போகிறேன். மீன் பிடிக்கவா? சுங்கை லோக்கன் எதிர்ப்பக்கம் இருக்கிறது? நீங்கள் ஏன் இந்தப்பக்கம் செல்லுகிறீர்கள்?

இங்கே ஒரு குளம் இருக்கிறது. அங்குதான் போகிறேன் என்று சொல்லியதுமே வழக்கமான ஆவல். இதுவரை இக்காட்டுக்குள் எங்கும் குளத்தைக் கண்டதில்லை. இப்போது விட்டால் வேறு வாய்ப்பு கிடைக்காது. இறங்கிக்கொண்டு அந்த அகன்ற சாலையில் இருவரும் நடக்கிறோம். சிறிது தொலைவில் வலப்புறத்தில் ஓர் ஒற்றையடிக் காட்டுத்தடம் பிரிய பிலியவ் அதில் நடக்கலானார். இதைக் காட்டுத் தடம் என்று சொல்லக்கூடாது. மரங்கள் காலியாக்கப்பட்டுப் புதர்ச் செடிகளே மீதமிருக்கின்றன. ஆனால் உள்ளுக்குள் செல்ல அடர்த்தி கூடி வருகிறது. சற்றுத் தொலைவில் ஓரிடத்தில் அதிக வெளிச்சம் நிறைந்திருக்கிறது. நெருங்கியவுடன் அதுதான் குளம் என்பது தெரிகிறது. அப்பரப்புக்கு மேலே மரங்களேதும் இல்லாததால்தான் அவ்வளவு வெளிச்சம். ஆனால் உண்மையில் அது குளம் இல்லை. நன்னீர்ச் சதுப்பு நிலத் தேக்கம். பெரிய பரப்பளவிலான தேக்கத்தின் ஊடே மரங்கள் ஆங்காங்கே நிற்கின்றன. எல்லாமே இலைகளற்ற மொட்டைக் கிளைகளுடன். காப்பி நிறத்தில் நீர் இருக்கிறது.

அருகிலிருந்த மரங்களின் ஏதோவொரு உச்சியிலிருந்து ஒரு குரல். பலநாட்கள் காலை நேரத்தில் கேட்டுப் பழக்கப்பட்ட போர்னியோ கிப்பனின் குரல். எவ்வளவு நாட்கள் தேடிக்கொண்டிருக்கிறேன். நீ இங்குதான் இருக்கிறாயா? தேடிக் கண்டுவிடுகிறேன். மொத்தம் மூன்று தெரிகின்றன. ஒன்று குட்டி. ஓராங் உடைத்தானைப் போல வாலற்ற இனமாக இருந்தாலும் ஒல்லியான உருவம். மங்கிய கபிலநிறத்தில் பொங்கு மயிர். அதில் கைகளால் தொங்கியபடியே கிளைக்குக் கிளை ஒன்று தாவிக்கொண்டிருக்கிறது. பிரைமேட் பட்டியலில் மேலுமொன்று கூடியது மகிழ்ச்சியாக இருக்கிறது. சட்டென்று ஒரு யோசனையில் இங்கு இறங்கி வந்தது எவ்வளவு நல்லதாகிவிட்டது?

பிலியவ் தன் பையைப் பிரித்துத் தூண்டில் முட்களையும் நரம்புகளையும் எடுக்கிறார். வீசு தூண்டில். அவரிடம் ஏறக்குறைய எல்லா அளவுகளிலும் தூண்டில் முட்களும் நரம்புகளும் இருந்தன. வீசு தூண்டிலில் மீன்பிடித்து வெகு நாளாகியிருந்ததால் ஒரு தூண்டிலைக் கேட்டு வாங்குகிறேன். அதிலொரு பொடி மீனை இரையாகக் கோத்துத் தருகிறார். தேக்கத்தில் ஆழம் அதிகமில்லை. கரையிலிருந்து இருபதடி தொலைவு வரையிலும்கூட முழங்கால் அளவு நீரே இருக்கிறது. நீரிலிறங்கி நின்றுகொண்டு தூண்டிலைப் பிரித்து வீசுகிறேன். வீசிய இரண்டே நிமிடத்தில் மீன் இழுக்கிறது. உடனே நரம்பைத் துரிதமாக இழுத்துச் சுருட்டுகிறேன். சிக்கியிருந்த மீனைப் பார்த்ததும் ஏறக்குறைய கூவிவிடுகிறேன்.

ஈக்கான் கலோய்...

இதுவொரு வளர்ப்பு மீன்வகை. அதன் தாடையின் கீழே இரு பக்கத்திலும் இரு நீண்ட தாடிபோன்ற தொங்குமுடி. அம்முடியின் நீளத்திற்கேற்ப அதன் விலை கூடிக்கொண்டே போகும். பிலியவும் இம்மீனை எதிர்பார்த்திருக்கவில்லை என்பதை அவர் முகக்குறிப்பு சொல்கிறது. அவர் அருகில் வந்து அம்மீனைத் தூண்டிலில் இருந்து விடுவித்துவிட்டு மீண்டும் இரையை மாட்டி வீசச்சொல்கிறார். இம்முறையும் அதே நேர இடைவெளியில் அதே வகை மீன். ஆனால் முன்னைவிடச் சற்று பெரிய மீன். அரைக் கிலோவுக்கு நெருங்கி இருக்கும். பிலியவுக்கே திகைப்பு தாங்கவில்லை.

இம்முறை அவரே ஏதோ யோசித்துப் பையில் இருந்து பெரிய தூண்டில் முள்ளை எடுத்து ஒரு முரட்டு நரம்பில் கோர்த்து இணைத்து எடுத்துக்கொள்கிறார். நீர்த்தேக்கத்தில் இருபதடி தொலைவுக்குமேல் உள்நுழைந்து நின்றுகொண்டு தூண்டிலைப் பிரித்து வீசுகிறார். முழுதாக அய்ந்து நிமிடம் முடிந்திருக்காது. ஒரு மீன் சிக்கிவிடுகிறது. பிலியவ் வலுவாக இடம் வலமாக மாறி மாறி அலைக்கழிக்கிறது. ஒருவேளை பெரிய இழுக்கிறார். என்ன மீன் என்று தெரியவில்லை.

கெளுத்தியாக இருக்கும். நரம்பைக் கரையை நோக்கி இழுத்துப் பார்த்தபோது அதுவும் கலோய். ஆனால் மிகப்பெரிய கலோய் மீன்.

பிலியவின் முகத்தில் வியப்பு அப்பட்டமாய்த் தெரிகிறது. அக்கலோய் மீன் எப்படியும் மூன்று கிலோ எடை இருக்கும். அகலமே ஓரடிக்கு இருந்தது. தொங்கு தாடி மெல்லிய கம்பியளவுக்கு ஓரடிக்கும் மேலாக நீண்டிருக்கிறது. பிடித்த மூன்று மீன்களையும் அருகருகே வைத்துப் பார்க்கிறேன். வளர்ப்பு மீன் விற்பனை நிலையங்களில் ஓரளவு சிறிய மீன்குஞ்சையே பத்து வெள்ளி சொல்லுவார்கள். இங்குள்ள சின்ன மீனையே முப்பது வெள்ளி சொல்லுவார்கள். இரண்டாவதாக உள்ளது நூற்றைம்பது வெள்ளி. ஆனால் இக் கடைசி மீன்? இவ்வளவு பெரிய அளவில் இம்மீனை எங்கும் கண்டதில்லை. அதனால் இது என்ன விலையாகும் என்றே தெரியவில்லை.

பிலியவிடம் புலம்பத் தொடங்குகிறேன். பிலியவ் இதையெல்லாம் என்ன செய்வது? இவை சீக்கிரம் இறந்துபோய்விடும் என்று நினைக்கிறேன். இதை எப்படி உயிரோடு வளர்ப்பது என்று தெரியவில்லை.

பிலியவ் மெதுவாகச் சொல்கிறார். இறந்துபோனால் என்ன? சமைத்துச் சாப்பிட்டால் போகிறது.

திடுக்கிடுகிறேன். என்னது? சமைத்துச் சாப்பிடவா? இவ்வளவு விலையுயர்ந்த வளர்ப்பு மீனையா?

கேள்விக்குப் பதில் அலட்சியமாக வருகிறது. இதை யார் உங்களை வளர்க்கச் சொன்னது? இவ்வளவு பெரிய குளத்தில் நாங்கள் வளர மாட்டோம் என்று இம்மீன்கள் நம்மிடம் சொன்னதா? இம்மீன்கள் சாப்பிடச் சுவையாக இருக்கும்.

இல்லை பிலியவ். இதன் விலை அதிகம்.

விலை நீங்களே வைத்துக்கொண்டதுதான். சாப்பிடுகிற மீனை வளர்ப்பதற்கு விற்றால் சாப்பிடுவதற்கு எப்படி இந்த மீன்கள் கிடைக்கும் என்று கேட்டுக்கொண்டே பிலியவ் தூண்டிலோடு மீண்டும் நீரில் இறங்குகிறார்.

அடுத்த அரைமணி நேரத்துக்குள்ளாகவே அப்பெரிய மீனின் அளவிலேயே அய்ந்தாறு மீன்கள் கிடைக்கின்றன. முடிவில் ஒரு காட்டுக்கொடியில் எல்லாவற்றையும் கோத்து எடுத்துக்கொண்டு கிளம்புகிறோம். முகாமுக்குச் சென்று சேர்ந்ததும் அம்மீன்களைக் கண்ட ஆங் அதிர்ந்து விடுகிறார். பிறகு ஒரே புலம்பல். பெரிய மீனின் விலை என்னவென்று தெரியுமா உங்களுக்கு? இங்கே விற்றாலே ஆயிரம் வெள்ளிக்கு மேல் விற்கலாம். இதையே ஹாங்காங்குக்கு அனுப்பி வைத்தால் அப்படியே இரட்டைவிலை. இதைப்போய் யாராவது சமைக்கக் கொண்டு வருவார்களா?

பிறகு பிலியவிடம் இந்த மீன் எங்கே கிடைத்தது, அந்தக் குளம் எங்கே இருக்கிறது போன்ற விபரங்களை ஒன்றுவிடாமல் கேட்டுக் கொண்டேயிருக்கிறார். அம்மீன்களைச் சமைத்து வைத்தபோது அதைத் தொடவே இல்லை அவர். நாங்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதுகூட, அய்யாயிரம் வெள்ளி மீன்களைச் சமைத்துச் சாப்பிடுகிறீர் களே பாவிகளா என்று புலம்பிக்கொண்டே இருந்தார்.

அப்படி அவர் புலம்பி முடித்த மூன்றாவது நாளே முகாமுக்கு ஒரு பழைய சிமிட்டிநிற லேண்ட் ரோவர் வண்டி வருகிறது. அதன் பின்புறத்தில் பாதி உயரத்தோடு அறுக்கப்பட்டிருந்த மூன்று ஞெகிலி பீப்பாய்கள் இருக்கின்றன. ஒல்லியாகவும் சற்று குள்ளமாகவும் இருந்த ஒரு சீனர் அவ்வண்டியிலிருந்து இறங்குகிறார். அவரைப் பார்த்தவுடன் ஆங் ஓடிச்சென்று வரவேற்று அழைத்துவந்து அவரை எங்களுக்கு வோங் என்று அறிமுகப்படுத்துகிறார். வோங் அலங்கார மீன் விற்பனை வணிகர். கலோய் மீன்களைக் குறித்த செய்தியைத் தெரிவித்து ஆங் வரவழைத்திருக்கிறார். ஆங் எங்களை அழைத்து நாளை அக்குள மிருக்கும் இடத்துக்கு உடன்வரவேண்டும் என்று கேட்டுக்கொள் கிறார். பிலியவைப் பார்க்கிறேன். அவர் வேறு வழியில்லை என்பது போல தலையாட்டி வைக்கிறார்.

மறுநாள் காலையிலேயே பிலியவைக் காணவில்லை. அவர் முன்கூட்டியே அவ்விடத்துக்குச் சென்றிருப்பார். நாங்கள் லேண்ட் ரோவர் வண்டியில் அங்கு சென்றுசேர்ந்தபோது எதிர்பார்த்தபடியே அச்சாலைப் பிரிவில் பிலியவ் நின்றுகொண்டிருக்கிறார். வோங், ஆங் இருவரும் ஆளுக்கொரு காலி பீப்பாயை எடுத்துக்கொண்டு நடந்து வருகின்றனர். அக்குளத்தைப் பார்த்ததும் வோங் தனது தூண்டில் பொருட்களை எடுத்துப் பிரிக்கத் தொடங்குகிறார். அவருடைய தூண்டில் முட்களைக் கவனித்தபோது அதில் ஒரு வேறுபாடு தெரிகிறது. அவை வழக்கமான முட்களாக இல்லை. குடைக்காம்புபோல் வளைந் திருக்கும் முள்ளின் கூர்முனைக்குச் சற்று கீழே அதற்கு எதிர்த்திசையில் வளைந்து இருக்கும் ஒரு சிறுகூர்முனை இத்தூண்டில் முட்களில் இல்லை. நுனிமுனை மாத்திரமே அதில் இருக்கிறது. இப்படியெல்லாம் கூட தூண்டில் முட்கள் கிடைக்கின்றனவா?

இல்லை, நான்தான் அந்த முள்ளை ஒடித்துத் தேய்த்தெடுத்து விட்டேன். உணவுக்காகப் பிடிக்கும் மீன்களுக்குதான் அத்தகைய முட்கள் தேவை. இப்படி வளர்ப்பு மீன்களைப் பிடிக்கும்போது அந்தக் கீழ்முள் கூடாது என்று கூறிய வோங் ஒரு முள்ளைக் கையிலெடுத்துக் காட்டி, மீன் வழக்கமாகத் தூண்டிலில் மாட்டும்போது இந்த முனை முள்தான் முதலில் அதன் சதையில் தைக்கும். பிறகு அது தன்னை விடுவித்துக்கொள்ள தன்னுடலைப் பின்னுக்கு இழுக்கும். அப்போது

கீழ்முள்ளில் அதன் சதைப்பகுதி தைத்துக்கொண்டு விடும். அப்படித் தைக்கும் கீழ்முள்ளால் அதன் தசை கிழிபடும். உணவுக்கான மீன் என்றால் கவலையில்லை. எப்படியும் இறந்த மீனைத்தான் சாப்பிடப் போகிறோம். ஆனால் வளர்ப்பு மீன்களை அப்படிப் பிடிக்க முடியாது. இறந்துவிடும். அதனால் கீழ்முள்ளை இப்படித் தேய்த்தெடுத்து விடுவோம்.

ஆனால் முள் இப்படியிருந்தால் மீன்கள் தப்பிக்க வாய்ப்பிருக்கிறதே?

இருக்கிறதுதான். ஆனால் பிடிபடும் மீன்களை உயிரோடு வளர்க்க முடியுமே?

இதுவும் சரிதான். இப்போது அவர்கள் இருவருமாக மீன்பிடிக்கத் தொடங்குகிறார்கள். அரைமணி நேரத்துக்குள்ளாக பத்து மீன்களைப் பிடித்துப் பீப்பாய்த் தண்ணீரில் விட்டு வைத்திருக்கின்றனர். கதிரொளி நேரடியாகப் படாதவாறு இலைதழைகளால் மூடப்பட்டிருக்கின்றன. அடுத்த மீனை போடவந்த வோங் அம்மீன்களைப் பார்க்கிறார். பின்னர் பையைத் திறந்து ஒரு ஞெகிழி போத்தலை எடுத்து அதிலிருந்த திரவத்தைச் சிறிதளவு பீப்பாய் நீருக்குள் ஊற்றுகிறார். என்ன வென்று அருகே சென்று பார்க்கிறேன். பிலியவுக்கும் ஆர்வம். அவரும் வந்து எட்டிப் பார்க்கிறார். வோங்கிடம் கேட்கிறேன். என்ன ஊற்றினீர்கள்?

இந்நீரில் இம்மீன்கள் மூச்சுவிடத் தேவையான உயிர்க்காற்று குறைந்துவிட்டது. இதனால் மீன்கள் இறந்துவிடலாம். இத்திரவத்தை ஊற்றினால் அவை மூச்சுவிட வழக்கத்தைவிட பாதியளவு உயிர்க் காற்று போதும் என்கிறார். அம்மீன்கள் மயக்கமடைந்து இலேசாக மிதக்கின்றன. இது எவ்வளவு மணி நேரத்துக்குத் தாங்கும் என்று விசாரிக்கிறேன். ஏழெட்டு மணி நேரம். எப்படியும் சண்டகான் போய்ச் சேரும் வரையாவது தாங்கும்.

பிலியவ் அந்த ஞெகிழிப் போத்தலை எடுத்துப் பார்க்கிறார். பிறகு ஏதோ நினைத்துக்கொண்டவர் போல குளத்தின் கரையோரமாக எதிர்த்திசைக்குச் சென்று காட்டுக்குள் மறைகிறார். இவர் எப்போது என்ன நினைப்பார், எப்படி நடப்பார் என்பதை இன்னும் புரிந்து கொள்ள முடியவில்லை.

அரைமணி நேரம் சென்றதும் பிலியவ் எதிரே நின்று கையைக் காட்டி அழைக்கிறார். அங்கு சென்றதும் ஒன்றும் சொல்லாமல் ஒரு புன்னகையோடு குளத்துக்குள் இறங்குகிறார். கொஞ்ச தொலைவு சென்றவர் மடியில் இருந்து எதையோ பிரித்தெடுப்பது தெரிகிறது. பிறகு நீருக்குள் கையைவிட்டு அப்பொருளைக் கரைத்து கைகளால் ஆட்டுகிறார். திரும்பி வருகிறார். என்ன செய்தீர்கள் பிலியவ்?

கொஞ்சம் பொறு. நீயே தெரிந்துகொள்வாய்.

எதிரே குளத்தின் மறுகரையில் அவர்களிருவரும் ஒரேசமயத்தில் தூண்டிலை இழுத்துக் கொண்டிருப்பது தெரிகிறது. இப்போது கூடுதலாக இன்னொரு பீப்பாயும் சேர்ந்திருக்கிறது. அவ்வளவு மீன்களைப் பிடித்திருக்கிறார்கள். அதைப் பார்த்த பிலியவுக்கு அது மகிழ்ச்சியைக் கொடுக்கவில்லை என்பது புரிகிறது. ஒருவேளை அவர்கள் தம் உணவுக்காக அம்மீன்களைப் பிடித்திருந்தால் இப்படி வருந்தியிருக்க மாட்டார். கால்மணி நேரம் கழிந்ததும் நீருக்குள் இறங்கிய பிலியவ் அங்கிருந்தபடியே அருகே வருமாறு அழைக்கிறார். அவர் நின்றிருந்த இடத்தை அடைவதற்குள் அக்காட்சியைப் பார்த்துவிடுகிறேன்.

அவர் நின்ற இடத்தைச் சுற்றிலும் பல மீன்கள் மிதந்து கொண்டிருக்கின்றன. அவை வாயைத் துரிதமாகத் திறந்து மூடி உயிர்க்காற்றை உள்ளிழுக்க சிரமப்பட்டுக் கொண்டிருக்கின்றன. அங்கு வோங் திரவத்தை ஊற்றி செய்த அதே செய்கையை இந்த பிலியவ் எதையோ கரைத்துச் செய்துவிட்டாரே? திகைத்துப்போய்க் கேட்கிறேன். இது என்ன வித்தை பிலியவ்?

மெலிதாகச் சிரித்துக்கொண்டே சொல்கிறார். ஒன்றுமில்லை ஒரு மரத்தின் பால்.

என்ன மரத்தின் பால் பிலியவ்?

இப்படிக் கேட்டதும் உடனடியாகப் பதில் தரவில்லை. ஒரு கணம் கண்களை உற்று நோக்கிவிட்டுப் பிறகுதான் சொல்கிறார். பிணாகா மரத்தின் பால்.

இம்மரத்தின் பெயரை இதுவரை கேள்விப்பட்டதே இல்லை. இதுமட்டும் அவ்விருவருக்கும் தெரிந்தால் மொத்த மீன்களையும் இன்றே பிடித்துக்கொண்டு போய்விடுவார்கள். இது அவர்களுக்கு தெரியவே கூடாது.

அங்கிருந்து இருவரும் வெளியேறி வந்தபோதும் அவர்கள் மீன் பிடிப்பதை நிறுத்தவில்லை. முகாமுக்கு வந்துசேர்ந்தபோது ஓமரிடம் கேட்கிறேன்.

பிணாகா என்றால் என்ன மரம்?

ஓமர் ஒரு கணம் உற்றுப் பார்த்துவிட்டுக் கேட்கிறார். இந்த பெயர் உனக்கு எப்படித் தெரியும்?

விபரங்களைச் சொல்லி முடித்ததும் சிரித்துக்கொண்டே சொல்கிறார். யாருக்கும் புரிந்துவிடக்கூடாது என்று பிலியவ் உள்ளூர் மொழியில் அம்மரத்தின் பெயரைச் சொல்லி இருக்கிறார். அது வேறொன்றுமில்லை. போர்னியோ மகோகனி.

**தொல்சிறகி**

மறுநாள் காலையில் அலுவலக அறையில் வேலை. ஆயாக்...யாக் யாக்

யாக்... காக்கை இருவாசியின் குரல் கேட்டுக்கொண்டேயிருக்கிறது. இவை சிறு கூட்டமாக இங்கு தென்பட்டுக் கொண்டேயிருக்கிறது. சாலையின் விளிம்பிலும், பட்டை உரிக்கப்படும் திடல் ஓரங்களிலும் பூச்சிகளைப் பிடித்துத் தின்றுகொண்டிருக்கிறது.

துவான்... துவான்....

யாருடைய குரல்? வெளியே எட்டிப் பார்க்கிறேன். மரம் வெட்டு பவரின் உதவியாள். இவர் இந்நேரம் மரம் வெட்டும் இடத்திலல்லவா இருக்கவேண்டும்? ஆனாலும் சங்கிலி வாளின் ஒலியைத் தொடர்ந்து கவனித்துக் கேட்டுக்கொண்டிருந்ததால் உள்ளுக்குள் அச்சம் எதுவும் எழவில்லை. என்ன செய்தி என்று விசாரிக்கிறேன்.

துக்காங் தும்பாங் உங்களை அழைத்து வரச்சொன்னார் துவான். நாங்கள் மரம் வெட்டும்போது ஒரு சிறுவிலங்கு மரத்தின் உச்சியி லிருந்து கீழே விழுந்து இறந்துவிட்டது. நீங்கள் அதைப் பார்ப்பதற்கு விரும்புவீர்கள் என்று உங்களை அழைத்து வரச்சொன்னார்.

அப்படியா? உடனே எழுந்துகொள்கிறேன். இவர்கள் பத்தாவது தொகுதியில் மரம் வெட்டுகிறார்கள். அத்தொகுதி நோக்கி நடக்கை யில் அவரிடம் கேட்கிறேன். அது என்ன விலங்கு என்று தெரியுமா?

தெரியும் துவான். குபுங்

குபுங்? அது என்ன விலங்கு என்கிறேன். குபுங் என்றால் குபுங்தான் துவான். நாங்கள் அதை அப்படித்தான் சொல்வோம். வேறு பெயர் தெரியாது.

இது என்ன குபுங்? தொடர்ந்து விசாரித்ததில் அது சறுக்கிகளுள் ஒன்று என்பதுபோலத் தெரிகிறது. அந்த உயிரினத்தில் ஓரளவுக்குப் பார்த்துவிட்டேன். அப்படியானால் இது என்னவாக இருக்கும்? அங்கு சென்றபோது மரம் வெட்டுபவர் கீழேயமர்ந்து வாளின் சங்கிலியை அரத்தால் கூர்தேய்த்துக் கொண்டிருக்கிறார். இது அடுத்த மரத்தை அறுக்கும்முன் நடைபெறும் ஆயத்தம். எங்களைப் பார்த்ததும் அதோ அங்கே வைத்திருக்கிறேன் துவான் என்று சுட்டிக் காட்டுகிறார்.

வெட்டி வீழ்த்தியிருந்த மரத்தின் மேலேயே அதை வைத்திருக்கிறார். சாம்பலும் சற்று இளமஞ்சள் நிறமும் கலந்திருந்த மென்மயிர்த் தோல் கொண்டிருந்த அதைப் பார்த்தவுடனேயே அது தொல்சிறகி என்பது புரிகிறது. ஆனால் உறுதியாக வெளவால் இல்லை. முகம் ஏறக்குறைய அணிலைப் போல் இருந்தாலும் அணிலும் இல்லை. சின்னஞ்சிறிய செந்நிறக் காது. அதன் தோல் இறகை விரித்துப் பார்த்தபோது அத்தோல் ஓரிரு இடங்களில் கிழிந்திருக்கிறது. அதைத் தவிர வேறு எந்த வெளிக் காயமும் தெரியவில்லை. அத்தோல் சிறகு அதன் மணிக்கட்டுப் பகுதியிலிருந்து தொடங்கி வால்பகுதிவரை பரவியிருக்கிறது. அப்படி

இன்னமும் தீரவில்லை. மரம் வெட்டுபவரிடம் கேட்கிறேன். இந்தக் கூரங்குக்கு வேறு பெயர் ஏதாவது தெரியுமா?

தெரியாது துவான்.

இது துப்பாய் தெர்பாங் கிடையாதுதானே?

கிடையாது துவான். அது பகலில் பறக்கக்கூடியது. ஆனால் இது இரவில் பறக்கும். பகலெல்லாம் வௌவால் மாதிரி மரத்தில் தொங்கி யிருந்துவிட்டு மாலையில்தான் இரைதேடிக் கிளம்பும்.

புரிந்துவிடுகிறது. அப்படியானால் இது பறக்கும் லீமர். இதை இங்கு பார்ப்பேன் என்று நினைக்கவேயில்லை. எவ்வளவு அரிய உயிரினம் இது!

இது கொலுகோ. வௌவாலைப் போலவே பாலூட்டி. ஆனால் வௌவாலைப் போலப் பறக்கத் தெரியாது. இது ஒரு சறுக்கி. இருப்ப திலேயே நீண்ட தொலைவு சறுக்கிச் செல்லக்கூடிய விலங்கு. படித்த செய்திகள் நினைவுக்குள் ஒவ்வொன்றாய் வருகின்றன. இக்காடு இன்னும் என்னென்ன அரிய உயிரினங்களை ஒளித்து வைத்திருக்கிறது? எல்லாவற்றையும் பார்க்க முடியுமா?

அதுதான் ஒவ்வொரு மரமாக வெட்டிச் சாய்க்கப் போகிறோமே அப்போது நீ எல்லாவற்றையும் பார்த்துவிடலாம்

ஆனால் இப்படி உயிர் நீங்கிய சடலமாகவா? இதை ஓமரிடம் காட்ட வேண்டும். ஓரடி நீளத்துக்கு மேல் இருந்த அதைக் கையில் எடுத்துக்கொள்கிறேன். ஒரு கிலோவுக்கு மேல் எடையிருக்கும். மரம் வெட்டுபவருக்கு நன்றி சொல்லிவிட்டு அதை எடுத்துக்கொண்டு வெளியே வருகிறேன். தேடும் சிரமம் வைக்காமல் ஓமர் திடலில் நின்று வேலைகளைக் கவனித்துக் கொண்டிருக்கிறார். கையில் இருப்பதைப் பார்த்தவுடனேயே பறக்கும் லீமர்தானே என்கிறார். கணித்தது சரிதான். அதை உற்றுப்பார்த்துக் கொண்டே ஓமர் சொல்கிறார்.

இது எவ்வளவு அரிய உயிரினம் தெரியுமா? பரிணாம வளர்ச்சியில் உன் மூப்பாட்டன் துபையா மாதிரி இதற்கும் முதன்மையான இட முண்டு. வௌவாலுக்கு முந்தி இதுதான் பறக்கத் தொடங்கிய பாலூட்டி. அவ்வகையில் இது வௌவாலின் மூதாதை. போர்னியோவைத் தவிர உலகின் வேறு எங்கும் இதைக் காண முடியாது. இதெல்லாம் அழியவே கூடாத இனம். ஆனால் என்ன செய்வது? இனிமேல் இதை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறாய்? போய் தொலைவாக வீசிவிடு.

வீசுவதற்குமுன் ஒருமுறை அதைத் தரையில் வைத்து அதன் தோல் சிறகை அகல விரித்துப் பார்க்கிறேன். செவ்வக வடிவப் பட்டம் உயிருடன் விரிந்து பறக்கும் காட்சி தோன்றி மறைகிறது. காட்டை வெட்டி மரங்களே அற்றுப்போனால் இப்படியான கவிகைவாழ்

உயிரினங்கள் என்ன செய்யும்? எங்கே வசிக்கும்? கொக்கோத் தோட்டங்களில் எப்படிச் சறுக்கிப் பறக்கமுடியும்? செம்பனைத் தோட்டங்களில் எப்படி வாழமுடியும்? அதன் கிழிந்த தோல்சிறகு எதை எதையோ உணர்த்துகிறது. அதைக் கையிலெடுத்துக் காட்டுக்குள் தொலைவாக வீசியெறிகிறேன்.

பலகோடி ஆண்டுப் பரிணாம வளர்ச்சியின் வாழும் வரலாறான தொல்சிறகியின் பிணம் குப்பையைப் போல் போய் விழ்கிறது.

# 6

திரும்பும் இறந்தது
ஆமாகிவிட்ட தன் பிரம்புக் கூடையைக் கையில் வைத்துப் பிலியவ் பார்த்துக் கொண்டிருக்கிறார். அக்கூடைக்குள் ஒரு பொருள் தெரிகிறது. எடுத்துப் பார்க்கிறேன். அது ஒரு புல்லாங்குழல். ஆனால் சிறிய குழல். இவ்வளவு சிறிய குழலை இதற்குமுன் பார்த்ததில்லை. ஒரு அடி நீளம். மூன்று துளைகளே இருக்கின்றன. இது என்ன இவ்வளவு குட்டியாக இருக்கிறது பிலியவ்?

இது மூக்கினால் வாசிப்பது. அப்படித்தான் இருக்கும்.

மூக்கினால் வாசிக்கும் புல்லாங்குழலா? சாதாரண புல்லாங்குழலை எத்தனையோ முறை ஊதிப் பார்த்திருக்கிறேன். காற்று புகுந்து புறப்படும் ஓசை கேட்டிருக்கிறதே தவிர ஒருமுறைகூட இசை வந்ததில்லை. வாய்க்கே அப்படி. இவர் என்னவென்றால் மூக்கினால் வாசிப்பது என்கிறார்.

இதை வாசித்துக்காட்டுங்கள் பிலியவ்.

பிலியவ், எந்த உணர்ச்சியும் காட்டாத மெல்லிய குரலில், இதை இப்போது வாசிக்கக்கூடாது என்று சொல்லிவிட்டுக் கையில் வைத்திருந்ததைத் திரும்பவும் வாங்கி தன் பிரம்புக்கூடைக்குள் வைக்கிறார்.

ஏன் இப்படிச் செய்கிறார் என்று தெரியவில்லை. முகத்திலிருந்த வாட்டத்தைக் கவனித்து அவரிடமிருந்து சொற்கள் கனிவாக வருகின்றன. நீ வருத்தப்படக்கூடாது. எல்லா நேரங்களிலும் இதை வாசிக்கக்கூடாது. ஏன் அப்படி என்று இன்னொரு நாள் சொல்கிறேன். உறுதியாகச் சொல்லுவேன். அதுவரை என்னைத் தவறாக நினைக்கக் கூடாது.

அந்த இதமான புன்னகையில் மனம் சற்று இளகுகிறது. இலகுவாகிறது. பிலியவ் எழுந்து நின்று, இன்று ரோத்தான் தேடிப்போகிறேன். புதியகூடை ஒன்றைப் பின்னவேண்டும். வரட்டுமா என்கிறார். ரோத்தான்தானே பிலியவ். அது இருக்குமிடம் எனக்குத் தெரியும். ஆறாவது தொகுதியில் நிறைய இருக்கிறது. சேர்ந்து போவோம் என்று சொல்லிவிட்டு உடன் புறப்படுகிறேன்.

ஆறாம் தொகுதியை அடைகிறோம். டிராக்டர் தடங்கள் உள்நுழைவை எளிதாக்குகின்றன. ஆனால் அந்தப் பிரம்புப் புதர் மண்டியிருந்த இடத்தைக் கண்டுபிடிப்பது சிரமமாகிறது. அது இருந்த இடத்தை அறிய அடையாளமாகக் கொண்டிருந்த மரங்கள் எதுவும் அங்கில்லை. சுற்றித் தேடுகிறேன். பிலியவ் சிரிக்கிறார். பிலியவ், அது இங்குதான் எங்கோ இருக்கிறது.

இருக்கிறது இல்லை. இருந்தது என்று சொல். இதோ அது இதுதானா என்று பார்த்துச்சொல் என்று அவர் காட்டிய திசையைப் பார்க்கிறேன். பாதையைச் சீரமைப்பதற்காக புல்டோசர் மண்ணோடு மண்ணாகப் புரட்டி ஓர் ஓரத்தில் குவித்து வைத்திருந்த செடி, கொடி, குற்று மரங்களின் குவியல் அது. இரு ஆள் உயரத்துக்கு இருந்த அக்குவியலுக்குள் ஆங்காங்கே அந்தப் பிரம்புக்கொடிகள் நீட்டிக்கொண்டு தெரிகின்றன. ஆனால் அவை எல்லாமே காய்ந்து போயிருந்தன. இது உதவாது. வா உள்ளே போய்த் தேடுவோம் என்கிறார் பிலியவ்.

தொகுதி முழுக்கவும் மரங்களின் அழிவு, நிழல்களின் இறப்பாய் மாறியிருக்கிறது. தோலைத் தீண்டும் வெப்பத்தின் சுளீர். மேல்மக்கு இழந்த மண்ணில் ஈரத்தின் பிரிவு. எப்போதும் கேட்டுக்கொண்டிருக்கும் நீரோடைகளின் உரையாடல் அறவே இல்லை. இதுவரை இக்காட்டுக்குள் கேட்டிராத உலர்ந்த சருகுகள் பொடியும் ஓசை காலடியில் கேட்டுக் கொண்டேயிருக்கிறது. ஆறாம் தொகுதியின் வெளி எல்லை முடிகிறது. பிலியவ் எல்லை தாண்டி உள்ளே நுழைகிறார். இப்போது மீண்டும் கானகத்தின் தழுவல். இப்போது தலைக்குமேல் தருக்களின் நிழல் மேகமாய்க் கவிகிறது. சூடு தணியும் சுகம். காலின் கீழ் மீண்டும் மெத்தென்று மிதிபடுகிறது மேல்மக்கு. குளுமை சுமந்த காற்றின் இதமான தழுவலில் 'சி-சி-த்யூவ்...'

சிட்டுக்குருவி அளவிலான கருநீலச் சிறகுடைய சிறிய குருவி யொன்று கடந்து செல்கிறது. இங்கேயும் வந்துவிட்டீர்களா பாவிகளா? சி-சி-த்யூவ்... அதன் இறக்கையிலும் வாலிலும் வெளிர்நீல மினிறல். சற்றுத் தொலைவில் சென்று மீளவும் சி-சி-த்யூவ்... இசைக்குரல். மூன்று பிரிவாய் ஒலிக்கும் மெல்லிய சீழ்க்கை. அதிலும் கடைசியாய் ஒலிக்கும் 'த்யூவ்...' மிகவும் சன்ன ஒலியில்.

பிலியவ் இன்னும் நடந்துகொண்டிருக்கிறார். பிரம்புப் புதர்கள் எதுவும் கண்ணில் தட்டுப்படவில்லை. ஆனால் தீர்மானமாக நடக்கிறார். அப்படியானால் எங்கோ அது இருக்கத்தான் வேண்டும். ஓரிடத்தில் பாதை தடைபடுகிறது. பிலியவ் திரும்பிப் பார்த்துப் புன்னகைக்கிறார். கண்டுபிடித்துவிட்டார். ஆவலுடன் அவருடைய தோளுக்கு மேலாக முன்னே எட்டிப் பார்க்கிறேன். வழியில் பழைய மரம் குறுக்கே வீழ்ந்து கிடக்கிறது. பிரம்புப்புதர் ஏதுமில்லை. பின் எதற்காக இப்புன்னகை?

சில ஆண்டுகளுக்கு முன்பே இம்மரம் விழ்ந்திருக்க வேண்டும். மிகப் பழைய மரம். பட்டை, மரம் எல்லாமே மக்கி முழுவதும் அடர்த்தியாக பாசியின் பச்சைப் பசேல். காளான்கள் முளைத்திருந்த தடயமும் ஆங்காங்கே. பிலியவ் அம்மரத்தைத் தாண்டிச் செல்ல முனையாமல் அதன் வேர்ப்பகுதி நோக்கி நடக்கிறார். அது வேரோடு சாய்ந்து வீழ்ந்திருக்கிறது. வேர்ப்பகுதி வந்ததும் பிலியவ் மீண்டும் திரும்பிப் பார்த்து புன்னகைக்கிறார். எட்டிப்பார்க்க அங்கே... பெரும் பிரம்புப் புதர். எப்படி இந்த இடத்தில் இது இருக்கிறதெனக் கண்டுபிடித்தார்?

முன்பே இங்கு வந்திருக்கிறீர்களா பிலியவ் என்ற கேள்விக்கு, இல்லையெனத் தலையாட்டுகிறார்.

பின்னே எப்படி இதைக் கண்டுபிடித்தீர்கள்? மோப்பம் பிடிக்கிறீர்களா? அப்படி ஏதாவது ஆற்றல் இருந்தால் சொல்லிக் கொடுங்கள்.

சிரித்துக்கொண்டே சொல்லுகிறார். மோப்பமெல்லாம் இல்லை. மரம் இப்படித் தானாகப் பெயர்ந்து விழும் இடங்களில் வேர் இருந்த பகுதியில் ஒரு பெரிய பள்ளம் உண்டாகும். அதில் சில ஆண்டுகளில் பிரம்பும் மூங்கிலும் வளர்ந்து அந்தப் பள்ளத்தை நிரப்பிவிடும். விழுந்து கிடந்த மரம் மிகப் பழசு. எனவே இங்கு இருக்கலாம் என்று கணிப்பு. அது சரியாக இருந்தது.

பிலியவ் தன் பாராங்கத்தியை எடுத்துப் பிரம்பின் ஓலைகளைக் கழிக்கத் தொடங்குகிறார். ஓலைகளைக் கழித்ததும் மெல்லிய பிரம்புகளாகப் பார்த்து வெட்டுகையில் அதன் முள்ளுக்குப் பயந்து சற்று விலகி நிற்கிறேன். உள்ளே எங்கோ நீரோடையின் மெல்லிய சலசல. மேலேயிருந்து க்ரோங்க்... இக்கானகத்தின் குரல். எவ்வளவு நாளாயிற்று இக்குரலைக் கேட்டு! அன்றைய இருவாசிகளின் அலறல் நினைவுக்கு வருகிறது. உள்ளுக்குள் கரகரப்பாகக் கமறும் குற்றத்தின் தூரலாய் ஓர் எதிரொலிப்பு. பிலியவ் பிரம்புகளை ஒரு கட்டாகக் கட்டி தூக்கிக்கொள்கிறார்.

திரும்பவும் எங்கள் தொகுதிக்குள் நுழையும்போது வெளிச்சமும் வெயிலும் சுள்ளென்று வரவேற்கின்றன. சாலைக்கு வந்ததும் பிலியவ் வேகமாக நடந்து செல்ல பின்தங்கி மெதுவாக நடந்து வருகிறேன். முகாமுக்கு முன்பாக பாறை நீரூற்றுக்கு அருகே ஓமர் தனியே அமர்ந்திருக்கிறார். பிலியவ் முன்பே கடந்து போய்விட்டிருந்தார்.

என்ன இப்படித் தனியே வந்து அமர்ந்திருக்கிறீர்கள்?

அருகே வருமாறு அழைக்கிறார் ஓமர். பாறையின் மீது அமர முயலுகையில் சுள்ளென்று சுடுகிறது. சற்று கீழிறங்கி அமர்ந்துகொள்கிறேன். இந்நீரூற்றுப் பாறை முன்போல் இல்லை. அடர்பாசியோடு இருந்த பாறையில் பாசிமறைந்து பாறை நிறம் வெளிப்பட்டிருக்கிறது. எப்போதும் தண்ணென்று இருக்கும் இது இப்போது கொதிக்கிறது.

காரணம் இந்நீரூற்று இறந்துவிட்டது. இதற்கு வடபகுதியில் இருந்த மரங்கள் அனைத்தையும் வெட்டி முடித்த பிறகே இப்படியாகிவிட்டது. கடந்த கடும் வறட்சிக்காலத்திலும் வற்றாமல் இருந்த ஊற்று இது.

நாளைக்குக் கப்பலில் கட்டைகளை ஏற்றுகிறார்கள் என்று தொடங்குகிறார் ஓமர்.

ஆமாம். அதுதான் ஆட்கள் கொண்டாட்டமாக இருக்கிறார்கள். நாளை மறுநாள் சம்பளம். நகரத்தைப் பார்க்கப்போகிறார்கள். உங்களுக்கும் குடும்பத்தைப் பார்க்கப்போகும் மகிழ்ச்சி.

என்னைப் பிரிவதில் உனக்கு அவ்வளவு மகிழ்ச்சியா என்று ஓமர் சிரிக்கிறார்.

அப்படிச் சொல்லவில்லையே. என்ன ஒருவாரம் கழித்துத் திரும்பவும் இங்குதானே வரவேண்டும்? சரி, ஒருவேளை அப்படியே இருந்தாலும் இம்முகாம் முடிந்தபின்னே நாம் எல்லோரும் பிரிந்துதானே ஆக வேண்டும்?

பிரிந்துதானே ஆகவேண்டும் என்று கடைசியாகச் சொன்ன வாக்கியத்தை ஓமர் மீண்டும் ஒருமுறை தனக்குள் தனியாக முணு முணுக்கிறார். பிறகு மெல்ல நிமிர்ந்து பார்க்க சொற்கள் மெதுநடை பயிலுவதுபோல் வருகின்றன.

கொஞ்சம் யோசித்துப் பார்க்கிறேன். இங்கு நாமெல்லாம் ஒரு குடும்பம் போல வாழ்ந்துகொண்டிருக்கிறோம். ஆனால் இதற்குள் எத்தனை இனம், எத்தனை மொழி, எத்தனை கலாச்சாரம். மனிதர்கள் ஒற்றுமையாய் வாழ்வதற்கு இதெல்லாம் தடை இல்லை என்பதை இம்முகாம் வாழ்க்கை காட்டுகிறது. இது இந்தக் காடு தரும் சிறப்பு என நினைக்கிறேன். ஆனால் இத்தனை பேரும் நகரத்துக்குச் சென்று விட்டால் உடனே அவரவர் முகமூடிகளை எடுத்து மாட்டிக்கொண்டு விடுவோம். ஒற்றுமை எங்கேயோ போய்விடுகிறது.

சிரித்துக்கொண்டே கேட்கிறேன். என்ன இன்று ஒரே தத்துவமாக இருக்கிறது?

பார்த்தாயா? உண்மை என்பதுகூட தத்துவமாக மாறிவிடுகிறது. நீ நம்புகிறாயோ இல்லையோ, என் இத்தனை ஆண்டுகால முகாம் வாழ்வில் இத்தனை மகிழ்ச்சியான ஒரு முகாமைக் கண்டதில்லை. நகரத்தில் எனக்கொரு குடும்பம் இருப்பதையே மறந்துபோகும் அளவுக்கு. இப்படி நான் சொல்வதைக் கேட்டால் என் மனைவியும் மகளும் வருத்தப்படுவார்கள். ஆனாலும் மனதில் உள்ளதைச் சொல்லித் தானே ஆகவேண்டும். ஒரு குடும்பத்தோடு வாழ்வதைப் போல இருக்கிறது இம்முகாம். ஒரு மகனைப்போல் நீ, மகனைப் போல் அன்னா, உடன்பிறந்தவர்களைப் போலவே பிறரும்... இந்த முகாமோடு வேலையை முடித்துக்கொண்டால்கூட போதும் என்று தோன்றுகிறது.

என்ன இன்று என்னவோபோல் பேசுகிறீர்கள்?
பதில் எதுவும் சொல்லாமல் அமர்ந்திருக்கிறார்.
நீரூற்றையே பார்த்துக் கொண்டிருந்தவர் பிறகு சொல்கிறார். காய்ந்து போயிருந்த
முழக்கவும் நின்றுவிட்டது. இல்லை, நாம்தான் இதை நிறுத்திவிட்டோம்.
எதிர்ப்பக்கமும் பின்பக்கமும் பாரேன். எப்படி மொட்டையாகி
விட்டது? இப்போதெல்லாம் பாவம், புண்ணியம் என்று ஏதேதோ
தோன்றத் தொடங்கிவிட்டது. எனக்கு வயதாகிவிட்டது என நினைக்கிறேன்
என்று சொல்லிவிட்டு மெலிதாகச் சிரிக்கிறார். மனசுக்குள் புண்பட்டிருக்
கிறார். இது உங்களுக்கு ஒரு வேலைதானே என்கிறேன் ஆறுதலாய்.

வேலையா? நான் என்ன இந்த வேலைக்கெனப் படித்துப் பட்டம்
வாங்கியா வந்தேன்? பத்தொன்பது வயசு. குடும்பச் சூழ்நிலை.
படிப்பைப் பாதியிலேயே நிறுத்திவிட்டு ஓர் உறவினரால் நேரே இங்கு
இழுத்து வரப்பட்டேன். பலப் பல இடங்கள். பலப் பல முகாம்கள்.
திரும்பிப் பார்ப்பதற்குள் காலம் வெகுதொலைவு ஓடிநிற்கிறது.
என்னவோ தெரியவில்லை. இத்தனை ஆண்டுகளாய் எத்தனையோ
மரங்களை வெட்டி வந்திருக்கிறோம். ஆனாலும் இந்தச் சிலாங்கன்
பத்து மரம்தான் மனதை என்னவோ அரிக்கிறது. அது வெட்டப்படக்
கூடாது என்று தோன்றுகிறது. ஆனால் யார் கேட்கப் போகிறார்கள்?

நீங்கள் பிலியவ் மீது பெருமதிப்பு வைத்திருக்கிறீர்கள். அதனால் தான் இந்தப் பாதிப்பு என்று நம்புகிறேன்.

இருக்கலாம். மறுக்கவில்லை. அவர் குரல் என் தகப்பனின் குரல் போல இருக்கிறது. என்றோ இறந்துவிட்ட என் தந்தை திரும்ப வந்து கூறுவதுபோல் இருக்கிறது. இல்லை நமக்கு யாரையாவது ரொம்பவும் பிடித்துப் போய்விட்டால் இப்படி ஓர் ஒப்பீடு நமக்குள் வந்து விடுகிறதோ என்னவோ அதுவும் தெரியவில்லை.

இதுதானா உங்களுக்கு உள்ள சிக்கல்?

இல்லை. இது மட்டும் இல்லை. இத்தொழிலில் நான் திணிக்கப்பட்டு
சில ஆண்டுகள் கழித்து நாம் தப்பான தொழிலுக்கு வந்துவிட்டோமோ
என்று அடிக்கடி தோன்றும். இப்போது என் தகப்பனைப் போல் மீன்
பிடிக்கப் போய் இருந்திருக்கலாமெனத் தோன்றத் தொடங்கிவிட்டது.
மீன்களை இந்தப் பருவத்தில் பிடித்தால் மீண்டும் அடுத்த பருவத்தில்
அதே அளவு மீன்களை அள்ளலாம். ஆனால் காடு அப்படியல்ல. இந்த
இடத்தைப் பாரேன். இதெல்லாம் திரும்பவும் எப்போது முளைத்துக்
காடாகும்? அப்படிக் காடானாலும் மீண்டும் பழைய காடு மாதிரி
வருமா? இதையெல்லாம் புரிந்துகொள்ள நாமும் அந்த பிலியவ் மாதிரி
ஒரு தொல்குடியாய் இருந்துதான் ஆகவேண்டும் என்ற அவசிய
மில்லாமலே புரிகிறது.

இப்போது என்ன சொல்ல வருகிறீர்கள்?

அந்த மரத்தை வெட்ட வேண்டாம் என்று அலுவலகத்தில் கேட்டுக் கொள்ளப் போகிறேன்.

அவர்கள் ஒத்துக்கொள்ளாவிட்டால்?

முதலில் கேட்போம். என்ன நடக்கப் போகிறது என்பதைப் பிறகு நீயும் நானும் பார்க்கத்தானே போகிறோம்.

அடுத்தநாள் காலையில் முகாம் காலியாகத் தொடங்குகிறது. சம்பளம் வாங்கப்போகும் மகிழ்ச்சியின் ஆரவாரம். கிளம்பும்போது அன்னா தயங்கிய குரலில் உண்மையான அக்கறையோடு கேட்கிறாள். நான் வேண்டுமானால் தங்கிக்கொள்ளட்டுமா? உனக்குச் சாப்பாட்டுக்குச் சிரமமாக இருக்கும்.

வேண்டாம் அன்னா. சமைக்கத் தெரிந்தவனுக்கு என்ன கவலை? தவிர இங்கு பிலியவ் வேறு இருக்கிறார். ஒருவேளை நீ தங்கினால் உனக்குப் பாதுகாப்புத் தேவைப்படும் என்று எங்களுக்குக் கவலையாக இருக்கும்.

பாதுகாப்பா? எனக்கா? நினைவில் இருக்கட்டும், நான் தொராஜாக்காரி. உனக்குப் பாதுகாப்பாய் இருக்கலாமே என்றுதான் நான் தங்குவதாகச் சொன்னேன்.

அம்மா வீரத்திருமகளே, நீ சென்று வா. எனக்கு இக்கானகத்தின் தந்தை பிலியவ் துணையிருக்கிறார். அதுபோதும்.

உடல் வளைத்துக் கைகுவித்து வணங்க அன்னா சிரித்துக்கொண்டே நகர்கிறாள். அப்போது ஓமர் அழைக்கிறார். தன்னுடைய உடைமை யெல்லாம் கட்டிக்கொண்டிருந்தவர் தனது புத்தகங்களைக் காட்டி இந்தப் புத்தகங்களில் உனக்கு வேண்டியதை எடுத்துக்கொள் என்கிறார். வேண்டாம் எல்லாமே படித்ததுதான். வரும்போது புதிதாக ஏதாவது கொண்டு வாருங்கள் போதும் என்கிறேன்.

வண்டிகளில் எல்லோரும் ஏறிக்கொள்கிறார்கள். மூன்று நாளில் முதல் குழு திரும்பி வந்துவிடும். ஓமர் நெருங்கிவந்து சொல்கிறார். பத்திரமாக இருந்துகொள்.

உறுதியாக. இக்காட்டில் முதல்நாளே தொலைந்திருக்க வேண்டியவன் இம்மரங்களின் நிழலில் இருந்ததைவிட உங்கள் நிழலில்தான் அதிகம் இருந்தவன். அச்சம் வேண்டாம். சென்று வாருங்கள்.

ஏனோ இம்முறை ஓமர் இறுக அணைத்துக்கொள்கிறார். அவர் கண்கள் கலங்கியிருக்க வேண்டும். மறுபுறம் திரும்பி கண்ணாடியைக் கழற்றிக் கண்களைத் துடைத்துக் கண்ணாடியை மாட்டிக்கொண்டு வண்டியில் ஏறுகிறார். அவர் ஏறிய வண்டி மறையும்வரை கையசைத்து விடை தந்துகொண்டிருக்கிறேன்.

இதுவரை இப்படிச் செய்ததே இல்லை.

முகாமில் யாருமில்லை. யாருமில்லை என்றால் யாருமே இல்லைதான். இருவர் மட்டுமே இருக்கிறோம். இன்னொருவர் பிலியவ். ஆனால் இந்நேரத்தில் அவரும் இல்லை. கானுலா சென்றிருக்கிறார். உடன் செல்ல முடியவில்லை. இந்த அட்டுர்பேசிதான் இடைஞ்சல். இதை விட்டுவிட்டு எங்கும் செல்லமுடியவில்லை.

பல கிலோமீட்டர்களுக்கு அப்பால் சென்றால்தான் மனிதர்களையே காணமுடியும் எனும் நிலையிலும் இந்த அட்டுர்பேசியால் பதற்றம் தான். இதைத் தவிர மற்றபடி அருமையாகத்தான் இருக்கிறது. இங்கிருந்து வெளியே செல்ல வண்டிகள் இல்லை என்பதுகூட அச்சமாக இல்லை. உண்மையில் இத்தனிமை இனிமை.

காலடி ஓசை. பிலியவ். கற்றாழை நாரில் ஓடைமீன்களைக் கோர்த்து எடுத்து வந்திருக்கிறார். அதைச் சமைப்பதற்காக எழுகிறேன். உணவுக்குப் பிறகு பிலியவ் குடிலுக்குச் செல்கிறேன். அவர் புதிய பிரம்புக்கூடையைப் பின்னிக்கொண்டிருக்கிறார். குடிலின் மூலையில் சார்த்தி வைக்கப்பட்டிருந்த நீளமான கம்பு கண்களில் படுகிறது. ஆள் உயரத்துக்கு இருக்கும். அது கம்பு போலத் தெரியவில்லை. நுனியில் ஈட்டி போலத் தெரிகிறது. எடுத்துப் பார்க்கிறேன். அதன் முனையில் ஈட்டி இணைக்கப்பட்டிருக்கிறது. அம்முனைக்கருகில் ஆணி போன்ற ஒன்று கிடைமட்டத்தில் பொருத்தப்பட்டிருக்கிறது. உள்ளே நீளவாக்கில் உள்ளீடு இல்லாமல் நீண்ட துளை இருக்கிறது. இது என்னவென்றே தெரியவில்லை. திரும்பிப் பிலியவைப் பார்க்கிறேன். இது என்ன பிலியவ்?

சும்பித்தான்.

இதுதான் சும்பித்தானா? ஆவலுடன் அதைப் பார்க்கிறேன். இதை வைத்துக்கொண்டு எப்படி வேட்டையாடுவீர்கள் பிலியவ்?

இப்படிக் கேட்டதும் அதைக் கையில் வாங்கிக்கொள்கிறார்.

இந்த ஈட்டியை வேட்டைக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம். சிலர் பயன்படுத்தும் சும்பித்தான்களில் மட்டும்தான் இதுபோல் இருக்கும். இந்த ஆணி போல இருப்பது வேட்டை விலங்கைக் குறி வைப்பதற்காக. உங்கள் துப்பாக்கி முனையில் ஒன்று இருக்குமே அதுபோல. மேல் முனையில் அம்பைப் பொருத்துவோம். அடிமுனையிலிருந்து ஊத வேண்டும். அப்படி ஊதும்போது அம்பு வெளிக்கிளம்பி விலங்கைத் தாக்கும்.

இதைச் செய்து காட்டுகிறீர்களா பிலியவ்?

ஆவலைப் பார்த்து அவர் எழுந்து கூடையிலிருந்த அம்பினை எடுத்து வருகிறார். அது மிகவும் இலேசாக நாணலில் செய்யப்பட்டதுபோல இருக்கிறது. அதன் நுனியில் கூரிய உலோக முனை. பிலியவ் அந்த

அம்பை அதற்குரிய முனையில் பொருத்தி அடிமுனையை வாயருகே கொண்டு செல்கிறார். அம்பின் முனை சரியாக மார்புக்கு நேராக இருக்க பிலியவ் என்னைக் குறிவைக்காதீர்கள் என வேடிக்கையாக அலறுகிறேன்.

அஞ்சாதே. இந்த அம்பு இன்னும் நஞ்சில் தோய்க்கப்படவில்லை.

இதில் என்ன நஞ்சைத் தோய்ப்பீர்கள்?

உனக்குப் புரியும்படி சொன்னால் அந்நஞ்சின் பெயர் ஈப்போ. உபாஸ் மரத்தின் பால்தான் இந்நஞ்சு.

ஈப்போ, உபாஸ் என்ற இரு பெயர்களுமே புதிதாக இருக்கின்றன. வணிகப் பட்டியலில் இருக்கும் மரத்தைத் தவிர எந்த மரத்தைத் தெரிகிறது? ஓமருக்கு அது எந்த மரம் என்று தெரிந்திருக்கலாம்.

இந்நஞ்சை இப்போது வைத்திருக்கிறீர்களா பிலியவ் என்று கேட்டதும் பழைய பிரம்புக் கூடையிலிருந்து நீப்பா ஓலைப்பெட்டி ஒன்றை எடுத்து வருகிறார். இப்பிரம்புக்கூடைக்குள் இன்னும் என்னென்ன கமுக்கங்கள் ஒளிந்திருக்கின்றனவோ தெரியவில்லை. அப்பெட்டியைத் திறக்க அதற்குள் பெருங்காயக் கட்டியைப்போல் கருப்பாக ஏதோ கிடக்கிறது. இது இறுகிவிட்டது என்று முணுமுணுக்கிறார்.

அப்படியானால் இது கெட்டுப் போய்விட்டதா பிலியவ்?

அப்படிச் சொல்லமுடியாது. நாலைந்து ஆண்டுகள்வரை இதன் வீரியம் குறையாது. ஒரு செடியின் வேர்ச்சாறு கிடைத்தால் இதில் கலந்து இளக வைத்துவிட முடியும். ஆனால் அதைத் தேடிப்பார்க்க வேண்டும். அதைவிட நாம் போவோமே ஒரு அருவி அதற்கப்பால் ஒரு உபாஸ் மரமே இருக்கிறது அதிலிருந்து பாலை எடுத்துத் திரும்பவும் இந்த நஞ்சைச் செய்துவிடலாம்.

அப்படிச் செய்துவிட்டால் இந்த சும்பித்தானைக்கொண்டு ஒரே ஒருமுறை வேட்டையாடிக் காட்டுவீர்களா பிலியவ்? மெல்ல நகைத்துக் கொண்டு கேட்கிறார். நீதான் இப்போது வேட்டைக்குச் செல்வதில்லை. பிறகு ஏன் இன்னொரு வேட்டை?

அது துப்பாக்கி வேட்டைக்குதான். தவிர நீங்கள் தேவை இருந்தால் வேட்டையாட வேண்டும்; அதுவும் தக்க பருவம் பார்த்து வேட்டைக்குப் போகவேண்டும் என்று சொன்னீர்கள். அப்படியொரு தேவையும் பருவமும் வாய்க்கும்போது இந்தச் சும்பித்தானைக் கொண்டு வேட்டை யாடிக் காட்டுங்கள் போதும்.

அதற்கு முதலில் பாலை எடுத்துவரவேண்டும். வருகிறாயா போய் எடுத்து வருவோம்?

ஆசைதான். ஆனால் இந்த அட்டுர்பேசியின் அடக்கவிலை அச்சமூட்டுகிறது. அதைத் தூக்கிக்கொண்டு காட்டுக்குள் திரிய முடியாது. எங்காவது விழுந்து தொலைத்தால் அவ்வளவுதான்

நிலைமையை புரிந்துகொண்ட பிலியவ் சொல்கிறார். சரி, நானே போய் வருகிறேன்.

வீட்டுக்குப் பின்னே சிறிய மரமொன்றில் ஒற்றை ஓராங் ஊத்தான் அமர்ந்திருப்பதைக் காண்கிறேன். வீடு பாதிக்கப்படும் என்பதால் தடைசியில் வெட்டிக்கொள்ளலாம் என்று இம்மரங்கள் மட்டும் வெட்டப்படாமல் இருக்கின்றன. அதிலொரு மரத்தில் அது அமர்ந்திருக் கிறது. வெகு நாட்களாகிவிட்டது இவற்றைப் பார்த்து. இப்பகுதி அமைதியாக இருப்பதைக் கண்டு இன்று இப்பக்கமாக வந்திருக்கலாம்.

கிளையொன்றில் அமர்ந்திருந்த ஓராங் ஊத்தான் அதிலிருந்த பெரிய பொந்துக்குள் கையைவிட்டு எதையோ எடுத்துத் தின்றுகொண்டிருக் கிறது. அப்படி எதை அதற்குள்ளிருந்து எடுத்துச் சாப்பிடுகிறது? பிறகு வேறொரு கிளைக்கு மாறுகிறது. அங்கும் ஒரு பொந்து இருக்கிறது போலும். தலையைக் குனிந்து அதற்குள் எட்டிப்பார்க்கிறது. தன் கையை உள்ளேவிட முயல்கிறது. முடியவில்லை. சுற்றுமுற்றும் பார்க்கிறது. ஒரு சிறுகுச்சியை உடைத்து அதிலிருந்த இலைகளை யெல்லாம் உருவிப் போட்டுவிட்டுக் குச்சியைப் பொந்துக்குள் நுழைக்கிறது. மீண்டும் அதை வெளியே இழுத்து குச்சி முனையை வாய்க்குள் நுழைத்து உதடுகளை இறுக மூடிக்கொள்கிறது. குச்சி ஐஸ்சைச் சப்புவதுபோல சப்பிக்கொண்டே குச்சியை வெளியே இழுக்கிறது. சப்பிய முனையைக் கையில் திருப்பிப்பிடித்து சப்பாத முனையைப் பொந்துக்குள் நுழைக்கிறது. அதை மீண்டும் வெளியே எடுத்து திரும்பவும் சப்பிச் சாப்பிடுகிறது. பிறகு தொடர்ந்து அப்படியே குச்சியை முனை மாற்றி சப்பிக் கொண்டிருக்கிறது. என்ன சாப்பிடு கிறது என்பதை இங்கிருந்து பார்க்க முடியவில்லை. அநேகமாக எறும்பாக இருக்கலாம்.

பிலியவ் வருவது தெரிகிறது. ஓராங் ஊத்தானை வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பதைக் கண்டவர் சொல்கிறார். 'கோகியூ'. சுங்கைக்காரர்கள் ஓராங் ஊத்தானை அப்படிதான் சொல்வார்கள். அந்தக் கோகியூ என்ன தின்றுகொண்டிருக்கிறது பிலியவ் என்றதும் எறும்புகள் என்று பதில் வருகிறது. அப்படியானால் கணிப்பு சரி.

பிலியவ் கையிலிருந்த மூங்கில் குவளையில் உபாஸ் மரப்பால் மஞ்சள் நிறத்தில் இருக்கிறது. நஞ்சு கருப்பு நிறத்தில் அல்லவா இருந்தது? இப்பாலைச் சூடுபடுத்த வேண்டும். பிறகுதான் அப்படி மாறும் என்கிறார் பிலியவ். அப்படியானால் வாருங்கள் பிலியவ் உடனே சூடுபடுத்துவோம்.

அப்படியெல்லாம் அவசரப்பட முடியாது. அதற்குச் சில முன்னேற் பாடுகள் செய்யவேண்டும் என்று பிலியவ் சிரித்துக்கொண்டே சொல்கிறார். இப்போது ஒரு வேலையும் இல்லை. சூடுபடுத்தினால்

என்ன? இவர் என்ன இவ்வளவு பொறுமையாக இருக்கிறார்? ஆனால் பிலியவ் மீண்டும் வருவதாகச் சொல்லிவிட்டு வந்த திசைக்கு எதிர்த் திசையில் எங்கேயோ புறப்பட்டுப் போகிறார்.

ஒரு யோசனை மின்னல். பிலியவ் திரும்பி வருவதற்குள் இந்தப் பாலைச் சூடுபடுத்தி முடித்துவிட்டால்? செயல் வேகத்தைப் பார்த்து அவர் அசந்துபோய் நிற்கும் காட்சி உள்ளே ஒளிப்படமாய் உறைய வேலையைத் தொடங்கிவிடுகிறேன். ஓர் அலுமினிய பாத்திரத்தில் பாலைக் கவனமாக மாற்றி அடுப்பில் ஏற்றி நெருப்பைக் கூட்டுகிறேன். தகதகவென எரியத்தொடங்குகிறது. உலகின் ஆதி நச்சுப்பொருள் ஒன்றின் தயாரிப்புத் தொழில்நுட்பத்தை அறிந்துகொண்டிருக்கும் பெருமிதம். கானகவாசியாகும் தகுதியைப் பெற்றுக்கொண்டிருக்கிறேன். ஆமாம், இந்தப் பாலை இப்படியே சூடுபடுத்திக்கொண்டிருக்க வேண்டுமா? கிண்ட வேண்டுமா? இது என்ன அல்வாவா கிண்டு வதற்கு? சூடு படுத்துவோம். நெருப்பைக் கூட்டுகிறேன். நன்றாக எரியட்டும். பிலியவ் வருவதற்குள் முடித்துவிட வேண்டும்.

பிலியவ் வந்து பார்க்கும்போது எப்படி வியப்படைவார்? தீ எரிந்து அந்தப் பால் கருநிறமாகி கெட்டியாக மாறிக்கொண்டிருக்கிறது. அடடா... ரொம்பவும் சூடுபடுத்திவிட்டோமோ? கொஞ்சம் இளகிய பதத்தில் இருக்க வேண்டும் என்றுதானே பிலியவ் சொன்னார். இதில் கொஞ்சம் தண்ணீர் ஊற்றிப் பார்க்கலாமா? ஒருவேளை இதில் தண்ணீர் சேராமல் தனித்து நின்றால்? ஒன்றும் புரியவில்லை. அடுப்பை அணைக்கிறேன். இப்படியே இருக்கட்டும், என்ன ஆனாலும் சரி.

மாலையில் பிலியவ் திரும்புகிறார். வந்தவரிடம் பெருமிதத்தோடு சொல்கிறேன். அந்தப் பாத்திரத்தில் என்ன இருக்கிறது என்று பாருங்கள் பிலியவ். அவர் அருகில் சென்று எட்டிப் பார்க்கிறார். உற்றுப் பார்க்கிறார். பிறகு திரும்பிப் பார்த்துக் கேட்கிறார். ஏதாவது இந்தியப் பலகாரமா?

அவமானம். பெருத்த அவமானம். ஓர் இழிவுச் சொல்லையும் பயன் படுத்தாது இதைவிட வன்மையாக ஒருவரை அவமானப்படுத்திவிட முடியாது. முகம் போன போக்கைப் பிலியவ் கவனித்துவிடுகிறார். ஏன் ஏதாவது தப்பாகச் சொல்லிவிட்டேனா? ஒருவேளை இது இங்கே உள்ள நகரத்துப் பலகாரமா?

தலையில் கை வைத்து அமர்ந்துவிடுகிறேன். பிலியவ் அருகில் வருகிறார். நான் காட்டுவாசி. எனக்கு எங்கள் சமையலைத் தவிர வேறொன்றும் தெரியாது. தப்பாக நினைத்துக் கொள்ளாமல் நீயே அது என்ன சமையல் என்று சொல்லிவிடு.

பிலியவ், இதற்குமேல் தாங்காது பிலியவ். நீங்கள் கொண்டு வந்த உபாஸ் மரப்பாலை வைத்து நானாகவே ஈப்போ நஞ்சைத் தயாரித்து

வைத்துள்ளேன். நீங்கள் என்னவென்றால் அதைப்போய் பலகாரம் அது இதுவென்று சொல்லி... மானம் போகிறது போங்கள்.

பிலியவ் திகைக்கிறார். பிறகு நம்ப முடியாதவர்போல் அந்தப் பாத்திரத்தை மீண்டும் எட்டிப்பார்க்கிறார். உற்றும் பார்க்கிறார். பிறகு சத்தமாகச் சிரிக்கத் தொடங்குகிறார். இவர் இவ்வளவு சத்த மிட்டெல்லாம் சிரிப்பாரா? சிரித்துச் சிரித்து அவருக்கு கண்களில் நீரே வந்துவிடுகிறது. முழுதும் சிரித்து ஓயும்வரை காத்திருக்கிறேன். வேறு வழி? ஒருவழியாகச் சிரித்து முடித்த பிலியவ் அந்தப் பாத்திரத்தை மேசையில் வைக்கிறார். உள்ளே தெறித்துப் பிரிந்திருந்த ஒரு துண்டைக் கையிலெடுக்கிறார். அது பார்ப்பதற்குக் கருப்பட்டித் துண்டைப்போல இருந்தது. அடுத்த நொடியில் எதிர்பாராத விதமாக அதை வாயில் போட்டு மென்று தின்னத் தொடங்குகிறார். பதறிப்போய் கத்திவிடுகிறேன். பிலியவ், துப்புங்கள்... துப்புங்கள்... அது உண்மையாகவே நஞ்சுதான்.

ஆனால் அவரோ சற்றும் பதறவில்லை. மெல்லிய சிரிப்புடன் நிறுத்தாமல் சுவைத்துக் கொண்டிருக்கிறார். பதற்றம் திகைப்பாக மாறி அவரைப் பார்க்கிறேன். என்ன மனிதர் இவர்? என்ன செய்து கொண்டிருக்கிறார் எனத் தெரிந்துதான் செய்கிறாரா? ஒரு மெல்லிய அம்பின் நுனியில் இலேசாகத் தீற்றிய நஞ்சே ஒரு விலங்கைக் கொல்லும் அளவுக்கு போதுமானதெனில் இவ்வளவு பெரிய நஞ்சுத் துண்டை கற்கண்டைபோல் சுவைத்துக் கொண்டிருக்கிறாரே இவர்?

நீயும் கொஞ்சம் சாப்பிடுகிறாயா? இனிப்பாக இருக்கும். இன்னொரு கட்டியை எடுத்து நீட்டுகிறார். வியப்பு இன்னமும் அகல மறுக்கிறது. விழிகள் விரிய அவரையே பார்த்துக்கொண்டிருக்கையில் உதடுகளிலிருந்து சொற்கள் உதிர்கின்றன. எப்படி பிலியவ் தின்கிறீர்கள்?

நான்தான் உனக்குச் சொல்லியிருக்கிறேனே? வெப்பமும், வெயிலும் இதற்குப் பகை என்று. நினைவில்லையா எனக் கேட்கிறார்.

ஆனால் நீங்கள்தானே இதைச் சூடுபடுத்தவேண்டும் என்றும் சொன்னீர்கள்?

ஆமாம். ஆனால் இப்படிக் காய்ச்சச் சொல்லவில்லையே? இப்படிச் சுண்டக் காய்ச்சினால் நஞ்சு முறிந்து இப்படி இனிப்புப் பொருளாக மாறிவிடும் என்று சொல்லிவிட்டுச் சிரிக்கிறார். கானக மக்களின் தொழில்நுட்பம் அறிந்துவிட்டேன் என்கிற பிம்பம் இப்போது அந்த நஞ்சுக்கட்டியைப் போல் தெறித்து உடைந்திருந்தது. இதை வேறு எப்படிதான் சூடுபடுத்துவது?

அதற்குத்தான் இதைக் கொண்டுவரப் போயிருந்தேன். அதற்குள் நீ இனிப்புத் தயாரித்துவிட்டாய் என்று சிரித்துக்கொண்டே அந்தப் பொருளை எடுத்துக் காட்டுகிறார். அது பலாஸ் என்ற பனையோலை.

இதைக் கூரை வேய பயன்படுத்துகின்றனர். இதை வைத்து என்ன செய்வீர்கள் பிலியவ்?

செய்துகாட்டும்போது பார்த்துக்கொள். இதை முற்றிலும் வேறு வகையில் சூடுபடுத்த வேண்டும். எடுத்துவந்த பால் எல்லாம் காலி. திரும்பவும் சென்று பால் எடுத்து வந்தால்தான் செய்யமுடியும்.

வெட்கமாக இருக்கிறது. எவ்வளவு தொலைவுக்குப் போய் எவ்வளவு சிரமப்பட்டு எடுத்து வந்திருப்பார்? இனி இந்த நகரத்து அறிவுத்தனம் எல்லாம் காட்டில் செல்லவே செல்லாது. காட்டைப் பொறுத்தவரை கடைசிவரை மாணவராகவே இருக்கவேண்டும்.

அடுத்தநாள் திரும்பவும் பாலைக் கொண்டு வருகிறார் பிலியவ். இம்முறை ஆர்வத்தை அடக்கிக்கொண்டு மாணவனைப் போல அவர் பின்னே நிற்கிறேன். பிலியவ் நஞ்சு செய்ய தயாராகிறார். தாங்கு தூண்களுக்கு அடியில் மண்ணில் அரையடி அகலத்துக்குக் குழிபறித்து அதில் சுள்ளிகளைப் பரப்பி விறகுகளை வைக்கிறார். பிறகு இளம் பலாஸ் ஓலையை எடுத்து அதை நுங்குவைக்க மடிப்பதுபோல் படகு வடிவத்தில் மடித்து நுனியில் முடிச்சிடுகிறார். அந்த அடுப்புக்கு மேலே அவ்வோலையைக் கட்டித் தொங்கவிடுகிறார். அவ்வோலைக்குள் பாலைக்கொட்டியிருக்கிறார்.

இந்த பலாஸ் ஓலையின் தீத் தாங்குதிறன் ஏற்கனவே கேள்விப் பட்டதுதான். இதன் இளம் குருத்தோலையை எரிவாயு அடுப்பு நெருப்பில் இட்டால்கூட எரியாது என்பார்கள். ஆவல் ஒவ்வொரு பாகையாக ஏறிக்கொண்டிருக்கிறது. பிலியவ் சுள்ளிகளின் மீது மரக்கலத்தில் வைத்திருந்த குருவிங் எண்ணெயைக் கொண்டுவந்து ஊற்றுகிறார். பின்னர் நெருப்பைப் பற்றவைக்க குப்பென்று பற்றிக் கொள்கிறது. அது எரியத் தொடங்குகையில் பிலியவ் சுள்ளிகளையும் விறகுகளையும் கலைத்து நெருப்பை நிதானமாக எரியும் நிலைக்குக் கொண்டு வருகிறார். எரிந்துகொண்டிருக்கும் நெருப்புக்கும் ஓலைக்கும் இடையே இரண்டடி உயரம் இருக்கிறது. தீயின் கணப்பு அவ்வோலையை எட்டிச் சூடாக்கிக் கொண்டிருக்கிறது. இந்தப் பக்குவம் தெரியாமல்தான் சட்டியில் இட்டு அந்தக் காய்ச்சு காய்ச்சிவிட்டேன். ஆனால் இப்படிக் காய்ச்சினால் மணிக்கணக்கில் காய்ச்ச வேண்டி இருக்குமே?

மணிக் கணக்கில்லை. நாள் கணக்கு என்கிறார் பிலியவ். இந்தளவு பாலுக்கு மூன்று அல்லது நான்கு நாட்கள் ஆகலாம். இதுவும் கணப்பைக் காப்பதைப் பொறுத்து இருக்கிறது. அதேசமயம் நெருப்பும் கூடி விடாமல் இருக்கவேண்டும். இல்லையெனில் இனிப்புக் கட்டிதான் எனச்சொல்லிச் சிரிக்கிறார்.

அக்கணப்பை இருவரும் அணைந்து விடாமல் பாதுகாத்துக் கொண்டிருக்கிறோம். இரண்டாம் நாள் காலையில் அது பழுப்பு

நிறத்துக்கு மாறியிருந்தது. இது நல்ல பழுப்பு நிறத்துக்கு மாறி இறுதியில் கருநிறத்தை அடையவேண்டும் எனச் சொல்லுகிறார் பிலியவ்.

இதற்கிடையில் ஆங் தலைமையில் முதல்குழு வந்துசேர்கிறது. அக்குழுவில் ஓமர், அன்னா, ரோஸ்லான் வரவில்லை. சமையல் பணிக்காக விசாலை மட்டும் அழைத்து வந்திருந்தார்கள். ஆங் வரும் போது தன்னுடைய மீன்வணிக நண்பர் வோங் உடன் வந்திருந்ததால் மரம் வெட்டும் பணிகளை மேற்பார்வையிடச் சொல்லிவிட்டு கிடைத்த இடைவெளியில் கலோய் மீன் குளத்துக்குச் சென்றுவிடுகிறார். இதுவும் வசதிதான். அந்த நஞ்சு செய்வதைக் கவனித்துக்கொள்ள முடியும்.

பிலியவ் தன் குடிலில் இருந்து அழைத்து நஞ்சு ஆயத்தமாகிவிட்டது என்கிறார். அந்தக் கணப்புக்குச் சென்று பார்க்கிறேன். அந்த ஓலைக்குள் இளகிய பெருங்காயப் பதத்தில் கருநிறத்தில் இருக்கிறது. பிலியவ் தன் விரலால் அதை நாவில் தொட்டுச் சுவைக்கிறார். நல்ல கசப்பு. இதுதான் சரியான பதம் என்கிறார்.

அது இன்னும் இனிப்புக் கட்டியாக மாறிவிடவில்லை பிலியவ் என்று பதறுகிறேன்.

இதை எத்தனையோ முறை தொட்டுச் சுவைத்துவிட்டேன். நீ இப்போதுதான் கவனிக்கிறாயா? இந்நஞ்சை நாக்கில் வைப்பதால் ஒன்றும் ஆகாது. நம் உடலில் காயம் அல்லது குருதியில் படாமல் பார்த்துக்கொண்டால் போதும் என்று சொல்லியபடி பிலியவ் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த அந்தப் பலாஸ் ஓலையை அவிழ்க்கத் தொடங்குகிறார். உபாஸ் நஞ்சு தயார்.

# 7

**சும்பித்தான்**

ஞாயிறு இன்னும் மறையவில்லை.

முதன் முதலாகப் பிலியவுடன் வேட்டைக்குப் புறப்படுகிறேன். பிலியவ் கையில் சும்பித்தான் இருக்கிறது. முகாமின் தொடக்க எல்லையைத் தாண்டி போய்க்கொண்டிருக்கிறோம். தரைப்பாலத்துக்கு முந்தைய குன்றுப் பகுதியில் ஏறுவதற்கு முன்பாக வலப்பக்கமாக கைவிடப்பட்ட பழைய முகாம் சாலை பிரிகிறது. அச்சாலை எங்கிருந்தோ வந்து இந்த இடத்தோடு இணைந்து முடிவுற்றிருந்தது. அச்சாலையினுள் நடக்கத் தொடங்குகிறோம். வழியில் எங்கேனும் தடங்கள் தெரிகின்றனவா என்று கவனித்துக்கொண்டே நடக்கிறோம். ஓரிடத்தில் சாலையைக் குறுக்காகக் கடந்து மறைந்த கடமான்களின் குளம்படிகள். அவை இடப்பக்கம் இருந்த பாறை அருகே சென்றிருந்தன. சுற்றுப்புறத்தில் எதுவுமே தென்படவில்லை.

பிலியவ் பாறையருகே தெரிந்த தடங்களைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருக்கிறார். இக்குளம்படிகள் இரண்டு பயாவ்வினுடையது. குளம்படிகளின் அளவைப் பார். வேறு வேறாக இருக்கின்றன என்கிறார். உண்மைதான். அப்படித்தான் இருக்கிறது. இக்கடமான்கள் அய்ந்தாறாகச் சேர்ந்து கூட்டமாகத் திரியும். ஆணாக இருந்தால் ஒற்றையாகத் திரியும்.

இது தனித்தனியாக வந்த இரு ஆண் பயாவ்வின் தடங்களாக இருக்கலாம் என நினைக்கிறேன். கொஞ்சம் பொறு அதையும் உறுதிப்படுத்தி விடுகிறேன் என்றவர் அப்பாறையருகே செல்கிறார். அதைச் சற்றுநேரம் உற்றுப்பார்க்கிறார். பிறகு குனிந்து அப்பாறையை நக்குகிறார். என்ன இவர் பாறையை நக்குகிறார்? கேட்பதற்குள் அவரே சொல்கிறார். நான் நினைத்தது சரி. இவை ஆண் பயாவ்கள்தான்.

பாறையை நக்கினால் கடமான்களை ஆண் கடமான் எனக் கண்டுபிடிக்க முடியுமா? எப்படி பிலியவ்?

ஆண் பயாவ்கள் தன் கொம்புகளை வளர்க்க ரொம்பவே முயற்சி செய்யும். அது எவ்வளவு நீளமாக இருக்கிறதோ அந்தளவுக்கு பெண் பயாவ்வைக் கவரமுடியும் என்பதால் அது வளர்வதற்குத் தேவையான உப்புச்சத்தைத் தேடியலையும். அவை கிடைக்கும் மண், பாறை

அவற்றுக்குத் தெரியும். அப்படித்தான் இந்தப் பாறைக்கு அருகிலும் அது வந்திருக்கிறது. இந்த பாறையில் உப்புத்தன்மை இருக்கிறது.

பிலியவ் தொடர்ந்து சொல்கிறார். ஒரு பயாவ் கூட்டத்துக்கு ஒரு ஆண் அவசியம் வேண்டும். இங்கு இரண்டு ஆண்கள் இருக்கிறார்கள். எனவே ஒன்றை வேட்டையாடுவதில் சிக்கல் இல்லை. பயாவ் கூட்டத்தைப் பார்த்தாலும் அதிலொன்றை வேட்டையாடி விடலாம்.

இதுநாள்வரை இப்படி எதுவுமே தெரியாமல்தான் கண்ணில்படுகிற விலங்கையெல்லாம் வேட்டையாடி வந்திருக்கிறோம். இப்போது ஒரு புதருக்குப் பின்னே மறைந்துகொள்கிறோம். புதர் அப்பாறையிலிருந்து அய்ம்பதடி தொலைவில் இருக்கிறது. இருவரும் எதுவும் பேசிக்கொள்ள வில்லை. சாயும்காலம்தான் வெளிக்கிளம்பி அவை மேயத்தொடங்கும் நேரம். இரவின் வாசல் திறக்கப்படுகிறது. ஆனால் இன்னமும் வெளிச்சத்தின் விடாப்பிடி. ஒரே இடத்தில் அமர்ந்திருப்பது கால்களை மரத்துப் போகச் செய்கிறது. கொட்டாவி வேறு. குத்துக்காலிட்டுத் தலையைக் கொஞ்சநேரம் கவிழ்த்துக் கொண்டிருந்தபோது பிலியவ் விரலால் சுரண்டுகிறார். நிமிர்கிறேன். எதிர்பார்த்ததுபோல் ஒரு கடமான். ஆண்தான். சாலையோரமாக நடந்து வருகிறது. மூச்சடக்கிக் காத்திருக்கிறோம். சாவின் சாயலைச் சற்றும் அறியாக் கடமான் பாறைக்கு அருகே ஒட்டிச்செல்கிறது. அதன் பின்புறம் எங்களுக்குத் தெரிகிறது. பிலியவ் சுறுசுறுப்பாகிறார். அம்பை எடுத்து அதன் கூரிய முனையைக் கவனமாக நஞ்சில் தோய்க்கிறார். இப்போது அம்பு இடக்கையிலும் சும்பித்தான் வலக்கையிலும் இருக்க எழுந்துகொள் கிறார். பாதங்களைச் சத்தம் எழாதவாறு பதித்துப் புதருக்கு வெளியே செல்கிறார்.

அவரையே கூர்ந்து கவனிக்கிறேன். அம்பை அதற்குரிய முனையில் பொருத்தி சும்பித்தானை முன்புறமாக நீட்டுகிறார். இருகைகளும் சும்பித்தானைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ள ஊதுமுனையை வாயருகே கொண்டு வருகிறார். உடல் மெல்ல முன்வளைய அடிமேல் அடிவைத்து அய்ந்தடி முன்னேறுகிறார். கடமான் இருக்கும் திசையி லிருந்து காற்று இப்பக்கமாக வீசிக்கொண்டிருப்பதால் அதன் கவனம் எவ்விதத்திலும் கலையவில்லை. பிலியவ் ஊதுவதற்காக தன் வாய் முழுக்கக் காற்றை நிரப்புவது நன்கு உப்பிய கன்னங்களின் வழி தெரிகிறது. உடல் இன்னும் குனிந்து வளைகிறது. வயிற்றுத் தசைகள் இறுகி உள்மடங்கியதைக் காணமுடிகிறது. ஆனால் எந்த நொடித் துளிக்குள் அது நிகழ்ந்தது என்பதை அறியமுடியாமல் போகிறது. பிலியவ் நிமிர்ந்தபோது அக்கடமானின் கால்கள் மடங்கிக் கீழே விழுகிறது. தொண்டையிலிருந்துக் கிளம்பிய அடிக்குரலொலி அது அடிபட்டு விட்டதைச் சொல்கிறது. பிலியவ் தேர்ந்த வேட்டையாடி. புதரை விட்டு எழுந்து வெளியே வருகிறேன்.

இப்போது கடமான் எழுந்து சாலையில் விரைந்தோடுகிறது. ஆனால் வெகுதொலைவுக்கு முடியவில்லை. இந்நஞ்சின் வீரியம் அதிகம் போலும். கால்கள் மடங்கிக் கீழே விழுகிறது. விழுந்த கடமானின் பின்னங்கால்களில் ஒன்று வெட்டி வெட்டி இழுக்கிறது. அம்பு பின்னங் கால் தொடைப்பகுதியில் தைத்திருக்கிறது. அதன் கண்கள் ஆழமாக எங்களை ஊடுருவிப் பார்க்கின்றன. உயிர்த்துடிப்பு அடங்குகிறது.

உடல் முழுக்க வியர்த்திருப்பதை உணர்கிறேன். துப்பாக்கியால் இறந்தாலும் சும்பித்தானால் இறந்தாலும் சாவு சாவுதான். இக்கடமான் என் ஆசையை நிறைவேற்றிக்கொள்ளும் பொருட்டு தன் உயிரைத் துறந்திருக்கிறது. இறுதியாக அது பார்த்த பார்வை இகழ்வான பார்வை. உனக்கு நான் என்ன செய்தேன் என்கிற பார்வை. ஒரு சும்பித்தான் வேட்டையைக் காண்பதற்காக இத்தனை காலம் காத்துக்கொண்டிருந்த ஆர்வமெல்லாம் அக்கடமானின் இறுதிமூச்சு அடங்கிய நொடியிலேயே உடைந்து போய்விட்டது.

வீடு திரும்பும்வரை பிலியவுடன் எதுவும் பேசவில்லை. வீடு திரும்பி ஆங் வசம் செய்தியைச் சொன்னவுடன் வண்டியை அனுப்பி அக்கடமானை எடுத்து வரச்சொல்லுகிறார். வந்தவுடன் அதனருகில் சென்றவர் அம்பு தைத்திருந்த இடத்தைச் சுற்றியுள்ள தசைப்பகுதியில் சிறிதளவை வெட்டியெடுக்கச் சொல்கிறார். அது நஞ்சு பரவியிருக்கும் பகுதி. இவ்வாறு செய்வது ஒன்றும் தப்பில்லைதான் எனினும் இறைச்சி நன்றாக வெந்துவிட்டாலோ பொரிக்கப்பட்டாலோ அந்நஞ்சு நீங்கி விடும் என்று பிலியவ் சொல்லியிருந்தது நினைவுக்கு வருகிறது.

இரவு சாப்பிடவில்லை. முடியாது. இனி வாழ்நாளில் எந்தவொரு காண்லிலங்கின் இறைச்சியுமே உண்ண முடியாது. கண்களை மூடுகிறேன். உறக்கம் எட்டிப்போய் நிற்கிறது. ஏற்கனவே ரலாவின் கண்கள் உறக்கத்தை அனுமதிப்பதில்லை. இனி கடமானின் கண்களும் சில நாட்களுக்கு இக்கண்களை எளிதில் மூட அனுமதிக்கப் போவதில்லை.

## ஒமர்

மேசையில் வந்தமர்ந்தபோது அருகே வந்த அன்னா புன்னகைக்கிறாள். அப்புன்னகை உலர்ந்திருக்கிறது. வீட்டிலிருந்து பிரிந்து வந்தால் இது இயல்புதான். நாளிதழ்களும் புத்தகங்களும் அடங்கிய கட்டினைக் கொண்டுவந்து, இதோ உங்கள் உணவு துவான் என்று ரோஸ்லான் கொடுத்தபோது ஒமர் எங்கே என்று விசாரிக்கிறேன். காதில் விழ வில்லையோ என்னவோ ரோஸ்லானிடமிருந்து பதிலே வரவில்லை. நாளிதழ்களுக்குள் ஆர்வம் நுழைகிறது. எழுத்துக்களின் உலகினுள் வெகு தொலைவுக்குப் பயணித்துவிட்டேன். இன்னும் முடிய வில்லையா என்கிற அன்னாவின் குரல் கவனத்தைக் கலைக்கிறது.

அனைத்தையும் மடித்து அடுக்கி அலுவலக அறைக்குள் வைக்கச் சொல்கிறேன். ரோஸ்லானும் அன்னாவும் அருகே வந்தமர்கிறார்கள்.

அன்னாவின் முகம் வாட்டமாக இருக்கிறது. ரோஸ்லான் முகத்திலும் சிரிப்பு இல்லை. என்ன ஆச்சு இருவரும் ஒரு மாதிரி இருக்கிறீர்கள் என்று கேட்டதுமே அன்னாவின் கண்களிலிருந்து நீர்த்தாரை இறங்குகிறது. என்ன அன்னா? ஏன் அழுகிறாய்?

பதில் இல்லை. ரோஸ்லானைத் திரும்பிப் பார்க்க அம்முகத்திலும் அடர் சோகம். நீயாவது ஏதாவது சொல்லேன் ரோஸ்லான் என்றதும் உதடுகள் மெல்லப் பிரிகின்றன.

ஓமர் வேலையை விட்டுப் போய்விட்டார் துவான்.

ஒரு நொடி. நொடிக்குள் ஒரு நொடி. உலகின் ஓசைகள் அனைத்தும் ஒடுங்குகின்றன. மொழி எங்கோ உள்வாங்கி ஒளிந்துகொள்கிறது. விழித்திரைப் பிம்பங்களில் வண்ணங்கள் கரைந்துருகி வெண்மையின் படரல். தசையுடல் பாறையாக இறுக்கம். சில நிமிடங்கள் நீடித்திருக்கலாம். உணர்வுகளை மெல்லத் திரட்டி மீளவும் தன்னிலைக்குத் திரும்புகிறேன்.

ஏன்?

இரு எழுத்துக்கள்தானே? இது ஏன் இப்படி இத்தனை துண்டுகளாக உடைந்து விழுகிறது? அன்னாவின் பதில் இதழ்களில் மொழியாமல் கடிதமாய் நீள்கிறது. ஓமரின் கடிதம். விரல்களில் நடுக்கம். மடல் அவிழ்கிறது.

என் இனிய மைந்தனே,

இக்கடிதம் உன்னை எந்தளவுக்குத் துயருறச் செய்யும் என்பதை பேனா நடுங்குவதிலிருந்தே என்னால் உணரமுடிகிறது. இது வெறுமனே விரல்களின் நடுக்கமல்ல, இதயத்தின் நடுக்கமும்கூட. உனக்கு என்மீது சினம் தோன்றலாம். நியாயமான சினம் என்பதால் ஏற்றுக்கொள்ளும் கடமை எனக்கிருக்கிறது. பணியை விட்டு விலகிச்செல்லும் முடிவை இக்கடிதத்திலும் சொல்லத் துணிவில்லா நிலையில் நேரில் மட்டும் என்ன கிழித்திருப்பேன். ஆமாம், இம்முடிவை முகாமை விட்டுக் கிளம்பும்போதே எடுத்திருந்தேன். நான் ஒரு கோழை. கோழைதான். யோசித்துப் பார்க்கும்போது இப்படிப்பட்ட மனதுடையவன் இந்தப் பணிக்கே வந்திருக்கக்கூடாது. ஆனால் வந்துவிட்டேன். ஒரு முஸ்லிம் என்றாலும், சமயக்கல்வியைக் கற்றவன் என்றாலும், ஒரு ஹாஜி என்றாலும், இறைச்சி உணவை உண்பவன்தான் என்றாலும் இதுவரை என் கையால் பிஸ்மி சொல்லி ஒரு கோழியைக்கூட அறுத்தது கிடையாது. இப்படிப்பட்ட மென்மையான மனதுடைய நான் காட்டின் ஈரல்குலைகளை அறுக்கும் தொழிலில் இத்தனை ஆண்டுகள் இருந்திருக்கிறேன் என்பது வியப்பே.

ஒவ்வொரு முகாமை விட்டு வெளியேறும்போதும் வேறு பணிக்குச் சென்றுவிட வேண்டும் என நினைத்துத்தான் வெளியேறுவேன். ஆனால் வாழ்க்கை கையைப் பிடித்து அழைத்து வந்து இரும்பவும் மீண்டும் இதே இடத்தில் விட்டுவிட்டு அதுபாட்டுக்குப் போய் விடும். ஒவ்வொரு முறையும் இதுதான் கடைசி என்று முகாமுக்குள் நுழைவேன். ஆனால் எதுவும் கடைசியாக இருந்ததில்லை. இந்த முகாமுக்குள்ளும் அப்படிதான் நுழைந்தேன். எல்லா முகாம்களிலும் நண்பர்கள் கிடைத்ததுண்டு. ஆனால் உறவுகள் கிடைத்ததில்லை. இங்கு நீ எனக்கு மகனாகவும் அன்னா மகளாகவும் கிடைத்தீர்கள். தந்தையாகப் பிலியவ். காட்டில் நுழைந்த இரண்டாம் இரவு நாம் வழிதவறிப் போனபோது என்னதான் பேசி உன்னை ஆறுதல்படுத்த முயன்றாலும் உன்னை நலமாக வெளியேகொண்டு போய்ச் சேர்த்து விட வேண்டுமெனத் துடித்த துடிப்பு எனக்குத்தான் தெரியும். ஆனாலும் அந்த இரவுதான் நம் உறவை நெருக்கமாக்கியது என்பதை நாம் அறிவோம்.

அதுபோல் உன்னையும் என்னையும் இறுக்கிப் பிணைத்த இன்னொரு கயிறு, வாசிப்பு. இருவருக்கும் நூலகத்தில் பணி கிடைத்திருக்க வேண்டும் என்று நீ சொன்னது நினைவில் இனிக்கிறது. என்னைப் போலவே ஒரு தீராப்பசி கொண்ட வாசகனாய் உன்னைக் கண்டபோது அதே பசியோடு அலைந்த என் இளம்பருவம் நினைவில் மீண்டது. புத்தகத்தைப் போலவே இயற்கையையும் நேசிக்கத் தொடங்கியது தப்பு. ஆனால் ஒன்று முடிந்த முடிவு. இருவருமே இவ்வேலைக்கு இலாயக்கற்றவர்கள். இல்லையென்றால் காடழிக்கும் தொழிலுக்கு வந்த நாம் காட்டினை வாழ்வாகக் கொண்ட தொல்குடி முதியவரை அருகில் இருத்திக்கொள்ளும் அபத்தத்தைச் செய்வோமா? அலுவலகத்தோடு முன்பே புர்கானின் காப்பீட்டுச் சிக்கல், ஒப்பந்தக்காரர்கள் சிக்கல், அனுமதிக்கப்பட்ட அளவுக்கும் குறைவான அளவுள்ள மரங்களை வெட்டுதல் போன்றவற்றில் பிணக்குகள் இருந்தாலும் இறுதி முடிவுக்குக் கொண்டுவந்து சேர்த்தது பிலியவின் வேண்டுகோளாக 'சிலாங்கன் பத்து' மரம்தான். அதை வெட்டவேண்டாம் என்ற வேண்டுகோளை முன்வைத்தேன். மரத்தின் ஒவ்வொரு பச்சை இலையும் ஒவ்வொரு பச்சை டாலராக அவர்கள் முன் படமாய் விரிந்து மகிழ்விக்கும்போது அசட்டுச் சொற்களை யார்தான் கேட்டுக் கொண்டிருப்பார்கள் சொல். அனைத்தும் மங்களமாய் முடிந்தது.

என் இத்தனை ஆண்டு முகாம் வாழ்வின் பட்டறிவில் சொல்கிறேன். இது என் மத நம்பிக்கைக்கு எதிரானதாக இருந்தாலும் மனதில் பட்டதைச் சொல்லித்தானே ஆகவேண்டும். இக்காட்டினை ஒரு கொற்றவை காத்து வருகிறாள் என்பதே என் நம்பிக்கை. எல்லாத் தொல்குடிகளுக்கும் உள்ள அதே நம்பிக்கை. அதனால்தான்

சொற்றவையைத் தன் இறையாக ஏற்றுக்கொண்டிருக்கும் பிலியவின் சொற்களுக்கு அதிக மதிப்பு கொடுக்கிறேன். அவர் சொல்வது அப்படியே நடக்கிறதா, குருட்டு வாய்ப்பு அப்படி நடக்க வைக்கிறதா என்பதெல்லாம் அல்ல சிக்கல். பணம் ஈட்டும் ஒரு கருவியாய் காட்டைப் பார்க்கத் தெரியாத ஓர் ஆன்மாவின் தூய சொற்கள் பலிக்கும் என்பதே என் நம்பிக்கை. தன் உடல் வேறு, காடு வேறு என்று பிரித்தறியத் தெரியாத தொல்குடிகளுக்குத்தான் இக்காட்டின் இதயத்துடிப்பு கேட்கும். அத்துடிப்பின் ஒரு கூறாகத்தான் பிலியவின் கோரிக்கையை நான் கேட்டேன். அது சரிதான் என்று இப்போதும் நம்புகிறேன். ஆனால் நான் மட்டும் நம்பி என்ன பயன்?

அடுத்த பணி எதுவென உறுதியற்ற இந்நிலையில் நிம்மதி என்பது குறைவுதான். இருப்பினும் இனி முகாம் வேலைகூடாது என்பதில் மட்டும் இம்முறை உறுதியாக இருக்கிறேன். ஒருவேளை நான் அங்கிருந்து அந்த மரம் வெட்டப்பட்டிருக்குமானால் பிலியவின் முகத்தை நேருக்குநேர் பார்க்கும் துயர நிகழ்விலிருந்து தப்பித்திருக்கிறேன் என்பதே என் தற்போதைய நிம்மதி. இதைப்போன்ற இன்னொரு நிம்மதி, உன்னிடம் நேரிடையாக விடை பெறாதது. அத்துணிவு எனக்கில்லை. அதனால்தான் கடிதத்தை அலுவலகத்தில் ஒப்படைத்துத் தரச் சொல்கிறேன். ஒருவேளை முகாம் முடிந்து முறையாக நாம் அனைவரும் பிரிய நேர்ந்திருந்தால் என்ன நிகழ்ந்திருக்கும்? அனைவரும் ஆளுக்கொருப் பக்கமாய்ப் பிரிந்திருப்போம். இக்கொடுமையானப் பிரிவை நேருக்குநேர் சந்திக்கும் திராணியற்ற நான் வேறு என்ன செய்ய முடியும்?

ஓர் உண்மையைச் சொல்லட்டுமா? இதற்காக என்னை நீ இரக்கமற்ற பிறவி என்றுகூட கருதலாம். நான் இறைவனிடம் வேண்டிக் கொள்வதெல்லாம் இதுதான். நாம் இருவரும் மீண்டும் சந்திக்கவே கூடாது. பிரியும் வேளையில் இதுதான் கடைசிச் சந்திப்பு என்று தெரிந்து வலியுடன் பிரிவதைக் காட்டிலும் இது பலமடங்கு மேல். நீ என்ன நினைத்துக்கொண்டாலும் சரி. உன்னைத் திரும்பவும் பார்க்கும் தெம்பு எனக்கில்லை. மீண்டும் ஒத்துக்கொள்கிறேன். நான் கோழைதான்.

இப்படிக்கு

உன் நம்பிக்கையான தந்தையாக வாழ்ந்த

ஓமர்.

கடிதத்தைப் படித்து முடித்ததும் அப்படியே அமர்ந்திருக்கிறேன். மனசுக்குள் எல்லாமே கழுவி வெளியேற்றப்பட்ட வெறுமை. இவ்வமைதி துளி சோகம், துளி விழிநீர் எதுவும் வழியவில்லை. இவ்வமைதி

அன்னாவுக்கும் ரோஸ்லானுக்கும் திகைப்பூட்டுகிறது. அக்கணம் தோன்றியதெல்லாம் உடனே பிலியவைப் பார்க்க வேண்டும் என்பது தான். கடிதத்தை எடுத்துக்கொண்டு அவரைத் தேடிச்செல்கிறேன். அவர் ஏழாம் தொகுதியின் தென்புறத்திலிருந்து திரும்பிக்கொண்டிருக்கிறார். அங்கேயே அமர்கிறோம். அவரிடம் கடிதத்தின் சாரத்தைச் சொல்கிறேன். பிலியவ் ஒருமுறை கண்களை இறுக மூடித் திறக்கிறார். பிறகு சொற்களும் மெல்லத் திறக்கின்றன.

இறந்து போன என் தந்தையின் ஆன்மா நிழல் போல இம்மனிதரின் இதயத்திலும் படிந்திருக்கிறது

சுற்றிலும் மரங்கள் வெட்டப்பட்டிருந்ததால் பெருத்திருக்கும் இடைவெளிகளின் ஊடே நிலம் வெயில் குடித்துக்கொண்டிருக்கிறது. அதைப் பார்த்தவாறே மீண்டும் பேசுகிறார். நாங்களும் மரங்களை வெட்டியிருக்கிறோம். வீடுகட்டுவது போன்ற தேவையைத் தவிர மரங்களின் மீது கைவைக்க மாட்டோம். முதன்முதலில் இங்கு சகட்டுமேனிக்கு மரங்களை வெட்டத் தொடங்கியவர்கள் வெள்ளைக்காரர்கள்தாம். ஒருமுறை என் தந்தை ஒரு வெள்ளையரிடம் இத்தனை மரங்களை எதற்காக வெட்டுகிறீர்கள் என்று கேட்டாராம். அதற்கு அவ்வெள்ளையர் திமிராகச் சொன்னாராம். இவற்றைப் பிணப் பெட்டிகள் செய்ய எங்கள் நாட்டுக்குக் கொண்டு போகிறோம்.

பதிலுக்கு என் தந்தை அமைதியாக இப்படிக் கேட்டிருக்கிறார். அத்தனை பிணங்களா உங்கள் நாட்டில் கிடக்கின்றன?

ஆத்திரம் கொண்ட அவ்வெள்ளையர் என் தந்தையின் கன்னத்தில் அறைந்துவிட்டாராம். அவர்களை எதிர்த்து என்ன செய்ய முடிந்தது? அத்தனை மரங்களும் போனதுதான் மிச்சம். இப்போதும் போய்க் கொண்டிருக்கிறது. இதில் இவர் மட்டும் என்ன செய்துவிட முடியும் - இப்படி மனசாட்சியைத் தூய்மைப்படுத்திக் கொள்வதைத் தவிர?

இதற்கெல்லாம் வேறு வழி இல்லையா பிலியவ்?

அவரது உதடுகளில் வறட்டுச் சிரிப்பொன்று வழிகிறது. என் தந்தை இறுதியாக அவ்வெள்ளையருக்குச் சொன்ன பதிலைத்தான் சொல்ல முடியும் என்றவர் சற்றுப்பொறுத்து அதைச்சொல்கிறார்.

நீங்கள் திரும்பிச் செல்லும்போது இக்காடு பெரிய பிணமாகக் கிடக்கும். அவ்வளவு பெரிய பிணத்துக்கும் ஒரு பிணப்பெட்டி செய்து கொடுத்துவிட்டுச் செல்லுங்கள்.

சில்வண்டு இழந்த காடுபோல் கனத்த அமைதி இருவருக்கும் இடையே அமர்ந்துகொள்கிறது. இருவருக்குமே அதை விரட்ட மனமில்லை. இறுதியில் பிலியவ் அதைச் சொல்லால் அசைக்கிறார். நீ என்ன செய்யப் போகிறாய்?

உடனடியாக சண்டகான் போய் ஓமரைப் பார்க்கப் போகிறேன்.

மனதுக்குள் வெளியே உரைக்கத் துணியாத சில சொற்கள் ஓடிக் கொண்டிருக்கின்றன. என்னை மன்னித்து விடுங்கள் பிலியல். ஓமரைத் தேடி அழைத்துவர முடியவில்லையெனில் இப்பணிக்குத் திரும்பப் போவதில்லை. இதை இப்போது உங்களிடம் ஏன் நேராகச் சொல்ல முடியாமல் சொற்கள் இப்படி ஒளிந்துகொள்கின்றன? ஓமர் மட்டுமா கோழை?

## போலியின் துவர்ப்பு

சண்டகான் தெரு முழுக்க அலைந்து திரிகிறேன் ஓமரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. எவ்வளவு நேரம் சாலையில் நடக்கும் ஒவ்வொருவரையும் உற்றுப் பார்த்துக்கொண்டு திரிவது? ஓமருடைய வீட்டு முகவரி அலுவலகத்தில் இல்லை. தொலைபேசி எண்கூட இல்லை. ஆனால் ஓமர் முகாமிலிருந்து அட்டுர் பேசியில் சில தடவை தன் குடும்பத்தோடு பேசியிருக்கிறார். என்ன காரணத்தினாலோ அவர் அதை அலுவலகத்தில் கொடுக்கவில்லை. சில கோப்பிக்கடைகள் பக்கம் போனால் அவரைக் காணலாம் என்றார்கள். அந்தக் கோப்பிக்கடைகளில் பெரும்பாலும் தரகர்கள் கூட்டமே அதிகமிருக்கிறது.

சண்டகானின் முதன்மை வீதிகள் மூன்றையும் இருநாட்களாகச் சுற்றித் திரிந்து அயர்ச்சியாகிவிடுகிறது.

பத்து சாப்பி போய்த் தேடினால் என்ன? அது மர ஆலைகள் நிறைந்த பகுதி. வெட்டுமரங்களோடு தொடர்புடையது என்பதால் சிற்றுந்து ஏறி அங்கு செல்கிறேன். பிலிப்பைனிய அகதிகளின் கம்போங் மிகப்பெரிய அளவுக்கு வளர்ந்திருக்கிறது. அதைவிடத் தனித்த அடையாளமாக உருவாகியிருக்கிறது அங்கிருந்த பெரும்திடலில் தொடர்ந்து எரிந்து கொண்டிருக்கும் தீ.

அத்திடலில்தான் மர ஆலைக் கழிவுகளைக் கொட்டி தீ வைக்கப் பட்டு அது எரிந்துகொண்டேயிருக்கிறது. இருபத்து நான்கு மணி நேரமும் எரியும் தீ. எத்தனை ஆண்டுகளாக எரிந்துகொண்டிருக்கிறது என்று தெரியவில்லை. இதில் உருவி எடுத்த பலகைகளிலிருந்துதான் இங்கிருக்கும் நூற்றுக்கணக்கான மரவீடுகள் உருவாகியிருக்கின்றன. இதுமட்டுமா? சண்டகானில் கடலோரங்களில் உருவாக்கப்பட்டிருக்கும் பல்லாயிரக்கணக்கான மரவீடுகளும் இப்படிதான் உருவாக்கப் பட்டிருக்கின்றன. இப்பலகையில் இருந்து ஆயிரக்கணக்கான வீடுகளைக் கட்ட முடிகிறது என்றால் இதற்குப் பெயர்தான் கழிவுப் பலகையா? ஏற்றுமதிக்குத் தகுதியற்ற பலகைக்குப் பெயரே கழிவுப் பலகை. வெறுமனே எரிந்து சாம்பலாவதற்குப் பதிலாகச் சில ஏழைகளுக்கு வீடுகளாவது கிடைக்கிறது. பத்து சாப்பியின் அலைச்சலும் வீணாகத்தான் முடிகிறது.

நான்காம்நாள் காலை ஒரு கடையில் நின்றுகொண்டிருந்தபோது யாரோ அழைக்கிறார்கள். பழக்கப்பட்ட குரல். ஆண்ட்ரூஸ். வெளியே பாய்ந்து, அப்படியே நடைபாதையிலேயே கட்டித் தழுவிக்கொள்கிறோம். எதிர்பார்க்கவே இல்லை. கோப்பிக்கடைக்குப் போவோம் என்று அழைக்கிறேன். ஜாலன் சத்து சாலையிலேயே இருந்த ஒரு கோப்பிக் கடைக்குப் போகிறோம். போலி என்னும் ஒரு வகை சினத்தேநீரும் காயா தடவிய ரொட்டியும் தரச்சொல்லிவிட்டுத் திரும்பி ஆண்ட்ரூசிடம் கேட்கிறேன் நீங்கள் திமூருக்குப் போவதாகச் சொன்னார்களே ஆண்ட்ரூஸ்?

அவர் முகத்தில் மெல்லிய துயர் பரவுகிறது. அப்படிதான் நினைத்திருந்தேன். ஆனால் அங்கு புரட்சிப்படையில் இருந்த என் தம்பியை ராணுவம் சுட்டுக்கொன்றுவிட்டது. தம்பி குடும்பத்துக்கும் ஏதாவது செய்ய வேண்டும். சிறிய பிள்ளைகள். அதனால் அடுத்த ஆண்டுதான் போகிறேன். எனவேதான் திரும்பவும் முகாம் பணிக்கே போய் விட்டேன். இப்போது தெலுப்பிட் அருகில் ஒரு முகாமில் இருக்கிறேன். வந்து இரண்டு நாள்தான் ஆகிறது. இது கிடக்கட்டும். உன்னைச் சந்திக்க முடிந்ததில் மகிழ்ச்சி. நீ எப்படி இருக்கிறாய்? முகாமிலிருந்து எப்போது வந்தாய்?

வந்து நான்கு நாட்களாகி விட்டது. ஆனால் மகிழ்ச்சியாக இல்லை. ஓமர் வேலையை விட்டு விலகிவிட்டார் தெரியுமா என்று சொன்னதுமே ஆண்ட்ரூஸ் ஆமாம். தெரியும் என்கிறார் அமைதியாக. திகைத்து விடுகிறேன். என்ன சொல்கிறீர்கள் ஆண்ட்ரூஸ்? தெரியுமா? எப்படித் தெரியும் என்ற படபடப்பான கேள்விகளுக்கு ஆண்ட்ரூஸ் அமைதியாகப் பதில் சொல்கிறார். ஓமர்தான் சொன்னார்.

பதறி எழுந்துவிடுகிறேன். ஓமர் சொன்னாரா? நீங்கள் அவரைப் பார்த்தீர்களா? எப்போது பார்த்தீர்கள்? ஆண்ட்ரூஸுக்கு இந்தப் பதற்றத்தைக் கண்டு அதிர்ச்சியில் விழிகள் விரிந்து விடுகின்றன. முதலில் நீ இருக்கையில் உட்கார். எல்லோரும் பார்க்கிறார்கள் பார் என்கிறார். அமர்ந்தும் பதற்றம் தணியவில்லை. அவரைத்தேடி நான்கு நாட்களாக அலைகிறேன். அவர் சிக்கவே இல்லை. நீங்கள் வந்து இரண்டு நாளில் பார்த்துவிட்டேன் என்கிறீர்கள். அது எப்படி?

ஆண்ட்ரூஸ் பதில் சொல்லுவதற்குள் போலியும் ரொட்டியும் வருகின்றன. இரண்டு அங்குலக் கன பரிமாணமுள்ள சின்னஞ்சிறு பீங்கான் கிண்ணங்களை எடுத்து வைக்கிறார் ஆண்ட்ரூஸ். பெரிய பீங்கான் சாடியிலிருந்து ஆவி பறக்க அத்தேநீர் கிண்ணங்களுக்குள் நிரம்புகிறது. அதை ஆளுக்கொன்றாக எடுத்து வைத்துவிட்டு ரொட்டித் துண்டுத் தட்டை நடுவில் வைக்கிறார். முதலில் சாப்பிடு. நிதானமாகப் பேசுவோம்.

மேசையில் அவருக்கு முன்னால் இருக்கிறது. ஏறக்குறைய முணுமுணுக்கிறேன். என்னால் மன அமைதியோடு தொடர்ந்து பணிபுரிய இயலாது.

குணா அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்துவிட்டுச் சொல்கிறார். உன்னை யார் தொடர்ந்து இருக்கச் சொல்கிறார்கள்? எண்ணி மூன்றே மாதங்கள் மொத்த முகாமையும் மூடிவிட்டுத் திரும்பப் போகிறோம். அடுத்த முகாமுக்கு நீ வரவேண்டாம். ஓமர் இல்லாத நிலையில் உன் பணி முதன்மையாகிறது. இவ்வளவு நாட்கள் நல்ல பெயரோடு இருந்துவிட்டாய். கடைசி நேரத்தில் இப்படிப் பாதியில் விட்டுச்சென்று அவப்பெயரைச் சுமக்காதே. உன் நன்மைக்கே சொல்கிறேன். வேறு யாரிடமும் இப்பணி விலகல் செய்தியைக்கூடப் பகிர்ந்துகொள்ளாதே. தெரிகிறதா?

சொற்களை வெளிவிடாமல் இறுக்கி வைத்துக்கொள்கிறேன். குணா தொடர்கிறார். இத்தனை ஆண்டுகள் இருந்துவிட்டாய். இந்த மூன்று மாதமா பெரிது? போ... கண்ணை மூடிக்கொண்டு வேலை செய். போ.

கண்களை மூடிக்கொள்கிறேன். கண்களை மூடிக்கொண்டால் இருள்வதுபோல் ஓமர் இல்லாத இடமும் இருளாக இருக்கப் போகிறது. ஆனால் போகப் போக இருளும் பழகிப்போய்விடுமோ? இருள் மெல்ல பழகுவதுபோல் ஒவ்வொருவராய் வெளிச்சத்துக்குள் வருகிறார்கள். ஆங்... ரோஸ்லான்... அன்னா... பிலியவ்...

சொல்லாமல் கொள்ளாமல் பணிவிலகிச் சென்றால் இவர்களின் மனதும் பாதிப்புறத்தானே செய்யும்? குறிப்பாகப் பிலியவ். எங்கள் இருவரையும் நம்பித்தானே முகாமுக்கே அவர் வந்தார்? இப்படிப் பாதியில் கைவிட்டு ஓடிவிட முடியுமா? நகரத்து மனிதர்கள் மேல் ஏற்கனவே நம்பிக்கையற்றுத் திரியும் அம்மனது எவ்வளவு புண்பட்டுப் போகும்? அந்நம்பிக்கையைக் குலைக்கவே கூடாது. ஆனால் இனி அங்கு தொடர்ந்து இருக்க முடியுமா? மூன்று மாதம்... தொண்ணூறு நாட்கள்... வேலையை முடுக்கினால் இன்னமும்கூட துரிதமாக... போலியின் துவர்ப்பைப் போலச் சகித்துக்கொண்டு...

ஒத்துக்கொண்டு தலையாட்டியது குணாவுக்கு நிம்மதியாக இருந்திருக்கும்.

# பகுதி மூன்று

மூதாய் மரமே, மன்னிப்புக் கோருகிறேன்.
உன் எல்லா இலைகளையும் அறிந்தே உதிர்த்தோம்.
உன் எல்லாக் கிளைகளையும் அறிந்தே வெட்டினோம்.
உன்னையும் அறிந்தே வீழ்த்தினோம்.

# 1

***லோக்கன் ஆறு***

ஆற்றின் கரையிலமர்ந்து தலையைத் தாழ்த்தி நீர் அருந்திக்கொண்டிருக்கிறது ரசோங் குரங்கு. அங்கு ஒரு கூட்டமே காத்திருக்கிறது. ஏறக்குறைய இருபது குரங்குகளாவது இருக்கலாம். அவை ஆற்றின் இருபுறமும் தலையைத் திருப்பிப் பார்க்கின்றன. பின்னர் ஓடிக்கொண்டிருக்கும் நீரின் பரப்பை உற்றுப்பார்க்கின்றன. அக்கூட்டத்தில் இருந்த எந்தக் குரங்கும் துளிகூட ஒலி எழுப்பவில்லை. இக்குரங்குகள் ஆற்றை நீந்திக் கடக்கப் போகின்றன என்கிறார் பிலியவ்.

ஆற்றின் கரையோரமாகப் படகை அணைத்து நிறுத்தியிருக்கிறோம். படகு என்றால் பிலியவின் குட்டிப்படகு. மரஉருளையைக் குடைந்து செய்யப்பட்டிருந்த இப்படகில் பயணம் செய்துவிட வேண்டும் என்கிற வெகுநாள் ஆசை இன்று கைகூடியிருக்கிறது. அதுவும் லோக்கன் ஆற்றுப்பயணம். இப்பயணத்தின்போதே இக்குரங்குகளைப் பார்த்திருந்தோம். இப்போது அக்குரங்குகள் தயாராகின்றன. முதல் குரங்கு நீருக்குள் இறங்கி மெதுவாக நீந்தத் தொடங்கியது. மற்ற குரங்குகளும் ஒவ்வொன்றாய் இறங்குகின்றன. அவை நீந்தும்போது நீரில் ஒலியே எழவில்லை. அமைதியாகப் போதிய வேகத்துடன் நீந்துகின்றன.

எப்படி அவை துளியும் சத்தமின்றி நீந்துகின்றன பாருங்கள், பிலியவ்?

சத்தம் எழக்கூடாது என்பதுதான் அவற்றின் நோக்கம். அப்படி எழுப்பினால் முதலைகளுக்குத் தெரிந்து விடுமே?

ஆனாலும் மனிதர்களாகிய நாம் நீந்தினால் எவ்வளவு நீர் சிதறுகிறது? ஆனால் இக்குரங்குகள் நீந்தும்போது நீர் சிதறவில்லை.

சிதறாது. இவற்றின் கால்களில் வாத்துக்கால்களில் இருப்பதுபோல் சவ்வு ஒட்டிக்கொண்டிருக்கும். அக்கொய்யடிகள் இருப்பதால் இவற்றால் நீந்தமுடிகிறது. பார், எல்லாக் குரங்குகளும் சீராக ஆற்றைக் கடந்து அக்கரையில் ஏறிவிட்டன.

பிலியவ் துடுப்பை வலிக்கத் தொடங்குகிறார். படகின் உட்பகுதியில் நீர் திரண்டிருந்ததால் டப்பாவை எடுத்து நீரைச் சேந்தி வெளியே இறைக்கிறேன். படகு ஆற்றின் இடக்கரையோரமாகப் போய்க்கொண்டிருக்கிறது. நீரோடும் மெல்லோசை. இளங்காற்றின் இன்னிசை. தொலைவிலிருந்து ஆங்காங்குக் கேட்கும் பறவைகளின் பண்ணிசை.

இணையும் ஒராங் ஊத்தானின் ஊ... ஊ... ஊ... இமைகளை இரு நிமிடம் இறுக மூடிக்கொண்டு செவிகளைத் திறந்து வைத்தால் இயற்கைதான் உலகின் மிகச்சிறந்த இசையமைப்பாளர். இப்படியே இந்த லோக்கன் ஆற்றில் இதன் துணையாறு ரவாங் பெசார் கலக்கும் இடம்வரை போக முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும். ஆனால் முடியாது. இடையில் போடப்பட்டிருக்கும் அந்தச் செம்பனைத் தோட்டத்தின் தரைப்பாலம் தடுத்துவிடும். மனித முயற்சி எல்லா வற்றுக்கும் இடையூறு.

லிட்-லீக்...

முதலாவது ஒலி லிட் குறுகியும் இரண்டாவது ஒலி லீக் நீண்டும் கேட்கிறது. இது என்ன புதிய இசை? இமைகள் பிரிகின்றன. வெள்ளை நிற வாலில் மூன்று கருநிற பட்டைகளையுடைய கழுகு மேலே பறந்துகொண்டிருக்கிறது. நெஞ்சிலும் அடிவயிற்றிலும் வரிவரியான கோடுகள் தெரியுமளவுக்குத் தாழப்பறத்தல். மீன் தேடுகிறதோ? சற்று விலகிப் பறக்கும்போது தலையிலிருந்து கொத்தாக முளைத்ததுபோல மூன்று நான்கு சிறகுகள் கொண்ட கொண்டையிருப்பது தெரிகிறது. ஆற்றின் போக்கிலேயே அது பறந்து மறைந்து கொண்டிருக்கிறது.

பார்வையை இறக்குகிறேன். எதிர்க்கரையில் செந்நீலப் பூக்களின் ஓவியம். குற்றுமரத்தில் மஞ்சரியாய் மலர்ந்து விரிந்திருக்கும் செந்நீலப் பூக்கள் கண்களில் படர்ந்து விரிவதைக் கண்டுவிட்ட பிலியவ் இது புங்கோர் பூக்கள். இவை ஒருமுறை பூத்தால் வாரக்கணக்கில் உதிராமல் அப்படியே இருக்கும் என்கிறார்.

அருகில் போய்ப் பார்க்கலாம் என்று நினைப்பதற்குள் திருப்பத்தி லிருந்து ஒரு விசைப்படகு இரைச்சலோடு திடீரென வெளிப்படுகிறது. அதிலிருந்த நான்கைந்து பேரும் பெரும் கூச்சலிட்டுக்கொண்டே வருகின்றனர். படகின் முன்புறமாய் ஒருவன் நின்றுகொண்டிருக்கிறான். அவனுடைய கையில் பீர் புட்டி தெரிகிறது. எங்களைப் பார்த்ததும் உரக்கக் கத்தியவாறு புட்டியை உயர்த்திக்காட்டி ஆட்டுகிறான். படகு எங்களைக் கடந்தபோது படகின் வேகத்தைக் குறைக்கக்கூட அவர்கள் முயலவில்லை. விசைப்படகின் பின்னால் இருந்து புறப்படும் வரிசை யான அலைகளின் வேகத்தில் எங்கள் குட்டிப்படகு வேகமாக ஆடி நிலைதடுமாறுகிறது. படகு கவிழ்ந்து விடுமோ என்கிற அச்சம். ஆனால் பிலியவ் திறமையாகச் சமாளித்து படகைக் கரையோரத்துக்குக் கொண்டு சென்று கரையை அணைத்தவாறு மரமொன்றில் கயிற்றால் பிணைத்துக் கட்டிவிட்டுச் சொல்கிறார். அவர்கள் திரும்பிப் போனதும் படகை எடுப்போம்.

பிலியவின் முகம் இறுகியிருக்கிறது. அவர்களுடைய செய்கை அடியோடு பிடிக்கவில்லை. அவரையே கவனித்துக் கொண்டிருப்பதைப்

பார்த்ததும் கேட்கிறார். இவர்கள் சண்டகானில் இருந்து வருகிறார்கள், இல்லையா?

இது கேள்வி அல்ல. கேலி. பதிலே சொல்லவில்லை. படகு ஒதுங்கியிருந்த கரைப்பக்கம் வேடிக்கை பார்ப்பதுபோல் பார்வையைத் திருப்புகிறேன். கரையில் கடம்ப மரங்களும் பெருபோக் மரங்களும் நிறைந்திருக்கின்றன. கடம்ப மரமொன்றில் கொப்புகளை உடைத்து ஓராங் ஊத்தானால் அமைக்கப்பட்டுக் கைவிடப்பட்டிருந்த கூடொன்று தென்படுகிறது. அதற்கும் தொலைவில் இன்னொரு கடம்ப மரத்தில் ஏதோ அசைகிறது. ஓராங் ஊத்தான்தானா? படகிலிருந்து உடலைச் சற்று வளைத்துப் பார்க்கிறேன். சிவப்பு நிறத்தில் தெரிகிறது. ஓராங் ஊத்தானாக இருக்கமுடியாது. சிறிய உருவம். எட்டிப் பார்த்ததைப் பிலியவ் கவனித்துவிட்டுச் சொல்கிறார்.

லொத்தோங் மேரா.

ஆவலை முகம் வழி படித்த பிலியவ் படகை அவிழ்த்து மெல்ல முன்செலுத்தி கடம்ப மரங்களை நெருங்கிச்சென்று போதுமான இடைவெளியில் கரையோடு பிணைக்கிறார். இப்போது குரங்கு தெளிவாகத் தெரிகிறது. நீண்ட தடித்த வாலைத் தொங்கவிட்டுக் கொண்டு அமர்ந்திருக்கிறது. உடல் முழுவதும் புசுபுசுவென பொங்கு மயிர். முகம் மட்டும் கருத்திருக்கிறது. அருகருகே இன்னும் மூன்று குரங்குகள் அமர்ந்திருக்கின்றன. இத்தோடு பத்து பிரைமேட்களையும் பார்த்துவிட்டேன். பட்டியல் முழுமை. மூதாதையர்களைக் கண்ட பெருமை. பத்து பிரைமேட்கள் ஒன்றாக வசிக்கும் இக்காட்டில் இனி இந்தப் பத்தும் தொடர்ந்து இருக்குமா? இல்லை, இந்த பத்துக்கும் பிறகு வந்த நாம் இவற்றை ஒழித்துக்கட்டி விடுவோமா?

சட்டென்று பேய்க்குரங்கின் நினைவு வருகிறது. பிலியவிடம் அதை வளர்த்த கதையைச் சொல்லி முடிக்க, அதைக்கேட்டு அவர் சிரித்து விட்டுச் சொல்கிறார். அது பூச்சி, பல்லியெல்லாம் சாப்பிடும் விலங்கு. அதற்குப் போய் பாலும் சோறும் போட்டால் எப்படிச் சாப்பிடும்?

அதுதான் பட்டினி கிடந்து செத்துப் போய்விட்டதா?

அதற்காக மட்டும் இருக்காது. அது ரொம்பவும் உணர்வுவயப் பட்டது. மற்ற விலங்குகளைப் போல எளிதாக அதை வளர்த்துவிட முடியாது. அதற்கு உணவு முக்கியமல்ல. மன உளைச்சல் இல்லாத வகையில் வளர்க்க வேண்டும். அது சிரமம். அதனால் பெரும்பாலும் அது தன்னைத்தானே காயப்படுத்திக்கொண்டு இறந்து போய்விடும்.

அதிர்ச்சியாக இருந்தது. உடலில் காயங்களோடு தரையில் அது இறந்து கிடந்தது நினைவுக்குள் மீள்கிறது. நெஞ்சுக்குள் குற்றவுணர்வின் நரம்பு சுண்டப்பட்டு அதிர்கிறது. அப்பேய்க்குரங்கின் தொடர்ச்சியாய் பேய்க்கிழவர் வந்ததும் அதன் காரணமாய் பங்கலான் சென்று

தங்கியதும் அங்கு இந்தப் பிலியவை முதலில் சந்தித்ததும் இப்போது நடந்ததுபோல இருக்கிறது.

அவ்விசைப்படகு திரும்பிவரும் சத்தம் கேட்கிறது. அதே வேகம். அதே கூச்சல். அது உருவாக்கிச் சென்ற அலைக்கழிப்புக்குப் பிறகு படகை அவிழ்க்கிறார். திரும்பிப் போய்விடுவோம். அதுதான் சரி என்றுபடுகிறது. இம்முறை நீரின் போக்கிலேயே செல்வதால் படகு எளிதாகச் செல்கிறது. படகுக்குள் தேங்கியிருக்கும் நீரைச் சேந்தி வெளியே கொட்டத் தொடங்குகிறேன்.

**சிலாங்கன் பத்து**

லோக்கன் ஆற்றோடு வந்து இணையும் ஓர் ஓடையின் உட்புறமாய்ப் படகை நிறுத்திவிட்டு கரையேறி முகாம் சாலைக்கு வருகிறோம். இப்படியே நடந்து நுழைவுச்சாவடிக்குச் செல்ல வேண்டும். அங்கு ரோஸ்லான் காத்திருப்பான். நடக்கையில் எதிரே செம்பனைத் தோட்டப் பக்கத்திலிருந்து வந்துகொண்டிருந்த சிமிட்டி வண்ண லேண்ட் ரோவரைப் பார்த்தவுடனேயே அது அலங்காரமீன் வணிகர் வோங் வண்டியெனத் தெரிந்துவிடுகிறது. அருகில் வந்து நின்றதும் அதிலிருந்து ஆங் இறங்குகிறார். உடல் கவசம்போல் துப்பாக்கி. அவரிடம் சிரித்துக்கொண்டே கேட்கிறேன். என்ன கலோய் மீன்களையும் துப்பாக்கியால்தான் சுட்டுப்பிடிக்கிறீர்களா?

பெரியதொரு சிரிப்புடன் கட்டியணைத்துக் கொள்கிறார். பிலியவை நலம் விசாரிக்கிறார். பிறகு வோங்கிடம் ஒரு பையைக் கேட்கிறார். அது நிறைய பாவ் இருக்கிறது. வாருங்கள் சாப்பிடுவோம்.

வெகு நேரம் ஆற்றில் அலைந்ததில் நல்ல பசி. பாவ் எனக்குப் பிடிக்கும் என்பதை இன்னும் இவர் மறக்கவில்லை. அருகிலிருந்த நிழலில் ஒதுங்குகிறோம். வெண்ணிறத்தில் இட்லி போல் காட்சியளிக்கும் சீனப் பலகாரமான பாவ் நன்கு உப்பி மிக மிருதுவாய் இருக்கிறது.

மீன் வணிகம் எல்லாம் எப்படி போய்க் கொண்டிருக்கிறது?

இப்போதைக்கு நிறுத்தி வைத்திருக்கிறோம். தொடர்ந்து பிடித்துக் கொண்டிருந்தால் காலியாகிவிடாதா? இப்போது சண்டகானில் சிபுகா பக்கக் குட்டையில் இந்த மீன்களை விட்டு வளர்க்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறோம். பாதிக்கு பாதி அதில் வெற்றியடைந்தும் இருக்கிறோம். தவிர இங்கு ‘செரிண்டிட் கிளி’களைப் பிடித்துக் கொண்டுப் போயும் விற்கிறோம். பிலியவ், இந்தாருங்கள் இன்னொரு பாவ் சாப்பிடுங்கள் என அவருக்கு ஒன்று கொடுத்துவிட்டு என்னைப் பார்த்துக் கேட்கிறார். ஓமரைப் பற்றி ஏதேனும் செய்தி கிடைத்ததா?

பெருமூச்சுடன் உதட்டைப் பிதுக்குகிறேன். நல்ல மனிதர் என்ற ஆங், ஆமாம் இப்போது முகாம் எப்படி இருக்கிறது? என்ன முடிவு

எடுத்திருக்கிறார்கள் என்று ஏதாவது தெரியுமா?

நாளைக்குள் முடிவு சொல்லிவிடுவோம் என்று சொல்லியிருக்கிறார்கள்.

அது என்ன முடிவு என்று சொல்லியிருக்க மாட்டார்களே? பரவாயில்லை நான் சொல்லுகிறேன். ஆனால் நீயாகத் தெரிந்துகொள்ளும் வரை யாரிடமும் இதைப் பகிர்ந்துகொள்ளாதே. பக்கத்து முகாம் வசம்தான் முழுக் குத்தகைக்குக் கொடுக்கப் போகிறார்கள்.

வியோங் இருக்கும் முகாமுக்கா என்று கேட்டதற்கு ஆங் தலையாட்டுகிறார். இங்கு வெட்டுவதற்கு இன்னும் என்ன மீதி இருக்கிறதாம் என்கிறேன்.

மிச்சம் மீதி இருக்கும் மரங்களை வெட்டி உள்ளூர் மரஆலைக்கு விற்று இழப்பை ஈடுகட்டப் போகிறார்களாம் என்று ஆங் சொல்வதைக் கேட்டதும் வெறுப்பாகி விடுகிறது. முழுக்காட்டையும் மொட்டையடிக்கப் போகிறார்கள். இப்படி நடக்குமெனத் தெரிந்துதான் ஓமர் போய்விட்டாரா? சற்றுப் பொறுத்து ஆங் கேட்கிறார். என்ன திடீரென அமைதியாகி விட்டாய்?

இல்லை. இதற்குப் பதிலாக மொத்தமாகப் பக்கத்தில் இருக்கும் செம்பனைத் தோட்டத்துக்குக் கொடுத்துவிட்டால் அவர்கள் புல் பூண்டுகூட இல்லாமல் புல்டோசரைவிட்டு மண்ணை வழித்துக் கொடுத்து விடுவார்கள்.

ஆங் உடனே பிலியவ் பக்கம் திரும்பி, என்ன பிலியவ் ஒரு தொல்குடி மாணவரை உருவாக்கி விட்டீர்கள் போலிருக்கிறதே என்று கேட்டுவிட்டுப் பெரிதாகச் சிரிக்கிறார். பிறகு தணிந்த குரலில் சொல்கிறார். இதுப்பற்றி நாம் கூடிப்பேசி என்ன ஆகப்போகிறது? நாம் நினைத்தால் தடுத்து நிறுத்துகிற செயலா இது? இதோ இந்தப் பிலியவ் இந்தக் காட்டுக்குரிய மனிதர்களில் ஒருவர். இவர்களாலேயே ஒன்றும் செய்ய முடியவில்லை. நாமெல்லாம் வெறும் கூலிகள். என்ன செய்ய முடியும் சொல். சரி. நாங்கள் கிளம்புகிறோம். சண்டாகான் வந்தால் அவசியம் என்னைத் தொடர்புகொள். வரட்டுமா?

லேண்ட் ரோவர் புறப்பட்டுச் செல்கிறது. ஆங் இப்போது இந்த நிறுவனத்தில் இல்லை. அவரும் பணியைவிட்டு விலகிவிட்டிருந்தார். தற்சமயம் கடலோரப் மீன் வணிகம்தான் அவருக்கு. நினைத்துப் பார்க்கும்போது முகாம் செல்லவே வெறுப்பாக இருக்கிறது. எப்படிக் கலகலப்பாக இருந்த முகாம் இப்போது அய்ந்தாறு பேர்கூட இல்லை. இவர்களும் நிறுவன ஊழியர்கள்தாம். ஒப்பந்தத் தொழிலாளர் என்று ஒருவருமில்லை. ஏறக்குறைய இரண்டு மாதமாகிறது. இருக்கும் அனைவருக்கும் தூங்கி எழுவதுதான் முழுநேர வேலை. அதைத் தவிர்க்க இப்படி பிலியவுடன் சுற்றித் தப்பித்துக்கொண்டிருக்கிறேன்.

மற்றவர்களுக்கு இதுவும் வாய்க்கவில்லை.

ஆனாலும் காட்டில் பழைய அமைதி இப்போது கூடிவந்திருக்கிறது. சங்கிலி வாளின் சத்தம் இல்லை. டிராக்டர்கள் இல்லை. பதிலாகப் பறவைகளின் ஒலிகள் கேட்கத் தொடங்கியுள்ளன. சாலைகளில் விலங்குகளின் நடமாட்டங்கள் தொடங்கியுள்ளன. ஆனால் இந்த அமைதி முகாமிலுள்ள மற்றவர்களை அச்சமூட்டிக்கொண்டிருக்கிறது. பிலியல் அங்கிருக்கும் நம்பிக்கையில் ஒட்டிக்கொண்டிருக்கிறார்கள். நாளைக்குள் முடிவு தெரியாவிட்டால் பழைய ஆட்களைத் தவிர மீதியிருப்பவர்களும் கிளம்பத் திட்டமிட்டிருக்கிறார்கள். மீதியிருக்கப் போவது அன்னாவும் ரோஸ்லானும்தான்.

பிலியல் சொல்படி கேட்டிருந்தால் இவ்வளவு வாய்ப்புக்கேடான நிகழ்வுகள் நடந்திருக்காதோ? ஓமர் கணித்தது சரிதானோ? என்றெல்லாம் நிறைய உருப்படிகள் மண்டைக்குள் கிடந்து உருள்கின்றன. எத்தனை நிகழ்வுகள் நடந்து முடிந்து விட்டன? எல்லாமே எதிர்பாராத நிகழ்வுகள். எல்லா நிகழ்வுகளுக்கும் தொடக்கப் புள்ளியே அந்த நிகழ்வுதானா?

ஓமரைத் தேடியலைந்து பார்க்க முடியாமல் வேலையை விட்டு விலகும் முடிவையெடுக்க அதுவும் குணாவால் தடுக்கப்பட்டு வேண்டா வெறுப்பாக முகாமுக்குத் திரும்பிவந்த அந்நாள் நினைவுக்கு வருகிறது. அப்படி முகாமுக்குள் நுழைந்த சில நிமிடங்களிலேயே அந்தச் செய்தி கிடைக்கிறது.

மூதாய் மரம் வெட்டப்பட்டுவிட்டது.

**உயிரிகளின் உரையாடல்**

மரத்தை வெட்டச் சொன்னது ஆங்தான் என்று கைகாட்டுகிறார்கள். அவரிடம் சென்று கேட்கிறேன். குரலின் கடுமை கண்டு ஆங் பதறிப் போகிறார். உண்மையாகச் சொல்கிறேன். அதை நானாக வெட்டச் சொல்லவில்லை. இன்னும் சொல்லப்போனால் இப்படி ஒரு மரம் இருப்பதே எனக்குத் தெரியாது. எனக்கு வேலையே பங்களான் பக்கம் என்று உனக்குத் தெரியாதா? ஓமரும் நீயும் இங்கு இல்லாததால் இவ்வேலை என் பொறுப்புக்கு வந்தது. அப்போது அலுவலகத்திலிருந்து இம்மரத்தைப் பற்றிக் குறிப்பிட்டு அதை உடனே வெட்டுங்கள் என்றார்கள். அதுமட்டுமல்ல, வெட்டியாகி விட்டதா, வெட்டியாகி விட்டதா என்று அடிக்கடி கேள்வி வேறு. சரி, வெட்டுவதுதானே நம் தொழில் என்று அதை வெட்டுவதற்கு உத்தரவிட்டேன். பிறகுதான் இம்மரம் வெட்டப்படக்கூடாத மரம் என்று பிலியல் சொல்லி யிருந்தார் என்பதைக் கேள்விப்பட்டேன்.

ஆங் சொல்வதும் உண்மைதான். இவருக்கு இம்மரத்தைப் பற்றியோ நாங்கள் மூவரும் நிகழ்த்திய உரையாடல் பற்றியோ தெரிய

வாய்ப்பில்லை. ஆங் தொடர்கிறார். ஆனால் நினைத்த மாதிரி அம்மரத்தை வெட்டிக்கொண்டு வந்து சேர்த்தது எளிதாக அமைய வில்லை. எப்படி அது சிரமம் கொடுத்தது என்பதை ஆட்களிடம் விசாரித்துப்பார். அதுமட்டுமல்ல அலுவலகத்திலிருந்து இன்னொரு உத்தரவும் வந்தது. ஆனால் அதைச் செய்யமுடியாது என்று உறுதியாய் மறுத்துவிட்டேன்.

என்ன உத்தரவு?

ஆங் சிறிது தயங்குகிறார். பிறகு தணிந்த குரலில் சொல்கிறார். பிலியவை முகாமை விட்டு வெளியே அனுப்பிவிடச் சொன்னார்கள்.

இதைக் கேட்டதுமே சினத்தின் கொதிநீர்க் குமிழிகள் நூறு பாகையைத் தாண்டுகின்றன. ஏறக்குறைய கத்துகிறேன். என்ன காரணமாக அனுப்பிவிடச் சொன்னார்கள்?

இம்மரம் குறித்தே அவர்கள் வெளியேறச் சொன்னார்கள் என்பது இப்போதுதான் புரிகிறது. ஆனால் அவர்களோ வெளியாட்கள் முகாமில் இருந்தால் சிக்கல்கள் வரும் என்று மாற்றிச் சொன்னார்கள்.

இன்னமும் கொதிநிலை தணியவில்லை. பிலியவ் வெளியாளா? இது அவருடைய காடு. அவருடைய இடத்தில் நாம் இருக்கிறோம். இந்தச் செய்தியை ஏன் சண்டகானில் இருக்கும்போது என்னிடம் சொல்ல வில்லை? சொல்லியிருந்தால் அப்போதே சரியான பதிலைச் சொல்லி யிருப்பேன். ஆமாம், அதற்கு நீங்கள் என்ன பதில் சொன்னீர்கள்?

அவரைப் போகச் சொன்னால் முகாமில் உள்ள எல்லோரும் போய்விடுவார்கள் என்று சொன்னேன். குறிப்பாக நீ இங்கு இருக்கவே மாட்டாய் என்றும் சொன்னேன்.

இதைக் கேட்டதும் மனசு மகிழ்ச்சியாகிவிடுகிறது. அவரைப் பாராட்டுகிறேன். மிகச் சரியான பதிலைச் சொல்லியிருக்கிறீர்கள். இதைக் கேட்டு அவர்கள் என்ன சொன்னார்கள்?

திகைத்து விட்டார்கள். கொஞ்ச நேரத்துக்குக் குரலே இல்லை. பிறகு நானே சொன்னேன். அவரால் ஒரு சிக்கலுமில்லை. செலவும் இல்லை. கணக்குப் பார்த்தால் உணவுச் செலவை மிச்சப்படுத்தின வகையில் நிறுவனம்தான் அவருக்கு நிறைய கொடுக்க வேண்டி யிருக்கும் என்றேன். அதன்பிறகு இதுவரைக்கும் அவரைக் குறித்து எதுவும் கேட்பதில்லை.

ரொம்ப நன்றி. ஆனால் அலுவலகம் இப்படி வெளியே அனுப்பச் சொன்னது குறித்துப் பிலியவுக்கு எதுவும் தெரியாதல்லவா?

ஆங் மெதுவாகச் சொல்கிறார். தெரியாது. தெரிந்தால் அவர் இங்கிருக்கமாட்டார் என்பது எனக்குத் தெரியாதா? ஆனால் பிலியவ் மூன்று நாட்களாக இங்கில்லை. அம்மரம் வெட்டுப்படப் போவது தெரிந்துபோனவர் இதுவரை திரும்பவில்லை.

இச்செய்தி துணுக்குற வைக்கிறது. அவருடைய உடைமைகளை எடுத்துக்கொண்டு போய்விட்டாரா என்று பதற்றமாகக் கேட்கிறேன்.

இல்லை. அது இங்கேதான் இருக்கிறது என்று ஆங் சொன்னதும் மூச்சு நிம்மதியாக வருகிறது. அப்படியானால் அவர் திரும்பி வருவார். அப்படி வராவிட்டால் அவசியம் தேடிப்போய்ப் பார்ப்பேன்.

முதலில் பத்தாம் தொகுதிக்குச் செல்லவேண்டும். அம்மூதாய் மரம் அங்குதான் கட்டையாகக் கிடத்தப்பட்டிருக்கிறது. அதைப் பார்க்க மனசில்லை என்பதால் முதல்நாள் போகவில்லை. இரண்டாவது நாளும் அப்படியிருக்க முடியாது என்பது உறைக்கிறது. கட்டைகளின் தரம் சோதித்து அளவீடு சரி பார்த்தல்தானே என் பணி? எப்படித் தவிர்க்க முடியும்? அங்கு சென்றுதான் ஆகவேண்டும். கால்கள் பத்தாம் தொகுதியை நோக்கி நடக்க மனசுக்குள் வலி ஏறுகிறது. இவ்வளவு நாட்கள் கட்டைகளாகக் காட்சியளித்தவை இன்று மரப்பிணங் களாகத் தோன்றுகின்றன. தொலைவிலேயே அப்பெரிய கட்டைகள் தெளிவாகத் தெரிகின்றன. இரு கட்டைகள். இதுவே முன்னொரு சமயம் என்றால் அதன் மீப்பெரும் அளவைக் கண்டு திகைத்திருப்பேன். இப்போது ஏன் இத்துயர்?

அங்கு சென்று சேர்ந்ததும் ஆட்கள் பெரும் கட்டைகளின் முன்னர் சூழ்கின்றனர். அதன் குறுக்குவெட்டுப் பக்கத்தின் முன்னே நின்று அதன் உயரத்தை அளவிட்டுக் காட்டுவது போல நின்று காட்டு கிறார்கள். யார் நின்றுகாட்டினாலும் அவர்களைவிட அது உயர மாகவே இருக்கிறது.

எவ்வளவு சுற்று?

இருபத்தெட்டு துவான்.

இதற்கு முன்னர் கிடைத்த அந்த ஒபசுலுக் மரம்தான் இம்முகாமின் ஆகப்பெரிய பதிவு. இது அதை மிஞ்சிவிட்டிருப்பது ஒன்றும் பெருமையாக இல்லை. டிராக்டர் வரும் ஒலி. வேறொரு கட்டையை இழுத்துக்கொண்டு வருகிறார் குரு. பார்த்ததும் இறங்கி வந்தவர் அப்பெரிய கட்டைகளைச் சுட்டிச் சொல்கிறார். இக்கட்டைகளை இழுத்து வந்ததே பெரும் பாடாகிவிட்டது துவான்.

கேள்விப்பட்டேன். ஆங் சொன்னார்.

இரண்டு மரம் வெட்டுபவர்கள், மூன்று டிராக்டர்கள். வேலை செய்திருக்கிறோம். அதிலும் டிராக்டர் ஓட்டுநர்கள் பாடு பெரும் பாடாகிவிட்டது. நுனிக்கட்டையை இரண்டு டிராக்டர்கள் சேர்ந்து இழுத்து வந்துவிட்டோம். இந்த இரண்டாவது கட்டையை இரு டிராக்டர்களாலும் இழுக்க முடியவில்லை. மூன்றாவது டிராக்டர் தேவைப்பட்டது. ஆனால் மூன்றாவது உள்ள அடிக்கட்டையைக் கொஞ்சம்கூட அசைக்க முடியவில்லை.

மூன்றாவது கட்டையா? ஆமாம் துவான். இம்மரத்தை மொத்தம் மூன்று துண்டுகளாக வெட்டியிருக்கிறார்கள். சிலாங்கன் பத்து எடை அதிகம் என்பதால் மூன்று துண்டுகளாக வெட்டினார்கள். அதில் அந்த அடிமரக்கட்டை இன்னும் அங்கேயே கிடக்கிறது. மூன்று டிராக்டர் களும் சேர்ந்து என்னென்னவோ செய்து பார்த்தும் இழுத்தே வரமுடிய வில்லை என்ற குரு சற்றுத் தயங்கி பின்னர் சொல்கிறார். இப்படிச் சொல்வது தப்பு துவான். அது வரமாட்டேன் என்று சொல்வதுதான் பொருத்தமாக இருக்கும்.

என்ன சொல்கிறீர்கள் என்பதுபோல் அவரைப் பார்க்கிறேன்.

ஆமாம் துவான். அப்படித்தான் சொல்ல வேண்டும். பிலியவ் அதை வெட்ட வேண்டாம் என்று சொல்லியிருந்தாராம். அது சரிதான் என்று தோன்றுகிறது. என் நீண்டகாலப் பணிவாழ்வின் அடிப்படையில் சொல்கிறேன். எத்தனையோ கட்டைகளை அதுவும் ரணாவ், தெலுப்பிட் போன்ற உயரமான மலைப்பகுதிகளின் சரிவிலிருந்துகூட இழுத்து வந்திருக்கிறேன். ஆனால் எந்த மரமும் இப்படி வரமாட்டேன் என்பதுபோல அடம் பிடித்துக் கிடந்ததில்லை.

இன்னமும் அக்கட்டை அங்கேதான் கிடக்கிறதா?

ஆமாம் துவான். அங்கேதான் இருக்கிறது வருகிறீர்களா பார்ப்போம்.

மறுத்துத் தலையாட்டுகிறேன். முதலில் பிலியவ்வைப் போய் பார்க்கவேண்டும். பிலியவை எங்கே பார்க்க முடியும் என்ற கணிப்பு சரியாக இருக்கிறது. நுழைவுச் சாவடிக்கு அருகிலுள்ள பெரிய முகாம் சாலையில் உள்ள பழைய திடலுக்கு உள்ளே ஓர் ஒற்றையடித் தடம் நீளும். அவர் அதற்குள்ளிருந்து வருவதை அடிக்கடி பார்த்திருக்கிறேன். அங்கேயுள்ள ஓர் ஓடைக்கருகேதான் அவருடைய படகை நிறுத்தி யிருக்கக்கூடும். அத்திடலில் இறங்கி நடக்க அத்தடம் ஓடைக்கரைக்கு இழுத்துச் செல்கிறது. எதிர்பார்த்தது போலவே பிலியவ் அங்கிருந்தார். உச்சிநண்பகல் நேரத்தில் அப்போதுதான் சமைத்து முடித்திருந்தார். ஒரு பெரிய மரத்தின் இரு முட்டுவேர்களுக்கு இடையே மூன்று சிறு பாறைக்கற்களை அடுப்பாக மாற்றியிருக்கிறார். கங்குகள் இன்னும் அணையாமல் கிடக்கின்றன. ஒரு பானையில் வேகவைத்திருந்த அவித்த மீன்களைத் தின்றுகொண்டிருக்கிறார். வெறும் மீன் மட்டும் தான். சோறில்லை. பார்த்ததுமே வியப்பில் கண்களை விரித்தவர் பிறகுக் கேட்கிறார். சாப்பிடுகிறாயா?

என்ன சாப்பிடுவது? மீனுக்கு சோயாச் சாறுகூட இல்லை. உப்பு மட்டும் ஓர் ஓலைக்கூடையில் வைத்திருக்கிறார். இதுவும் யாரிடமாவது பண்டமாற்று முறையில் வாங்கியிருப்பார். திகைப்பாக இருக்கிறது. எந்தவொரு இடத்திலும் எவ்வகையிலும் இவரால் வாழ்ந்துவிட முடிகிறது. சமைக்க இந்த இரண்டொரு பாத்திரங்கள். அதையும் சிறு

மூட்டையாய்க் கட்டித் தன்னுடைய படகின் மூலையில் போட்டு விடுகிறார்.

பிலியவ் சற்று நகர்ந்து ஓலைப்பையிலிருந்து ரோத்தான் பழங்களை எடுத்துத் தருகிறார். பிரம்புக் கொடியின் அப்பழங்கள் கொத்தாக இருக்கின்றன. அக்கொத்திலிருந்த கபிலநிறக் கனிகளில் ஒன்றைப் பறிக்கிறேன். பாம்பின் செதிள்போலத் தோற்றமளிக்கும் தோலைத் தனியே உரித்தெடுத்துவிட்டு மங்கிய வெள்ளை நிறக்கனியைக் கடிக்கிறேன். கடிப்பதற்கு அவித்த பனங்கிழங்கைப் போல இருந்தாலும் கொஞ்சம் புளிப்பு கலந்த இனிப்புச் சுவை. சாப்பிட்டுக்கொண்டே கேட்கிறேன். பிலியவ், ஏன் முகாம் பக்கம் வரவில்லை?

அவர் பதில் ஏதும் சொல்லவில்லை. அவித்த மீனிலிருந்து ஒரு துண்டை எடுத்து வாயில் போட்டுக்கொண்டவரின் வாய் மட்டும் மெல்ல அசைகிறது. பார்வை ஓடைக்கரையோரமாய்க் கட்டப்பட்டு நீரில் மெல்ல அசைந்துகொண்டிருக்கும் படகைப் பார்த்துக் கொண்டிருக்கிறது.

அந்த சிலாங்கன் பத்து மரம் வெட்டப்பட்டுவிட்ட வருத்தம்தானோ பிலியவ்?

மெல்லத் திரும்பிப் பார்க்கிறார். வாயிலிருந்ததைத் தின்று முடித்தவுடன் குரல் வருகிறது. வருத்தப்பட்டு என்ன ஆகப்போகிறது? நானொன்றும் உங்கள் நிறுவனம் அதை வெட்டாமல் விட்டுவிடும் என்று எதிர்பார்த்தெல்லாம் அப்படிச் சொல்லவில்லை. அன்பில்தான் அதைச் சொன்னேன். எங்களுக்கு அன்பு செலுத்த மட்டுமே தெரியும். அதையும் ஒவ்வொரு உயிருக்கும் ஒவ்வொரு வகையாக வேறுபட்டுச் செலுத்தத் தெரியாது. இப்போது உன் மேல் வைத்திருக்கும் அன்பைத் தான் இதோ இம்மரத்தின் மீதும் வைத்திருக்கிறேன். எங்கள் முகாமுக்கு வந்துவிடுங்கள் என்று நீங்கள் இருவரும் அழைத்தபோது அந்த அன்புக்குக் கட்டுப்பட்டுத்தான் அங்கு வந்தேன். அதேபோல்தான் அம்மரமும் என்னை வெட்ட வேண்டாம் என்று அன்போடு சொன்னதையும் உங்களிடம் சொன்னேன்.

ஆனால் அலுவலகத்தில் எனக்கும் தெரியாமலேயே அதை வெட்டச் சொல்லிவிட்டார்கள் பிலியவ். இங்கு வந்த பிறகுதான் எனக்கே தெரியும்.

தெரிந்தாலும் உன்னால் தடுத்திருக்க முடியாதுதானே? குறைந்தது எதிர்ப்பைத் தெரிவித்திருப்பாய் அல்லது ஓமரைப்போல வேலையை விட்டுப் போயிருப்பாய்.

நீங்கள் சொல்வதை எல்லாம் அவர்கள் நம்ப மாட்டார்கள் பிலியவ்.

ஏன் நீயும்தான் நம்பவில்லை. என் மீது உனக்கு அன்பு உண்டு. அதை மறுக்கவில்லை. ஆனால் மரம் பேசுமா என்று உன் மனசுக்குள்

தோன்றும். இல்லையா?

அப்பட்டமான இக்கேள்விக்குப் பதில் கிடைக்காமல் திகைக்கிறேன். அவர் தொடர்கிறார். நாங்கள் பொய் சொல்ல மாட்டோம். சொல்லவும் தெரியாது. மரமெல்லாம் பேசுமா என்று கேட்டால் பேசும் என்பதுதான் எங்கள் பதில். நம்பு. அது பேசும். அதுமட்டுமா? ஊர்ந்து சென்றுகொண்டிருக்கும் இந்த எறும்பிலிருந்து கோகியூ வரை எல்லாம் பேசும். அப்படிப் பேசியதைத்தான் நான் உங்களிடம் சொன்னேன்.

பிலியவ், இதெல்லாம் என்னையும் மீறி நடக்கிறது என்பதைப் புரிந்து வைத்திருக்கிறீர்கள். அதற்கு நன்றி. நீங்கள் இருப்பதால்தான் மீண்டும் முகாமுக்கே திரும்பினேன். நீங்கள் எதையும் மனசில் வைத்துக் கொள்ளாமல் முகாமுக்கு வந்து தங்கவேண்டும்.

அவர் ஒன்றுமே சொல்லாமல் அருகிலிருந்த செடியின்மேல் ஊர்ந்துகொண்டிருக்கும் எறும்பையே பார்த்துக்கொண்டிருக்கிறார். பிறகு மெல்லச் சொல்கிறார். வருகிறேன். நானொன்றும் சினம் கொண்டு இங்கு வரவில்லை. உன்னிடம் இவ்வளவு சொல்லியும் என்னை வெட்டப் போகிறார்களே என்று அம்மரம் என்னைக் கேட்டால் என்ன பதில் சொல்வது என்றுதான் இங்குவந்தேன். இப்போது நீ போ. இரண்டொரு நாளில் அங்கு வருகிறேன்.

அச்சொற்களின் ஆறுதலில் எழுந்துகொள்கிறேன். நிம்மதியாய் இருந்தாலும் ஒரு கேள்வி இன்னமும் குடைந்துகொண்டிருக்கிறது. பிலியவ்,... கடைசியாக உங்களிடம் ஒன்று கேட்க வேண்டும். இம்மரம் வெட்டப்பட்டால் ஏதோ கேடு நிகழும் என்று சொன்னீர்களே, அது என்ன கேடு என்று சொல்ல முடியுமா?

தெரியாது.

சற்றுத் திகைப்போடு அவரைப் பார்க்கிறேன். அதைக் கவனித்ததும் மீண்டும் சொல்கிறார். அம்மரத்தின் கூற்றை அப்படியே உங்களிடம் சொன்னேன். அவ்வளவுதான். அது என்ன கேட்டை நிகழ்த்துமென எனக்கும் தெரியாது.

புர்கானின் அகாலச் சாவு நினைவுக்கு வருகிறது. அதைவிடப் பெரிய கேடாக ஏதும் நிகழுமோ?

நீயும் இதையெல்லாம் நம்பத் தொடங்கிவிட்டாயா? ஓர் உள்குரல். நம்பமுடியவில்லைதான். ஆனால் மனிதர் எவ்வளவு நம்பிக்கையோடு சொல்கிறார். மரம் பேசும். அதுமட்டுமா ஊர்ந்துகொண்டிருக்கும் இந்த எறும்பிலிருந்து கோகியூ வரை எல்லாமே பேசும். ஓமர் சொன்னதுதான் சரி. எல்லாவற்றுக்கும் தொல்குடி மனது வேண்டும்.

## 2

**கான யானை**

காட்டுச் செம்பகப் பூக்களின் மணம் கமழ்கிறது. எங்கிருந்து வருகிறது இம்மணம்? எழுந்து வெளியே வருகிறேன். விழியாடியில் பதியும் பிம்பம். யார் இவள்? ஏன் இங்கு வந்து அமர்ந்திருக்கிறாள்? இவள் மேனியிலிருந்தா பூமணம் புறப்பட்டது? ஆமாம். இவள் மேனி முழுமையும் பூக்களாலேயே சமைந்திருக்கிறதே? தந்தநிறச் சம்பகப் பூ மேனி கொண்டவளின் கூந்தல் விரிந்து தொங்குகிறது. சாறுண்ணிக் கொடிகள் அவள் கூந்தலாக இருக்கிறது. முகத்தைத் திருப்புகிறாள். கவின்மிகு கவர்ச்சி முகம். கண்டதும் அடையாளம் தெரிந்ததுபோல் முறுவலிக்கிறாள். ஆனால் இவளை அடையாளம் தெரியவில்லையே. யாரம்மா நீ? கான் மகளா?

சிரிக்கிறாள். இதழ்கள் பிரிந்தவுடன் அதிலொரு நீரூற்றுப் பொங்கத் தொடங்குகிறது. பொங்கிய ஊற்று பைய வழிந்தோடுகிறது. வழிந்த நீர் பாதங்களை நனைத்து சிற்றோடையாய் மாறி ஓடுகிறது. சிரிக்கச் சிரிக்க நீரின் பெருக்கம். ஓடையில் நீர் மட்ட உயர்வு. சிரிக்காதே... போதும். சிரிக்காதே...

சிரிப்பின் ஒலியலை கூடுகிறது. இப்போது அவள் கூந்தலாய் இருந்த கொடிகள் கழன்று விழுகின்றன. மேனியாக இருந்த பூக்களனைத்தும் உதிர்கின்றன. நீர் மடை உடைப்பெடுக்கிறது. மூழ்கத் தொடங்கு கிறேன். இதோ மூக்குவரை நீர் மட்டம் உயரப் போகிறது. மூழ்கு வதற்கு முன் இறுதியாக ஒருமுறை மீண்டும் காட்டுச் சம்பகப் பூக்களின் மணம் மூக்கை நிறைக்கிறது....

திடுக்கிட்டு எழுகிறேன். உடல் தொப்பலாய் நனைந்திருக்கிறது. இப்போதெல்லாம் முகாம் வீட்டுக்குள் அதிகமாகவே வியர்க்கிறது. சுற்றிலுமிருந்த மரங்கள் அழிக்கப்பட்ட பிறகு முன்பிருந்த குளுமை இப்போது இல்லை. தாகம் நாவை வறளச்செய்கிறது. வெளியே சென்றமர்ந்தால் தேவலாம். மணி தெரியவில்லை. வெளியே வந்தபோது இரவு விளக்கு மட்டும் எரிந்துகொண்டிருக்கிறது. நீர் அருந்திவிட்டு வீட்டைவிட்டு வெளியே வருகிறேன். அடர்த்தியான நிலவொளி. பழைய மரக்கட்டையில் அமர்கிறேன். புழுக்கம் குறையத் தொடங்குகிறது. ஏனோ சம்பகப் பூக்களின் மணம் இன்னும் வீசுவது போலவேயிருக்கிறது.

யார் அவள்? கனவில் இப்படி யாரும் இதுவரை வந்ததில்லையே? இன்று மட்டும் ஏன் வரவேண்டும்? வழக்கம்போலக் கட்டைகளைக் கனமீட்டரில் கணக்குப் போட்டுவிட்டு படுத்த இரவுதானே இந்த இரவும்? ஒருவேளை இவள்தான் பிலியவின் கொற்றவையா? இல்லை மனம் கற்பித்துக்கொள்ளும் வடிவமா? காடும், ஓடைகளும் அழிந்து கொண்டிருக்கும் இவ்விடத்தில் ஏன் இவள் புதிதாக ஓர் ஓடையை உண்டாக்கவேண்டும்? ஏன் அதில் வெள்ளத்தைப் பெருகச் செய்ய வேண்டும்? ஏன் அதில் மூழ்கச் செய்யவேண்டும்? ஏன் அவளும் உதிர்ந்து கரையவேண்டும்? சம்பகப் பூக்களின் மணம் எங்கும் நிறைய...

திடுமென ஓர் ஓசை கேட்கிறது. யானையின் பிளிறல். மிகத் தெளிவாகக் கேட்கிறது. மிக அருகில்தான் இருக்கவேண்டும். இங்கு வந்த நாளிலிருந்து இப்பகுதியில் இதைக் கேட்டதே இல்லை. முகாம் நடமாட்டம் குறைந்ததால் இப்பக்கம் வந்திருக்கிறது. பிலியவ் எதிரே தன் குடிலிலிருந்து வருகிறார். இவர் தூங்குவாரா இல்லையா?

அவை எங்கேயிருந்து கேட்கிறது என்று தெரிகிறதா? அந்த டுரியன் மரத்துக்கருகிலிருந்துதான் கேட்கிறது. அம்மரம் பழுத்திருக்கலாம். அதனால்தான் அங்கு வந்திருக்கிறது.

பிலியவ் கணிப்பது சரி. அத்திசையிலிருந்துதான் அப்பிளிறல் வருகிறது. இதுவரை இந்த யானைக் கூட்டத்தை இங்கு பார்த்ததில்லை. போய்ப் பார்க்கலாமா பிலியவ்?

சப்பாத்துக்களை மாட்டிக்கொண்டு நடக்கத் தொடங்குகிறேன். ஆனால் பிலியவோ இவ்விரவிலும் வெறும் கால்தான். முன்னே நடந்துகொண்டிருக்கிறார். நிலவொளிதான் வழிகாட்டி. ஓடைக் கரையிலேயே சிறிது தொலைவு நடந்த பின்னர் தென்கிழக்குத் திசைநோக்கி நகர்கிறார். எல்லா இடங்களிலும் டிராக்டர் தடம் இருப்பது செல்வதற்கு எளிதாக இருக்கிறது. பிலியவ் உயரமான மேட்டை நோக்கி நகர்ந்து ஏறுகிறார். அவரைப் பின்தொடர்ந்து ஏறி உச்சியை அடைகிறேன். இவர் பொருத்தமான இடத்தைத்தான் தெரிவு செய்திருக்கிறார். ஒளிந்து பார்க்கத் தோதாக ஒரு புதர். அங்கிருந்து ஒருபுறமாய்ச் சரிந்து முடியும் இடத்தில்தான் அக்காட்டு டுரியன் மரம் நிற்கிறது. மேலும் காற்று எதிர்த்திசையிலிருந்து வீசும் இடமாகத் தெரிவு செய்திருக்கிறார். மனித வாடை யானைகளுக்குப் போகாது.

இங்கிருந்து இருநூறு அடிக்குள் யானைக்கூட்டம் தெளிவாகத் தெரிகிறது. ஏழெட்டு யானைகள் இருக்கலாம். கிளைகளை மடக் மடக்கென்று ஒடித்துத் தின்றுகொண்டிருக்கின்றன. கான யானை கவளங் கொள்ளும் காட்சி.

முதிர்ந்த யானை ஒன்று பிளிறுகிறது. அப்பிளிறலைக் கேட்டவுடன் அக்கூட்டத்தில் இருந்து சற்று விலகி நின்றுகொண்டிருந்த யானை

நெருங்கிவந்து இணைகிறது. பிளிறிய யானை மீண்டும் உண்ணத் தொடங்குகிறது. ஓமர் சொன்னது போல் போர்னியோ யானைகள் கொஞ்சம் உயரம் குறைவு. நல்ல வட்ட முகம். ஆனால் அழகு முகம். அது எப்படி எல்லா யானைகளுக்கும் குட்டியானையின் முகம் போல முகங்கள் அமைந்திருக்கின்றன. இம்முகங்கள்தான் இந்த யானைகளை அமைதியான விலங்குகள் என்று நம்ப வைக்கின்றன. முகத்தோடு ஒப்பிடும் போது காதுகளின் அளவு பெரிது. தரையைத் தொடும் அளவுக்கு நீண்ட வால். நன்றாகத் தீனி கிடைப்பதனாலோ என்னவோ எல்லா யானைகளின் வயிறுகளும் பெருத்திருக்கின்றன. எல்லா யானைகளும் நரை நிறத்தில் தெரிவது நிலவு வெளிச்சத்தினாலா?

அவை மெதுவாக எதிர்த்திசை நோக்கி நகரத்தொடங்குகின்றன. ஒரு யானை வேகமாகப் பிளிறுகிறது. பிளிறியபின் அது மெல்ல முன்நோக்கி நகருகிறது. அதைப் பின்தொடர்ந்து பார்வையிலிருந்து மறைந்துகொண்டிருக்கின்றன உலகின் மிகச்சிறிய யானைகள் என விளிக்கப்பெறும் வேழக்கூட்டம்.

**விழ்ச்சியின் தொடக்கம்**

காலையிலிருந்து சங்கிலி வான்களின் இரைச்சல் கேட்டுக்கொண்டே இருக்கிறது. அலுவலகத்தில் அமர்ந்து எழுதவே முடியவில்லை. இதென்ன இத்தனை சங்கிலி வான்களின் ஒலி கேட்கிறது. நம்மிடம் இருப்பதே நான்குதான். இங்கு ஏழெட்டு கேட்பதுபோல் இருக்கிறது. காற்றும் திசை மாறி வீசவுமில்லை. மிதமாகத்தான் வீசுகிறது. வழக்கமாகக் கணிப்பது போல் ஒன்றையும் கணிக்க முடியவில்லை. இருமரம் வெட்டப்படுவதற்கு இடையே உள்ள வழக்கமான இடைவெளி இல்லை. ஏதோ குழப்பம். இதற்குமேல் எதுவும் எழுதவும் முடியாது. மூடி வைக்கிறேன். ரோஸ்லானை அழைத்து வண்டியைக் கிழக்கு நோக்கிவிடச் சொல்லுகிறேன்.

பத்தாம் தொகுதியின் இறுதியில் வண்டி நிற்கிறது. இந்த இடத்துக்கு மேல் இனிதான் சாலையே போடவேண்டும். இவ்விடத்தி லிருந்து எங்களுக்குரிய நிலம் தென்கிழக்காகத் திரும்பும். அதில்தான் பதினொன்று, பன்னிரண்டு, பதின்மூன்றாம் தொகுதிகள் இருக் கின்றன. அங்கிருந்துதான் சங்கிலிவான்களின் ஒலி கேட்கிறது. இங்கு இன்னும் நுழையவேயில்லை. பத்தாம் தொகுதியைத் தாண்ட அனுமதி வழங்கப்படவில்லை. அப்படியானால் இந்தச் சங்கிலி வான்களின் ஒலி?

பக்கத்திலேயே இன்னொரு முகாமின் நிலம் இருக்கிறதாம் துவான். அவர்கள்தான் வெட்டிக்கொண்டிருக்கிறார்கள்.

யார் உனக்கு இதைச் சொன்னது ரோஸ்லான்? அது நம்முடைய இடத்தில் கேட்பது போல் இருக்கிறது.

நம்முடைய விபராத்தோதான் சொன்னார் துவான்.

விபராத்தோவா? வாய்ப்பே இல்லை. இது நம்முடைய இடத்தில் தான் கேட்கிறது. ஆங் இங்கு வந்து பார்த்தாரா?

அவர் எந்தக் காலத்தில் வந்து பார்த்தார்? விபராத்தோ சொன்ன தற்குத் தலையாட்டிக்கொண்டார் அவ்வளவுதான் என்று ரோஸ்லான் சொன்னதும் அய்யம் அதிகரிக்கிறது. ஏதோ தப்பாக இருக்கிறது ரோஸ்லான். உள்ளே போய்ப் பார்த்துவிட்டு வருவோம் என்று உள்ளே நுழைகிறோம். சங்கிலிவாளின் ஓசை அண்மையில் கேட்கிறது. அவர்கள் வெட்டிய மரத்தைத் துண்டு போட்டுக்கொண்டிருக்க வேண்டும். ஏனென்றால் டிராக்டர் இயங்கும் ஒலியும் அருகிலேயே கேட்கிறது.

அந்த இடத்தை அடைந்ததும் திகைத்து விடுகிறேன். எல்லோருமே புதிய ஆட்கள். எங்களைப் பார்த்ததும் அவர்களுக்கும் திகைப்பு. அவ்விடத்திலிருந்து கண்ணுக்கெட்டியவரை மரங்கள் வெட்டி வீழ்த்தப் பட்டு அப்புறப்படுத்தப்பட்டும் இருக்கின்றன. எங்களின் பன்னிரண்டு பதின்மூன்றாம் தொகுதிகள் முழுக்கவும் காலி. இப்போது பதினொன்றில் வேலை நடக்கிறது. கையை உயர்த்தி வேலையை நிறுத்தச் சொல் கிறேன். சங்கிலி வாளின் உறுமலும் டிராக்டரின் முனகலும் நிற்கின்றன. ஆனாலும் சற்றுத் தள்ளி வேறு வாட்களின் ஒலி கேட்டுக்கொண்டு தான் இருக்கிறது.

யார் நீங்கள்? இங்கு என்ன செய்துகொண்டு இருக்கிறீர்கள்?

அவர்கள் என்ன பதில் சொல்வது என்பதுபோல் விழித்து ஒருவரை யொருவர் பார்த்துக்கொள்கின்றனர். அவர்களுக்குப் புரியும்படி சொல்கிறேன். இது எங்களுக்குரிய நிலப்பகுதி. இங்கு வந்து எப்படி மரம் வெட்டுகிறீர்கள்? யார் நீங்கள்? எந்த நிறுவனம்?

அந்த டிராக்டர் ஓட்டுநர் முதலில் சுதாரித்துக்கொள்கிறார். இறங்கி வந்தவர் தன் நிறுவனத்தின் பெயரைச் சொல்லிவிட்டு, இது எங்கள் நிறுவனத்துக்குரிய இடம் என்கிறார். அதற்கு வாய்ப்பேயில்லை. எங்களிடம் ஆவணம் இருக்கிறது என்கிறேன். இதற்கு அந்த ஓட்டுநர், நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை. எங்கள் மேலாளரை அழைத்து வரச் சொல்லுகிறேன். நீங்கள் அவரிடம் பேசினால்தான் சரியாக இருக்கும் என நம்புகிறேன் என்று சொல்லிவிட்டு கொக்கியாளை அனுப்பி வைக்கிறார். இதோ பக்கத்துப் பங்குங்கில்தான் இருக்கிறார் உடனே வந்துவிடுவார்.

பத்து நிமிடத்தில் ஒல்லியான சீனர் வந்து இதமாய்ப் புன்னகைத்துக் கைகுலுக்குகிறார். என்ன சிக்கல்?

எடுத்துச் சொல்கிறேன். அமைதியாகக் கேட்டுக்கொண்ட அவர், இதில் ஏதோ குழப்பம் இருக்கிறது. இது எங்களுக்குரிய இடம் என்பதற்கான ஆவணம் எங்களிடமும் இருக்கிறது என்று அவர்

சொன்னதும் சட்டென்று எங்கள் பகுதிக்குரிய எல்லைக்கோடு நினைவுக்கு வந்ததால் அவரைக் கூட்டிக்கொண்டு அதைக் காட்டு கிறேன். சிவப்புச் சாயமிடப்பட்டிருந்த அத்தொகுதி எல்லையைக் காட்டி வெற்றி பெற்றதுபோல் சொல்லுகிறேன். இதோ எங்கள் தொகுதிக்கான அடையாளம்.

ஆனால் அவர் அசருவதாகத் தெரியவில்லை. இங்கே வாருங்கள் என்று கூறி அங்கிருந்து சற்றுத்தள்ளி அழைத்துச் செல்கிறார். இதோ எங்கள் தொகுதிக்கான எல்லை. அங்கே நீல நிறச்சாயம் இடப்பட்டிருக்கிறது.

மெய்யாகவே குழம்புகிறது. அந்தச் சீனர் சிரித்துக்கொண்டே கேட்கிறார். உங்கள் நிலவரைபடம் இருக்கிறதா? எப்போதுமே அதன் பிரதியை இடுப்புப்பையில் வைத்திருப்பேன். அதை எடுத்துப் பிரிக் கிறேன். அவரும் தன்னுடையதை எடுத்துப் பிரிக்கிறார். அதையொரு கட்டையின்மீது வைத்து அருகருகே விரித்துப் பார்க்கிறோம். எங்கள் நிலத்தின் தலைப்பகுதிக்கு மேலே அவர்களுக்கு நிலம் வழங்கப் பட்டிருக்கிறது. அவர்கள் வேறு பக்கமிருந்துதான் இங்கு இறங்கி வரவேண்டும். ஆனால் சிக்கல் எதில் இருந்ததென்றால் எங்களுக்கான கடைசி மூன்று தொகுதிகள் எங்கள் நிலவரைபடத்தில் இருந்தது போலவே அவர்களுடைய நிலவரைபடத்திலும் இருந்ததுதான். அந்த நிலப்பகுதி இருவருக்குமே வழங்கப்பட்டிருந்தது. இது எப்படி இயலும்? ஏதோ பெரிய தவறு நிகழ்ந்திருக்க வேண்டும். இல்லையெனில் சூழ்ச்சி நடந்திருக்க வேண்டும். அல்லது நடந்துவிட்டது.

இந்தச் சிக்கலைத் தீர்ப்பது நம் இருவர் கையிலும் இல்லை என்று அந்தச் சீனர் சொன்னதும் உண்மை என ஒத்துக்கொள் கிறேன். இச்செய்தியை எங்கள் அலுவலகத்துக்குக் கொண்டு செல்லப் போகிறேன் என்கிறேன். அதற்கு அச்சீனர், நானும் சொல்ல வேண்டும். உடனே சண்டகான் புறப்படுகிறேன். நீங்களும் என்னோடு வரலாம். எங்கள் வண்டியிலேயே போய் விடலாம் என்கிறார்.

வருகிறேன். ஆனால் முடிவு தெரியும் வரை இங்கு வேலையை நிறுத்தி வைக்க வேண்டும் என்றதும் அவர் ஒத்துக்கொள்கிறார்.

முகாமுக்குத் திரும்புகிறோம். எல்லாமே குழப்பமாக இருக்கிறது. ஆங் அங்கு இல்லை. யாரிடமும் செய்தியைச் சொல்லிவிட வேண்டாம் என்று ரோஸ்லானிடம் சொல்லிவிட்டுப் புறப்படுகிறேன். ஆனால் ஒன்று மட்டும் உறுதியாய் தெரிகிறது. இது வீழ்ச்சியின் தொடக்கம்.

**சில நாட்குறிப்புகள்**

- சிக்கல் அந்நிலவரைபடத்தை அச்சாக வைத்து உருவாக்கப்பட்டிருக் கிறது. குறிப்பிட்ட பகுதியை எப்படி கான் துறை இருவருக்குமே முத்திரையை இட்டு அனுமதி தந்திருக்க முடியும்? இதில் ஏதாவது

ஒன்றுதானே உண்மையானதாக இருக்க முடியும்? ஆனால் உறுதியாய்
அது எங்களுக்குரிய பகுதி என்பதில் நம்பிக்கையிருக்கிறது. அவர்கள்
தங்களுக்குரிய நிலப்பகுதியில் மரங்களை வெட்டாமல் ஆகக்
கடைசியில் உள்ள இந்நிலத்துக்கு ஏன் வர வேண்டும்? இதுதான்
அய்யத்துக்கான வித்தாக இருக்கிறது.

கண்களுக்கு முன்னால் ஒரு கட்டு பணம் வைக்கப்படுகிறது.
இது உன் அய்ந்து வருடச் சம்பளம். இன்னொரு பாதி பின்னர்
தரப்படும். இன்னும் இரு நாட்கள் மட்டும் பொறுத்திரு. பின்னர்
உங்கள் அலுவகத்தில் சொன்னால் போதும். அதற்குள் எங்கள்
வேலை முடிந்து விடும். மீதிப்பணமும் உன் கைக்கு வந்து விடும்.
சண்டகானுக்கு அவர்கள் வண்டியில் புறப்பட்டிருந்தவனை
நேராக எங்கள் அலுவலகத்துக்குச் செல்ல விடவில்லை. அவர்கள்
அலுவலகத்துக்கு அழைத்துச் சென்று விடுகிறார்கள். அன்பாகக்
கடத்தப்பட்டிருந்தேன். மன்னிக்கவும். இந்தப் பணம் எனக்கு
வேண்டாம் என்கிறேன். தாளின் மேல் வைக்கப்படும் கண்ணாடிக்
குண்டை உருட்டியவாறே அந்நிறுவன இயக்குநர் கேட்கிறார். ஏன்?
எதையாவது சொல்லி சமாளிக்க வேண்டும். சட்டென்று சொல்
கிறேன். இதை நான் சொல்லாவிட்டாலும் வேறு யாராவது எங்கள்
அலுவலகத்துக்குச் சொல்லி விடுவார்கள். வேறு யார் சொல்லு
வார்கள் என்று நினைக்கிறாய் எனக் கேட்கிறார். யாரைச் சொல்லித்
தப்பிக்கலாம்? ஆங்? அவர் எங்கே சொல்லப்போகிறார்? ஒரு திடீர்
யோசனை. எங்கள் ரேஞ்சர் விபராத்தோ சொல்லி விடுவார்.
மெல்ல சிரித்துக்கொண்டே அருகில் நிற்பவரிடம் கண்களால் ஏதோ
சைகை காட்டுகிறார். ஒரே நிமிடத்தில் வேறு ஒரு அறையிலிருந்து
உள்ளே நுழைகிறார் விபராத்தோ. செலமத் பெத்தாங். கோப்பையை
உறிஞ்சிக்கொண்டே தன் மாலை வணக்கத்தைச் சொல்லுகிறார்.
அறையெங்கும் காப்பியின் நறுமணம்.

விபராத்தோவைத் தவிர அந்நிலத்தின் முழுப்பரப்பும் தெரிந்தவர்கள்
நாங்கள் இருவர்தான். இதில் ஓமர் விலகி விட்டார். அவரைத் தேடச்
சண்டகானுக்கு வெளியேறி வந்திருந்ததால் இருவருமே அங்கு
இல்லாத நேரத்தில் திட்டமிட்டு நடத்தியிருக்கிறார்கள். விபராத்தோ
மிகக் கச்சிதமாக உதவி செய்திருக்கிறார். இது மோசடிதான்.
ஆனால் இவர்களை நேரடியாகப் பகைத்துக் கொள்ள முடியாது.
பெரிய இடம். எது வேண்டுமானாலும் செய்வார்கள். எனக்கு
யோசிக்க நேரம் கொடுங்கள் என்கிறேன். அவர் புன்னகையோடு
சொல்கிறார். நன்றாக யோசி. பணம் உனக்காகக் காத்திருக்கிறது.
நேரே உன் வீட்டுக்குப் போய் யோசி. அலுவலகம் போக முயல
வேண்டாம். அங்கு சென்றால் யோசிக்க முடியாது. எவ்வளவு
அன்பான மிரட்டல்.

- எழுதாமல் கிடந்த நாட்குறிப்பை எடுக்கிறேன். அவர்கள் சொன்னபடி அலுவலகத்துக்குப் போக முடியாது. போனில்கூட சொல்லிவிட முடியும் என்று அவர்களுக்குத் தெரியாதா? அச்சத்தை ஏற்படுத்த இது ஒரு வழிமுறை. இரவோடு இரவாக தமான் செந்தோசா வந்து முழு விபரத்தையும் சொல்லிவிடுகிறேன். குணா, குவான் இருவருமே இங்குதான் வசிக்கிறார்கள். குணா என் பாதுகாப்புக் கருதி தன் வீட்டிலேயே தங்கச்சொல்லி விடுகிறார். எதற்கும் இருக்கட்டும் என்றுதான் இந்த நாட்குறிப்பிலும் இப்பதிவு.
- அந்நிறுவனம் ஆளும் கட்சிக்கு நெருக்கமான அரசியல் செல்வாக்குள்ள நிறுவனம். அதனால்தான் இவ்வளவு துணிச்சலாக அவர்களால் இதைச் செய்ய முடிந்திருக்கிறது. தலைமை அலுவலகம்வரை நிலவரைபடத்தை மாற்றி எல்லாக் கோப்புகளையும் முன்தேதியிட்டுத் திருத்தி புதிதாகக் கையெழுத்தும் வாங்கி மாற்றி வைத்துவிட்டார்கள். கடைசியில் ஓர் இடத்தில் கோட்டை விட்டிருந்தார்கள். லுங் மானிசில் உள்ள கான் துறை அலுவலகத்தில் எதையும் மாற்றவில்லை. கடைநிலை அலுவலகம் என்ற அலட்சியம் காரணமாக இருக்கலாம். ஆனால் அதுதான் எங்கள் நிறுவனத்துக்கு முதன்மை ஆதாரமாக மாறுகிறது.
- குவானுக்கு மனநிறைவு. விலை போகாமல் இருந்ததற்காகப் பாராட்டுகிறார். ஆனால் ஆங் மேல் கடுமையான ஆத்திரம். பொறுப்பு இல்லாமல் இருந்ததாக அவரை அழைத்து வசைபாட அவர் கொஞ்சமும் பதற்றமில்லாமல் நீங்களாச்சு உங்கள் வேலையாச்சு என விலகி வெளியேறி விடுகிறார். அவரை என்ன செய்வது என்று குவானுக்கும் தெரியவில்லை. ஆனால் இனி அலங்கார மீன் விற்பனைக்கு எந்தத் தடையுமில்லை என அவருக்குத் தெரியும்.
- சிக்கல் பெரிதானவுடன் எங்கள் நிறுவனத்தால் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுக்கப்படுகிறது. ஏற்றுமதிக்காகக் காத்திருந்த அந்தக் கட்டைகள் இடைக்காலத் தடையால் முடக்கப்பட்டிருப்பது நிறுவனத்துக்கு நம்பிக்கையை ஏற்படுத்துகிறது.
- பெரும் கூட்டத்தால் முகாம் நிரம்பிவிடுகிறது. குவான், குணா, கான் துறை அலுவலர்கள், எதிர்த்தரப்பு நிறுவனத்தினர் என எல்லோரும் மூன்று வண்டிகளில் வந்து குவிந்திருக்கின்றனர். இரு தரப்புக்குரிய எல்லாச் சொல்லாடல்களும் கான்துறை அலுவலகத்திலேயே முடிந்திருந்தன. ஆனாலும் வந்திருக்கும் அந்நிறுவனத்தினர் காணும்போதெல்லாம் முறைத்தபடியே இருக்கின்றனர். குணா ஒரு புதிய கதையை முன்பு உருவாக்கியிருந்தார். அதன்படி அவர் முகாமுக்கு எதேச்சையாகச் சென்றிருந்தபோது இந்தச் செய்தி கிடைத்ததாக உருவாக்கப்பட்டிருந்த கதையை அவர்கள் நம்பவில்லை என்பதையே இம்முறைப்பு சொல்கிறது. ஆனாலும் சிக்கல்

வேறு வடிவத்துக்குத் திரும்பி விட்டிருப்பதால் இனி அவர்களுக்கு நான் ஒரு பொருட்டாக இருக்கமாட்டேன் என நம்பலாம். நம்பலாமா?

- குணா கமுக்கமாகக் கேட்கிறார். குவானுக்குத் தெரிய வேண்டாம். அவருக்கு இதில் நம்பிக்கை இல்லை. இங்கு தொல்குடிப் பெரியவர் இருக்கிறாராமே. எனக்கு என்னவோ அவர் சொன்னது போல் சிவாங்கன் பத்து மரத்தை வெட்டியதால்தான் இந்தச் சிக்கலே என்று தோன்றுகிறது. அவரைப் பார்க்க முடியுமா என்று கேட்கிறார். எந்த உணர்ச்சியையும் வெளிக்காட்டிக்கொள்ளாமல் ஏன் என்கிறேன். தப்பு செய்துவிட்டோம். இதற்கு ஏதும் சாங்கியம் உண்டா என அவரிடமே கேட்கலாமில்லையா? வெடுக்கென்று பதில் சொல்லுகிறேன். அவர் ஒன்றும் மந்திரவாதி இல்லை. குணா அமைதியாகி விடுகிறார். அதற்குப் பிறகு எதுவும் கேட்கவில்லை.

- வழக்கு நீதிமன்றத்தில் இருப்பதால் இன்னும் சில நாட்கள் ஆகலாம் என்கிறார்கள். ஆனால் ஒப்பந்தக்காரர்கள் பொறுத்திருக்க விரும்பவில்லை. அவர்களைப் பொறுத்தவரை ஒவ்வொரு நாளும் வேலை இருந்தால்தான் பணம். அதுவும் பருவநிலை வாய்ப்பாக இருக்கும் இக்காலத்தைப் பயன்படுத்திக்கொண்டால்தான் உண்டு. மழைக் காலம் தொடங்கிவிட்டால் சிரமம். அவர்களுக்கு இந்த முகாமில் பெருத்த நம்பிக்கை அளித்துக்கொண்டிருந்தது அம்மூன்று தொகுதியிலும் இருந்த பெருமளவிலான மரங்கள்தாம். அவையே போன பிறகு என்ன செய்வது? நிறுவனம் வேறு அவர்களுக்கு நிறைய பாக்கி வைத்திருக்கிறது. இப்போது எப்படிக் கணக்கைத் தீர்க்கப் போகிறார்கள் என்ற அச்சம் வந்துவிடுகிறது. ஒப்பந்தத் தொழிலாளர்கள் அனைவரும் குடும்பத்தோடும் தங்களுடைய கருவிகள், டிராக்டர்கள், சுமையுந்துகள், வண்டிகளோடும் புறப்பட்டுப் போவதை வெறுமனே வேடிக்கை பார்க்கத்தான் முடிகிறது.

- அலுவலகத்தில் இருநாட்களாகத் தொடர்புகொள்ள முடியவில்லை. யாரும் தொலைபேசியை எடுக்கவில்லை. என்ன ஆயிற்று? அலுவலகத் தோழி ரோஸ்நீனா அங்கிருந்து பேசியில் அழைத்தபோதுதான் செய்தி கிடைக்கிறது. அலுவலகத்தில் ஒப்பந்தக்காரர்கள் தொழிலாளர்களோடு வந்து பெரும் சண்டை போட்டார்களாம். குவான் அலுவலகமே வராமல் எங்கோ பதுங்கிக் கொண்டிருக்கிறார். குணா விடுமுறை எடுத்துக்கொண்டு வருவதில்லை. அலுவலகத்தில் வெறும் பெண் தொழிலாளர்கள் மட்டும் இருக்கிறோம். அதனால் அவர்கள் எங்களை ஒன்றும் செய்யவில்லை.

- இப்போது அலுவலகம் இருக்கும் நிலையில் ரோஸ்நீனாவிடமே அடிக்கடி பேசியில் அழைப்பதற்கு என்னவோ போல் இருப்பதால்

அங்குள்ள நிலவரத்தைச் சொல்லச் சொல்லியிருக்கிறேன். இது இன்று வந்த செய்தி. குவானின் நண்பரான பார்க் என்ற மரவணிகர் உதவிக்கு வந்திருக்கிறார். அந்த மலைப்பாம்பு மனிதர்தான். அவர் தன் கையிலிருந்து குறிப்பிட்ட தொகையைப் பட்டுவாடா செய்து விட்டு மீதித் தொகைக்கும் தாமே பொறுப்பு ஏற்பதாக வாக்குறுதி தந்ததும் சிக்கல் தற்காலிகமாகத் தீர்ந்திருக்கிறது. கைப்பற்றப்பட்ட கட்டைகள் ஏற்றுமதியானதும் மீதித்தொகையைக் கொடுப்பதாக ஏற்பாடு. ஆனால் இந்த ஏற்பாட்டுக்குக் குவான் வேறு வகையில் ஒப்புக்கொள்ள வேண்டியதாகிவிட்டது. நிறுவனத்தின் பணப் பட்டுவாடா அனைத்தையும் அந்தக் கொரிய நண்பருக்கு சட்ட பூர்வமாக மாற்றி எழுதிக்கொடுத்து விட்டாராம். இந்நிம்மதியில் இப்போது குவான் அலுவலகத்துக்கு வரத் தொடங்கியிருக்கிறார்.

- இன்று ஒரு நல்ல செய்தி. எதிர் நிறுவனம் ஓர் அமைதி உடன் படிக்கைக்கு வந்திருக்கிறதாம். (அப்பாடா, ஓர் அச்சம் தீர்ந்தது.) வழக்கு நீதிமன்றத்தில் நடக்கத் தொடங்கினால் கான் துறை அலுவலர்களுக்கு சிக்கல். எனவே அவர்களே இருதரப்புக்கும் இடையே ஒப்புதல் ஏற்பட முயற்சி செய்து வருகிறார்கள். ஒத்துப் போகும் முடிவில்தான் அலுவலகமும் இருக்கிறது. வாங்கின கடன் களுக்கு வட்டி வேறு ஏறிக்கொண்டிருக்கிறது.
- நடப்புச் சிக்கல் சுமுகமாக முடிந்தாலும் பணம் போதாதாம். மீதி உள்ள எல்லா சிறு மரங்களையும் வெட்டி உள்ளூர் மர ஆலைகளுக்கு விற்கப் போகிறார்கள். இதற்கு எப்படி அனுமதி வாங்கினார்கள்? அப்படி வெட்ட முடியுமா? ஒருவேளை இதற்கு இந்தச் சிக்கலில் இணைந்து மாட்டியுள்ள கான் துறையினரின் இரக்கம் வேலை செய்கிறதா? ஒன்றும் புரியவில்லை.

**நாளை என்பது உண்டா?**

கெல்மாரின்...
கவ் மாசி பெர் சமாக்கு...
பெர்ச்சும்பு டன் மெராயு...
அடாகா ஹரி ஏசோக்...
உந்துக் கித்தா பெர்ஜும்பா...
செப்பெர்த்தி
யங் தெலா கித்தா லேவாத்தி...

இப்பிற்பகலில் இந்தோனேசியப் பாடகரின் குரல் காதலின் பிரிவை உருக்கி ஊற்றிக்கொண்டிருக்கிறது. அவரோடு இணைந்து பாடிக் கொண்டே அறைவாசல் முன்பாகப் படுத்திருக்கும் அன்னா தலைமாட்டி லேயே வானொலி இருக்கிறது. மேசையில் தலையைக் கவிழ்த்தவாறு

இருக்கும் ரோஸ்லானின் விரல்கள் தானாகத் தாளமிட்டுக் கொண்டிருக்கின்றன. வீட்டின் நாங்கு கால்களுக்கு அடியில் தொங்கும் கயிற்று ஊஞ்சலில் படுத்துக்கொண்டிருக்கிறேன். கைகளில் புத்தகம் இருந்தாலும் பாடலால் ஈர்க்கப்படுவதைத் தவிர்க்க முடியவில்லை.

இப்பாடலை எத்தனை முறை கேட்டாலும் ஏன் சலிப்பே ஏற்படுவதில்லை? பாடகரின் உருகும் குரலா? இல்லை வரிகளில் வழிந்தோடும் காதலா? அந்த ஒற்றைக் குரலோடு வெறும் ஒற்றைக் கிடார் சுண்டித் தெறிக்க வைக்கும் நினைவின் நரம்பா? அந்நரம்பைச் சுண்ட உள்ளிருந்து உடைந்து பெருகும் ஒவ்வொரு மனசிலும் ஒளிந்திருக்கும் காதலின் ஊற்றா? எல்லாம். எல்லாமேதான் ரலா...

இப்பாடலில் இருக்கும் இரு வரிகளைக் கேட்டாயா? நாம் இருவரும் சந்திக்க நாளை என்பது உண்டா?... உண்டுதான். ஆனால் அது கண்களால் காணும் நாளையாக இருக்காது. மனசால் பார்க்கும் நாளை. அதற்கு எதற்கு நாளை என்கிறாயா? இன்றே போதும். எதுவும் தடை இல்லை. மொழிகூடத் தடையில்லை. உன் மொழி வேறு. என் மொழி வேறு. இப்பாடகரின் மொழி வேறு. மும்மொழியும் இணைந்து ஒரே வளையமாக உருமாறும் விந்தை. வளையம் மீண்டும் மூன்று துண்டாகிறது. வேறொரு பாடல் தொடங்குகிறது. நிகழ்வுலகுக்கு வருகிறேன்.

இரு கண்களும் எங்கோ நிலைகுத்தி இருக்கின்றன அன்னாவுக்கு. ரோஸ்லானின் விரல்கள் தாளமிடுவதை நிறுத்தியிருக்கிறது. இதுவரை வேறு ஓர் உலகத்தில் வாழ்ந்துகொண்டிருந்தவர்கள் இப்போது இவ்வுலகுக்குத் திரும்பி வந்திருக்கிறார்கள். எப்படியிருந்த முகாம் இது? களையே இல்லை.

ட்ட்டூட்...ட்ட்டூட்... ட்ட்டூட்...ட்ட்டூட்...

அட்டுர்பேசி அழைக்கிறது. வெகு நாட்களுக்குப் பிறகு அலுவலகத்திலிருந்து அதிகாரபூர்வமான அழைப்பு. நேற்று ஆங் சொன்ன செய்தியை மறுமுறை சொல்கிறது. பக்கத்து முகாமுக்கு குத்தகைக்குக் கொடுத்திருப்பதாகவும் அவர்கள் நாளை நேரில் வந்து செய்தியை விவரமாகச் சொல்வார்கள் என்றும் சொல்லிவிட்டு ரோஸ்லானை வைத்துக்கொண்டு மற்றவர்களைச் சண்டகான் அனுப்பிவிடச் சொல்கிறார்கள்.

ஏன் என்ற கேள்விக்கு, முழுப் பொறுப்பும் அவர்கள் வசம் கொடுத்துவிட்டதாகவும் இனி உனக்கும்கூட பட்டியல் தயாரிக்கும் வேலை கிடையாது என்றும் பதில் கிடைக்கிறது. பின் ஏன் இங்கு தங்க வேண்டும்? அதே வழமையான பதில் - நிறுவனத்தின் பிரதிநிதி. விளக்கெண்ணெய். பத்து நாள் மட்டும்தான் வேலை. அப்பத்து நாளுக்குள் எவ்வளவு முடிகிறதோ அவ்வளவு மரங்களை வெட்டுவார்கள். அதற்குமேல் ஒரு நாளும் தங்க மாட்டார்கள். தங்கவும் முடியாதாம். இந்தக் குறுகிய காலம் என்பது ஏதோ மறைமுகத் திட்டம்

இருப்பதை உணர்த்துகிறது. ஆனால் இதில் ஒரு பொறுப்பும் இல்லை என்பது நிம்மதி.

ஆனால் அன்னாவுக்கு நிம்மதியாக இல்லை. போனால் எல்லோரும் சேர்ந்து போகவேண்டும் என்கிறாள். ஆனால் மற்ற மூவரும் உடனடியாகப் பெட்டிப் படுக்கைகளைக் கட்டத் தொடங்கிவிடுகின்றனர். செய்தி கேள்விப்பட்டு பிலியவ் வருகிறார். நானும் முகாமை விட்டு வெளியேறுகிறேன் என்றதும் அதிர்ச்சியாகிறது. பிலியவ், இது நிறுவன ஊழியர்களுக்குத்தான். உங்களுக்கல்ல. தவிர நீங்களும் இருப்பீர்கள் என்ற நம்பிக்கையில்தான் இங்கிருக்கப் போகிறேன்.

பிலியவ் மிருதுவாக சிரிக்கிறார். நிறுவனமே இனி உங்களுடையது இல்லை என்கிறபோது நான் மட்டும் இங்கே தங்குவது நல்லதா?

பதிலற்று அமைதியாக இருப்பதைப் பார்த்து அவரே தொடர்கிறார். நான் இந்த முகாமைத்தான் விட்டுப்போகிறேன். காட்டை விட்டு அல்ல. என்னைச் சந்திக்க வேண்டுமானால் நுழைவுச் சாவடியில் ஒவ்வொரு மாலையும் காத்திருப்பேன். அங்கு சந்திக்கலாம்.

வேறு எங்கும் போய்விட மாட்டீர்களே பிலியவ்?

நெருங்கி வந்தவர் தோளைப் பற்றுகிறார். உனக்கு உறுதி கூறுகிறேன். நீ இக்காட்டில் இருக்கும்வரை நான் வேறெங்கும் போகமாட்டேன் போதுமா?

மறுநாள் காலையிலேயே அவருடைய ஒரே சுமையான அவரே பின்னியிருந்த புத்தம் புதிய பிரம்புக்கூடையை முதுகில் மாட்டிக் கொண்டு புறப்பட்டு விடுகிறார். கையில் சும்பித்தாளை ஏந்திக் கொண்டு அவர் நடந்து சாலையில் மறைந்து கொண்டிருப்பதை வெகுநேரம் பார்த்துக்கொண்டிருந்தோம்.

என்ன நடக்கப் போகிறது இங்கே?

# 3

*புதிய காதலி*
செய்தியைக் கேள்விப்பட்டிருப்பீர்கள் என்று நினைக்கிறேன் என்றவாறே நில்ஸான் சஃபாரி வண்டியிலிருந்து சிரித்துக்கொண்டே இறங்குகிறார் வியோங். வரவேற்றுத் தேநீர் அளிக்கிறோம். வியோங்கிடம் கேட்கிறேன். உங்கள் திட்டம் என்ன?

மொத்தம் எட்டு டிராக்டர்கள் இறங்குகின்றன. பத்து மரம் வெட்டுபவர்கள். பத்து லோரிகள். மொத்தம் பத்தே நாள். முழுவதையும் முடித்துவிட்டு வெளியேறிவிட வேண்டும்.

இவ்வளவும் இறங்கினால் ஒரு வாரத்துக்குக்கூட வேலை இருக்காதே.

இன்னமும் நல்லது. அதனால்தான் எங்களுடைய முழு வலுவையும் இறக்குகிறோம். எல்லாம் முடிகிறதோ இல்லையோ பத்து நாளுக்குள் முடித்துவிட்டு வெளியேறிவிட வேண்டும். புரியும் என்று நினைக்கிறேன்.

ஏதோ கட்டாயம் இருப்பது புரிகிறது. நல்ல கட்டாயம். நாமும் சீக்கிரம் வெளியேறி விடலாம். வியோங் தொடர்ந்து வேண்டுகோளை முன்வைக்கிறார். உங்களையும் ஓட்டுநரையும் தவிர மற்றவர்கள் வெளியேறிவிடப் போவதாகச் சொன்னார்கள். ஆனால் எனக்கு உங்களிடமிருந்து இன்னொரு உதவி வேண்டும் என்றவர் நேரடியாக அன்னாவைப் பார்த்துக் கேட்கிறார்.

நீங்கள் ஒரு வாரம் இங்கு வேலை செய்ய வேண்டியிருக்கும். இவர்கள் இரண்டு பேரோடு சேர்த்து எங்களுடைய ஆட்கள் அய்ந்து பேர். பத்து நாள் வேலைக்கு ஒரு மாதச் சம்பளம் தந்து விடுகிறேன். ஏனென்றால் இதற்குமேல் சமையலுக்கு ஆள்தேடி அலைய அவகாசமில்லை. என்ன சொல்கிறீர்கள்?

அன்னா யோசிப்பது தெரிகிறது. ஒருவேளை எங்களோடு கலந்து பேச விரும்பலாம். வியோங் எழுந்துகொள்கிறார். அரைமணி நேரக் காலக்கெடு எடுத்துக்கொள்ளுங்கள். அதற்குள் உங்கள் பகுதியைச் சுற்றிவிட்டு வந்துவிடுகிறேன். ஆனால் நல்ல முடிவாகச் சொல்லுங்கள் என்று அவர் வண்டியில் ஏறி ஓடையைக் கடந்ததும் அன்னாவிடம் இருந்து கேள்வி வருகிறது. என்ன செய்யலாமென்று சொல்?

உன் விருப்பம் அன்னா.

உண்மையில் மனசுக்குள் அழுதுகொண்டிருந்தேன். இப்போதுதான் மகிழ்ச்சியாக இருக்கிறது. இத்தனை நாள் நாம் ஒன்றாக இருந்து விட்டோம். போகும் போதும் ஒன்றாகச் சேர்ந்து போனால்தான் நன்றாக இருக்கும். இதற்குப் பிறகு வேறு எங்கும் போய் வேலை பார்க்கப் போவதில்லை. உண்மையைச் சொன்னால் இந்தப் பத்து நாள் வேலைக்கு எனக்குச் சம்பளம்கூட கொடுக்க வேண்டாம்.

வாயைவிட்டுச் சொல்லிவிடாதே. தொகை மிச்சம் என்று இருந்து விடப் போகிறார்கள்.

சரி, உனக்கு நான் இருப்பதில் விருப்பமா இல்லையா சொல்?

உனக்கிருக்கும் அதே விருப்பம்தான் எனக்கும் இருக்கிறது அன்னா.

அப்படியானால் எனக்கொரு உதவி வேண்டும். உன்னிடம் இப்படிக் கேட்பது தவறுதான். ஆனாலும் என்னை நீ புரிந்துகொள்வாய் என்ற நம்பிக்கையில் கேட்கிறேன். நான் இங்கு உன் காதலியைப்போல நடிப்பேன். அதற்கு நீ ஒத்துழைக்க வேண்டும். அப்போதுதான் எனக்குப் பாதுகாப்பு. நான் உன் ஆளாக இருக்கிறேன் என்று யாரும் தொந்தரவு செய்ய மாட்டார்கள். என்ன அப்படிப் பார்க்கிறாய்? உன்னைப் போலவும் ஓமரைப் போலவும் எல்லா முகாமிலும் ஆட்கள் இருக்க மாட்டார்கள். குறிப்பாக இறந்து போன என் தோழி மார்த்தா இவர்கள் முகாமில் வேலை பார்த்தவள் என்பது நினைவிருக்கிறதா?

அன்னா சொல்வதிலும் உண்மை இருக்கிறது.

என்ன பதிலையே காணோம்? இதற்கு நீ ஒத்துக்கொள்ளவில்லை யானால் இங்கு தங்குவது சிரமம் என்று சொல்லிவிட்டு அருகில் நெருங்கி வந்தமர்ந்த அன்னா காதுக்குள் சொல்கிறாள். அச்சமாக இருக்கிறதா? உனக்குக் காய்ச்சல் வரும் அளவுக்கு ஏதும் செய்துவிட மாட்டேன்.

சிரிப்பு வந்துவிட இருவருமே சிரிக்கிறோம். லியோங் வண்டி வருகிறது. அன்னா உடனே நாடகத்தைத் தொடங்குகிறாள். மிக நெருக்கமாக அருகில் வந்து அமர்ந்துகொள்கிறாள். அன்னா லியோங் கிடம் சம்மதத்தைச் சொல்ல நாங்கள் அமர்ந்திருக்கும் நெருக்கத்தைப் பார்த்துச் சிரிப்போடு விடைபெற்றுக் கொள்கிறார் அவர்.

அவர் சென்றதும் ரோஸ்லானின் குரல் உயருகிறது. இதுவரை நான் பார்த்த திரைப்படத்திலேயே இதுதான் சிறந்த காதல் படம். இந்தக் காட்சி இன்னும் எத்தனை நாள் இங்கு ஓடப்போகிறது அன்னா?

ரோஸ்லான் கேட்டு முடித்ததும் அன்னா ரோஸ்லானை அடிக்கக் கையைத் தூக்கிக்கொண்டு ஓடுகிறாள். சற்று நேரம் சிரிப்பால் இடம் நிறைகிறது. ஆனாலும் முன்பு இங்கு நிறைந்திருந்த சிரிப்பலைகளின் சிறு துண்டுதான் இது. நாளை இதுவும் இருக்குமா?

குட்டியூண்டு நாட்டின் மேல் ஒரு வல்லரசு படையெடுத்ததுபோல் இருக்கிறது. மொத்த இயந்திரங்களும் காட்டைக் கடித்து மென்று துப்பிக்கொண்டிருக்கின்றன. பேரிரைச்சல். மரங்கள் சட சடத்துச் சாயும் ஒலி கேட்டுக்கொண்டே இருக்கின்றது. பசுட்டுக்கோழி இருந் திருந்தால் கத்திக் கத்தித் தொண்டையே வறண்டிருக்கும். அரக்கத் தனமான துரித வேலை. முதல்நாள் முழுக்க காதுச் சவ்வு கிழிந்து விடுகிறது. ஆட்களை நகருக்குக் கொண்டுபோய்விடப் போயிருந்த ரோஸ்லான் திரும்பியதும் முகாம் எல்லையை விட்டு வெளியே கிளம்பிவந்து ஒரு பழைய சாலையை செப்பனிடும் இடத்துக்கு வேடிக்கை பார்க்கப் போய்விடுகிறேன். இந்த இடத்தில் சத்தம் குறைவு. சாலையை அவர்களுடைய முகாம் நோக்கி மாற்றியமைக்கிறார்கள்.

எல்லாக் கட்டைகளையும் அவர்களுடைய முகாமில் கொண்டு போய் இருப்பு வைக்கப்போகிறார்கள். பங்கலானுக்குக் கொண்டு சென்றால் பத்து நாட்களுக்குள் கட்டைகளை வெளியேற்ற முடியாது என்பதால் இந்த ஏற்பாடு. மாலையில் ரோஸ்லானோடு பிலியவைப் போய்ப் பார்த்துப் பேசிவிட்டுத் திரும்புகிறேன். இருவரும் இப்படித் தப்பித்துவிடுகிறோம். அன்னாதான் பாவம், சமைத்து முடித்துவிட்டால் அறைக்குள் புகுந்து வானொலிதான் அடைக்கலம்.

அதற்கடுத்த நாளும் வெளியே தப்பிக்கலாம் என நினைத்துக் கொண்டிருக்கும்போதே ரோஸ்நீனாவிடமிருந்து அழைப்பு. ஆனால் குரலில் சுரத்து இல்லை. ஒரு வருத்தமான செய்தி. யொகன்னாவின் தந்தை ஊரில் இறந்துவிட்டாராம். செய்தியைச் சொல்ல அவருடைய அக்கா வந்திருக்கிறார்.

சொற்கள் சில நொடிகளை நழுவவிடுகின்றன. பிறகு சுதாரித்துக் கேட்கிறேன். எப்போது? பத்து நாட்கள் ஆகிவிட்டதாம் என்றதும் பத்து நாட்களா என்கிறேன். ஆமாம். ஆனால் இப்போதுதான் செய்தி கிடைத்ததாம். அவருடைய அக்கா யொகன்னாவிடம் பேச விரும்பு கிறார். அழைக்க முடியுமா?

அன்னாவை அழைத்துப் பேசியைத் தருகிறேன். உன் அக்கா பேச வேண்டுமாம். பேசியை வாங்கிக்கொண்டதும் அன்னாவின் முகம் பார்க்கத் துணிவற்றுத் திரும்பிக் கொள்கிறேன். அன்னாவின் குரல் கேட்கிறது. அல்லோ...

அன்னா பேசிமுடித்ததும் அப்படியே அமர்கிறாள். கண்கள் நிலை குத்திக்கொள்கின்றன. ஆறுதலை எப்படித் தருவது? இந்த நிமிடத்தில் சொற்களுக்கு அவ்வளவு வலு இருக்கும் என நம்பிக்கையில்லை. என்ன மாதிரியான வாழ்க்கை இது? தந்தை இறந்துபோய் பத்து நாட்கள் கழித்துத்தான் மகளுக்குத் தெரிகிறது. இப்போது போனாலும் முகத்தைப்

பார்க்க முடியாது. இறந்துபோன அன்று அழமுடியாமல் பத்து நாட்கள் கழித்து இன்று இறந்ததுபோல் அழநேர்வது கொடுமைதான். நாடுவிட்டு நாடு பிழைக்கவரும் கூட்டத்தின் துயரம் இது. கொஞ்சநேரம் கழித்து மெல்லச் சொல்லுகிறேன். ரோஸ்லானை அழைத்துக்கொண்டு நகருக்குக் கிளம்பு அன்னா.

மெல்ல எழுந்துகொண்ட அன்னா, அங்கு போய் நான் என்ன செய்யப்போகிறேன்? இப்போது வரவில்லை என்று அக்காவிடம் சொல்லிவிட்டேன். முதலில் எனக்குக் கொஞ்சம் ஓய்வு தேவை என்று சொல்லிவிட்டு அறைக்குள் புகுந்துகொள்ளக் கதவு தாழிடப்படுகிறது. அழுவதற்கு அது தேவைதான்.

லியோங் வந்ததும் விவரம் சொல்கிறேன். அவர் தன் ஆட்களிடம் அப்பெண்ணுக்கு ஒரு தொந்தரவும் கொடுக்க வேண்டாம். இன்றைய சமையலை நாமே சமாளித்துக் கொள்வோம் என்கிறார். இந்நிலையில் இன்று வெளியே எங்கும் போக விரும்பவில்லை. சமையலுக்கு ஆன உதவியைச் செய்துவிட்டு அன்னாவின் அறைவாசலைப் பார்த்தபடி அங்கேயே அமர்ந்திருக்கிறேன்.

பிற்பகல் மூன்று மணிக்கு மேலே கதவைத் திறந்து வெளியே வந்த அன்னாவின் முகம் வீங்கியிருக்கிறது. இறங்கிப்போய் குளித்துவிட்டு உடை மாற்றித் திரும்பி வந்த அன்னா கொஞ்சம் வெளியே போய் வரலாமா எனக் கேட்கிறாள்.

எங்கே?

பழைய முகாம் இருந்த இடத்துக்கு.

அங்கே என்ன இருக்கிறது?

போக வேண்டும். முடியுமா? சொற்கள் அழுத்தமாக வருகின்றன. ஒன்றும் சொல்லாமல் புறப்படுகிறேன்.

மூவரும் நுழைவுச்சாவடி இருக்கும் இடத்துக்கு இல்லை, இருந்த இடத்துக்குப் போய்ச் சேருகிறோம். சாலையைத்தான் மாற்றியாகி விட்டதே. முன்பு எங்கள் முகாம் வீடிருந்த இடத்தில் புல்லும் செடியும் மண்டிக்கிடக்கின்றன. அதைத் தாண்டிய சரிவில் மரவள்ளிக்கிழங்கு குற்றுமரங்களின் கூட்டம். முன்பிருந்த புக்கிஸ்காரர்கள் பயிரிட்டிருந்தது. அவர்கள் தோண்டியெடுத்தது போக இன்னும் தழைத்து மண்டிக் கிடக்கிறது. வண்டியில் இருந்து இறங்கியதும் அன்னாவின் பார்வை வீடு இருந்த இடத்தையே வெறித்துப் பார்த்தபடி இருக்கிறது. அன்னா வருவதை எதிர்பார்த்துக் காத்திருந்த அந்நாள் நினைவுக்குள் மீள்கிறது. மாத்தாவின் ஆர்ப்பாட்டம்... ஓடையின் ஜெலுத்தோங் சிலை... காய்ச்சல்... இவையெல்லாம் கடந்து இன்று தோழியாகியிருக்கும் அன்னா...

அன்னாவின் உதடுகளில் இருந்து முணுமுணுப்பாகச் சில சொற்கள்

உதிர்கின்றன.

என் கம்போங்கை விட்டு வந்தபிறகு எத்தனையோ ஆண்டுகள் கழித்து என் கம்போங் வாழ்வின் மகிழ்ச்சியை நான் மீண்டும் கண்டு பிடித்த இடம் இதுதான்.

புரிந்தும் புரியாத புதிர்ப்பேச்சு. புரியாமலேயே அன்னாவைப் பார்க்கிறேன். புன்சிரிப்போடு கேட்கிறாள். நான் சொல்வது ஒன்றும் புரியவில்லைதானே? உன்னிடம் நிறைய பேச வேண்டும் போல் இருக் கிறது- அந்த செம்பனைத்தோட்ட உச்சிவரை நடந்து செல்வோமா?

முன்பு இங்கிருந்தபோது அன்னா செம்பனைத்தோட்டக் குன்று நோக்கிச் செல்லும் பாதையில் மாலை உலா செல்வது வழக்கம். அக்குன்றின் உச்சிக்கு மறுபுறம் கீழே இறங்கும் சரிவின் முடிவிலிருந்து தோட்டம் தொடங்கும். அந்த உச்சிக்கு நடந்துசெல்ல மணி நேரம் ஆகும். இன்று அன்னாவின் மனதுக்குத் தேவைப்படும் ஆறுதலுக்கு ஆன உதவி இதுவெனில் அப்படியே ஆகட்டும்.

நிலைமையைப் புரிந்துகொண்டது போல் ரோஸ்லானின் குரல் வருகிறது. துவான், என் அடுத்த வேலை தொடர்பாகப் பங்கலானில் ஒரு நண்பரைப் பார்க்க வேண்டும். சென்று இரண்டு மணி நேரத்தில் அக்குன்றின் உச்சிக்கே நேரே வந்துவிடுகிறேன். நீங்கள் இங்கு திரும்பிடாமல் அங்கேயே காத்திருங்கள்.

இருவரும் அமைதியைக் கோத்தபடி நடந்துகொண்டிருக்கிறோம். அன்னாவின் குரல் காற்றைப் போல தணிவாக வருகிறது. உன்னிடம் இன்றொரு சுழுக்கத்தைத் திறக்கப்போகிறேன். என் அந்தரங்க வாழ்வு குறித்து யாருடனும் இதுவரை பகிர விரும்பியதில்லை. உன்னிடம் சொன்னால் இன்று என் துக்கத்தின் சுமை கொஞ்சம் குறையுமெனத் தோன்றுகிறது. அதனால்தான் சொல்கிறேனே தவிர உன்னை சலிப் பூட்ட அல்ல. கேட்க விருப்பம்தானே?

அன்னாவிடமிருந்து மெலிதான புன்னகை அரும்பிக் கொண்டிருக் கிறது. சொல்லு அன்னா.

நான் திருமணமானவள் என்பது உனக்குத் தெரியுமா?

கால்கள் தானாக நடையை நிறுத்திக்கொள்கின்றன. திகைப்பைக் கண்ட அன்னாவின் கண்கள் ஆழமாக உற்று நோக்குகின்றன. இதழ்கள் மீண்டும் பிரிகின்றன. இதற்கே இப்படி நின்று விட்டாய். எனக்கு இரு குழந்தைகள் இருக்கிறார்கள் என்பதை இன்னும் சொல்லவில்லையே?

விக்கித்துப் போய்விட்டதைப் பார்த்துக் கலகலவெனச் சிரிப்புத் தொடங்கிவிடுகிறது அன்னாவுக்கு. இப்படியொரு செய்தியைத் தூக்கிக் கொடுத்துவிட்டு எப்படி உன்னால் சிரிக்கமுடிகிறது அன்னா? இன்னமும் திகைப்பு விலகவில்லை. அன்னா என்னைவிட ஆறுமாதம்தான் மூப்பு. இந்த வயதிலேயே திருமணமாகி இரு குழந்தைகளும் இருக்கிறார்கள்

என்பது திகைப்புத்தான். அதற்குரிய அடையாளங்களும் இல்லை. அன்னாவின் குரல் தொடர்கிறது.

நான் என் வயதைவிட இளமையாகத் தோன்றுகிறேன் அல்லவா? உண்மையைச் சொல்லப்போனால் எனக்குப் பதினான்கு வயதிலேயே திருமணம் ஆகிவிட்டது. என் கணவர் காவலர். பின் ஏன் இங்கு வந்தாய் என்கிறாயா? மணவிலக்கு. மணவிலக்கு ஆகிவிட்டதே...

இச்செய்தி மேலும் திடுக்கிடச் செய்கிறது. அன்னாவிடம் இருந்து பெருமூச்சு வெளிப்படுகிறது. எல்லாமே 'வாயாங் கூலிட்' போல் ஆகிவிட்டது. யாருடைய கைகளாலோ ஆட்டுவிக்கப்படும் தோல் பொம்மைகள்தாம் நாம். உனக்கு இந்த யொகன்னாவைத்தான் தெரியும். லோலா என்பவளைத் தெரியுமா?

லோலாவா? யார் அது?

நான்தான்.

அன்னாவுக்குச் சிரிப்பு திரும்பவும் வேகமாகப் பெருகுகிறது. அவளையே வெறித்துப் பார்க்கிறேன். சிரி அன்னா... நன்றாகச் சிரித்துக்கொள்... பாவி இவ்வளவு துயரத்தையும் புதைத்துக்கொண்டு எப்படி இவ்வளவு இயல்பாய் உன்னால் இருக்க முடிந்ததோ? முழுதும் சிரித்து முடிந்ததும் கேட்கிறேன். அது என்ன பெயர், லோலா?

அவள்தான் அசல். இந்த யொகன்னா பாடாங் பெசார் தேவாலயத்தில் ஒரு போலீசுக்காரருக்குத் திருமணம் செய்து வைக்கப்பட்டபோது பிறந்தவள். அதற்கு முன் இருந்த லோலா கிறித்தவள் அல்ல. அவள் ஒரு ஆதுக். அவளுக்கு மதம் கிடையாது. அவள் குடும்பத்துக்கே மதம் கிடையாது. இயற்கைதான் மதம், கடவுள், வாழ்க்கை. இயற்கை என்றாலே மகிழ்ச்சிதான். இதையெல்லாம் நீ தெரிந்துகொள்ள வேண்டு மானால் வெகுதொலைவு போக வேண்டும். இந்தப் போர்னியோவைத் தாண்டி... கடலையும் தாண்டி... சுலாவெசிக்குள் நுழைந்து... மக்காசாருக்கும் வடக்கே செல்ல வேண்டும். அங்குதான் இருக்கிறது என் நிலம். பெருமைக்குரிய என் நிலம்... தானா தொராஜா... தொராஜாக்களின் நிலம்... நாங்கள்தான் அந்நிலத்தின் அரசர்கள். உனக்குக் கேட்பதற்கு வேடிக்கையாக இருக்கலாம். இந்த அன்னாவை – இல்லையில்லை – லோலாவைப் புரிந்துகொள்ள வேண்டுமானால் நீ அம்மலை நிலத்துக்குள் நுழைய வேண்டும்...

அந்த அழகிய கம்போங்கில் மா, பப்பாளி, அன்னாசி, வாழையுடன் கூடிய தோட்டம் கொண்டது என் வீடு. கோழிகள், பன்றிகள், எருமைகளும் உண்டு. மூங்கில் குருத்தையும் கோழி இறைச்சியையும் கலந்து அம்மா சமைக்கும் சுவை நாக்கில் இன்னமும் உறைந்திருக்கிறது. அம்மாவின் கைமணத்தில் பாதிகூட என்னிடம் கிடையாது. அப்பா கண்டிப்பானவர். ஆணும் பெண்ணுமாக நாங்கள் ஏழு குழந்தைகள்.

லோலா கடைக்குட்டி. அப்பா செல்லம். மற்ற பெண் குழந்தைகளை அக்கம்பக்கத்திலேயே மணம் செய்துகொடுத்த அப்பா லோலாவுக்கு மட்டும் அரசு ஊழியராக வேண்டும் என்று தேடினார். எங்கள் குடும்பத்தில் காதல் திருமணத்தைவிட பெற்றோர் செய்து வைக்கும் மணமே அதிகம். லோலாவும் பதினான்கு வயதில் என்ன காதலித்துவிடப் போகிறாள்? உஜ்ஜுங் பண்டானில் வசித்த அவரது குடும்பம் என்னுடைய கம்போங்கில் இருந்து போன குடும்பம்தான். கிறித்தவராக மாறியவர்கள். பெண் நன்றாக இருந்தால் போதும் என்று அப்பா கொள்கையைத் தளர்த்திக்கொண்டார். ஆனால் எல்லாமே கனவாகிவிட்டது.

ஆண் அல்லவா? எனக்கு இரு குழந்தைகள் பிறந்தபிறகு – நீ தவறாக நினைத்துக்கொள்ளாதே... நாங்கள் இப்படித்தான் சொல்வோம். துளை தளர்ந்த பிறகு – அவர் இன்னொரு புதுத்துளை தேடிக்கொண்டார். திருந்துவார் என எல்லாப் பெண்ணையும் போலவே அப்பாவியாய் நம்பினேன். சிக்கல் பெரிதாகியவுடன் இஸ்லாமுக்கு மாறி அவளைத் திருமணமும் செய்துகொண்டார். அரசின் சட்டமும் அவருக்கு ஆதரவு. எனக்குத்தான் ஆதரவு இல்லை. அப்பா அதிலிருந்தே மனம் ஒடிந்து விட்டார். அவரை நேரில் பார்க்க எனக்கும் தெம்பில்லை. குழந்தைகளை தமக்கை ஒருவரிடம் ஒப்படைத்துவிட்டு கொஞ்ச காலம் நிம்மதியாக இருந்துவிட்டுப் போவோம் என்று இந்த ஒன்றுவிட்ட தமக்கையைத் தேடிவந்தேன். பிறகு இங்கு வந்தேன். இப்போது அப்பா இறந்தே விட்டார்.

பாதையை எங்கள் பாதங்கள் அமைதியாக அளந்து கொண்டிருக்கின்றன.

எங்களில் இறப்பைவிட அடக்கம் செய்யும் சடங்குதான் முதன்மை. அதனால் சற்று ஆறுதலாய் இருக்கிறேன். என்ன, அப்பா இறந்து ஏற்கனவே பத்து நாள் ஆகிவிட்டது. இனிமேல்தான் அடக்கமா என உனக்கு வியப்பாக இருக்கலாம். உன் வியப்பை இப்போது இன்னும் கூட்டுகிறேன். அடக்கம் என்பது ஓர் ஆண்டிலிருந்து ஆறு ஆண்டுகளுக்குள் அவரவர் வசதியைப் பொறுத்து எப்போது வேண்டுமானாலும் நாங்கள் நடத்திக்கொள்வோம். உன்னைப் போன்றே எல்லோருக்குமே இது அதிசயமான அதிர்ச்சியான செய்தியாக இருக்கும். இது எங்கள் கலாச்சாரத் தனிச் சிறப்பு. ஒருவர் இறந்துவிட்டால் அவரை உடனே புதைக்க மாட்டோம். ஏனெனில் எங்களைப் பொறுத்தவரை அது இறப்பே இல்லை. அவரது உடல் அடக்கம் செய்யப்படும்வரை அந்த உடலில் அவர் வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்பதே எங்கள் நம்பிக்கை. அதனாலேயே வீட்டின் புறத்தே வைக்கப்பட்டிருக்கும் அந்த உடலத்துக்கு ஒவ்வொரு நாளும் உணவையெல்லாம் வைத்துப் படைத்து வருவோம்.

உன் குழப்பம் எனக்குப் புரிகிறது. அந்த உடலத்தை நாங்கள் பதப்படுத்தி வைத்துவிடுவோம். எனக்கு அந்தச் செய்முறையெல்லாம்

தெரியாது. பெரியவர்கள் சிலர் அறிந்த கழுக்கம் அது. மூலிகைகளையும் எண்ணெயையும் பயன்படுத்துவதாகச் சொல்வார்கள். இவற்றைக் கொண்டு பதப்படுத்திய உடலத்தைத் துணியால் இறுகக்கட்டி படுக்கை வசத்தில் கிடத்தாமல் சரிவாக இருக்குமாறு சாய்த்து வைத்து விடுவார்கள். அப்போதுதான் அந்த உடலத்தில் இருந்து வெளியேறும் திரவம் வழிந்து இறங்கி வெளியேறுவதற்கு ஏதுவாக இருக்கும்.

ஓர் ஆண்டு கழித்து வசதிக்கேற்ற கால அளவில் இரண்டாம் சடங்கு செய்யப்படும். இது செலவுமிக்க சடங்கு. முதலில் இறந்தவர்களைப் போலவே முழு உருவச்சிலை செய்வோம். இறந்தவரின் உருவத்தை அச்சு எடுத்ததைப் போலவே இருக்கும் அம்மரச் சிலையை வண்ண மெல்லாம் பூசிய பிறகு நீ பார்க்க வேண்டும். நம்பமாட்டாய். இறந்தவர் எழுந்து வந்ததுபோல் இருக்கும். எங்கள் கலைஞர்களின் கைவினைத் திறன் அப்படி. அந்தச் சிலையை 'தவ்-தவ்' என்போம். இறந்தவரின் குறியீடாக இதைச் செய்தபிறகுதான் இறுதிச்சடங்கே தொடங்கும். இப்போது பதப்பட்டு இறுகிப்போயிருக்கும் உடலத்தை அதற்குரிய பெட்டியில் வைத்து மூடி அடக்கம் செய்வோம். உண்மை யில் இது பெரிய திருவிழா போல் நடக்கும். அவரவர் வசதிக்குத் தகுந்தாற்போல் பன்றிகளும் எருமைகளும் காவு கொடுப்பார்கள்.

கிறித்தவர்களாக முஸ்லிமாக மாறியவர்களும்கூட அவரவர் மத வழக்கப்படி சவப்பெட்டியில் வைத்துப் புதைத்து விட்டாலும்கூட இந்த இரண்டாம் சடங்கின்போது திரும்பவும் தோண்டியெடுத்து சடங்கைச் செய்துவிட்டுத்தான் திரும்பவும் புதைப்பார்கள். முன்னெல்லாம் மலைக்குகையில் பிணப்பெட்டியை வைப்போம். அக்குகையின் முகப்பில் ஒரு மாடம் கட்டி அதில் தவ்-தவ்வை வைப்போம். இப்போது அப்படியெல்லாம் கிடையாது. இதற்கென்றே பொதுவாக ஒரு வீடுகட்டி அதில்தான் வைக்கிறோம். காலம் மாறிவிட்டது. இதோ பார் வானிலையும் மாறிவிட்டது. மழைவரும் போல் இருக்கிறது.

குன்றின் உச்சிக்கு வந்து விட்டிருந்தோம். அன்னா சொன்னது சரிதான். கீழ் மூலையில் இருட்டிக்கொண்டு வருகிறது. அங்கிருந்த பெரும் பாறையொன்றில் அமர்கிறோம். அன்னா குத்துக்காலிட்டுக் கொண்டு கால்களை இருகைகளாலும் இறுகத் தழுவிக்கொண்டு அமர்ந்திருக்க தாடை முழங்காலில் பதிந்திருக்க பார்வையோ எதிரே செம்பனைத் தோட்டமாக உருமாறியிருக்கும் பள்ளத்தாக்கில் பதிந்திருக்கிறது. செம்பனை மரங்கள் இரண்டு ஆள் உயரம் வளர்ந் திருக்கின்றன. ஒரு பக்கம் கன்று நடும் வேலைகள் மீதியிருப்பது தெரிகின்றன. ஒரு பெருமூச்சு வெளி வருகிறது அன்னாவிடமிருந்து.

என் கம்போங் வாழ்வின் அருமை இப்போதுதான் தெரிகிறது. இங்கிருந்து போனதும் என் குழந்தைகளோடு அங்குதான் போய் தங்கப்போகிறேன். மீண்டும் பழைய லோலாவாக மாற வேண்டும்.

வெகுநேரம் கழித்து முதன்முதலாக வாயைத் திறக்கிறேன். அன்னா நீ ஏன் இன்னொரு திருமணம் செய்து கொள்ளக்கூடாது?

திரும்பிப்பார்த்து முறுவலித்தவாறே அன்னா கேட்கிறாள். நல்ல யோசனை எல்லாம் சொல்கிறாய். நீ என்னை மணந்து கொள்கிறாயா?

அன்னா பதிலையே எதிர்பார்க்கவில்லை. கேள்வியைக் கேட்டு விட்டு இரு கன்னங்களும் உப்ப அடக்கமுயன்ற சிரிப்பு தோற்று வெடித்து வெளிவருகிறது. வாய்விட்டு வெளிவந்த அச்சிரிப்பு அப்பகுதி யின் அமைதியைக் குலைக்கும் சிரிப்பாகிறது. அன்னா இப்படிச் சிரித்து இதுவரை கண்டதில்லை. நீண்டதொரு சிரிப்பு அது. சிரித்து கண்களில் நீர் வந்துவிடுகிறது. அது நீரல்ல. உள்ளிருக்கும் துயர். மெல்ல இயல்பு நிலைக்குத் தன்னைக் கொண்டு வந்துவிட்ட அன்னா சொல்கிறாள்.

உன் முகத்தைப் பார்த்தாலே பாவமாக இருக்கிறது. கலங்காதே. வேடிக்கைக்குத்தான் கேட்டேன். அன்னா இரண்டாவது முறை அவ்வளவு இலகுவாக ஏமாந்துவிடமாட்டாள்

இதைச் சொல்லும்போதே முகம் இறுகுகிறது அன்னாவுக்கு. மனம் ஏதோ சிந்தனைக்குள் ஆழ, பார்வை எங்கோ நிலைகுத்தி வெறிச் சிடுகிறது. வெகுநேரம் அப்படியே ஆடாத அசையாத அமர்வு. நன்றாக இருட்டிவிட்டிருக்கிறது. ஒரு மின்னல் பளிச்சிட்டபோது அன்னாவின் உறைந்த முகம் தெரிகிறது. ஒரு நொடியின் புள்ளியில் அன்னா 'தவ்-தவ்' ஆனதுபோல் இருக்கிறது.

மழை, நடை, இரவு

கினபத்தாங்கன் சுழியும் நுரையுமாக நிறைந்து ஓடிக்கொண்டிருக்கிறது. இப்பங்கலானுக்கு வருவது இதுவே கடைசிமுறை. இனி இங்கு வேலை இல்லை. எங்கள் கட்டைகளில் சில இங்கு மிச்சம் இருக்கின்றன. அதை லியோங் முகாம் வசம் ஒப்படைக்க வந்திருக்கிறோம். பட்டியலை ஒப்பிட்டுக் கட்டைகளை அளந்து பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். எங்கள் குடிலில் அமர்ந்திருக்கிறேன். இப்போது ஏதிலியாய் கைவிடப் பட்டிருக்கும் குடில். இதன் நினைவுகள் உள்ளுக்குள் ஊறுகின்றன. மோகினியைப் பார்க்க வந்த இரவு. படகில் வந்த பிலியவ். காலையில் பிணமாகமாறிச் செய்த பயமுறுத்தல். இனியெல்லாம் கனவே. இந்நிகழ்வில் பங்கேற்ற எவரும் இன்று அருகில் இல்லை, இந்த ரோஸ்லானைத் தவிர.

பாம்புவாத்தின் சிறகு விரிப்பாய் விசும்பெங்கும் மஞ்சுக்கூட்டத் திரள். அப்பிரதிபலிப்பில் கருக்கும் கினபத்தாங்கன். இனி மழைக் காலத்தின் தொடக்கம். பணிமுடிந்து மாலை கிளம்பும்போது மழை இறங்கிவிடுகிறது. வண்டிக்குள்ளிருந்து பார்க்க வெளியே பாதையே துலங்கவில்லை. அந்தளவுக்கு அடர்மழை. மழை நின்றபிறகு போகலாம்

என்றால் மழை நிற்காது போல் இருக்கிறது. அதற்கப்புறம் பாதையும் சேறாகி வண்டிபோவதும் சிரமமாகிவிடும். இப்போதே சக்கரங்கள் பாதையை விட்டு நழுவிச் செல்கின்றன. பசி வேறு வயிற்றுக்குள் புரள்கிறது. வண்டியின் வெளிச்சம் மழையிடம் தோற்றுக்கொண்டிருக் கிறது. வலுத்த இடி, மின்னல் வேறு. வண்டி மெதுவாக உருள்கிறது. கொஞ்ச நேரம் நிறுத்திவிட்டுப் பிறகு போகலாமா?

திடுமென வண்டியின் அடியிலிருந்து கடுமையான சத்தம். நாம் எங்கே நிறுத்துவது. வண்டியே நின்றுவிடுகிறது. ரோஸ்லான் இறங்கிச் சென்று பார்த்துவிட்டு ஏதோ பாகத்தின் பெயர் சொல்லி அது போய்விட்டதாகச் சொன்னபோது அது போனால் என்ன ஆகும் என்கிறேன். வண்டி போகாது என்று ரோஸ்லான் சொல்லியவுடன் அப்படித் தெளிவாகச் சொல் என்று சொல்லிச் சிரிக்கும்போது ரோஸ்லானின் தலை இடவலமாக வெறுப்பில் அசைகிறது.

இந்த நேரத்திலும் எப்படித்தான் உங்களுக்குச் சிரிப்பெல்லாம் வருகிறதோ துவான் என்று சொல்லிவிட்டு வண்டியை விட்டு இறங்குங்கள் நடந்து போக வேண்டாமா எனக் கேட்க இறங்கிக் கொள்கிறேன். இறங்கிய இடத்தை அடையாளம் காண முயல்கையில் மின்னல் துணை புரிகிறது. இங்கிருந்து முகாம் வெகுதொலைவு. வண்டியைப் பூட்டிவிட்டு வந்த ரோஸ்லானிடம் கேட்கிறேன். லியோங் முகாமுக்கே திரும்பிச் சென்றால் என்ன? அது இன்னும் அருகே இருக்கிறதே?

வேண்டாம் துவான். எவ்வளவு தொலைவாக இருந்தாலும் நம் முகாமுக்கே போய்விடுவோம். அன்னா தனியாக இருக்கிறாள்.

முட்டாள். இது எப்படி எனக்குத் தோணாமல் போனது? இருவரும் நடக்கத் தொடங்குகிறோம். காற்று மழையைச் சுழற்றி சுழற்றி விடுகிறது. பாதையே தெரியவில்லை. கணிப்பில்தான் நடக்க வேண்டி யிருக்கிறது. அவ்வப்போது பாதையை சில அடி தொலைவுக்கு வெளிச்சமிட்டு காட்டி மின்னல் மறைகிறது. இமைகளைத் தொடர்ந்து திறந்திருக்க முடியவில்லை. அந்தளவுக்குத் தாரைகள் குத்திக்கொண்டே இருக்கின்றன. கண்ணுக்கு மேல் கையை நடுப்பாகக் கொண்டே நடக்க முடிகிறது. கால் சப்பாத்துகளில் சேறு ஒட்டி எடை கூடிக்கொண்டே வருகிறது. ஒரு கட்டத்துக்கு மேல் நடக்க முடியவில்லை. சப்பாத்துக் களைக் கழற்றிக் கையில் எடுத்துக் கொண்டு நடக்கிறோம்.

ரோஸ்லான் திட்டுகிறான். கிறுக்குப் பிடித்த வானம்.

உண்மை. மழையின் அடர்த்தி கூடிக்கொண்டே இருக்கிறது. மழைத்தாரையின் தொடர் குத்தலால் முகமே வலிக்கிறது. இப்படி இடி இடிக்கையில் எந்த மரத்தின் கீழும் ஒதுங்கவும் முடியாது. ஒரு மின்னல் வெகு வெளிச்சத்துடன் மின்னுகிறது. தொடர்ந்து வெகு அருகிலேயே பெரும் இடி இறங்குகிறது. நிலம் ஒரு முறை அதிர்ந்து ஓய்கிறது.

சற்றுநேரம் இருவருமே உறைந்து நின்றுவிடுகிறோம். திடுமென ரோஸ்லான் சாலை விளிம்பை நோக்கி ஓடுவது தெரிகிறது.

என்ன செய்யப்போகிறாய் ரோஸ்லான்?

மழையின் இரைச்சலில் கேட்பது காதில் விழுந்திருக்க நியாயமே இல்லை. அடுத்த மின்னலில் திரும்பி வருவது தெரிகிறது. கையில் இரண்டு பெரிய காட்டுச் சேம இலைகள். ஒரு குடைச் சுற்றளவுக்கு விரிந்திருக்கும் பெரிய இலைகள். மின்னல் வெளிச்சத்தில் இதைப் பார்த்துக் கொணர்ந்தது நல்ல யோசனை. காம்பு பருமனாகவும் கெட்டியாகவும் இருப்பதால் குடைக் காம்பைப் போலப் பிடித்துக் கொள்கிறோம். இலைதான் தலைக்கு மேலே குடையைப்போல் விரிந்திராமல் தொடர்மழையின் எடையில் மடங்கி தலையை மூடிக் கொள்கிறது. இதுவும் நல்லதுதான். முகத்தில் இப்போது மழைக் குத்தல்கள் இல்லை. கையில் காம்பைப் பிடித்திருப்பதால் சப்பாத்துக் களின் கயிற்றைக் கோத்துக் கட்டி அதைத் தோளின் இருபுறமும் தொங்க விட்டுக்கொண்டு நடக்கிறோம்.

சோர்வும் பசியும் துவளச் செய்கின்றன. முதல்நாள் காட்டுக்குள் தொலைந்தபோதுகூட இவ்வளவு துன்பம் மழையால் இல்லை. ஒருவேளை இந்தளவு மழைகூட அன்று இருந்திருக்கலாம். ஆனால் முழுக்க காட்டு மரங்களின் அரவணைப்புக்குள் இருந்ததால் இவ்வளவு தாக்கம் இல்லை போலும். இன்னும் சொல்லப்போனால் இந்த இடி மின்னல் அச்சம்கூட அன்று இல்லை. பயணம் இன்னும் நீண்டு கொண்டே செல்கிறது. மணி என்னவென்று கடிகாரத்தில் பார்க்க முடியவில்லை. நடக்கத் தொடங்கியே நாலைந்து மணி நேரம் தாண்டியிருக்கும். நடை, சோர்வு, பசி, துவளல்... நடை, சோர்வு, பசி, துவளல்.... நடை.... அதோ முகாம் வீடு தெரிகிறது.

மழை குறையத் தொடங்கியிருக்கிறது. வீட்டின் விளக்கொளி மங்கித் தெரிகிறது. சோர்ந்த உடலில் உயிர்த் துணுக்குகள் எங்கிருந்தோ வந்து ஒட்டிக்கொள்கின்றன. கால்களுக்குள் புதுத்தெம்பு பாய்கிறது. நடை விரைகிறது. வீடும் வந்துவிடுகிறது. உள்ளே நுழைகிறோம். எவருமில்லை. எல்லோரும் உறங்கிக்கொண்டிருக்க வேண்டும். கடிகாரத்தைப் பார்க்கிறேன். ஆவிபடர்ந்து மங்கலாக மணி ஒன்று எனக்காட்டுகிறது. நள்ளிரவு ஆகிவிட்டது. பின்னர் யார்தான் விழித்திருப்பார்கள்? உடல் குளிரில் நடுங்குகிறது. படக்கென்று சத்தம். அன்னாவின் அறைக்கதவு திறக்கிறது. இறங்கி வருவது அன்னாதான். நாங்கள் எந்த ஒலியும் எழுப்பவில்லையே? எப்படி எழுந்திருக்க முடியும்? ஒருவேளை தூங்கவே இல்லையோ?

அன்னாவிடம் இருந்து கேள்விகள் கொட்டுகின்றன. ஏன் இவ்வளவு தாமதம்? வண்டி எங்கே? சத்தமே கேட்கவில்லை? மழையில் நன்கு

நனைந்திருக்கிறீர்கள், நடந்தே வந்தீர்களா? அவ்வளவுதான் கேள்விகள். அதற்குள் கண்கள், நனைந்து சோர்ந்திருக்கும் இரு மனிதர்களையும் படம் பிடிக்கிறது; கால்கள், உடனே தன்னுடைய அறைக்குள் நுழைகின்றன; கைகள் இரு துவாலைகளை எடுத்துத் தருகின்றன; இதயம், துவட்டிக்கொண்டிருக்கும்போதே எங்களுடைய இடத்துக்கு சென்று மாற்றுடைகளைத் தேடியெடுத்துத் தந்துவிட்டு, குசினிக்குள் நுழைந்து சூடான தேநீரோடு திரும்புகிறது.

மாற்றுடைக்கு மாறியிருந்த நாங்கள் அமர்ந்து அத்தேநீரைப் பருகுகிறோம். நாடி நரம்பெல்லாம் இதமான வெப்பம் பரவுகிறது. அதற்குள் உணவு சூடாக வருகிறது. எதுவும் பேசாமல் புசிக்கிறோம். பசி. உண்டு முடித்துக் கைகழுவித் திரும்ப, இதுவரை யாருமே எழுந்து வரவில்லை என்பதை கவனிக்கிறோம். மீண்டும் வந்து அமர்கிறோம். ஏன் தாமதம் என்று அன்னா கேட்டதும் அப்படியே மேசையில் தலைகவிழ்த்த ரோஸ்லான் உடல் குலுங்க அழத் தொடங்குகிறான்.

என்ன காரணம்? ஏன் அழுகிறாய்? கேள்விகள்தான் மிச்சம். பதிலே இல்லை. அழுகையும் நிற்கவில்லை.

அன்னாவின் கைகள் ரோஸ்லானின் தோளில் விழுகின்றன. அன்பு ரோஸ்லானின் மனசில் விழுகிறது. மெல்லத் தலையை நிமிர்த்திய ரோஸ்லானின் வாயில் இருந்து திக்கித் திணறி விழுகின்றன சொற்கள்.

இவ்வளவு நேரம் ஆயிற்று, உன்னைத் தவிர யாரும் வரவில்லை பார் அன்னா. நீயும் இல்லையென்றால் நாதியற்றுதானே நின்றிருப்போம்.

ரோஸ்லான் சொல்வது உண்மை. இதுவே எங்கள் பழைய முகாமாக இருந்திருந்தால், ஓமர் இருந்திருந்தால் இந்நேரம் வண்டி இல்லை யென்றாலும் ஆட்களுடன் எதிர்நடையாகத் தேடி வந்திருப்பார். இப்போது ஒரு மனிதன் அழுதுகொண்டிருக்கிறான். ஏன் என்று கேட்க ஆள் இல்லையென்றால் இம்மனிதன் கேட்பதும் நியாயம்தான்.

ரோஸ்லானிடம் தீர்மானமாகச் சொல்கிறேன். நாளை வண்டி பழுது நீக்கியதும் அதை எடுத்துக்கொண்டு நீ நேரே சண்டகான் போய்விடு ரோஸ்லான். இனி இங்கு இருக்க வேண்டாம். இன்னும் இரண்டு நாள்தான். நான் இவர்கள் வண்டியிலேயே வந்துவிடுவேன். இப்போது நீ போய்த் தூங்கு.

ரோஸ்லான் எழுந்து சென்றதும் நானும் அன்னாவும் மட்டும் அமர்ந்திருக்கிறோம். அன்னாவிடம் சொல்கிறேன். நீ போவது என்றால் ரோஸ்லானுடன் போய்விடு அன்னா. கண்களை ஊடுருவும் ஒரு பார்வை பார்த்துவிட்டு எதுவும் பேசாமல் அன்னா தன் அறைக்குள் செல்கிறாள். கதவு தாழிடப்படுகிறது.

வெளியே மழை நின்றிருக்கிறது.

வாசிப்பதற்குக்கூட புத்தகங்கள் எதுவுமில்லை. சண்டகானிலிருந்து வெளிவரும் மொர்டேக்கா டெய்லி நியூஸ், சண்டகான் ஜி போ ஆகிய சீன நாளிதழ்கள் மேசையில் கிடக்கின்றன. அவற்றில் திரைப்பட விளம்பரங்கள் மட்டும் விளங்குகிறது. வண்டி இல்லாததால் வெளியே போக முடியவில்லை. பதின்மூன்றில் தொடங்கிய மரம் வெட்டும் பணி இன்று மூன்றாம் தொகுதியில் நடக்கிறது. அப்பக்கம் அதிக மரங்கள் இல்லாததால் மரம் வெட்டும் பணி இன்றோடு முடிந்துவிடும். நாளை மாலையோடு வெளியேறிவிட வேண்டும். பணி கடுமையாக முடுக்கி விடப்பட்டிருக்கிறது. ஒரே சமயத்தில் எட்டு பேர் மரத்துக்குப் பட்டை உரிப்பதை இதுவரை பார்த்ததேயில்லை. மழை ஓய்ந்து காய்ந்ததும் பத்துச் சுமையுந்துகள் இரவும் பகலுமாகப் பறக்கின்றன. முதல் மழை என்பதால் மழையின் பாதிப்பு அவ்வளவாகச் சாலையில் இல்லை. வெட்டிய கட்டைகள் என்று திடல்களில் ஒன்றுமே இல்லை. அவ்வளவு சுறுசுறுப்பான வேலை.

ஆனால் இந்தப் பக்கம் அநேகமாக பத்தாம் தொகுதியாக இருக்கலாம். காலையில் இருந்து டிராக்டர்கள் சத்தம் தனியாகக் கேட்டுக்கொண்டிருக்கின்றது. என்ன செய்துகொண்டிருக்கிறார்கள்? வாசலில் சம்பாரி சத்தம் கேட்கிறது. லியோங், வழக்கம் போல அவருடைய முகாமிலிருந்து வரும் காலை வருகை. இறங்கி வரும்போதே அவரும் அதே கேள்வியைக் கேட்டுக்கொண்டு வருகிறார். டிராக்டர்கள் இந்தப் பக்கம் என்ன செய்கின்றன?

தெரியவில்லை என்றதும் ஓட்டுநரை அழைத்துக் கங்காணியை அழைத்து வரச்சொல்கிறார். அன்னா தேநீர் கொண்டு தந்ததும் அதை உறிஞ்சிக்கொண்டே கையில் சீனச் செய்தித்தாள் இருப்பதைப் பார்த்து மாண்டரின் படிக்கத் தெரியுமா என்கிறார். இல்லை கேண்டொனீஸ் தான் தெரியும் என்று ஹாங்காங் திரைப்பட விளம்பரங்களைக் காட்டியதும் சிரித்துக்கொள்கிறார்.

கங்காணி வருகிறார். நினைத்ததுபோல பத்தாம் தொகுதியில் இருந்துதான் அந்த டிராக்டர்களின் சத்தம் கேட்டிருக்கிறது. மொத்தம் மூன்று டிராக்டர்கள். எஞ்சிக் கிடந்த அந்தச் சிலாங்கன் பத்துவின் அடிமரக்கட்டைதான் காரணம். முன்புபோலவே அதை இழுக்க முடியவில்லை என்பதுதான் செய்தி. மழை பெய்த நிலம் வேறு. ஒரு சரிவில் அந்தக் கட்டை கிடப்பதால் இழுக்கும்போது முனை சேற்றுக்குள் குத்திக்கொள்கிறதாம். எடை காரணமாகப் புரண்டு கொடுக்க மாட்டேன் என்கிறதாம். கடைசியாக ஒரு டிராக்டரின் இரும்பு வடம் அறுந்து விட்டிருக்கிறது.

லியோங் தேர்ந்த நிர்வாகி. கணக்குப்போட்டுக் கேள்வி கேட்கிறார்.

மரத்தின் சுற்றளவு என்ன? பதில்: முப்பது. எத்தனை மணி நேரமாக இழுக்கிறீர்கள்? பதில்: மூன்று மணி நேரத்துக்கும் மேலாக. இவ்வளவு நேரம் இழுத்தும் ஒரு வடம் அறுந்ததுதான் மிச்சம் இல்லையா? பதில்: ஆமாம்.

அந்தச் செலவோடு டீசல் செலவும் சேர்ந்து இழப்பு. இந்த நேரத்துக்குள் சிறிய சிறிய கட்டைகளாக இதைவிட அதிக கனஅடி அளவுக்கு இழுத்துப் போட்டிருக்கலாம். முதலில் அத்தனை டிராக்டர் களையும் அங்கிருந்து வெளியேறச் சொல்லுங்கள். மூன்றாம் தொகுதிக்குப் போகட்டும். நாளையோடு முடிக்க வேண்டும் என்பது நினை வில்லையா? சீக்கிரம் போய்ச் சேருங்கள்.

கங்காணியை அனுப்பிவிட்டுத் திரும்பிப் பார்த்துச் சொல்கிறார். நாளை காலையில் இந்த வீட்டினைப் பிரிக்கத் தொடங்கிவிடுவார்கள். கொஞ்சம் பொறுத்துக்கொள்ளுங்கள். நாளை மாலை புறப்பட்டுச் சண்டகான் போய்விடலாம்.

என்ன இனிமையான சொற்கள்.

# 4

குழலின் கதை

முதலும் கடைசியுமாக சிலாங்கன் பத்து மரத்தின் அடிமரக்கட்டையைப் பார்க்கவேண்டும் போல இருக்கிறது. விடாப்பிடியாக தன் இடத்தைவிட்டு வரமறுக்கும் அதைச் சந்திக்க ஓர் உள்துடிப்பு. அது மாய அழைப்புத்தான். ஓடையைத் தாண்டியதும் எதிரே டிராக்டர்கள் திரும்பிக் கொண்டிருக்கின்றன. ஒதுங்கி நின்று வலப்பக்கமாய் இருந்த காட்டை நோக்குகிறேன். தொலைவில் டுரியன் மரம் நின்றிருந்த இடம் இதுதான் என்று நாங்கள் யானைகளை ஒளிந்திருந்து பார்த்த மேடு சொல்லிக்கொடுக்கிறது. நின்றிருந்த என்ற சொல், அடிக்கோடு கோரும் சொல் அல்லவா? வைகறை வௌவால்கள் திக்கற்றுப் பறக்கட்டும். கான யானைக்கூட்டம் எங்காவது அலைந்து திரியட்டும். யாருக்கென்ன கவலை?

டிராக்டர்கள் நகர்ந்ததும் பத்தாம் தொகுதி நோக்கிப் போகிறேன். இது தொகுதி ஒன்பதா பத்தா என்றே விளங்கவில்லை. திடல் போல இருக்கிறது. மூதாய் மரம் நின்றிருந்த இடம் எங்கே? தடயமே தெரியவில்லை. ஆனால் இந்தத் தடம் தெரிகிறதே? டிராக்டர்கள் வெளிவந்த தடம். இது அங்கிருந்துதானே வந்திருக்க வேண்டும்? தடத்தில் இறங்கி நடக்கிறேன்.

அந்த மாபெரும் கட்டை கண்ணில் பட்டுவிடுகிறது. குறுக்கு வெட்டுத் தோற்றமே நல்ல உயரம். இரும்பு வடக்கயிறு போட்டு இழுத்ததில் தோல் உரிந்து வழிந்த புண்கள். புண்கள்தாம். வலித்ததா என்று கேட்கத் தோன்றுகிறது. இது வெறும் கட்டை இல்லை. இன்னும் உயிர் ஒட்டிக்கொண்டிருக்கிறது. அதனாலேயே வெளியே வரமறுத்து அடம் பிடிக்கிறது. அடுக்கடுக்கான அதன் உள்வளையங்களைப் பார்க்கிறேன். எத்தனை ஆண்டுகள்? உறுதியாக இதை எண்ணி மாளாது. இத்தனை ஆண்டுகளையும் உன்னுள் அடுக்கி உன் ஆயுளாகக் கொண்டிருந்த நீ இக்கடைசி வெளி வளைய காலத்தில் வந்துசேர்ந்த எங்களிடம் இறுதியாக உன் ஆயுளை இழந்து விட்டாய். அக்கடைசி வெளிர்நிற வளையத்தைத் தொடுகிறேன்.

குற்றவுணர்வில் கூசுகிறது.

மூதாய் மரமே, மன்னிப்புக் கோருகிறேன்.

உன் எல்லா இலைகளையும் அறிந்தே உதிர்த்தோம்.

உன் எல்லாக் கிளைகளையும் அறிந்தே வெட்டினோம்.

உன்னையும் அறிந்தே வீழ்த்தினோம்.

மன்னிப்புக் கோருகிறேன்... மூதாயே மன்னிப்புக் கோருகிறேன்...

இமைகள் தானாகக் கவிழ்கின்றன. அதன் உள்பரப்புக்குள் திரளும் நீர் எடை தாளாது திரண்டு இறங்கி வழிகிறது. வழியட்டும். வழியட்டும். அத்தனை மாசுகளும் வழியட்டும். மீளவும் கண்களைத் திறந்தபோது அம்மூதாய் மரத்தின் அடிமரம் தெரிகிறது. பெரும் விட்டமாய் விரிந்து கிடக்கும் அதன் வெட்டப்பட்ட அடிப்பரப்பு மடியாய் விரிகிறது. வா மகனே வா. வந்து படுத்துக்கொள்.

வருகிறேன் தாயே. என் மனம் முழுக்க துயர் மண்டிக்கிடக்கிறது. அணைத்து ஆறுதல்கூறு தாயே.

வெகு சிரமப்பட்டு ஏறி அம்மடியில் மல்லாந்து படுக்கிறேன். மேலே வானம் தெரிகிறது. முன்பு இம்மரத்தின் கீழிருந்து பார்த்த வானம் நினைவுக்குள் மீள்கிறது. அடர் இலைகளினூடே துளைகளாக மட்டுமே தெரிந்த வானம். தொலைந்த வானம். அன்று தொலைந்து போயிருந்தது வான் மட்டுமே. இன்று தொலைந்திருப்பன? மரங்கள், பறவைகள், விலங்குகள், பூச்சிகள், ஓடைகள், நிழல்கள்... சுருக்கமாகச் சொன்னால் காட்டையே தொலைத்திருக்கிறோம். இது முற்றுப்புள்ளி.

இப்படியே என்னையும் தொலைத்துவிடு தாயே. எனக்கும் முற்றுப் புள்ளி இடு. இரு இமைகளும் தழுவிக்கொள்கின்றன. மூதாய் மடியில் வெகுநேரமாய் விழிமூடிக் கிடக்கிறேன். விரல்கள் தாய்மையோடு நெற்றியை வருடுகின்றன. என்ன வாஞ்சையான விரல்கள். வருடு தாயே வருடு. அம்மூதாயின் விரல்களைப் பற்றுகிறேன். அப்படியே இமைகளைப் பிரிக்கிறேன். அழகிய மொழி பேசும் இம்முகம் மூதாயின் முகமல்ல. நம்ப முடியவில்லை. இது பிலியவ். படக்கென்று எழுந்து அமர்கிறேன். பிலியவும் இந்த அடிமரத்தண்டில் மேலேறி வந்து அமர்ந்து கொண்டிருக்கிறார். நீங்கள் எப்படி இங்கு வந்தீர்கள் பிலியவ்?

பதில் சுருக்கமாக வருகிறது. ரோஸ்லானைப் பார்த்தேன். நாளை நீங்கள் புறப்படப் போகிறீர்கள்தானே?

ஆம் என்று தலை மட்டுமே ஆடுகிறது. பிலியவின் இதழ்கள் மெல்லப் பிரிகின்றன. நான் இங்கு வந்திருப்பது எதற்காகத் தெரியுமா?

தெரியவில்லை.

பிலியவ் ஒன்றும் சொல்லாமல் தன் இடுப்பிலிருந்து அதை எடுக்கிறார். நாசிப் புல்லாங்குழல். அன்று கேட்டபோது இதை வாசிப்பதற்குரிய நேரம் வரவில்லை என்று கூறி வாசிக்க மறுத்த அதே நாசிப் புல்லாங்குழல்.

இதை வாசிப்பதற்குரிய நேரம் இன்று வந்திருக்கிறது

அவரிடமிருந்து மிருதுவாக புன்னகை வெளிப்படுகிறது. ஆனால் இதை வாசிப்பதற்கு முன் நீ ஒரு கதையைக் கேட்கவேண்டும். அக்கதையைக் கேட்டால் நான் ஏன் நீ கேட்கும்போது இதை வாசிக்க மறுத்தேன் என்பதும், இப்போது ஏன் தானாக வாசிக்க முன்வந்திருக் கிறேன் என்பதும் உனக்கு விளங்கும்.

அவரை ஆர்வத்தோடு பார்க்கிறேன்.

இக்கதை ஒத்து என்பவனின் கதை. ஒத்துவின் கதை மட்டுமல்ல இந்த நாசிப் புல்லாங்குழலின் கதையும்கூட. கதை தன் சுருளை விரிக்கிறது. மேலே விண்ணில் உள்ள கருமுகில் கூட்டங்களும் கதையைக் கேட்கக் கூடித்திரள்கின்றன.

ஒரு மலையடிவாரத்தில் ஓர் அழகிய கம்போங் இருந்தது. அது முழுக்க கடசன் இன மக்களே வசிக்கும் கம்போங். மேட்டு நிலத்தில் குடியிருப்புகளும் பள்ளத்தாக்குப் பகுதிகளில் வயல்களும் இருந்தன. நெல், வெங்காயம், காய்கறிகள் பயிரிட்டு வந்தனர். அங்கு மக்கள் தொகை பெருக இட நெருக்கடி ஏற்பட்டது. பயிரிடும் நிலத்துக்கும் பற்றாக்குறை. எனவே அதில் ஒரு குடும்பம் மட்டும் வேறொரு இடத்துக்குச் சென்று வாழத் தீர்மானிக்கிறது.

அக்குடும்பத்தின் தாய், தந்தைக்கு ஒரே மகன். அவன் பெயர் ஒத்து. இம்மூவரும் கம்போங்கை விட்டு வெளியேறிப் பலநாட்கள் வெகு தொலைவு நடந்து ஓர் ஆற்றங்கரையில் அழகிய இடத்தைப் பார்க் கின்றனர். அந்த இடம் பிடித்துப் போக அங்கே வீடுகட்டித் தனியாக வசிக்கத் தொடங்குகின்றனர். மகன் ஒத்துவுக்கு மீன் பிடிக்கவும், வேட்டையாடவும் தந்தை கற்றுக் கொடுக்கிறார். தாய் வேளாண் கலையைக் கற்றுக்கொடுக்கிறார். ஒருநாள் காட்டுக்குள் வேட்டை யாடச் சென்ற தந்தை திரும்பி வரவில்லை. அவரைத்தேடிப் பல நாட்கள் காட்டுக்குள் அலைகிறான் ஒத்து. ஒருநாள் அவருடைய உடைமைகளையும் எலும்புக்கூட்டையும் கண்டுபிடிக்கிறான். அந்த எலும்புக்கூட்டில் தலைமட்டும் இல்லை. தலைவேட்டைக்காரர்களால் தந்தை கொல்லப்பட்டதைத் தாய் மூலம் அறிகிறான். அதன்பின் அவனுக்கு எல்லாமே தாய்தான் என்றாகிறது.

ஒத்து வளர்ந்து இளைஞனாகிறான். அவன் இதுவரை தன் சொந்த கம்போங் பக்கம் போனதே இல்லை. ஏன் அங்கு வாழ்ந்த நினைவுகூட அவனிடம் இல்லை. இப்போது அவன் அறிந்த ஒரே மனிதர் அவனுடைய தாய் மட்டும்தான். இதை நினைத்துத் தாய் படுக்கையில் வீழ்கிறார். தன் அந்திமக் காலம் நெருங்குவதை உணர்ந்த அந்தத் தாய் ஒத்துவை அருகில் அழைத்து தங்களுடைய கம்போங் வாழ்க்கை, கலாச்சாரம் பற்றி விரிவாகக் கூறுகிறார். இனி அவன் எப்படி வாழவேண்டும் என்பதையும் போதிக்கிறார். இறுதியில் அவர் இறந்து விடுகிறார். பிறகுதான் ஒத்துவுக்குத் தான் ஏதிலியாகி விட்டோம் என்பது புரிகிறது.

அடக்க முடியாத துயரம் அவனுக்குள் பீறிடுகிறது. ஆனால் அழக் கூடாது. அழுவது குடும்பத்துக்குக் கெடுவாய்ப்பைக் கொண்டுவரும் என்று தாய் சொல்லிக் கொடுத்திருக்கிறார். ஆனாலும் துக்கம் உள்ளுக்குள் அடங்காமல் புரளுகிறது. இதை எப்படியும் வெளியாக்க வேண்டும். என்ன செய்யலாம்? வாசலுக்கு வருகிறான். குடிலுக்கு வெளியே அம்மா நட்டுவைத்து வளர்த்த மூங்கில் நன்றாக நிமிர்ந்து வளர்ந்திருக்கிறது. அதன் அருகே செல்கிறான். ஒரு சிறு மூங்கிலில் மட்டும் சில துளைகள் தெரிகின்றன. ஒரு யோசனை வருகிறது. அம்மூங்கிலை மட்டும் துண்டாக வெட்டி எடுக்கிறான். அதை தன் மூக்கருகில் கொண்டு வந்து முகர்கிறான்.

இது மூங்கில் மணமல்ல. அம்மாவின் மணம். அம்மா உன் மணம் என் நாசிக்குள் புகுந்து நிறைகிறது. என் உயிர் மூச்சிலும் கலக்கிறது. இது நீ தந்த மூச்சுதானே அம்மா? இதோ நீ தந்த மூச்சை உனக்குள்ளேயே செலுத்துகிறேன். உயிர்பெற்று வா தாயே.

மூங்கிலுக்குள் மூச்சு செல்கிறது. இதோ அம்மா உயிர் பெற்று விட்டார். இனிய இசையாக உயிர் பெறுகிறார். இனி நான் உன்னை இறக்க விடமாட்டேன் அம்மா...

ஒத்து தன் மூச்சுக் காற்றால் இசைக்க அவனுக்குள்ளிருக்கும் துயரம் கரைந்து கொண்டிருக்கிறது. அம்மா இசையலையாகிக் காற்றில் தவழ்வதைக் காண்கிறான். அம்மா பரவிச் செல்கிறாள். வீசும் காற்றில் விரைவாகச் செல்கிறாள். வெகுதொலைவு செல்கிறாள். என் மகன் தனி மரமாகி நிற்கிறான், யாராவது உதவிக்கு வாருங்கள் எனப் பிறரைத் தேடிச்செல்கிறாள். தொலைவில் இருந்த கம்போங் மக்கள் வீசும் காற்றில் வரும் இசையைக் கேட்கின்றனர். உயிரை உருக்கும் இசை. தங்கள் வாழ்நாளிலேயே இதுபோன்ற புதுமையான இசையைக் கேட்டது இல்லையே எனத் திகைக்கின்றனர். எங்கிருந்து இந்த இசை வருகிறது? தேடிப் புறப்படுகின்றனர். மொத்த மக்களுமே செல்கின்றனர்.

அங்கே ஓர் இளைஞன் ஒற்றைக் குடிலின் வாசலில் தனித்தமர்ந்து இசைத்துக் கொண்டிருப்பதைக் காண்கின்றனர். உள்ளே தாயின் சடலம். அதை என்ன செய்வது என்றுகூடத் தெரியாத அவனது நிலைகண்டு இரங்குகின்றனர். அடக்கத்துக்கு ஏற்பாடு செய்கின்றனர்.

போதும். இது போதும். உன்னை மற்ற மக்களோடு இணைத்து விட்டேன். மகனே ஒத்து, இனி எனக்கு நிம்மதி என்று அந்தத் தாயின் ஆன்மா அமைதியாக உறங்கச் செல்கிறது...

இதுவரை பிலியவ் ஒருகதையும் சொன்னதில்லை. இப்படியொரு மனம் பிழியும் கதையைச் சொல்லவா ஒரு கதையையும் இதுவரை சொல்லாமல் இருந்தார்? விரல்களால் அக்குழலை மென்மையாகத்

தட்டிக்கொண்டே சொல்கிறார். இந்நிகழ்வுக்குப் பிறகுதான் கடசன் இன மக்கள் இறப்புச் செய்தியைப் பிறருக்குத் தெரிவிக்க நாசிப் புல்லாங்குழலை வாசிக்கும் பழக்கத்தைத் தொடங்கினர். அவர்களிடமிருந்து நான் கற்றுக்கொண்டிருக்கிறேன்.

பிலியல் இப்போது நிமிர்ந்து அமர்கிறார். விழிகள் ஆழமான ஒரு பார்வையால் ஊடுருவுகின்றன. பின் சொற்கள் வலிமையாக வருகின்றன.

மனிதர்கள் இறந்தால் மட்டும்தான் இறப்பா? காடு இறந்தால் இறப்பில்லையா? எத்தனை ஆயிரம் ஆயிரம் உயிர்களின் இறப்பு இது. இழப்பு இது. இப்படிதான் ஒவ்வொரு முகாமும் காட்டை வெட்டி முடித்துவிட்டு வெளியேறும்போது நான் அங்கு செல்கிறேன். இறந்து விட்ட காட்டின் துக்கச் செய்தியைத் தெரிவிக்க நான் ஒருவன் இருக்கிறேன் என்று உணர்த்துகிறேன். அப்படியே இன்றும் இங்கு வந்திருக்கிறேன். ஆனால் இம்முறை ஒரு சின்ன மாற்றம். என்னோடு சேர்ந்து இன்னொரு மனதும் இதைத் தன் மனசுக்குள் இசைக்கப் போகிறது. என்ன பார்க்கிறாய்? நீதான் அது. நான் முன்பே இங்கு வந்து விட்டேன். அப்போது நீ அழுதுகொண்டு இருந்ததைப் பார்த்தேன். என் இத்தனை ஆண்டு கால வாழ்வில் மரம் வெட்ட வந்த நிறுவனத்திலிருந்து ஒருவர் இப்படி மரத்துக்காக அழுவதைப் பார்த்ததே இல்லை. இதுதான் ஐயா, தொல்குடி மனசு என்பது...

பிலியல் தன் இமைகளை மெல்ல மூடிக்கொள்கிறார். இதழ்கள் முணுமுணுக்கின்றன.

தோழனைபோல... இதோ மூதாய் மரத்திலிருந்து எங்கள் இருவரின் துக்கத்தைத் தொடங்குகிறோம்...

குழலை எடுக்கிறார். நாசியில் பொருத்துகிறார். மூச்சினைப் பதமாக உள்ளே இழுக்கிறார். இசை பிறக்கிறது. வழக்கமான குழல் இசையை விடச் சற்று மாறுபட்ட இசை. இது துக்கத்தின் இசை. துயரத்தின் இசை. ஒத்துவின் துயரம் போல பிலியலின் துயரமும் எங்கும் பீறிட்டுப் பரவுகிறது.

மூச்சுக் காற்றிலும் துயரம். வெளிக் காற்றிலும் துயரம்.

இமைகளைத் தாழ்த்தி மூடுகிறேன். துயரத்தின் இசையே நீ தவழ்ந்து சென்று செடிகளை ஆறுதலாய் வருடு. கொடிகளை வாஞ்சையோடு தழுவு. சிறு மரங்களைப் பெருமரமாக வாழ்த்து. வாழ்த்திக்கொண்டே எங்கும் பரவிச்செல். எல்லைகள் எங்கும் பரவிச்செல். இத்துயரத்தை உலகெலாம் தெரிவிக்கப் பரவிச்செல். இத்துயர் புரிந்து ஓர் இதயமாவது ஒரு துளி சிந்தாதா என்ன?

அட, சிந்துகிறதே. எந்த இதயத்தின் கண்ணீர்த் துளி இது? ஒன்றல்ல பலப் பல துளிகள் கூடி வருகிறதே. இமைகள் பிரிகின்றன.

வான் மழையே, வாழ்த்த வா. இத்துயரெல்லாம் கழுவித் தீர்க்க வா.

எல்லாத் துளிகளும் விரைந்து வருகின்றன. பெரும் இசையோடு வருகின்றன. மழையின் பேரிசை. பேரிசைதான். குழலின் இசையை கரைக்கும் பேரிசை. கானையே கரைக்கும் பேரிசை. அப்பேரிசையில் இருவருமே மூழ்கிக் கொண்டிருக்கிறோம்.

# 5

*முதல் நாள்*

இது கடைசி நாள்.

எல்லாமே முடிகிறது. இவ்வளவு நாட்கள் தங்கியிருந்த முகாம் வீடுகள் பிரித்தாகிவிட்டன. கூரைத்தகடுகளும், ஓட்டுப்பலகைகளும் நீக்கப்பட்ட வீடுகள் எலும்புக்கூடுகள் போல் காட்சியளிக்கின்றன. இதற்குள்ளேதானே இத்தனை கால வாழ்வு? எத்தனை இனங்கள் இதில் வாழ்ந்தோம்? எத்தனை மொழிகள் இதற்குள் பேசினோம்? ஓர் இறப்பும் இங்கே நிகழ்ந்தது. ஒரு பிறப்பும் இங்கே நிகழ்ந்தது. சில அழுகைகள். நிறைய சிரிப்புகள். அனைத்தும் இன்றோடு முடிகின்றன.

இத்தனை நாள் வாழ்ந்த இக்காட்டுக்குள் கடைசியாக ஒருமுறை நுழைய விரும்புகிறேன். நுழைந்து அங்கு வெட்டப்பட்டிருந்த சிறிய அடி மரத்தின் மீது அமர்கிறேன். காடு? இதுவா காடு? ஒருமுறை அண்ணாந்து பார்க்கிறேன். எட்டாவது கண்டமாய் நிழல் போர்த்தி ஈரமும், இருளும், குளுமையும் காத்து வந்த கவிகையைக் காணோம். கண்ணுக்கெட்டிய வரை வெயிலின் விளையாட்டு. அன்று கண்ணா மூச்சி காட்டிக் காணாமல் போகச் செய்த அடர்மரங்கள் இன்று பிணமாகி அந்நிய மண்ணில் ஆடம்பரப் பொருளாகிவிட, இப்போது வெறும் திடல். அழிக்கப்பட்ட காடுகளில் மிடுக்கோடு நிமிர்ந்து நிற்கும் மெங்காரிஸ் மரத்தைக்கூட இங்கு விட்டுவைக்கவில்லை. பெரும் போர் நடந்து முடிந்த களமும் இப்படித்தான் இருக்குமோ? தலைகள் அறுத்தெடுத்துச் செல்லப்பட்டுவிட்ட முண்டங்களின் கழுத்தைப் போல அடிமரத்தண்டுகள் எங்கும் ஒழுங்கற்ற வட்டக் கழுத்துகளுடன் தெரிகின்றன. கண்ணுக்கெட்டிய தொலைவு வரை மரங்களின் பிணக்காடு.

சிள்வண்டின் ஓசைகூட செத்துக் கிடக்கிற இக்காட்டில், காட்டின் குரலான இருவாசிகள் இனி எங்கே ஒலிப்பது? கோடானு கோடிப் பூக்கள் பூத்த இக்கானகம் இனி ஒரு கனியைக்கூட உண்டாக்க முடியாதே? எத்தனை ஆர்க்கிட் மலர்கள் அழிந்துபோனதோ? அத்தனை சறுக்கிகளும் இனி எங்கிருந்து எங்கு சறுக்கிப் பறக்கும்? காட்டுக் கொடிகள் இனி எம்மரத்தில் ஏறும்? மீன்கள் உரையாடிச் சென்ற நீரோடைகள் ஓடிய தடங்கள்கூட தெரியவில்லை. கான யானைகள் இனி எதை

ஒடித்துத் தின்னும்? விலங்குகள் எங்கு மறைந்து வாழும்? துபையாக் களும் பறக்கும் வீமர்களும் இனி அருங்காட்சியகத்திலா வசிக்கப் போகின்றன? இக்காட்டின் கதி இனி என்ன? இனிமேல் இது மழைக் காடல்ல. வெறும் வெயிற்காடு.

டிராக்டரால் மேல்மக்கு கீறப்பட்டு வெளித்தெரியும் நிலத்தின் நிணம்மீது நடந்து திரும்புகிறேன். அழுது நிற்கும் ஏதிலிக் குழந்தைகள் போல் ஆங்காங்கே தனித்தனியே நிற்கும் இளமரங்கள். இவையாவது இனி இயற்கை சிரிக்க மரங்களாகுமா? அல்லது வணிகம் சிரிக்க செம்பனைத் தோட்டமாகுமா? இதைத் தீர்மானிக்கப்போவது இந்த இலைகளின் பச்சையல்ல. டாலர்களின் பச்சை.

வண்டி புறப்பட நிற்கிறது. ஏறி அமர்ந்திருக்கும் அன்னாவின் இறுகி யிருக்கும் முகம் பிரிவுத்துயரைச் சொல்லாமல் சொல்லிக்கொண்டிருக் கிறது. அன்னாவிடம் ஏதாவது பேச்சுக் கொடுத்தால் போதும். உடைந்து விடலாம். இத்தனை பேர் இருந்த இவ்விடத்தில் எங்கள் இருவருக்கும் மட்டும்தானா இப்பிரிவுத் துயர் வாய்க்கவேண்டும்? இருப்பினும் இவ்விடத்தை முன்னிருந்த இயல்பான நிலைக்கே தந்துவிட்டுப் போகிறோம் என்கிற ஆறுதல். யார் இயல்பை யார் தருவது? இனி அதுவாகவே எடுத்துக்கொள்ளும். ஆனால் எடுத்துக்கொள்வதற்கும் இங்கு என்ன இருக்கிறது? எல்லாமே காலியாகிவிட்டது. இறுதியாளாக வண்டியில் ஏறி அமர்கிறேன். வண்டி நகர்கிறது. இருபுறமும் பார்வை படர்கிறது. எங்கெங்கு காணினும் வெறுமை. இங்கு நுழையும்போது இருந்த கான் காட்சி மனக்காட்சியாய் விரிகிறது. கான் காட்சி? இன்று கான் தொலைத்த காட்சி.

இன்று முன்னிரவுக்குள் சண்டகான் போய்ச் சேர்ந்துவிடலாம். இது மாலை நேரம் போலவே தெரியவில்லை. கருமுகில் கூட்டம் அந்தளவுக்கு இருளைத் திரட்டி வருகிறது. போவதற்குமுன் பிலிபவை சந்தித்துவிட்டுப் போகவேண்டும். அவர் பழைய நுழைவுச்சாவடியில் காத்திருப்பார். இவ்விடத்தைவிட்டுப் பிரிவதற்கே இவ்வளவு வருத்தம் இருக்கும்போது பிலிபவிடம் எப்படிச் சொல்லிவிட்டுப் பிரியப் போகிறோம் என்றே தெரியவில்லை. ஓமரும் இதைத்தானே சொன்னார். ஜோஸைவிட்டுப் பிரிந்ததைவிட அதிக மனத்துணிவை பிலிபவை விட்டுப் பிரியும்போது எதிர்கொள்ள வேண்டியிருக்கும்.

வண்டி திடீரெனக் குலுங்கி நிற்கிறது. மீண்டும் அதை இயக்கும் போது வண்டியிலிருந்து வேறுபட்ட ஒலி. என்ன ஆயிற்று என விசாரிக் கிறார் லியோங். பெரிதாக ஒன்றுமிருக்காது. முகாமுக்குப் போய் பார்த்துக்கொள்வோம் என்ற ஓட்டுநர் இப்போதைக்கு வண்டியை வேகமாகச் செலுத்த முடியாது என்கிறார். வண்டி மெதுவாகத்தான் சென்றுகொண்டிருக்கிறது. அங்கு போய் இதைப் பழுதுநீக்கி புறப்பட கூடுதலாக ஓரிரு மணி நேரமாவது ஆகலாம். அந்நேரத்தை அங்குக்

கழிப்பதைவிட பிலியவுடன் கழிக்கலாம். எங்களை நுழைவுச்சாவடியில் இறக்கிவிட்டு விட்டால் நன்றாக இருக்கும். அவர்களுடைய முகாமி லிருந்து சண்டகான் திரும்பும் வழியில்தான் நுழைவுச்சாவடியும் இருக்கிறது. அவர்கள் வண்டியைப் பழுதுநீக்கிச் சண்டகான் திரும்பும் போது எங்களையும் அப்படியே ஏற்றிக்கொண்டு போய்விடலாம். லியோங்கிடம் கேட்கிறேன். நல்ல மனிதர். ஒத்துக்கொள்கிறார்.

பிலியவ் எங்களுக்காகக் காத்துக்கொண்டிருந்தார். அந்நுழைவுச் சாவடியின் காவலர் குடியிருப்பு இன்னும் பிரிக்கப்படவில்லை. குடிலுக்குள் அமர்ந்திருக்கலாம் வாருங்கள் என அழைக்கிறார். அது மேலே படுக்கையும் கீழே குசினியும் கொண்ட குடில். குசினியில் போதுமான அளவுக்கு விறகுகள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. அது பழைய காவலர் விட்டு சென்றது. ஓரத்தில் சில நீப்பா ஓலைகளும் அதன் அருகில் பிலியவின் உடைமைகளும் இருக்கின்றன.

என்ன பிலியவ், இங்கேயா தங்கியிருக்கிறீர்கள்?

மழை வரும் என்பதால் இன்றிரவு இங்கு தங்கிவிட்டு நாளை புறப்படலாம் என்று வந்தேன் என்கிறார். மழை எந்நேரத்திலும் பெய்யப்போகிறேன் என்பதுபோல அச்சுறுத்திக் கொண்டிருக்கிறது. மழை வலுப்பதற்குள் செம்பனைத் தோட்டத்தைக் கடந்துவிட்டால் நன்றாக இருக்கும். உள்ளே சென்றமர்கிறோம். பிலியவ் எங்கிருந்தோ காடா விளக்கைத் தேடி எடுத்துவருகிறார். நல்வாய்ப்பாக அதில் கொஞ்சம் மண்ணெண்ணெய் இருக்கிறது. இருட்டை விரட்டக் கொஞ்சமாவது உதவும். மணியும் ஆறாகி விடுகிறது. மழைத்தூறலும் தொடங்கி விடுகிறது. பிலியவ் வெளியே சென்று அண்ணாந்து பார்த்துவிட்டு வருகிறார். முகத்தில் யோசனையின் நீற்றல். எங்களைப் பார்த்தவாறே சொல்கிறார். நீங்கள் அங்கேயே இருந்துவிட்டுப் போகும்போது என்னைப் பார்த்துவிட்டுப் போயிருக்கலாம். இம்மழை பெரும் மழையாக இருக்கப்போகிறது.

அவர் முகத்தில் உண்மையான கவலை. அவருக்கு ஆறுதலாகச் சொல்கிறேன். இல்லை பிலியவ், அவர்கள் இரண்டு மணி நேரத்தில் வந்துவிடுவார்கள். அவர்களுக்கும் சண்டகான் போகவேண்டிய அவசியம் இருக்கிறது.

ஆனால் மூன்று மணி நேரமாகியும் வரவில்லை. அட்டூர் பேசியில் அழைப்பு வருகிறது. லியோங்தான் பேசுகிறார். வண்டியின் பழுதை நீக்கியாகிவிட்டது. ஆனால் இம்மழையில் கட்டாயமாகப் போக முடியாது. சிக்கல் என்னவென்றால் இப்போது வண்டியும் அங்கு வரமுடியாது. மழையைப் பார்த்தீர்கள் அல்லவா? வந்தால் சாலைகூட எதிரில் தெரியாது.

லியோங் சொல்வது உண்மை. மழை அவ்வளவு வலுவாகப் பெய்து

கொண்டிருக்கிறது. லியோங் மேலும் தொடர்கிறார். நீங்கள் நேரே இங்கேயே வந்திருக்கலாம். இப்போது பாருங்கள், எவ்வளவு இக்கட்டு. அங்கு உங்களால் எப்படி இருக்க முடியும்?

கவலைப்படாதீர்கள். இவ்விடம் ஒன்றும் அவ்வளவு மோசமில்லை. பிலியவ் எங்கள்கூடவே இருக்கிறார். சமாளித்துக் கொள்வோம். எப்படியும் நாளை காலையில் போய்விடலாமா?

போய்விடலாம். இரவு தூங்குவதற்குமுன் மழை குறைந்தால்கூட வண்டியை அனுப்புகிறேன். இங்கு வந்துவிடுங்கள். நல்ல இரவு என்று கூறி பேசியை வைக்கிறார்.

அட்டூர் பேசியின் மின்கலத்தை உடனே அணைத்து வைக்கிறேன். இங்கு இதை மின்னேற்றம் செய்ய எவ்வசதியும் இல்லை. எனவே சேமித்து வைக்க வேண்டியது அவசியம். சன்னமாக எரிந்து கொண்டிருக்கிறது காடா விளக்கு. வெளிச்சத்தில் தெரிந்த பிலியவின் முகத்தில் சுரத்தே இல்லை. என்ன பிலியவ், என்னவோபோல் இருக்கிறீர்களே?

பெருமூச்சு விடுகிறார். இது சாதாரண மழையில்லை என்று என் மனது சொல்கிறது. அந்த அச்சம்தான். இருவரும் இங்குவந்து மாட்டிக் கொண்டு விட்டீர்களோ என்று தோன்றுகிறது. எந்த வசதியும் அற்ற இவ்விடத்தில் உங்களுக்குத்தான் சிரமம். முதலில் இன்றைய இரவு உணவைச் சொல்லுங்கள்.

உடனே அன்னாவின் குரல் குறுக்கிடுகிறது. என்னிடம் ஒரு கும்மாசின் பெரிய பொட்டலம் இருக்கிறது பிலியவ். பயணத்தில் உதவும் என்று எடுத்து வைத்திருக்கிறேன். இன்றிரவு மட்டும்தானே, இதை வைத்துச் சமாளித்துக் கொள்ளலாம்.

பிலியவ் சிரித்துக்கொண்டே எழுந்து சென்று நீப்பா ஓலைகளை எடுத்துத் தட்டுகிறார். பிறகு இரண்டு கழிகளை எடுத்துக்கொண்டு மேலேறுகிறார். அக்கழிகளை ஒரு சுவர் ஓரமாக நான்கு அடி இடைவெளிவிட்டு குறுக்கே தடுத்து ஓலைகளை வைத்து அடைக்கிறார். அது ஓர் அறையாக மாறுகிறது. அன்னாவுக்கான அறை.

இரைச்சலாக இருந்த மழை பேரிரைச்சலாக மாறியிருந்த வேளை உப்பு ரொட்டிகளைப் பிரித்துச் சாப்பிடுகிறோம். இம்மேட்டுக்குக் கீழேதானே முதன்முதலில் இங்கு வந்தபோது கூடாரம் அமைத்துத் தங்கியிருந்தோம்? இப்போது இறுதி நாளன்றும் இதே இடத்தில் தங்க நேர்ந்திருப்பது நிகழ்தகவா? இருவரிடமும் அந்த முதல்நாள் கதையைச் சொல்லத் தொடங்குகிறேன். இரவில் தொலைந்து காலையில் மீண்டது வரை சொல்லி முடித்தபோது காடா விளக்கும் வெளிச்சத்தைத் தொலைத்திருந்தது. பேச்சையும் அத்தோடு தொலைத்துக்கொண்டு அவரவர் இடத்தில் படுத்துக்கொள்கிறோம். ஆனால் மேலே தகரக் கூரையில் மழையின் பேச்சு மட்டும் தொலையவே இல்லை.

இரண்டாம் நாள்

காலையில் கண் விழித்தோம் என்பது ஒரு சொல் வழக்குத்தான். விழித்தால் இரவு போலவே இருக்கிறது. டிட்டோனி கடிகாரம் மணி எட்டு என்று சொன்னதால் நம்ப வேண்டியிருக்கிறது. மழை ஓயவில்லை. காலை அவசரத்தைக்கூட மழையில் நனைந்துகொண்டே முடிக்க வேண்டியிருந்தது. பிலியவ் முடைந்து கொடுத்திருந்த நீப்பா ஓலை தலைக்கவசம் மழையிடம் தோற்றுவிட்டது. இதற்கும் மேலும் நனைய என்ன இருக்கிறதென மழையிலேயே குளியலை முடிக்கிறேன். குளியலை முடித்து உடை மாற்றிக்கொண்டு அட்டூர் பேசியை இயக்கி லியோங்கை அழைக்கிறேன். எப்போது போகலாம்?

லியோங்கின் குரலே நம்பிக்கையற்று இருக்கிறது. இப்போது முடியாது போலிருக்கிறது. தோட்ட அலுவலகத்தில் விசாரித்தேன். நிலைமை மோசமாக இருக்கிறது. அவர்களுடைய தரைப்பாலத்துக்கு மேல் ஆற்றில் நீர் ஓடிக்கொண்டிருக்கிறதாம். உலுப் பகுதியில் நல்ல மழை என்று நினைக்கிறேன். வெள்ளம் வடிந்தால்தான் போகமுடியும். இப்போது உங்களை நினைத்தால் கவலையாக இருக்கிறது. நடந்தாவது இங்குவந்து சேர்ந்துவிடுங்கள். இம்மழையில் வண்டியை அனுப்ப இயலாது என்று உங்களுக்கே தெரியும்.

மழை கொஞ்சம் ஓயட்டும், எப்படியாவது வர முயல்கிறோம் என்று சொல்லி வைத்துவிட்டு அலுவலகத்தை அழைக்கிறேன். குணாதான் எடுக்கிறார். நேற்றே ஏன் வரவில்லை? அங்கு தனியாக மாட்டிக் கொண்டிருப்பதாக லியோங் சொன்னார். இது தேவையா உங்களுக்கு? இப்போது என்ன செய்யப் போகிறீர்கள்? குணாவின் கேள்விகளுக்கு மழை ஓய்ந்தவுடன் அங்கு புறப்பட்டுப் போய் விடுகிறோம் என்ற பதிலைச் சொல்லிவிட்டு மறவாமல் மின்கலத்தை நிறுத்தி வைக்கிறேன். ஆனால் மழையை நிறுத்த முடியுமா என்றுதான் தெரியவில்லை.

அன்னாவும் மழையிலேயே குளித்து முடித்துவிட்டு ஆடை மாற்றி யிருந்ததைக் கவனிக்கிறேன். மழை சற்று ஓய்ந்தால் பிலியவிடம் சொல்லிவிட்டுப் போய்விடலாம். ஆனால் பிலியவை இங்கே காணோம். அவர் சென்று ஒரு மணி நேரம் ஆகியிருந்தது. ஒதுங்கச் சென்றிருக்கிறார் என்று நினைத்தது தவறு. மழையோ வலுத்த இடியுடன் பெய்து கொண்டிருக்கிறது. இருளால் நிறைக்கப்பட்டிருக்கும் மாரிக்காலப் பகலில் செய்மை, அண்மை எதுவும் புலப்படவில்லை. இதில் பிலியவை எங்கே சென்று தேடுவது என்று நினைத்துக்கொண்டிருக்கும்போதே அவர் வருகிறார்.

அடை வெயில், மழை எதுவுமே இவருக்குப் பொருட்டில்லை. அது என்ன தலையில் ஒரு மழையில்கூட மேலாடை இன்றித் திரிகிறார். விறகுக்கட்டை கட்டு, விறகுக்கட்டைப் போல? உள்ளே நுழைகிறார்.

அல்ல. அத்தனையும் சவாரிக்கட்டை கிழங்குகள். பழைய முகாம் வீட்டுக்குக் கீழேயிருந்து தோண்டி எடுத்து வந்திருக்கிறார். இந்த மழையில் போய் இதை எடுத்து வரவேண்டுமா பிலியவ் என்று இருவருமே செல்லமாகக் கடிந்துகொள்ள, சிரிக்கிறார். நீங்கள் என் விருந்தினர். வெறும் வயிற்றோடு இருக்கவிட முடியுமா?

இக்கிழங்குகளைக் கொண்டு ஒரு வாரத்துக்குச் சமாளிக்கலாம். அவ்வளவு கிழங்குகள். இங்கே வந்து தங்கிப் பிலியவுக்கு அதிக சிரமத்தைத் தந்துகொண்டிருக்கிறோம். மெதுவாக அவரிடம் கூறுகிறேன். நாங்கள் லியோங் முகாமுக்குச் சென்று விடலாம் என்று இருக்கிறோம் பிலியவ்.

பிலியவ் ஒருமுறை வானைப் பார்த்துவிட்டுச் சொல்கிறார். நீங்கள் என்ன போவது? மழை நின்றால் நானே உங்களை அனுப்பி வைத்து விடுவேன். ஆனால் மோசமான மழையாக இருக்கிறது. நானே இதுபோன்ற மழையைப் பார்த்துப் பல ஆண்டுகள் ஆகின்றன. எதற்கு இந்தளவுக்கு மழை கொட்டுகிறது என்றே தெரியவில்லை. இம்மழையில் இருவரும் வெளியேறிச் செல்வது அதுவும் நடந்தே செல்வது நல்லதல்ல. இடி, மின்னலைப் பாருங்கள். கொஞ்சமாவது நிற்கட்டும். பார்ப்போம்.

காலைக்கும் பகலுக்கும் பொதுவாக ஒருவேளை உணவு ஆயத்த மாகிறது. உப்புப் போட்டு அவித்த கிழங்கு. பிலியவ் வைத்திருந்த இரு பாத்திரங்களும் உப்பு பொட்டலமும்தான் சமையலுக்கு மூலம். மூவரும் சாப்பிட்டுக்கொண்டிருக்கிறோம். அன்னாவின் வாய் மட்டும் சாப்பிடுவதோடு நிற்கவில்லை. பிலியவ், நாம் இருவரும் கம்போங் காரர்கள். மணி அரிசிகூட இல்லாமல் நாட்களைக் கழித்துவிட முடியும். ஆனால் பாவம் நகரத்துக்காரர் பாடுதான் திண்டாட்டம். சுவையான உணவில்லாது பார்ப்பதற்கே பாவமாக இருக்கிறது.

உடனே மறுத்துச் சொல்கிறேன். என்னாலும் இப்படி வாழமுடியும்.

அன்னா சிரிக்கிறாள். அதுதான் ஒரு துண்டுக் கிழங்கை அரைமணி நேரமாகக் கொறிக்கும் அழகிலேயே தெரிகிறதே. பிலியவும் சிரிப்பில் சேர்ந்துகொள்கிறார்.

ஆனால் வானம் சிரிக்கவே இல்லை. அன்னா வழமைபோல் வானொலிக்குள் புகுந்துவிடுகிறாள். அடைமழையில் மூவர் சிக்கித் தவித்துக்கொண்டிருப்பதைக் கிஞ்சிற்றும் உணராமல் இன்றைக்குப் பார்த்து எல்லாப் பாடகர்களும் மகிழ்ச்சிப் பொங்கப் பாடிக்கொண்டி ருக்கிறார்கள். ஆனாலும் வெறுமையை விரட்ட வானொலிதான் உதவிக்கொண்டிருக்கிறது. இடையே இந்தோனேசியாவிலிருந்து ஓர் அரைவட்டத் திருப்பலில் வானொலியின் முள் சபாவுக்குப் பயணப் படும்போது மழை இப்போதைக்கு நிற்காது என்ற நம்பிக்கையைத் தொடர்ந்து தந்து கொண்டேயிருக்கிறார்கள். நன்றியைச் சொல்லி

விட்டு முள் மீண்டும் இந்தோனேசியாவுக்குப் பயணப்பட்டுவிடுகிறது.

பிலியவும் வழக்கம் போல எங்கேயோ பயணப்பட்டிருந்தார். இவரை நடக்கவே கூடாது என்று யாராவது தடை விதித்தால் அது அவருடைய இறுதி நாளாகக்கூட மாறிவிடலாம். இவர் தோண்டு வதற்கு இம்மழையில் இன்னும் என்ன கிழங்கு வைத்திருக்கிறார்? ஆனால் அவர் திரும்பி வந்தபோது எதிர்பார்த்ததுபோலவே சும்மா வரவில்லை. ஓர் ஓலைக்கட்டோடு வந்து சேர்கிறார். அத்தனையும் இளம் பலாஸ் ஓலைகள். இதையுமா சாப்பிடுவார்கள்? ஒருவேளை இதைச் சாப்பிடச் சொன்னால் லியோங் மூகாமூக்கு ஓடியே போய்ச் சேர்ந்துவிடலாம். இது எதற்குப் பிலியவ், சமைக்கவா?

இதையெல்லாம் யாராவது சாப்பிடுவார்களா? அவரிடமிருந்து சிரித்துக்கொண்டே பதில் கேள்வி வருகிறது. அப்பாடி.... நிம்மதி. ஆனால் இதை வைத்துக்கொண்டு இவர் என்ன செய்யப் போகிறார்? கேட்கலாம் என்று வாயெடுத்தபோது அன்று சப்போ மரப்பாலை வீணடித்தது நினைவுக்கு வருகிறது. ஒழுங்காக இவரிடம் எதையும் கேட்காமல் என்ன செய்கிறார் என்று மட்டும் பார்ப்போம். அன்று தீர்மானித்தது போல் மாணவராய் மட்டும் இருப்போம். அப்போது தான் ஓர் ஆர்வமும் இருக்கும். நகராத இப்பொழுதும் நகரும். பிலியவ் அந்த ஓலைகளுடன் கீழே அமர்கிறார்.

அவருடைய கையில் கைப்பருமனுள்ள மரத்தாலான தடியை வைத்திருக்கிறார். ஒன்றரையடி உயரம் இருக்கும். இளம் பலாஸ் ஓலையை எடுத்து விரித்து தடியைப் படுக்கை வசத்தில் வைக்கிறார். ஒருமுனை பலாஸ் ஓலையின் அடிப்பகுதியில் இருக்கிறது. விரிந்திருக்கும் ஓலையை ஒரு பக்கத்திலிருந்து தடியின் மீது அழுந்தப் படியுமாறு சுருட்டிக் கொண்டே வருகிறார். தடியை உருட்ட அதைச் சுற்றி ஓலை நெருக்கமாக சுருண்டுகொண்டே வருகிறது. முழுவதும் சுருண்டவுடன் நிமிர்த்துகிறார். இப்போது அத்தடி நடுவில் இருக்க முழு ஓலையும் அத்தடியைச் சுற்றி மூடியிருக்கிறது. கற்றாழை நாரைக் கையிலெடுக் கிறார். ஓலையின் அடிப்பாகத்திலிருந்து நுனிவரை நெருக்கமாக சுற்றிக்கொண்டே வந்து மேல் நுனியருகே முடிச்சிட்டு முடிந்தவுடன் ஓலையின் நடுவில் பொதிந்திருக்கும் தடியை அசைத்து வெளியே உருவி எடுக்கிறார். ஓலை இப்போது நீளமான பெரிய புனல் போல இருக்கிறது.

இவ்வளவு நேரம் இத்தனை சிரமம் எடுத்து இம்மனிதர் கடைசியில் ஒரு 'பீப்பி'தான் செய்திருக்கிறாரா? பீப்பியை வைத்துவிட்டு எழுந்து போகிறார். அதைக் கையிலெடுத்துப் பார்க்கிறேன். அடியில் ஓட்டை இல்லை. எப்படி ஊதுவார்? பிலியவ் திரும்பி வந்தபோது அவருடைய கையில் மரக்கலன். அதன் அடையாளம் தெரிகிறது. குருவிங் எண்ணெய் சேமித்து வைத்திருக்கும் மரக்கலன். குருவிங் எண்ணெய் கருப்பாக இருந்தாலும் திரவமாக இல்லாமல் பசையைப்போல இருக்கிறது.

உறைந்து இறுகி விட்டதா? விரலால் தொட்டுப் பார்க்கிறேன். கொழகொழப்பாய் இருக்கிறது. ஆனால் உள்ளே பிசிறாய் என்னவோ இருக்கிறது. பிலியவ், மனசில் ஓடும் அய்யங்களின் வரிகளைப் படித்துவிடுகிறார்.

அது குருவிங் மர எண்ணெய்தான். இற்றுக் காய்ந்த மரச்செத்தைகளை உதிர்த்து அதில் ஊற வைத்திருக்கிறேன். அதனால்தான் அப்படி இருக்கிறது என்று சொல்லிவிட்டுக் கலனில் இருந்த பசையினைப் பலாஸ் ஓலைக்குள் இட்டு நிரப்பத் தொடங்குகிறார். அப்படியென்றால் இது பீப்பி இல்லையா? கடைசிவரை மாணவனாக இருப்பது எவ்வளவு சிரமமாக இருக்கிறது? அடக்கம் அறிவுக்குள் உய்க்கட்டும்.

உள்ளே அப்பசையை இட்டு, அது நிரம்ப பிலியவ் அதைத் தடியாலேயே அழுத்தி கிடித்துக்கொண்டு வருகிறார். ஓலைக்கு எந்தச் சேதமும் ஏற்பட்டுவிடாதவாறு கவனமாகக் கிடிக்கிறார். அதன் மேல்பகுதியில் ஓரடிக்கும் சற்று மேலாக வந்தவுடன் கிடிப்பதை நிறுத்திக்கொள்கிறார். உச்சியில் நீட்டிக்கொண்டிருந்த ஓலை மடல்களை கீழ் நோக்கி இழுத்து மடக்கி சிறு கத்தியால் மடக்கிய மடல்களை ஒழுங்கான வடிவத்தில் வெட்டி விடுகிறார். இப்போது அது புனல் வடிவமும், விரிந்த மேல் விளிம்பும் கொண்ட மலர்ந்த ஊமத்தைப் போல இருக்கிறது.

ஒரு காலி டப்பாவை எடுத்து அதில் மண்ணை நிரப்பி இந்த ஓலைப்புனலை அதில் குத்திவைக்கிறார். ஒலிம்பிக் சுடர் போல் அது குத்திட்டு நிற்கிறது. இது என்ன பிலியவ் என்ற கேள்வி நா நுனிவரை வந்துவிடுகிறது. அடக்கம். அடக்கம்.

அவர் எழுந்து சென்று அடுப்பில் கனன்றுகொண்டிருக்கும் கொள்ளிக் கட்டை ஒன்றை எடுத்து வந்து அதை ஊதி நெருப்பை எழுப்பிப் புனலின் நடுவே இருந்த பசையில் படுமாறு வைக்க சட்டென்று தீப்பிடித்து ஒலிம்பிக் சுடர் போலவே எரியத் தொடங்குகிறது. முதலில் வாயடைத்துப் போய் இறுதியில் கல்லாக இறுகி நிற்கிறேன்.

எப்படி அழகாக ஒரு விளக்கை உருவாக்கிவிட்டார்? காடா விளக்கின் எண்ணெய் நேற்றே தீர்ந்துவிட்டது என்பது இப்போதுதான் நினைவுக்கே வருகிறது. ஆனால் அதை இவர் மறக்கவில்லை. எவ்வளவு முன்யோசனை. மேலேயிருந்து கைத்தட்டல் ஓசை கேட்கிறது.

நம்பவே முடியவில்லை பிலியவ். இப்படியெல்லாம்கூட விளக்கு செய்ய முடியுமா என்று கேட்டுக்கொண்டே கீழே இறங்கி வந்தபோதுதான் இவ்வளவு நேரமும் அன்னா இதைக் கவனித்துக் கொண்டிருந்திருப்பது தெரிகிறது. பிலியவிடம் புன்னகை படர்கிறது. பிறகு சொல்கிறார். பழங்காலத்தில் இப்படித்தான் இரவைச் சமாளித்தோம். மண்ணெண்ணெயைக் கண்ணாலேயே பார்த்ததில்லை. பிலியவ் குரலில் வழிகின்ற பெருமிதம் நியாயமான பெருமிதம்.

திகைப்பை அடக்கமுடியவில்லை. இது எத்தனை மணி நேரம் எரியும் பிலியவ்?

அளவைப் பொறுத்து ஆறு மணியிலிருந்து எட்டுமணி நேரம் வரை எரியும். இது ஏழுமணி நேரத்துக்குக் குறையாது என்று சொல்லிவிட்டு அன்னாவிடம் உன்னுடைய கம்போங்கில் இதெல்லாம் இல்லையா என வினவுகிறார்.

இல்லை பிலியவ். அங்கு மண்ணெண்ணெய், மின்சாரம் எல்லாம் நுழைந்து வெகு காலமாகிவிட்டது.

பலாஸ் ஓலையின் தீத் தாங்கும் ஆற்றலை ஏற்கனவே அறிந்திருந்ததால் அதுகுறித்து எக்கேள்வியையும் எழுப்பாமல் ஓலைக்குள் எரியும் சுடரை வெகுநேரம் உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

இரவு உணவுக்குக் கிழங்கைத் துண்டு துண்டுகளாக வெட்டி நன்கு சுட்டு அன்னா எடுத்துவந்தபோது காலையைபோல் அல்லாமல் நன்கு சாப்பிடுகிறேன். நாவின் சுவையைப் பசி எங்கோ விரட்டி விட்டது. இப்போது இதுவே சுவையாகத் தெரிகிறது. இன்றைய இரவும் இங்குதான் என்பது அய்யத்துக்கு இடமின்றி உறுதியாகிவிட்டது. அட்டூர்பேசியை இயக்கவே இல்லை. இயக்கி என்ன ஆகப்போகிறது? இந்த அடை மழையில் நடந்து போவதைவிட இங்கேயே இருப்பதுதான் பாதுகாப் பெனப் பிலியவ் சொல்லியிருந்தார். இவருடைய வழிகாட்டுதல் தவறவே தவறாது. குருவிங் எண்ணெய் விளக்கு எரியும் வெளிச்சத்தில் குழுமியிருந்தோம். அன்னாவிடம் பிலியவ் கேட்கிறார். உன் கம்போங் பழைய நடைமுறைகளை நிறைய தவற விட்டுவிட்டதோ?

அப்படியெல்லாம் சொல்ல முடியாது பிலியவ். இன்னமும் சில வற்றை விடாமல் கடைப்பிடித்துத்தான் வருகிறோம். அன்னா கூறிக் கொண்டிருக்கும்போதே குறுக்கிடுகிறேன். பிலியவ், அன்னாவிடம் கம்போங் கதை நிறைய இருக்கிறது; அவற்றைக் கேளுங்கள்.

தொராஜா இனத்தின் சடங்கு முறைகளை இன்னொருமுறை கேட்கவேண்டும் என்கிற அவா. அன்னா சொல்லத் தொடங்கும்போது எங்களோடு மழையும் சேர்ந்து கேட்கத் தொடங்குகிறது. இம்மழைக் கென்ன? இதுதான் எல்லாவற்றையும் தொடர்ந்து கேட்டுக்கொண்டிருக் கிறதே. கேட்க வேண்டியதுதான். அதற்காக இப்படித் தொடர்ந்து இருபத்து நாலுமணி நேரத்துக்கு மேலாகவா கேட்டுக்கொண்டே இருப்பாய் மழையே?

**மூன்றாம் நாள்**

எல்லாக் குரல்களையும் ஒய்த்த மழையின் தனிமைக் குரல் இன்று காலையிலும் ஓயவில்லை. இங்கே இறங்கிவந்து பாரேன் என்று கீழிருந்து அன்னாவின் குரல் அழைக்கிறது.

குரலில் பதற்றம். இறங்கிச் சென்று பார்த்ததும் உள்ளுக்குள் உதறலா கிறது. நாங்கள் இருந்த மேட்டுநிலத்தைச் சுற்றிலும் ஒரே வெள்ளம். ஓடை இருந்த தடயமே தெரியவில்லை. லோக்கன் ஆறு இடம்மாறி வந்துவிட்டதா? முன்பு வீடிருந்த மேட்டைத் தொடுமளவுக்கு நீர் நிரம்பி நிற்கிறது. அவ்விடத்திலிருந்து ஓடைக்குச் சரிந்திறங்கும் பாதையே தெரியவில்லை. தொலைவில் மரவள்ளி இலைகளின் உச்சிப்பரப்பு மட்டும் தெரிகிறது. இம்மழை இப்படிப் பெய்துகொண்டிருந்தால் என்னவாகும்? அசட்டுத்தனமாக இங்குவந்து மாட்டிக் கொண்டு விட்டோமோ? எப்படியாவது இங்கிருந்து வெளியேறிவிட வேண்டும். ஆனால் இந்த பிலியவ் எங்குபோனார் என்றே தெரியவில்லை. பேசியை இயக்கி லியோங்கை அழைக்கிறேன்.

உங்கள் இருவரையும் பற்றிதான் நினைத்துக்கொண்டிருந்தேன். அங்கே எப்படி நிலவரம் என்று விசாரிக்கிறார். சொல்கிறேன். அதற்கு அவர் இங்கேயும் தொழிலாளர் குடியிருப்பைச் சுற்றி வெள்ளம் புகுந்து விட்டது. எல்லோரும் சாலையோரம் இருக்கும் அலுவலகத்துக்கு வந்துவிட்டார்கள். அத்தனை பேருக்கும் தற்காலிகக் குடில் அமைக்கும் வேலை நடக்கிறது. இப்போது நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? எப்படியாவது இங்கு வந்துதானே ஆகவேண்டும். முயற்சி செய்யுங்கள், என்று சொல்லிவிட்டு வைக்கிறார். அலுவலகத்தைத் தொடர்பு கொள்ளலாம் என்று நினைக்கையில் கீழேயிருந்து பிலியவின் குரல் கேட்கிறது. மனிதர் எங்கே சென்றுவிட்டு வருகிறார்?

உங்களைப் பத்திரமாக கொண்டுபோய்ச் சேர்த்துவிட வேண்டு மென்று எண்ணிச் சாலை எப்படி இருக்கிறது என்று பார்க்கப் போயிருந்தேன். கலோய் மீன்குட்டைக்குப் பிரியும் முகாம் சாலை யைத் தாண்டிச் சென்றால் இரண்டாவதாக ஓர் ஓடைப்பாலம் வருமே? இன்று அந்தப் பாலமே தெரியவில்லை. அந்தளவுக்கு வெள்ளம் ததும்பி சாலையின் குறுக்கே குட்டி ஆறுபோல் ஓடிக்கொண்டிருக்கிறது. ஒருவேளை அப்பாலம் நீருக்கு அடியில் உள்வாங்கி இறங்கிப் போயிருந்தால் அதைக் கடப்பது ஆபத்தில் முடிந்துவிடும். எனவே நீங்கள் அம்முகாமுக்குப் போவது இப்போதும் சிக்கல்தான்

பிலியவ் சொல்லி முடித்ததும் யோசிக்கிறேன். உடனே அலுவலகத்தை அழைத்து நிலைமையைச் சொல்லிவிட வேண்டியதுதான். குணாதான் எடுக்கிறார். அச்சப்பட வேண்டாம். மழை சற்று நின்றால்கூட எனக்குத் தெரிவித்துவிடு. உடனே ஓர் ஹெலிகாப்டரை அனுப்ப ஏற்பாடு செய்கிறேன்.

குணாவுடைய இச்சொற்களைக் கேட்டவுடன் பெருமிதத்துடன் கூடிய தெம்பு வருகிறது. நம்மைப் பற்றி இவ்வளவு அக்கறைகொள்ளும் நிர்வாகம் இருக்கும்போது பிறகென்ன கவலை? முதலில் இந்த மழை நிற்கட்டும்.

பிலியவ் ஒரு டப்பாவிலிருந்து எதையோ எடுத்து வருகிறார். கட்டமான உப்புக்கண்டமும், கெளுத்திக் கருவாட்டுத் துண்டுகளும் இம்மழைக்காலத்துக்காகப் பிலியவ் சேர்த்து வைத்திருந்திருக்கலாம். அதைப் பார்த்தவுடனேயே இன்று என்ன சமையல் என்பது அன்னாவுக்கு முடிவாகி விடுகிறது. கிழங்கைக் கஞ்சியாக்கிக் கருவாட்டையும் உப்புக் கண்டத்தையும் அடுப்பில் சுட்டுத் தொட்டுக்கொள்ள ஏற்பாடாகி விடுகிறது. இதுவரை இவற்றைச் சாப்பிட்டதேயில்லை. அதிலும் உப்புக் கண்டமும், கருவாடும் அறவே தொடாத பண்டம். அடர்மழையில் வயிற்றில் பசி கொழுந்துவிட்டெரிய எரிய இன்று சுவை அள்ளுகிறது.

இன்றிரவுக்கான குருலிங் எண்ணெய்த் தீப்பந்தத்தை நானே செய்ய விரும்புகிறேன். பிலியவ் நேற்றுச் செய்தது மனசுக்குள் அப்படியே பதிவாகியிருந்ததால் அவரை அருகே வைத்துக்கொண்டு அதேபோல் செய்து முடிக்கிறேன். பரவாயில்லை. இனி நீயும் காட்டில் வாழலாம் என்று சொல்லிச் சிரிக்கிறார். சுடர் வெளிச்சத்தோடு எரிந்துகொண்டிருக்கிறது.

அன்னா இரவு உணவை எடுத்து வருகிறாள். மீன்சாறு. சாறும் அதில் கிடக்கும் அவிந்த மீனும்தான் உணவு. பிலியவ்தான் எங்கோ சென்று மீனைப் பிடித்துக்கொண்டு வந்திருந்தார். மீனோடு உப்பும், ஊசி மிளகாயும் போட்டு அன்னா சமைத்துக்கொண்டிருந்தபோது ஊசி மிளகாய் எப்படி வந்தது என வியப்போடு விசாரித்தபோது மேட்டுக்குக் கீழே முன்பு வீடிருந்த இடத்துக்குக் கீழே பயிரிடப்பட்டிருந்த ஊசி மிளகாய்ச் செடி வெள்ளத்தில் மூழ்கும் முன்பே பிலியவ்தான் பறித்து வந்து தந்திருக்கிறார் என்பது தெரியவந்தது. எவ்வளவு முன்னேற்பாடு?

இந்தப் பிலியவ் இக்காட்டில் எப்படித் தனியாகச் சமாளித்து வாழுகிறார் என்று முன்பிருந்த வியப்பு குறைந்துகொண்டே வருகிறது. இந்த அடை மழையிலும் ஒரு பொருள்கூட வெளியிலிருந்து வராமல் மூன்றாவது நாளாக உணவு உண்டு வாழ்ந்து வருகிறோம். இவை யெல்லாம் பெரும் மரத்தின் சிறு இலை. இன்னும் மரம் முழுக்க என்னென்ன கமுக்கங்கள் ஒளிந்திருக்கின்றனவோ தெரியவில்லை. ஆனாலும் சிறு அய்யம். இம்மழையில் இக்குடில் இல்லாவிட்டால் இந்த பிலியவ் எங்கே தங்கியிருந்திருப்பார்? இவர் எந்த முகாமிலும் சென்று தங்கும் ஆளும் இல்லையே?

பிலியவிடம் கேட்டபோது முதலில் மெல்லிய புன்னகை அரும்பு கிறது. பிறகே வாய் திறக்கிறார். நான் வழக்கமாக மழைக்காலங்களில் காடுகளில் தங்குவதில்லை. உண்மையைச் சொன்னால் மழைக்கு முன்பே கிளம்பியிருப்பேன். உங்கள் இருவருக்காகத்தான் இங்கே தங்கி விட்டேன். உன்னிடம் வாக்குக் கொடுத்திருந்தேன். அதை மீற முடியுமா?

அப்படியானால் எங்கே போயிருப்பீர்கள் பிலியவ்? கேள்வி கேட்ட அன்னாவைப் பார்த்து இலேசாக முறுவலித்த பிலியவ் அன்னாவின்

தலையில் தன் கையை வைத்து மெதுவாக உலுக்கிவிட்டுச் சொல்கிறார். உன்னை மாதிரியே எனக்கு ஒரு பேத்தி இருக்கிறாள். இம்முறை அவளைப் பார்க்கப் போகலாம் என்றிருந்தேன்.

அப்படியானால் உங்களுக்குக் குடும்பம் இருக்கிறதா பிலியவ்?

இதைக் கேட்டதும் தான் வாயை விட்டுவிட்டதாக நினைத்தாரோ என்னவோ வெகுநேரம் அமைதியாகவே இருக்கிறார். பார்வை கூரைமீதே நிலைகுத்தியிருக்கிறது. மழையில் அதிர்ந்துகொண்டிருக்கும் கூரையைப் போல அவருள்ளும் ஏதோ அதிர்ந்துகொண்டிருக்க வேண்டும். அவர் மனசை அதிகமாகக் குடைந்துவிட்டோமோ? மூவருமே சற்று நேரத்துக்கு எதுவுமே பேசிக்கொள்ளவில்லை. வெகுநேரம் கழித்து பெருமூச்செறிந்த பிலியவ் எங்களை ஆழமாக ஒரு பார்வை பார்க்கிறார். அவர் என்னவோ சொல்லத் தீர்மானித்துவிட்டது தெரிகிறது. பிரியும் உதடுகளில் கவனம் குவிக்கிறோம்.

உங்களிடம் சொல்லாமல் மறைத்து என்ன செய்யப்போகிறேன். எனக்கும் ஒரு குடும்பம் உண்டு. எட்டு குழந்தைகளும் உண்டு. மனைவி இறந்துவிட்டார். அவர் இறந்து பதினைந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. நான் தந்தை சொல் மதிப்பவன். ஆனால் என் குழந்தைகள் அவ்வாறில்லை. எவரும் ஓரிடத்தில் இல்லாமல், பிரிந்து வெவ்வேறு வேலைகளுக்குச் சென்றுவிட்டார்கள். அதிலும் இரண்டுபேர் இது போன்ற காயுபலாக் வேலைக்கே சென்றுவிட்டனர். அதுதான் என்னைத் துயரப்படுத்திய நிகழ்வு.

சற்றுநேரம் அமைதியான பிறகு தொடர்கிறார்.

மனைவி இறந்தபிறகு வீட்டைவிட்டு வெளியேறினேன். பிறந்து வளர்ந்த இக்கானகம் எவ்வளவு பெரியது என்று பார்க்கலாம் என வெளிக்கிளம்பிவேன். இப்படியே திரிந்துகொண்டிருக்கிறேன். உலகையோடே திரிகிறேன். ஆங்காங்கு சிலகாலம் தங்குவேன். மக்களைச் சந்திப்பேன். திரும்பவும் புறப்பட்டு வேறிடம் சென்று விடுவேன். இப்படித்தான் எல்லா இனமக்களின் மொழிகளையும் கற்றுக்கொண்டேன். இன்றுவரை என் தேவைக்கான உணவை இக்காடு தந்துகொண்டுதான் இருக்கிறது. இக்காட்டில் இருக்கும் ஆயிரமாயிரம் பூச்சிகள், பறவைகள், விலங்குகளுக்கான உணவை தந்துகொண்டிருக்கும் காடு என்னை மட்டும் கைவிட்டுவிடப் போவதில்லை. என்ன பேத்தி நான் சொல்வது சரிதானே?

அன்னாவின் தலைமட்டும் ஆடுகிறது. பிலியவ் தொடர்கிறார். இங்கே என் பேத்தி ஒருத்தி பிந்தாசன் பக்கம் இருக்கிறாள். அப்பேத்தியை இம்முறை பார்க்கப் போகலாம் என்றிருந்தேன். உங்களை அனுப்பி வைத்துவிட்டு இனிமேல்தான் போகவேண்டும்.

எல்லாவற்றையும் நாங்கள் கெடுத்துவிட்டோம், இல்லையா பிலியவ்?

அப்படிச் சொல்லாதே. வெகு ஆண்டுகள் கழித்து என் குடும்பத்தோடு வாழ்ந்திருந்த நினைவுகளை நீங்கள்தான் எனக்கு மீட்டுக் கொடுத்திருக்கிறீர்கள். அதற்காக நான்தான் உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்.

இதைச் சொல்லி முடித்ததும் அப்படியே வலுத்த யோசனையில் ஆழ்ந்து விடுகிறார். இதற்குமேல் அவரைத் தொந்தரவு செய்ய விருப்பமில்லை. அவரவர் இடத்தில் படுத்துக்கொள்கிறோம். பிலியல் விழித்தபடியே அமர்ந்திருக்கிறார். அவருக்குத் துணையாக மழையும் விழித்துக் கொண்டிருக்கிறது.

**நான்காம் நாள்**

காலையில் விழிப்பதற்கு முன்னால் ஓசைகள் கேட்கின்றன. பறவைகளின் குரலோசைகள். கேட்டு எவ்வளவு நாட்களாகிவிட்டன? அப்படியானால் மழை நின்றுவிட்டது. படுக்கையிலிருந்து துள்ளி எழுகிறேன். ஆம் மழை நின்றிருக்கிறது. சாம்பல் பூத்திருக்கும் வானம் மங்கலாய் வெளுத்திருக்கிறது. கருமுகில்கள் இன்னும் விலகவில்லை. வெள்ளம் நேற்றைவிட இன்று பெருகியிருக்கிறது. முகாம் வீடிருந்த இடத்தின் விளிம்புவரையிருந்த நீர் இப்போது இன்னும் ஏறிப் பரவி முன்பு வீடிருந்த இடத்திலும் இப்போது வெள்ளம்.

குடிலைச் சுற்றிச் சென்று கிழக்குப் பக்கமாகப் பார்க்கிறேன். பங்கலான் - செம்பனைத் தோட்ட முகாம் சாலையே தெரியவில்லை. எங்கும் வெள்ளம். சொல்லப்போனால் எங்கள் குடில் இருக்கும் பெரிய மேட்டைச் சுற்றி வெள்ளம் பரவியிருக்கிறது. இம்மேடு மட்டும் தீவைப்போல தனித்திருக்கிறது. பிலியல் அருகில் வருகிறார். இவர் இன்னும் இன்றைய பயணத்தைத் தொடங்கவில்லை.

என்ன பிலியல், இவ்வளவு தண்ணீரும் எப்போது வடியும்?

பிலியல் சிரிக்கிறார். வடியுமா? இன்னமும் பெருகும். உள்ளே உலு பக்கம் பெய்திருக்கும் மழையெல்லாம் இங்குதானே வந்துசேர வேண்டும்? லோக்கன் ஆற்றுநீர் கிளைபத்தாங்களில் புக முடியாமல் எதிர்த்து நிற்பதால்தான் இவ்வளவு வெள்ளம். கிளைபத்தாங்கள் நிறைந்து ஓடிக்கொண்டிருக்கவேண்டும். அனேகமாகப் பங்கலானில்கூட வெள்ளம் புகுந்திருக்கலாம்.

வானொலிக்குள் செவியை ஒளித்துக்கொண்டிருந்த அன்னா எழுந்து வருகிறாள். புக்கிட் கரமும் வெள்ளத்தில் மூழ்கிவிட்டதாம். அங்கிருக்கும் படகுத்துறையே கண்ணுக்குத் தெரியவில்லையாம். சாலைகளிலும் சிறுபடகுகள் ஓடும் அளவுக்கு வெள்ளம் என்று செய்தியை மறுவாசிப்பு செய்கிறாள்.

அப்படியானால் நான் நினைத்தது சரிதான். கிளைபத்தாங்களே நிறைந்துவிட்டிருக்கிறது என்கிறார் பிலியல்.

மனிதர்கள் செய்யும் செயலுக்கு இயற்கை நன்றாகப் பழிவாங்கி விடுகிறது இல்லையா பிலியவ்? இப்படிச் சொல்லியதும் நிமிர்ந்து பார்க்கிறார். ஆழ்ந்த உறுதியான பார்வை. சொற்கள் தெளிவாக வெளிப்படுகின்றன.

பழி என்ற சொல் எல்லாம் இயற்கைக்குத் தெரியாது. அது ஒன்றும் மனிதர் அல்ல. அதன் ஒவ்வொரு செயலுக்கும் காரணம் இருக்கும். அது நமக்குத் தெரியாது என்பதால்தான் இப்படியெல்லாம் ஊகித்துக் கொள்ளுகிறோம்.

இல்லை பிலியவ், மனிதர்களால் காடுகள் அழிவது வெள்ளத்துக்கு ஒரு காரணம். அதைத்தான் சொன்னேன்.

நீ சொல்வது உண்மைதான். ஆனால் காடுகளின் அழிவுக்கு முன்னரும் வெள்ளம் வந்திருக்கிறதில்லையா? அது ஏன்? இக்காட்டுக்குள் நிறைய தாழ்நிலங்கள் இருக்கின்றன. கலோப் மீன்குட்டையைப் போல அதெல்லாம். அதிக வறட்சியான கோடை வந்தால் வற்றிப் போய்விடும். நீர் குறைந்துவிடும். அந்நீர்நிலையில் வாழும் மீன்களும் அந்நீரை நம்பி வாழும் உயிரினங்களும் இருக்கின்றனவே? வெள்ளம்வரும் காலங்களில் அந்நீர்நிலைகள் நிரம்பி அடுத்துவரும் சில ஆண்டுகளுக்கு தாங்கும். எனக்குத் தெரிந்து எத்தனையோமுறை வெள்ளம் வந்திருக்கிறது. ஆனால் எங்கள் மக்கள் எவரும் திடீரென வெள்ளத்தில் சிக்கி இறந்ததில்லை. ஏனென்றால் இப்படி ஒன்று நிகழப்போவதை இயற்கை எங்களுக்கு முன்னரே காட்டிக் கொடுத்துவிடும்.

பிலியவ் சொல்வதும் சரிதான். நாம் சொந்த எண்ணங்களை எல்லாவற்றின் மீதும் ஏற்றிப் பார்த்துக்கொண்டிருக்கிறோம். பிலியவ் நீருக்குள் இறங்கிச் செல்கிறார். இவ்வெள்ளத்தில் எங்கே செல்லுகிறீர்கள் பிலியவ்?

என் விருந்தாளிகளுக்குச் சாப்பிட ஏதாவது தேடித்தர வேண்டுமே? சிரித்துக்கொண்டே நீரில் இறங்கிச் செல்லுகிறார். அவர் சாலையை நோக்கிச் செல்லுகிறார். போகப் போக ஆழம் நெஞ்சளவுக்குமாற நீச்சலடிக்கிறார். ஓரிடத்துக்குச் சென்றபின் மீண்டும் முழங்கால் அளவு நீர். அதில் தெற்கு நோக்கி நேராக நடக்கத் தொடங்குகிறார். அப்படியானால் அதுதான் சாலை இருக்குமிடம். இவருக்குச் சிரமத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் இவரைத் தடுக்கவும் முடியாது. முடிவு செய்துவிட்டால் அதைச் செய்துதான் தீருவார்.

அன்னாவின் மெல்லிய குரல் கேட்கிறது. மழை நின்றுவிட்டால் அலுவலகத்தில் சொல்லச் சொன்னார்களே?

ஆமாம் அதை மறந்தே விட்டேன். இம்மழைக்காலம் அட்டுர்பேசிக்கு நல்ல வாய்ப்பாக இருக்கிறது. இயக்கும் போதெல்லாம் பகல் நேரத்தில் கூட பச்சை விளக்கு ஒளிர்ந்துகொண்டே இருக்கிறது. தொடர்பில் குணா கிடைக்கிறார்.

இங்கு மழை நின்றுவிட்டது.

பிறகென்ன கிளம்பி வரவேண்டியதுதானே?

ஒருகணம் என்ன பதில் சொல்லுவது என்று தெரியாமல் திகைக்கிறேன். சுதாரித்துப் பிறகு சொல்கிறேன். ஆனால் வெள்ளம் வடியவில்லை. சொல்லப்போனால் அது இன்னும் ஏறிக்கொண்டே இருக்கிறது. ஒரு தீவைப்போலவே சுற்றிலும் வெள்ளம் சூழ்ந்திருக்கிறது. நீங்கள்தானே மழை நின்றுவிட்டால் ஹெலிகாப்டரை அனுப்பிக் காப்பாற்றி விடுகிறோம் என்று சொன்னீர்கள்.

சற்று நேரம் அங்கு பேச்சே இல்லை. யோசனை செய்கிறார் போலும்.

ஆமாம் சொன்னோம். ஆனால் மோசமான வானிலையால் இன்று எந்த ஹெலிகாப்டரும் பறக்காதாம். அந்நிறுவனத்தில் சொல்லிவிட்டார்கள். இனி நீங்கள்தான் எப்படியாவது வர முயல வேண்டும். லியோங்கைத் தொடர்பு கொண்டு கேளுங்களேன்.

பேசியைத் துண்டிக்கிறேன். லியோங்கைத் தொடர்புகொள்ள எங்களுக்குத் தெரியாதா? அன்னாவின் முகம் செய்திக்காக நோக்கிக் கொண்டிருக்கிறது. விபரம் சொல்கிறேன். சொன்னவுடன் முகத்தில் எக்குறிப்பும் காட்டாமல் விலகிச்செல்லும் அன்னாவையே பார்த்துக் கொண்டிருக்கிறேன். லியோங்கை அழைக்கத் தோணவில்லை. அழைத்து என்ன ஆகப்போகிறது? வெள்ளம் வடிந்தால்தானே அவராலும் ஏதாவது செய்ய முடியும்? பிலியவ் திரும்பி வரும்வரை ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளவில்லை. யோசனை. யோசனை. யோசனை.

அவர் திரும்பி வந்தபோது நன்னீர் கிளிஞ்சல்களை ஏராளமாகக் கொண்டு வந்திருந்தார். இந்த வெள்ளத்தில் இதையெல்லாம் எங்கேதான் தேடிக் கண்டுபிடிக்கிறார்? இதை நீ சாப்பிடுவாய் அல்லவா என விசாரித்து உறுதி செய்துகொள்கிறார். இதைக் கறி வைத்துச் சாப்பிட்டால் சுவையாக இருக்கும். ஒரு மசாலாத்தூளும் இல்லாமல் எப்படிச் சமைக்க போகிறார்கள் என்று தெரியவில்லை. இருந்தாலும் சாப்பிடுவேன் என்று சொல்லியவுடன் பிலியவின் முகம் மலர்கிறது. நல்லதொரு பதிலைச் சொன்னோம். இம்மனிதருக்கு அப்படி என்ன செய்துவிட்டோம்? இப்படி எதையாவது செய்து கொண்டிருக்கிறார்.

கிளிஞ்சல்களைக் கழுவிப் பாத்திரத்தில் கொட்டுகிறார்கள். கொதிக்க வைத்தவுடன் நீரைவடித்து ஓட்டை உடைக்கவேண்டும். உள்ளே அதன் சதைப்பகுதி மிருதுவாக இருக்கும். அதைத் தனியே எடுத்துச் சமைக்கவேண்டும். சிலர் இதனை வழக்கமாக ஊசிமிளகாய் நசுக்கிப்போட்ட உப்புச்சோயாச் சாற்றில் சமைத்துச் சாப்பிடுவார்கள். இங்கு உப்பும், ஊசிமிளகாயும்தான் இருக்கிறது. நேற்று மீனை அவித்துச் சாப்பிட்டதுபோல் செய்துவிடுவார்கள். மூவரும் ஒன்றாக அமர்ந்து ஓடுகளை உடைக்கத் தொடங்குகிறோம். அப்போது வானிலிருந்து

ஏதோ இரைச்சல் கேட்கிறது.

என்ன இரைச்சல் இது? சட்டென்று அன்னா கூவுகிறாள். ஹெலிகாப்டர்... ஹெலிகாப்டர்...

ஆமாம் இது அதன் இரைச்சல்தான். உடனே உள்ளுக்குள் பரவச உணர்வு படர எழுந்து வெளியே ஓடுகிறேன். மேலே அண்ணாந்து பார்க்கிறேன். அதேதான்.

அன்னா... அன்னா... என்று குதூகலத்தில் கூவுகிறேன். அது எங்கள் வீடு நோக்கிப் பறந்து வந்துகொண்டிருக்கிறது. அதைப் பார்த்ததும் அன்னாவின் முகமும் மலர்ந்து விரிகிறது. அது எங்கள் தலை உச்சிக்கு மேலே வந்தபோது மகிழ்வின் உச்சியில் நிற்கிறோம். சில நொடிகள் தான் அம்மகிழ்ச்சி. என்ன இது எங்களைத் தாண்டி வேறு எங்கோ போகிறது? இது இந்தத் திடலில் இறங்கப் போவதில்லையா? திரைப் படங்களில் வருவது போல நூலேணியை இறக்கப் போவதில்லையா? இது எங்களைத்தானே அழைக்க வந்தது? இல்லையோ? இல்லைதான். அது வேறெங்கோ செல்லுகிறது. சென்று கொண்டேயிருக்கிறது. சென்றே விடுகிறது. பார்வையில் இருந்து மறைய அதன் ஒலி மட்டுமே கேட்கிறது. இதுவும் மறைந்துபோகும். எங்களின் நம்பிக்கையைப் போல. இது ஏன் இங்கு வந்திருக்கிறது? இது இராணுவத்தின் உலங்கு வானூர்தியும் அல்ல. வாடகை ஊர்திதான். ஒருவேளை வெள்ளச் சேதத்தை மதிப்பிட வந்த அதிகாரிகளா? எங்காவது ஒரு வெட்டுமர முகாமுக்கு எதேச்சையாக வந்து மாட்டித் தவித்துக்கொண்டிருக்கும் நிறுவன முதலாளியை அழைத்துச் செல்ல வந்ததா? எதுவாக இருந்தாலும் அது நமக்காக வரவில்லை. அது உறுதி.

*மோசமான வானிலையால் இன்று எந்த ஹெலிகாப்டரும் பறக்காதாம். அந்நிறுவனத்தில் சொல்லிவிட்டார்கள்.*

என்ன அருமையான பொய். வெகுநேரம் அசையாது நிற்கிறேன். அன்னாவின் கை தோளில் படர்கிறது. திரும்பிப் பார்த்துச் சொல் கிறேன். தப்பாக நினைத்துவிட்டேன் அன்னா. கேவலம் பணியாளுக் காகவும் சமையல்காரிக்காகவும் ஹெலிகாப்டர் அனுப்பிக் காப்பாற்று வார்களென்ன நினைத்தது எவ்வளவு பெரிய மடத்தனம்.

ஏமாற்றத்துடன் அப்படியே அமர்கிறேன். அன்னாவும் அருகில் அமர்வது தெரிகிறது. அவளுக்கும் ஏமாற்றம் இருக்கலாம். அப்படியே அமர்ந்திருக்கிறோம். இருவரின் தோள்மீதும் ஆதரவாக இரு கைகள் படர்கின்றன.

என்ன இது? இருவரும் எழுந்து வாருங்கள். என்னை நம்புகிறீர்கள் அல்லவா? உங்கள் இருவரையும் இங்கிருந்து வெளியே அனுப்பி வைப்பது என் பொறுப்பு. சமையல் ஆகிவிட்டது. வந்து முதலில் சாப்பிடுங்கள். இன்னும் ஒரே ஒரு நாள் இந்த மழை இப்படி நிற்கட்டும்.

உறுதியாக உங்களை அனுப்பி வைத்துவிடுவேன்.

சொற்கள் இதமாய் வருடிச் செல்லுகின்றன.
மீண்டும் மழை தூறத் தொடங்குகிறது. ஆனால் நண்பகலில்
பாராங்கத்தியை எடுத்துக்கொண்டு மழையில் கிளம்புகிறார். பிலியவ்
செய்யப் போகிறார் என்று தெரியவில்லை. என்ன
பருமனுள்ள கழிகளாக வெட்டிக்கொண்டு சற்றுநேரத்தில் மூங்கில்
மழையும் நிற்கிறது. எதற்கு இந்தக் கழிகள் பிலியவ்? வருகிறார். தோதாக

புணை செய்யப் போகிறேன்.

எல்லாக் கழிகளையும் ஆறு அடி நீளத்திற்கு வெட்டுகிறார். பிறகு வரிசையாக ஆறுக்கு ஆறு என்ற அளவில் குறுக்கும் மறுக்குமாக அடுக்குகிறார். கையோடு அறுத்துக்கொண்டு வந்திருந்த காட்டுக் கொடிகள் பிணைக்கும் கயிறுகளாகின்றன. இறுதியில் ஆறு சதுரத்துக்கு புணை தயாராகிவிடுகிறது.

பிலியவ் தனியொரு ஆளாகத் தூக்கி நிமிர்த்துகிறார். இருவருமே உதவிக்கு ஓடுகிறோம். பிறகு மூவருமாக அதைத் தூக்கிக்கொண்டு நீரை நோக்கி நகர்கிறோம். எதிர்பார்த்த அளவுக்கு எடை இல்லை. இலகுவகை கழிகளாகப் பார்த்து வெட்டியிருக்கிறார். நீரில் இறக்கிய வுடன் மிதக்கத் தொடங்குகிறது.

மீண்டும் மேட்டுக்குச் சென்று ஒரு நீள் கழியை எடுத்து வந்தவர் புணையில் ஏறி நின்றுகொண்டே கழியைத் தரையில் ஊன்றி நகர்த்தத் தொடங்குகிறார். முன்பு மார்பளவு ஆழம் வந்தவுடன் அவர் நீந்தத் தொடங்கிய இடத்தில் இப்போது புணையில் நனையாமல் நின்று கொண்டு செல்லும் பிலியவைப் பார்த்துக்கொண்டே நிற்கிறோம். இப்போது இவர் எங்கே செல்லுகிறார் என்று தெரியவில்லை. ஆனால் திரும்பும்போது உறுதியாக வெறும் கையோடு திரும்பமாட்டார்.

இரவு எட்டு மணிக்கு வானில் வெள்ளிநிற உடுக்கள் பளிச்சிடு கின்றன. அட, இரவு என்பது இப்படித்தானே இருக்கும்? மின்னி மறையும் உடுக்களைப் பார்த்துக் கணக்கிட்டு இனி மழை நிற்கத் தொடங்கிவிடும் என்கிறார் பிலியவ்.

நிற்கட்டும். இவர் சொன்னால் சரியாகத்தான் இருக்கும். கையோடு
வைத்திருக்கும் அட்டூர் பேசியில் சமிக்ஞை கிடைத்துக்கொண்டிருக்
கிறது. ஆனால் தொடர்பு மட்டும் கிடைக்காமல் இருக்கிறது. நண்பகலில்
இருந்தே அலுவலகத்துக்கு எண்களை அழுக்கிக் கொண்டிருக்கிறேன்.
யாருமே எடுக்கவில்லை. மனசுக்குள் ஆத்திரம் கொப்பளிக்கிறது. ஒரே
ஒரு வாக்கியம். ஒரே ஒரு வாக்கியம்தான் அவர்களிடம் பேச
வேண்டும். அதை மட்டும் பேசிவிட்டு வைத்து விடவேண்டும்.

ஹெலிகாப்டர் அனுப்பி எங்களைக் காப்பாற்றியதற்கு நன்றி.

ஆனால் யாருமே எடுக்கவில்லை. இன்று வேலை நாள்தான். காலையில்கூட எடுத்தார்கள். நேரமாக நேரமாக சினம் குறைந்து என்ன ஆயிற்று என்ற கேள்விதான் குடையத் தொடங்குகிறது. குணா வீட்டுக்கு அடித்தால் அங்கும் எடுக்கவில்லை. குவான் வீட்டிலும் எடுக்கவில்லை. என்ன நடக்கிறது?

ட்ட்டுட்...ட்ட்டுட்... ட்ட்டுட்...ட்ட்டுட்...

அட்டுர் பேசியின் அழைப்பொலி. யார் அழைப்பது? அழைப்பை ஏற்க அது ரோஸ்நீனா. எடுத்த எடுப்பிலேயே செய்தி கேள்விப் பட்டாயா? என்ற கேள்விதான் வருகிறது.

என்ன செய்தி நீனா? பகலிலிருந்து அழைத்துக்கொண்டிருக்கிறேன் யாருமே எடுக்கமாட்டேன் என்கிறீர்கள்?

நீனாவிடமிருந்து பட்டென்று பதில் வருகிறது. அலுவலகமே இல்லை. பின் யார் எடுப்பார்கள்? இன்று காலை நம் அலுவலகத்தை ஒப்பந்தத் தொழிலாளர்கள் எல்லாம் சேர்ந்து அடித்து நொறுக்கி விட்டார்கள். பெண்களாக இருந்ததால் எங்களை விட்டுவிட்டார்கள். இப்போது நினைத்தாலும் நடுங்குகிறது. நான் பொதுத் தொலைபேசி யிலிருந்து அழைப்பதால் அதிகம் பேச முடியாது. நீ நகருக்கு வந்தால் அலுவலகப் பக்கம் போய்விடாதே என்று எச்சரிக்கத்தான் அழைத்தேன். உன்னையும் அவர்கள் நிர்வாக ஆளாக நினைப்பார்கள். பெட்டி அக்காவின் வீட்டு எண் தருகிறேன். அவர்கள் முழு விவரமும் சொல் வார்கள். எழுதிக்கொள்கிறாயா?

கணக்காளரான பெட்டி ச்சோங் அக்காவின் எண்களை அழுத்து கிறேன். அதுதான் குவானின் நண்பர் பார்க் முழுப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டாரே? பிறகு என்ன ஆகியிருக்கும்?

பெட்டி ச்சோங் அக்கா பேசிய முதல்வரியே முழுக்கதையின் கருக்கத்தையும் சொல்லிவிடுகிறது. ஏற்றுமதிப் பணம் முழுவதையும் எடுத்துக்கொண்டு பார்க் அமெரிக்காவுக்கு ஓடிவிட்டார்.

பிறகு எந்தக் கதையை எப்படி விவரித்தால் என்ன? ஏறக்குறைய இருபது விழுக்காடு பணத்தை முதலீடாகப் போட்டு ஒப்பந்தக்காரர் களுக்குக் கொஞ்சம் கொடுத்து அமுக்கி வைத்தவர் தன் பெயருக்குப் பணம் வந்தவுடன் மீதி எண்பது விழுக்காட்டையும் சேர்த்து சுருட்டிக் கொண்டு ஓடிவிட்டார். குணா, குவான் இருவரும் என்ன ஆனார்கள் பெட்டி அக்கா?

எப்படியோ செய்தியறிந்து முன்கூட்டியே குணா தலைமறைவாகி விட்டார். குவான் நிலைமைதான் வெகு மோசம். எனக்குக் கிடைத்த தகவலின்படி கைது செய்யப்பட்டுக் காவலில் இருக்கிறார். அதுவும் வெறும் உள்ளாடையோடு அடைத்து வைத்துள்ளார்களாம்.

பெட்டி அக்கா பேசிக்கொண்டே இருக்கிறார். ஆனால் பதில்

பேசமுடியாமல் அதிர்ச்சியில் தொண்டைக்குள்ளேயே மொழி முடங்கிக் கிடக்கிறது.

நான் பேசுவது கேட்கிறதா?

கேட்கிறது. சொல்லுங்கள் அக்கா.

உன்னை நினைத்தால் எனக்குப் பாவமாக இருக்கிறது. பெரிய மடத்தனம் செய்துவிட்டாய். ஒழுங்காகச் சம்பளப் பணத்தை வங்கியிலாவது போட்டு வைத்திருந்திருக்கலாம். நிறுவனத்தை நம்பி விட்டு வைத்திருந்தாயே?

அவருடைய அன்பான வசவுகளுக்கு மெதுவாகப் பதில் சொல்லுகிறேன். இவ்வளவு பெரிய நிறுவனத்துக்கு இந்தச் சம்பளத்தொகை வெகு சொற்பம்தானே அக்கா?

பெட்டி அக்காவின் பதிலோ சீற்றமாக வருகிறது. இப்போது நிறுவனமே திவால். அதை முதலில் புரிந்துகொள். வங்கியில் பணமே இல்லை. எனக்கே மூன்று மாதச் சம்பளம் நிலுவை. ஏன் அலுவலகத் துக்கே ஆறு மாதமாக வாடகை...

தொடர்பு துண்டிக்கப்படுகிறது. மின்கலத்தின் இருப்பு தீர்ந்து விட்டிருந்தது.

தீர்ந்தது மின்இருப்பு மட்டுமா?

**ஐந்தாம் நாள்**

என்ன செய்துகொண்டிருக்கிறாய் நீ?

அன்னா கத்துவது தெளிவாகக் காதில் கேட்கிறது. இன்னமும் சரியாக விடியவில்லை. அவள் எதேச்சையாக எழுந்து பார்க்கும்போது இப்படி மழையில் ஒருவன் நனைந்துகொண்டே அமர்ந்திருப்பதைப் பார்த்தால் கத்தாமல் என்ன செய்வாள்? இங்கு வந்தமர்ந்து வெகுநேரம் ஆகிவிட்டிருந்தது ஆனால் இம்மழை வந்து அரைமணி நேரமே ஆகிறது. வலுத்த மழையல்ல என்றாலும் மழை என்பது மழைதானே?

நேற்றிரவு பெட்டி அக்கா சொன்ன செய்தியைக் கேட்டு வெகு நேரம் அப்படியே உறைந்து அமர்ந்திருந்தது நினைவுக்கு வருகிறது. இதுவரையிலான முழுஉழைப்பும் அதற்கான ஊதியமும் முடிந்து விட்டது. நினைக்கும்போதே இருளுக்குள் ஓர் இருள் படர்கிறது. முழு உரையாடலையும் அன்னா, பிலியவ் இருவருமே கேட்டிருந்ததால் அதுபற்றி மேலும் எதுவும் கேட்கவில்லை. எப்படி ஆறுதல் கூறுவ தெனத் திகைத்திருக்கலாம். இவ்வளவு பணத்தையும் இனி எப்போது சம்பாதிப்பது? எப்போது ஊருக்குப் போவது?

நம்பிக்கை. ஒற்றை நூலில் தொங்கும் ஒற்றைச் சொல். அறுந்து ஆழத்தில் விழுந்துவிட்டது. யோசிக்க மேலும் இருண்டுகொண்டே வருகிறது. படுக்கையில் வந்து படுத்துக்கொள்கிறேன். பசியில்லை.

உணவு உண்ணுகிறாயா என்று கேட்க இருவருக்கும் துணிவில்லை. கண்கள் இறுக மூடிக்கொள்கின்றன. இது உறக்கம் இல்லை. இருட் குகை அலைச்சல். உணர்வுகளும் சேர்ந்து உருண்டு அலைகின்றன. இருளில் எங்கே சென்றாலும் எதிலாவது முட்டுகிறது. முட்டிக்கொண்டு வலிக்கிறது. வலித்துத் தலைவலியே வருகிறது. தலை வெடித்துவிடும் போல் இருக்கிறது. இந்த இருளைவிட்டு வெளியேற வேண்டும். எப்படி யாவது. இப்போது இன்னொரு முட்டல். பரவாயில்லை கதவில்தான் முட்டியிருக்கிறேன். கதவு திறக்கிறது. கொஞ்சமாக இருந்தாலும் இது வெளிச்சம்தான். இருவரும் உறங்கிப் போயிருந்தனர். நேரம் என்ன வென்றே தெரியவில்லை. ஓசை எழுப்பாமல் இறங்கிக் கீழே வருகிறேன்.

திடலில் கிடக்கும் கட்டையில் அமர்கிறேன். உண்மை ஓயாமல் அழுத்துகிறது. இதை முதலில் கரைக்க வேண்டும். அதற்கு நன்றாக வாய்விட்டு அழவேண்டும். அழுதால் அவர்கள் எழுந்துகொண்டு விடலாம். கண்கள் விண்ணில் நிலைகுத்துகின்றன. நிலாவோ, உடுக் களோ எதுவுமே இல்லை. கருமுகில் கூட்டம் கவ்வியிருக்கிறது. அழுது கொள்கிறாயா என்று கேட்கிறது. உனக்காக நானும் அழுகிறேன். சேர்ந்து நீயும் அழுதுகொள் என்கிறது. மழை அழுகிறது. நானும் அழுகிறேன். சேர்ந்தே அழுகிறோம். பெருந்துயரம் உள்ளிருந்து உடைந்து கரைந்துகொண்டிருக்கிறது. இந்நேரம் பார்த்துத்தானா அண்ணா எழுந்திருக்க வேண்டும்?

என்ன செய்துகொண்டிருக்கிறாய் நீ?

மழையைப் பாராது அண்ணா ஓடி வருகிறாள். கையைப் பற்றி இழுக்கிறாள். என்ன பைத்தியக்காரத்தனம் இது? எழுந்திரு.

விடு அண்ணா. கழுவிக்கொண்டிருக்கிறேன். எல்லாவற்றையும் கழுவிக்கொண்டிருக்கிறேன். எல்லா பாவங்களும் இதோ கரைந்து ஓடிக்கொண்டிருக்கின்றன பாரேன். வழிந்தோடிக் கொண்டிருக்கும் மழை நீரோடையைச் சுட்டுகிறேன்.

அடேய்... உனக்கு என்ன ஆயிற்று? நீ முதலில் எழுந்து உள்ளே வா...

தன் இரு கைகளாலும் வலுவாக இழுத்து எழும்பச் செய்கிறாள். பின் தரதரவென இழுத்துக்கொண்டு குடிலுக்குள் செல்கிறாள். படி யில் அமரச்செய்து துவாலையொன்றை எடுத்து வந்து தலையைத் துவட்டுகிறாள். அமைதியாக அமர்ந்திருக்கிறேன். தலையைத் துவட்டி முடித்த அண்ணா கேட்கிறாள்.

அழுதாயா?

கண்கள் காட்டிக்கொடுத்திருக்க வேண்டும்.

உன் வேதனை எனக்குப் புரிகிறது. என் சம்பளப் பணம் அக்கா விடம்தான் இருக்கிறது. அதைத் தருகிறேன். வாங்கிக்கொள்கிறாயா?

சட்டென்று நிமிர்ந்து அண்ணாவின் கண்களுக்குள் ஊடுருவுகிறேன்.

என் அப்பாவை இன்னும் இரண்டு, மூன்று ஆண்டுகள் கழித்துக்கூட அடக்கம் செய்துகொள்வோம்...

அவ்விரு கைகளையும் சேர்த்துப் பற்றிக்கொள்கிறேன். போதும் அன்னா போதும்.

அக்கரங்களுக்குள் முகத்தைச் சாய்த்துத் திரும்பவும் அழத்தொடங்கு கிறேன். உடம்பே குலுங்குகிறது. அன்னாவும் அழுது கொண்டிருக் கிறாள். நெற்றியில் விழும் சூடான கண்ணீர் காட்டிக்கொடுக்கிறது. அன்னா தன் தாடையைத் தலைமீது பதித்திருக்கிறாள். இருவரின் அழுகையும் பிலியவை எழுப்பிவிட்டது. எழுந்தவர் எங்களைப் பார்த்திருக்கவேண்டும். என்ன நினைத்தாரோ அருகே வந்து இரு கைகளாலும் எங்களை அணைத்துக்கொள்கிறார்.

அழக்கூடாது குழந்தைகளே... நீங்கள் இருவரும் என் விருந்தினர் இல்லை... என் குழந்தைகள். உங்கள் இருவரையும் இந்த இடத்தை விட்டுப் பத்திரமாக அனுப்பி வைக்க வேண்டியது என் பொறுப்பு...

பிலியவ் எங்கள் அழுகைக்கான காரணத்தைத் தவறாகப் புரிந்து கொண்டிருந்தாலும் நாங்கள் எதுவும் பேசவில்லை. அவருடைய இந்த ஆறுதல் இருவருக்குமே தேவையாக இருக்கிறது. முதுகைத் தடவும் அவருடைய கைகளின் இதம் தாய்ப்பறவையின் இறக்கையினுள் இருக்கும் வெப்பம்.

காலை ஒன்பது மணிக்குமேல் கொஞ்சம் வெயில் அடித்ததும் நம்பிக்கை பிறக்கிறது. இவ்வெம்மை தோலில்பட்டு எவ்வளவு நாளாகிறது? அன்னா, பிலியவ் வைத்திருந்த கற்றாழை நாரெல்லாம் எடுத்து முடிந்து நீண்ட கொடிக்கயிறாக்கி ஈரத்தில் நமுத்து போயிருந்த துணிகளையெல்லாம் காயப்போடுகிறாள். எப்படியும் இவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போய்விடலாம் என்ற நம்பிக்கை வந்துவிட்டது. இதழ்களில் பாட்டின் முணுமுணுப்பு. வெளியே வருகிறேன். மனமும் கழுவித் துடைத்ததுபோல் இருக்கிறது.

துணியைக் காயப்போட்டுவிட்டு மூங்கில் குருத்து ஒன்றை எடுத்து வந்து நறுக்கிக் கொடுக்கிறாள். பிலியவ் இதை எங்கே தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வந்தார்? வழக்கமாக முன்கூட்டியே வந்துவிடும் பிலியவ் இன்று நண்பகல் தாண்டியும் வரவில்லை. அதுகுறித்துச் சற்றுக் கவலை படரும்போதே சிரித்த முகத்தோடு வந்து சேர்கிறார். கையில் இம்முறை பொருட்கள் கூடுதலாயிருக்கின்றன. முதன் முதலாக நகரத்து உணவைக் காண்கிறோம். ஒரு பையில் அரிசியும் சில டப்பா உணவுகளும் வந்திருக்கின்றன. அவர் லியோங் முகாமுக்குச் சென்று திரும்பியிருக்கிறார் என்பதைப் புரிந்துகொள்வதில் அதிகம் சிரம
சொல்கிறார்.
மில்லை. பிலியவ் முகத்தில் சிரிப்புப் படரச்
ஒரு மகிழ்ச்சியான செய்தி. நாளை நீங்கள் இருவரும் இங்கிருந்து

புறப்பட்டுப் போய்விடலாம்.

எப்படி? எங்கள் இருவரின் குரலும் ஒரே குரலாய் சேர்ந்து ஒலித்ததைக் கண்டு நாங்களே சிரித்துக்கொள்கிறோம்.

வியோங் முகாமில் இருக்கும் ஆட்களை ஏற்றிச்செல்ல ஒரு படகை ஏற்பாடு செய்திருக்கிறார்களாம். அது நாளை வருகிறது. அதுவும் லோக்கன் ஆற்றுக்கே நேராக வருகிறது. நாளை எப்படியாவது அங்குப் போய்ச் சேர்ந்துவிட்டால் அதில் ஏறிப் போய்விடலாம். புக்கிட் கரம்தான் போகிறது. அங்கும் வெள்ளம் இன்னும் வடியவில்லையாம். அங்கிருந்து முப்பத்து இரண்டாவது மைல் என்று ஓர் இடம் இருக்கிறதாமே? அதுவரை மூன்று இடங்களில் சாலை துண்டிக்கப் பட்டிருக்கிறதாம். ஆனால் நடந்து கடந்துவிடலாமாம் என விரிவாகச் சொல்லி முடித்துவிட்டு, முதலில் சாப்பிடுங்கள். உங்களுக்கான உணவு வந்திருக்கிறது என்கிறார்.

அன்னா அந்த உணவுப் பைக்குள் கைவிட்டபோது காளான்களும் இருந்தன. அதுமட்டும் பிலியவின் தேடல். இந்தக் காளானையும் மூங்கில் குருத்தையும் சேர்த்துச் சாறு சமைத்தால் எப்படி இருக்கும் தெரியுமா? அன்னாவுக்கு நாவில் எச்சில் ஊறுகிறது. உடனே சொல் கிறேன். இன்று இதையே சமைத்துவிடு அன்னா. இவ்விடத்தை விட்டுப் போகும்வரை இந்த டப்பா உணவெல்லாம் வேண்டாம்.

அன்றுதான் முதன் முதலாகச் சோறு பொங்கிச் சாப்பிட்டோம். உண்மையிலேயே காளானும் மூங்கில்குருத்தும் சேர்த்து சமைத்தச் சாறு அன்னா சொன்னபடியே சிறப்பாக இருக்கிறது. அன்னாவுக்குதான் அதைச் செய்வதற்குரிய முழுப் பொருட்களும் இல்லையென்று குறை. இருந்திருந்தால் சுவையும் மணமும் இன்னும் சிறப்பாக இருந்திருக்கும் என்று சொல்லிக்கொண்டேயிருக்கிறாள். உண்டுமுடித்து ஓய்வாக அமர்கிறோம். எப்போதுமிருக்கும் வெறுமை உணர்வு இன்றில்லை. நாளை போகப் போகிறோம். ஆமாம் வழியில் ஓர் ஓடைப்பாலம் உடைப்பெடுத்து இருந்ததாகச் சொன்னாரே அந்தப் பாலம் இப்போது எப்படி இருக்கிறது? அதைக் கடந்தால்தானே வியோங் முகாம் போக முடியும்?

அதில் இப்போது வெள்ளம் வடிந்துவிட்டிருக்கிறது. எதிர்பார்த்தது போல் அந்தப் பாலம் உள்வாங்கவில்லை. முழங்கால் அளவுக்கு நீர் ஓடிக்கொண்டிருக்கிறது. எனவே அச்சமில்லை.

மூட்டப்பட்டிருந்த தீ கனன்று எரிந்துகொண்டிருக்கிறது. மூவரும் சுற்றி அமர்ந்திருக்கிறோம். மழை நின்றுவிட்டிருந்ததால் வந்து மொய்க்கும் கொசுக்களுக்காக மட்டுமல்லாது அத்தீயிலேயே மீனை வாட்டிக்கொண்டிருக்கிறாள் அன்னா. செதிள் நீக்கப்பட்டிருந்த மீனை நெருக்கமாகக் கீறி உப்பும் ஊசிமிளகாய்ச் சாறும் கலந்து தடவி

யிருக்கிறாள். பிரப்பங்குச்சியில் செருகப்பட்டிருந்த மீனை அதன் எல்லா சதைப்பக்கமும் படுமாறு வாட்டிக்கொண்டிருக்கிறாள். இங்கு வந்த முதல் இரவன்று இதேபோல் நெருப்பருகே ஒமர், ஆண்ட்ரூஸ் ஆகியோருடன் சுற்றியமர்ந்திருந்தது நினைவில் மீள்கிறது. அவர்கள் இப்போது இங்கில்லை. இன்று இங்கு அமர்ந்திருக்கும் இம்மூவரும் நாளை ஒருவரோடு ஒருவர் இருக்கப் போவதில்லை.

அன்னா மீனைத் தருகிறாள். சுடச்சுட இருக்கிறது. மேல்தோலை நீக்கி வெண்சதைப்பற்றைப் பிய்த்தெடுக்கிறேன். ஊசிமிளகாயின் காரம் சற்றுத் தூக்கல். இருந்தாலும் வெறும் உப்பு மிளகாய்க்கே இச்சுவை. புத்தம்புது மீன் என்பது காரணமாக இருக்கலாம். திடீரென செருமல். முள் தொண்டைக்குள் சிக்கிக்கொள்கிறது. அன்னாவும் பிலியவும் பாய்ந்து ஒருவர் தலையிலும் மற்றொருவர் முதுகிலும் தட்டுகின்றனர். உடனே சுதாரித்துக்கொண்டு முள்ளை விரல்விட்டு வெளியே கொண்டு வந்துவிட்டாலும் கண்களில் நீர் வந்துவிடுகிறது.

வானில் தேய்ந்திருந்த நிலவு பிசிறாக வெளிச்சத்தை விசிறித் தெளித்துக்கொண்டிருக்கிறது. உடுக்கள் வேடிக்கை பார்க்கச் சட்டென்று ஒரு கேள்வியின் தோற்றம். பிலியவிடம் கேட்கிறேன்.

பிலியவ், இக்காட்டுக்குள் நுழையும்போது ஓர் உல்லாசப் பயணியைப் போலத்தான் நுழைந்தேன். ஆனால் இப்போது காட்டைப்பற்றி நன்கு புரிந்துகொண்டிருக்கிறேன். அதனால்தான் கேட்கிறேன். என் சம்பளம் எல்லாம் போய்விட்டதே பிலியவ், இக்காட்டை அழித்ததில் என் பாவத்துக்கான பங்கு அழிந்துவிட்டிருக்கும்தானே?

சுடப்பட்டிருந்த மீனைப் பிலியவிடம் தருகிறாள் அன்னா. அம்மீனை அன்னாவையே சாப்பிடச் சொல்லி சைகை செய்தவர் மற்றொரு மீனைக் குச்சியில் செருகி வாட்டத் தொடங்குகிறார். கேள்விக்கு என்ன விடை தரப்போகிறார் என்று அவரது முகத்தையே பார்த்துக்கொண்டிருக்கிறேன். அவரோ ஒன்றுமே சொல்லாமல் மீனை வாட்டிக்கொண்டிருக்கிறார். தீயின் சுடரைச் சற்றுக் கூட்டிவிட்டு மொழியைத் திறக்கிறார்.

இயற்கையைப் போல எல்லாக் கேள்விகளுக்கும் விடை தெரிந்தவனல்ல நான்... என்று தொடங்கிய சொற்கள் சற்று ஓய்வெடுக்கின்றன. பின்னர் ஓய்வு முறிகிறது.

ஆனாலும் உன் கேள்வி வேடிக்கையாக இருக்கிறது. பணம் போனால் பாவமும் போய்விடும் என்று நகரத்து மனிதர்கள் எப்படி நம்புகிறீர்கள் என்றே தெரியவில்லை...

நெருப்பில் மீன் சடசடக்கும் ஒலி கேட்கிறது.

பதினைந்து ஆண்டுகளுக்குமுன் மனைவி இறந்தபின் இப்படியொரு வாழ்க்கையைத் தொடங்கும்போது ஒரு செய்கையில் கட்டாயம்

உறுதியாக இருக்கவேண்டும் என்று முடிவு செய்திருந்தேன். எந்தவொரு குறிப்பிட்ட இடத்தின் மீதோ மனிதரின் மீதோ பற்றுக் கொள்ளக் கூடாது என்பதே அது. அது மனிதனை இறுக்கக்கட்டிப் போட்டுவிடும் என்று நம்பினேன். நம்புகிறேன். அதற்குப் பின்புதான் இக்காட்டின் அத்தனை சுமுக்கங்களையும் கொற்றவை எனக்குக் காட்டிக்கொடுத்தாள். மனிதர்களாகிய நமக்கு எத்தனையோ மொழிகள். ஆனால் இயற்கைக்கு ஒரே மொழிதான். இந்த மரங்கள், பறவைகள், விலங்குகள் எல்லாம் அம்மொழியைப் பேசுகின்றன. முன்னொரு காலத்தில் நாமும் அம்மொழியை அறிந்திருந்தோமென என் தந்தை அடிக்கடி கூறுவார். ஆனாலும் இப்படித் திரியத் தொடங்கிய பிறகுதான் எனக்கே அம்மொழியின் ஒவ்வொரு உச்சரிப்பும் பழகத்தொடங்கியது.

மீனை மறுபக்கம் புரட்டி வாட்டுகிறார்.

இதுவரை எத்தனையோ மனிதர்களை, எத்தனையோ மொழி களைப் பார்த்துவிட்டேன். ஆனால் காட்டின் மொழி எல்லா இடங் களிலும் ஒன்றுதான். ரனால் மலையில் உள்ள சிரயா மரம் என்ன மொழியில் பேசியதோ அதே மொழியைத்தான் கினபத்தாங்கனில் உள்ள சிலாங்கன் பத்து மரமும் பேசுகிறது. மனிதர்களைப்போல் அங்கே டுசுனும் இங்கே சுங்கையும் பேசுவதில்லை. பாப்பரில் உள்ள பங்காவ் பறவை என்ன மொழியில் பேசியதோ அதே மொழியைத்தான் பென்சியாங்கனில் உள்ள எங்காங் பறவையும் பேசுகிறது. ஆனால் மனிதர்களுக்கு அங்கே கடசன் இங்கே தகோல். ஆக எங்கும் ஒன்றாகவே இருக்கிறது இயற்கையின் மொழி. நாம்தான் இதுவரை காதுகொடுத்துக் கேட்கத் தவறியிருக்கிறோம்.

மறுபக்கம் மீனைப் புரட்டிப் போடுகிறார். நல்ல மணம் எழும்புகிறது.

அது என்ன அப்படியொரு அதிசயமான மொழி எனக்கூட உனக்குத் தோன்றலாம். இப்போது நம் மூவருக்கும் தனித்தனியே மூன்று மொழிகள் இருக்கின்றன. நம்மிடையே இருக்கும் தொடர்பு மொழியை நாம் மூவருமே இந்நிமிடம் மறந்துவிடுகிறோம் என்று வைத்துக் கொள்ளுவோம். நம்மால் தொடர்புகொள்ள முடியுமா, முடியாதா? முடியும். நம்மிடையே இருக்கும் அன்பு ஓசையற்ற மொழியை உண்டாக்கிவிடும். அப்படியொரு மொழிதான் இயற்கை யின் மொழியும்.

மீனை மறுபடியும் பழைய பக்கத்துக்குத் திருப்பி வாட்டுகிறார்.

அப்படியொரு மொழியில்தான் மூதாய் மரம் தன்னை வெட்ட வேண்டாம் என்று கூறியது. உங்கள் நிறுவனம் அதைக் கேட்க மறுத்துவிட்டது. அதன் விளைவு உங்கள் நிறுவனத்தைத் தாக்கியதோடு அல்லாமல் உன் சம்பளம்வரை தாக்கியிருக்கிறது.

மீனை இறுதியாக மறுபக்கம் திருப்புகிறார்.

அதை இழந்ததால் பாவம் கழிந்துவிடும் என்று நீ நம்புவது எவ்வளவு மடமை தெரியுமா? பாவம் செய்து சம்பாதித்த பணத்தை கடவுளுக்குச் செலவு செய்துவிட்டால் அந்தப் பாவம் போய்விடும் என்று நகரத்து மனிதர்கள் நம்புவதை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இதுவும் அது போலத்தான். சொல்லப்போனால் நீ இன்னும் காட்டைப் புரிந்து கொள்ளவே இல்லை. இன்னமும் நீ அதே உல்லாசப் பயணிதான்.

நன்கு வெந்துவிட்ட மீனைப் பிட்டெடுத்து சுவைக்கிறார். என்ன சொல்வதென்றே தெரியவில்லை. ஆனாலும் ஏதாவது சொல்ல வேண்டுமே?

இப்போது உங்களைப் பார்த்ததிலிருந்து பணமில்லாமல் வாழ முடியும் என்ற நம்பிக்கை வந்துவிட்டது பிலியவ். இத்தனை நாட்களாக எந்தப் பணத்தைக் கொண்டு இங்கே எங்களுக்கு உணவிட்டீர்கள்?

பிலியவ் சிரிக்கிறார். திரும்பவும் உளறுகிறாய். இக்காட்டைவிட்டுத் தாண்டிச் சென்றால் பணமில்லாமல் ஒரு மைலைக்கூட தாண்ட முடியாது என்பது தெரியாதா உனக்கு?

பிலியவ் சொல்வது நூற்றுக்கு நூறு.

அமைதியாக இருக்கிறேன். பிலியவ் தொடர்ந்து சொல்கிறார். ஆனாலும் உனக்கு ஒரு மனசு இருக்கிறது. மரத்துக்காக அழும் மனசு. அது இருக்கும்வரை இயற்கை கடைசிவரை உன்னைக் காப்பாற்றும் போ.

இந்த மனசை இறுதிவரைக் காப்பாற்றிக் கொள்ள என்ன செய்யலாம்? ஒரு கம்போங்காரனாக மாறலாமா? மாறலாம். அங்கு சென்று வேளாண்மை செய்யலாம். மலை நெல் வேளாண்மை. கூடவே ஒரு துணை. வாழ்க்கைத் துணை. அதை அடைய ஒரு திருமணம். திருமணத் துக்குப் பிரியன். பிரியன் என்றாலே பணம்தானே? பிரியனாக என்ன கொடுக்க வேண்டும்? ஒரு எருமை மாடும் ஒரு விருந்தும். ஆனால் அதற்கும் பணம். அதை மட்டும் சம்பாதித்துக் கொடுத்தால் என்ன? கேள்வி வாய்விட்டே வந்துவிடுகிறது.

பிலியவ், ஒரு எருமை மாடு என்ன விலை?

இருவருமே விழிக்கின்றனர். எருமையா? அன்னா திகைப்பில் கேட்கிறாள். எதற்காகக் கேட்கிறாய்?

பிரியனுக்கு எருமைதானே தரவேண்டும்?

ஒருசில நொடிகள் குழம்பிய அன்னாவுக்குச் சட்டென்று புரிந்து விடுகிறது. காதைப் பிடித்துத் திருகுகிறாள். வலிக்கிறது என்று எழுந்து விலகி ஓடுகிறேன். உனக்குப் பிரியன் மாத்திதான் போ என்று கத்திக்கொண்டே துரத்துகிறாள். அகப்படாமல் பிலியவைச் சுற்றி ஓடுகிறேன். சூழ்நிலை இளகுகிறது.

சிரித்துக்கொண்டிருந்த பிலியவ் இன்னொரு துண்டைப் பிய்த்து வாயில் இட்டுக்கொண்டு திரும்பவும் சிரித்துக்கொண்டிருக்கிறார்.

# 6

**இறுதி நாள்**

ஞாயிறு. இது நன்று.

ஒளி. சுடர். விளக்கம். காட்சி.

நீ இருளைத் தின்றுவிட்டாய். வாழ்க.

நீ கீழ்த்திசையைக் காட்டுகின்றாய். வாழ்க.

நீ வெப்பத்தைத் தொடங்குகிறாய். வாழ்க.

வாழ்க. ஞாயிறே நீ வாழ்க. நின் வெம்மையின் வாழ்த்துக்களோடு விடைபெறுகிறோம்.

வாழ்வின் இறுதிநாள்வரை நினைவில் வாழ்ந்து கொண்டிருக்கப் போகும் இவ்விடத்தை விட்டு நீடுநிலையாகப் பிரியப் போகிறேன். துயரம் நெஞ்சைக் கவ்வுகிறது. எல்லாத் துயரங்களையும் கடந்து போய்க்கொண்டிருப்பதுதானே வாழ்க்கை. இருவரும் அவரவர் சுமைகளை எடுத்துக்கொள்கிறோம். பிலியவ் புணையின் நடுவில் நாங்கள் அமருவதற்காக சில நீப்பா கீற்றுகளை இட்டு வைத்திருக்கிறார். அமர்ந்தவுடன் பிலியவ் நீள் கழியால் உந்தித் தள்ள புணை நகரத் தொடங்குகிறது. நீர்மட்டம் நேற்றைவிடக் குறைந்திருந்தாலும் புணை இல்லாமல் இவ்விடத்தைக் கடக்க முடியாது. ஏறக்குறைய சாலை யோரத் திடலுக்கு அருகே நெருங்கி வந்தவுடன் புணை தரைதட்டி நிற்கிறது. இறங்குகிறோம். கடைசியாக ஒருமுறை அவ்விடத்தைத் திரும்பிப் பார்த்துக்கொள்கிறேன். அதன் பிறகு எங்குமே நிற்கவில்லை. விறுவிறுவென ஓரே நடைதான்.

வெள்ளம் கடந்த ஓடைப்பாலத்தருகே பிலியவ் சொன்னபடி முழங்கால் அளவு நீர் ஓடிக்கொண்டிருக்கிறது. அதைக் கடந்து வந்துகொண்டிருக்கையில் வழியிலேயே ஓரிடத்தில் வண்டிகள் நின்று கொண்டிருக்கின்றன. இடப்பக்கம் ஒரு சாலை பிரிகிறது. வண்டியி லிருந்து இறங்கிய ஆட்கள் குழுக்களாக அச்சாலையின் வழியாக உள்ளே லோக்கன் ஆற்றுக்குப் போய்க்கொண்டிருக்கிறார்கள். அங்கு தான் படகு இருக்க வேண்டும். எங்களைப் பார்த்ததும் நெருங்கி வந்த லியோங் எப்படி இருக்கிறீர்கள் என்று விசாரிக்கிறார். சிரிக்கத்தான் முடிகிறது.

உங்கள் நிறுவனத்தைப் பற்றிய செய்திகளைத் தெரிந்திருப்பீர்கள். வருத்தமாகத்தான் இருக்கிறது. குவான் இப்படியொரு ஆளையா நம்பியிருக்க வேண்டும்? எங்களாலும் குவானுக்கு உதவ முடியாது. எங்களுடன் ஒப்பந்தம் போட்டிருப்பது ஓடிப்போன பார்த்தான். இப்போது கட்டைகளை நாங்களாகவும் விற்க முடியாத நிலை. வழக்கு, நீதிமன்றம் என்று நாங்களும் இப்போது சிக்கலில் மாட்டிக் கொண்டிருக்கிறோம்.

பதில் சொல்லுவதற்கு எதுவுமே இல்லாததால் அமைதியாகக் கேட்டுக்கொண்டு நிற்கிறேன். வியோங் இறுதியாகச் சொல்கிறார். எல்லோரும் படகுக்குப் போய்விட்டார்கள் நீங்களும் போய் ஏறிக் கொள்ளுங்கள்.

மூவரும் அப்பாதையில் நுழைகிறோம். மந்திகள் மரங்களில் கத்திக்கொண்டிருக்கின்றன. படகு நிற்கும் இடத்துக்கு நாலு அடிகள் முன்பு முழங்கால் அளவுக்கு நீர் நிற்கிறது. அப்படகு நிற்கும் இடம் லோக்கன் ஆற்றின் கரை என்று ஊகிக்கமுடிகிறது. படகில் ஏறுவதற்காக படகுக்கும் மரத்தின் முட்டுவேருக்கும் இடையே பலகையைச் சார்த்தி வைத்திருக்கிறார்கள். அதன் வழியாக ஏறி படகுக்குள் ஆட்கள் சென்றிருக்கிறார்கள். முதலில் ஒரு ஆள் எங்கள் சுமைகளை எடுத்துக் கொண்டு பலகை வழியாகச் சென்று விடுகிறார்.

அன்னா பலகையில் முதலில் ஏறுகிறாள். அஞ்சி ஏறிக்கொண்டிருந்த அன்னாவை பாதி வழியில் ஒருவர் எதிர்கொண்டு கைகொடுத்து இழுத்துப் படகில் சேர்க்கிறார். அன்னாவின் பின்னாலேயே ஏறிச் சென்றவனை அவ்வாறே ஒருவர் எதிர்வந்து இழுத்துப் படகில் ஏற்றிக்கொள்கிறார். இருவரும் ஏறி முடித்ததும் ஒருவர் சாய்த்து வைத்திருந்த பலகையை இழுத்துப் படகுக்குள் போடுகிறார். உடனே பதற்றமடைந்து கத்துகிறேன்.

பிலியவ், நீங்கள் வரவில்லையா?

அவர் சிரித்துக்கொண்டே கேட்கிறார்.

எங்கே?

ஆமாம், எங்கே? இப்படியொரு அபத்தக் கேள்வி எப்படி வந்தது? எங்கே? இக்கேள்விக்குள்ளே எத்தனை எங்கேக்கள் ஒளிந்து கொண்டிருக்கின்றன? இனி இக்காட்டினைக் காண்பது எங்கே? இனி இந்த லோக்கன் ஆறும் எங்கே? இருவாசிகள் எங்கே? பத்து பிரைமேட்களும் எங்கே? குபுங் எங்கே? துபையா எங்கே? சறுக்கிகள், பாம்புகள், மீன்கள், பூச்சிகள் எல்லாம் எங்கே? மரங்கள், கவிகை, கோடானு கோடி பூக்கள் அனைத்தும் எங்கே? ஓமர் எங்கே? ஜோஸ் எங்கே? ரஸா எங்கே? இறுதியாக பிலியவும் இனி எங்கேதானா?

படகிலிருக்கும் கூட்டத்தின் பேச்சின் ஒலியை மீறுகிறது தும்பிக்கைக்

குரங்குகள் கிளைகளில் தாவும் ஒலி. அதையும் மீறுகிறது படகின் எந்திரம் முடுக்கப்படும் ஒலி. படகு நகரத் தொடங்குகிறது. மனசுக்குள் ஒரு சங்கிலி உருவாகி நீண்டுகொண்டே வருகிறது. அதன் ஒரு முனை இங்கிருக்கிறது. மறுமுனை அதோ அந்தத் தொல்குடி மனிதரிடம் இருக்கிறது. இழுபடும் இச்சங்கிலியில் எந்நேரமும் அறுபடக் காத்திருக்கிறது ஒரு கண்ணி.

விழிகளில் நீர்மத் திரள். தொடைகள் வெடவெடக்கின்றன. விரல்களில் நடுநடுங்கல். நடுங்கும் விரல்களை ஆறுதலாகப் பற்றிக் கொள்கிறது ஒரு கை. எவ்வளவு நேரத்துக்கு அன்னா? எல்லாமே முடியப்போகிறதே அன்னா... இதோ கண்ணெதிரே நம் வாழ்வின் ஓர் இயல் மூடப்பட்டுக் கொண்டிருக்கிறதே அன்னா...

இமைகள் கவிழ்கின்றன. துளிகள் நழுவுகின்றன.

இமைகள் மீண்டும் விரிகையில் படகு திருப்பத்தில் திரும்ப முனைந்து கொண்டிருக்கிறது. இங்கு திரும்பிவிட்டால் அவ்வளவு தான். பிறகு அம்மனிதரை வாழ்நாளில் காணவே முடியாது. கண்களை நன்கு துடைத்துக்கொள்கிறேன். இருபுறமும் கவிந்த மரங்களுடன் ஆறு நன்றாகத் தெரிகிறது. அதோ அவரும் தெரிகிறார். படகும் பாதிக்குமேல் திரும்பிவிட்டது. ஆனால் பிலியவ் மட்டும் எங்கள் பக்கம் திரும்பிப் பார்க்கவேயில்லை.

நீருக்குள் பொறுமையாகத் தன் தூண்டிலை வீசிக்கொண்டிருக்கிறார் அக்காடேடாடி.

●

காடு என்பது கனவு நிலமோ சுற்றுலாத் தலமோ அல்ல. தாவரங்கள் முதல் தொல்குடிகள் வரை பிணைந்து வாழும் பல்லுயிர் உலகம். இப்புரிதல் இன்றிப் பச்சையம் கொல்லும் தன் பணி நிமித்தம் ஓர் உல்லாசப் பயணிபோல உள்நுழைகிறான் கதைசொல்லி. ஆனால் கண்ணெதிரே மரங்களும் காட்டுயிர்களும் தொல்குடிகளின் வாழ்வும் சிதைவது கண்டு பதற்றம் கொள்கிறான். மனசாட்சியின் நகங்கள் பிறாண்டுகின்றன. மழைக்காட்டின் மரணத்துக்கு சாட்சியாக வாழ நேரும் அவனுடைய துயரமும் அவலமும் இப்பிரதி முழுக்கக் காடோடியாய் அலைந்து திரிந்து அதை வாசகருக்கும் தொற்றவைக்கின்றன.

தமிழில் இதுவரை யாரும் தொடாத களம்; காட்டழிப்பின் பின்னுள்ள நுண் அரசியலை ஒலியற்ற குரலில் சொல்வதன் மூலம் அழிக்கப்பட்ட காடுகளையும் அழிக்கப்படுகிற காடுகளையும் இந்நாவல் நம் கண்முன்னே விரிக்கிறது. கவிஞரும் சூழலியல் எழுத்தாளருமான நக்கீரனின் முதல் நாவல் இது.

ISBN 978 81 7720 220 5







₹ 270